உ

பரமபதி துணை.

# பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்.

முதல் பாகம்.




ஆசிரியர்

**ஜெகவீரபாண்டியனர்**

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளார். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.


இரண்டாம் பதிப்பு.


மதுரை
மதராஸ், சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றது.

ஜய ௵ சித்திரை ௴

**1954.**



கவிராஜா ஜெகவீரபாண்டியனார்.

# முகவுரை.

இந் நூல் தென்னாட்டுச் சிங்கம் என எந்நாட்டும் இசை நாட்டித் தேச வுரிமையை இந்நாட்டில் தீரமுடன் நிலைநாட்டிய வீரபாண்டியக் கட்டபொம்மு என்னும் பாஞ்சாலங்குறிச்சி மன்னனுடைய அருமைச் சரித்திரத்தை உரிமையாக உரைக்கின்றது. இற்றைக்கு நூற்றுநாற்பது ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டி மண்டலத்தில் ஈண்டிய திறலுடன் இவ் ஆண்டகை நிலவி யிருந்தார். இவர் ஓர் சிற்றரசர் ஆயினும் பேரரசரும் வியக்கத் தக்க பெருமித நிலையினர். இவருடைய வீர பராக்கிரமங்கள் பாருலகு எங்கணும் பரவி யுள்ளன. இவரது சரித்திரத்தை நாடகமாகவும் இப்பொழுது நடித்து வருகிறார்கள். அது கட்டபொம்மு நாடகம் என வழங்கப்படுகின்றது. தாழ்ந்த நிலையில் தெருக் கூத்தாக அது நடிக்கப்படினும் ஆயிரக்கணக் கான சனங்கள் ஆவலுடன் வந்து அதனைக் கண்டு களித்து இத்திண்டிறல் வீரரை வியந்து சிந்தை மகிழ்ந்து செல்லுகின்றார். ஒரு கதையை நாடகமாக நடித்து மகிழ வேண்டுமாயின் அக் கதாநாயகனுடைய மதிப்பும் மாண்பும் பொதுமக்கள் உள்ளத் தில் எவ்வளவு உரிமையுடன் வேரூன்றி இருக்கவேண்டும் என்பது ஈண்டு நேரே கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கத்தக்கது.

இவரது வரலாறுகளை வரன்முறையே ஆராய்ந்து வரின் அஞ்சாமை, வஞ்சமின்மை, அடைந்தவரை ஆதரித்தல், அருந் திறலாண்மை, பெரும் போர்வீரம், தேச நேசம், தெய்வ பத்தி, மானம் பேணல், வானமுற வரினும் ஈனமுற இசையாமை, உயிர் இற நேரினும் உறுதி குன்றாமை என்னும் இன்னவாறான உயர்குணங்க ளெல்லாம் எந்நிலையிலும் இவரிடம் ஒருங்கமைந்து மருங்கோடு மருவியுள்ளமை தெளிவா அறியலாகும்.

இந்நாட்டில் வீரங்குறித்து யாரேனும் உரையாட நேரின் அங்கே இவரது பேரும் ஊரும் வாராமல் இரா. பாஞ்சாலங்

குறிச்சி என்றால் யாரும் ஓர் வீர உணர்ச்சி யுடையராய் ஊக்கி எழுவதை நாளும் நாம் நோக்கி வருகின்றோம். சார்ந்ததன் வண்ணமாகவே மக்கள் யாண்டும் நேர்ந்து நிற்பர் ஆதலால், வீரம் கொடை சீலம் கல்விகளில் சிறந்துள்ள மேலோர்களுடைய சரிதங்களை அறிவது அவர்க்குப் பெரிதும் உறுதி தருவதாம். உள்ளம் கருதி வருவது உயிர் வாழ்வில் ஒளிபுரிகின்றது.

"The names and memories of great men
are the dowry of a nation"

"பெரியோர்களுடைய பெயர் நினைவுகள் ஒரு தேசத்துக்கு உயர்நலமான உரிமைச் செல்வம்" என்னும் இந்த அருமை வாசகம் இங்கே கருதி யுணர வுரியது.

மேல் நாட்டார் தங்கள் முன்னோர்களுடைய சரித்திரங்களை எவ்வளவு மேன்மையாக மதித்துக் கொண்டாடி வருகின்றார் என்பது இதனால் நன்கு தெளிவாம். உயர்ந்த விழுமியோரை நினைந்து உரிமையோடு ஒழுகி வருகிற சமுதாயம் சிறந்த மேன்மைகளை அடைந்து எவ்வழியும் செவ்வையாய் உயர்ந்து வருகிறது.

உள்ளத்தளவே மக்கள் யாண்டும் உயர்ந்து வருகின்றார். "உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை; அஃதில்லார் மரம்" (குறள் 600) என்றதனால் ஊக்கமுடைமையின் உயர்நிலை புலனும். வீரம் இல்லாத நாடு சாரம் இல்லாத காடு என்னும் பழமொழி வீர நீர்மையின் சீர்மையை வீறுடன் விளக்கியுள்ளது. தலைமையான நிலைமையை வீரம் அருளி வருகிறது.

வீரர்கள் எக்காலத்திலும் எந்த நாட்டிலும் எல்லாராலும் போற்றப் பெறுகின்றார். இந்த நாடு வீரத்தில் தலை சிறந்திருந்தமை பண்டைப் பனுவல்கள் எவற்றிலும் பரக்கக் காணலாம். அவ் வீர மாட்சி கால நீட்சியால் பழங் கனவாய்த் தோன்றினும் அண்மையில் நிகழ்ந்த இச் சரிதக் காட்சி நம் நாட்டின் உண்மையான திண்மை நிலையை உறுதி பெற உணர்த்தி நிற்கின்றது. இந் நாட்டு வீரம் எந் நாட்டுக்கும் ஏற்றமாயுளது.

தம் ஊரின் பேராண் வலியால் இப் போர்வீரர் திறல் பாரறிய நின்றது ஆதலால் இது பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்

என வந்தது. சரித்திரம் என்பதற்கு உண்மையாக நடந்த வரலாறு என்பது பொருள். சர் = நடத்தல். இதனால் இச் சரிதத்தின் சாரதமான புனித நிலை இனிது புலனாம்.

நமது ஆங்கிலப் பேரரசு ஈங்கு வருவதற்கு 59 ஆண்டுகளுக்கு முன்னர் ஈண்டு இது நிகழ்ந்தது. கி. பி. 1798முதல் 1801 வரை கும்பினியாருக்கும் பாஞ்சாலங்குறிச்சியாருக்கும் நடந்த போராட்ட வரலாறுகளே இதில் பாராட்டப்பட்டுள்ளன. இரு திற நிலைகளையும் ஒரு திறத்தும் கோடாமல் தக்க சாசனங்களைக் கொண்டு மிக்க கவனத்துடன் உண்மைகளை ஊன்றி நோக்கி ஓர்ந்து ஆராய்ந்து தேர்ந்து எழுதியுள்ளமையால் அறிவுடையார் அனைவரும் இதனை உவந்து கொள்ளுவர் என்னும் உறுதி பெரிதுமுடையனாய் உளம் மகிழ்ந்துள்ளேன்.

இவ் ஆதீனத்தின் ஆதி வரலாற்றுப் பத்திரங்கள், பழைய ஏட்டுச் சுவடிகள், கும்மிகள், அம்மானைகள், வம்மிச வழிகள், அரசாங்க அறிக்கைகள், குறிப்புகள் (Records), பரம்பரையான உரம்பெறு கேள்விகள் முதலியன இந் நூலைத் திறம் பெற எழுதுதற்கு உறுதியான ஆதாரங்களாய் அமைந்திருந்தன.

ஈசுய ஆண்டுகட்கு முன்னர் இத் தென்னாடு இருந்த நிலை, பாளையகாரர் பதிந்திருந்த பான்மை, குடிசனங்கள் குலாவியிருந்த மேன்மை, படை வீரர்கள் பயின்று வந்த ஆண்மை, நடையுடை பாவனைகள் முதலியன இதன் இடையே காணலாம்.

ஓர் அரசன் எவ்வளவு அருந்திறல் உடையனாயினும் மந்திரி நல்லவனாயில்லை ஆயின் அந்த அரசு இனிது செல்லாமல் அல்லல் பல அடைந்து அலமந்தழியும் என்பதை இந்த அரசனது சரித வரலாற்றால் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

செந்தமிழ் நாட்டின் திலகம் என விளங்கும் நெல்லை மண்டலத்தின் எல்லையில் இக்கதை நிகழ்ந்துள்ளது ஆயினும் எல்லா மண்டலங்களிலும் இதன் இசை பரவியுள்ளது. ஊமையன் சீமை என மறு புலங்களிலும் இதன் உறு புலம் தெரிய இன்றும் வழங்கி வருதலால் இப் பாஞ்சை வீரர்பால்

உலகம் வைத்துள்ள வாஞ்சை தெரியலாம். ஓசைபெற்று உயர்ந்துள்ள இத் தேச சரித்திரம் யாவருக்கும் ஓர் இனிய விருந்தாய் இன்பம் தரும் என்பது இதன்பால் அவர் கொண்டிருக்கும் அன்புரிமையால் நன்கு அறிய நின்றது.

இந்நூல் உள்ளக் கிளர்ச்சியையும் ஊக்கத்தையும் உயர் நலத்தையும் விளைத்து எல்லார்க்கும் ஓர் இன்ப நிலையமாயிருத்தலால் கல்வி நிலையங்கள் தோறும் இது பரவிப் பயன் பெறும்படி கலை நலம் பேணும் அறிஞர்கள் கண்ணூன்றி அருள்வார்கள் என்று எண்ணூன்றி நம்புகின்றேன்.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிடத்தில் முயல் நாய்களை எதிர்த்த காட்சியும், கட்டபொம்மு ஊமைத்துரைகளின் உருவப் படங்களும் இப் புத்தகத்தில் உரிமையா வைக்கப்பட்டுள்ளன.

நீண்டகாலமாக ஒரு வரலாறும் தெளிவாகத் தெரியாமல் பலர் பலவாறு கூறும்படி நிலை குலைந்து தலை மறைந்து கிடந்த இச் சரித்திரம் இந் நிலையில் இது பொழுது ஒளி செய்து வெளி வரும்படி திருவருள் புரிந்த எம் செந்திற் பெருமான் திருவடி மலர்களைச் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்,
ஜெகவீரபாண்டியன்

---

## இரண்டாம் பதிப்பின் இயலுரை.

இந்நூல் முதல் பதிப்பு முழுதும் செலவாகி ஏழு வருடங்களுக்கு மேலாகின்றன. இது பொழுது மறு பதிப்பாய் வெளி வருகின்றது. இதன் இரண்டாம் பாகம் அச்சாகி வெளியே பரவியவுடன் முதல் பாகம் வேண்டும் என நாட்டின் பல பாகங்களிலு மிருந்து ஆவலோடு பல கடிதங்கள் வந்தன. வேறு பல நூல்கள் அச்சாகவேண்டி யிருந்தமையால் அந்த வேண்டுகோளை உடனே பூர்த்தி செய்ய முடியவில்லை; இன்று செய்ய நேர்ந்தது; உலகம்விரும்பியதைஉதவியதுஉவகையாய்வந்தது.

வீர சுதந்திரமான இத்தகைய தேச சரித்திரம் மேல் நாட்டில் தோன்றியிருந்தால் ஒரு பதிப்பில் பத்து லட்சம் புத்தகங்கள் செலவாகியிருக்கும்; பல பதிப்புகள் வெளி வந்து உலகம்

எங்கும் பரவியிருக்கும் என இந் நூலின் நிலைமையைக் குறித்து அறிஞர் சிலர் பரிந்து கூறுவர். மேல்நாடு செல்வ வள முள்ளது; எல்லாரும் கல்வியறிவுடையவர்; தேச நேசம் வாய்ந் தவர்; நூல்களைப் படிக்க வேண்டும் என்ற தாகம் யாவரிடமும் பெருகியுளது; அந்த மேல் நாட்டோடு இந்தக் கீழ் நாட்டை இணைத்து எண்ணுவது சரியாகாது என்று அவர்க்குப் பரி வாய்ப் பதில் கூறுவேன். இந்த நூல் இரண்டாம் பதிப்பு இவ்வாறு வரும்படி நேர்ந்ததே பெரும் பேருக நாம் உவந்து கொள்ளவேண்டும். ஆனது போதும் என அமைவதே சுகமாம்.

இந் நூலில் இருந்து கவர்ந்து பல படியாக வியாபார நோக்கோடு புத்தகங்களை வெளியிட்டு வருகின்றனர்; இந்த வீர பாண்டிய மன்னன் சரித்திரத்தைச் சினிமாவில் படமா எடுக்கப் போவதாக ஒருவர் பெரிய விளம்பரங்களைச் செய்திருக்கின்ருர்; தங்களைக் கலந்து கொண்டார்களா? என்று நண்பர் சிலர் இங்குக் கடிதங்கள் எழுதியுள்ளனர்; நேரிலும் சிலர் வினவுகின் றனர். யாதொரு தகவலும் இல்லை என்று நான் பதில் கூறி ஞல் அவர் திகைத்து நிற்கின்ருர்; நாட்டு நிலையை நினைந்து நகைத்துப் போகின்ருர். நகைப்பும் திகைப்பும் வியப்பாயுள்ளன.

நேர்மை ஒழுங்கு நீதிமுறை நன்றியறிவு முதலிய நல்ல நீர்மைகள் இந் நாட்டில் குன்றி வருகின்றன; பொருமை வஞ் சம் சூது பொய் முதலிய தீமைகள் எங்கும் பொங்கி நிற்கின் றன. ஒரு பொய்யைச் சொல்லக் கூசி அரசு முழுவதையும் இழந்து மனைவி மக்களைத் துறந்து படாத பாடுகள் பட்டு அரிச்சந்திரன் சத்தியத்தைப் பேணி யருளினன்.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன். (குறள் 294)

என்ற தெய்வத் திருமொழிக்கு மெய்யான சான்ருய் அவன் மேவி நிற்கின்ருன். சத்திய வீரனை அந்த உத்தமன் பிறந் திருந்த இந்தப் புனித நாட்டிலே நாமும் மனிதராய்ப் பிறந் திருக்கிருேம். மெய்யை எவ்வாறு பேணி வருகிருேம்? பொய் பேசுவது நீசம் என்ற அந்தக் கூச்சமே அடியோடு நாசமாய்ப் போயுள்ளது. பொய் பேசாமல் வாழ முடியுமா? என்று பாழான நிலையில் நாடு பழிபட்டுள்ளது. வாய் எல்லாம் பொய்; செயல் எல்லாம் கள்ளம்; நெஞ்சம் எல்லாம் கரவு யாண்டும் பரவி நீண்டு நிற்கின்றன. நல்லதை மதித்து நயந்து பேணுவார்

இல்லை; பொல்லாத புலைகளையே எல்லாரும் புகழ்ந்து போற்றுகின்றார். தகுதி கண்டு மதியாதார் தகாதவராய் ஒழிகின்றார்.

பாஞ்சாலங்குறிச்சி வீரரை வெள்ளைக்காரர் மதித்து உள்ளம் வியந்துள்ளது போல் இந் நாட்டவர் உணர்ந்து கொள்ளவில்லை. ஊமைத்துரையைக் குறித்து சீமைத்துரைகள் கூறியிருப்பன சீர்மை நிறைந்துள்ளன; அவற்றுள் ஒன்று அயலே வருகிறது.

"One of the most extraordinary mortals I ever knew"

"நான் அறிந்த எவரினும் இவர் மிகவும் அதிசயமான ஓர் அற்புத மனிதர்" எனக் கும்பினியின் தளபதியாய் வந்தவர் இந்த நம்பியை வியந்து இவ்வாறு குறித்திருக்கிறார்.

துரைச்சிங்கம் இறந்து பட நேர்ந்தபோது ஜெனரல் வெல்ஷ்துரை பெரிதும் மறுகி எழுதியுள்ளார்; அந்தச் சேனைத் தலைவன் உருகி வரைந்துள்ளது கருதி யுணரவுரியது.

"He was at last doomed to grace a gallows, in reward for the most disinterested and purest patriotism"

(General Welsh)

"சிறிதும் தன்னலம் கருதாத பரிசுத்தமான தேசாபிமானத்தின் பெரிய வெகுமதியான அரிய மகிமையோடு தூக்கு மரத்தில் அவர் மாண்டுபட்டார்" என இவ்வாறு அந்த வெள்ளைத் துரை உள்ளந் திறந்து உண்மையை வெளியிட்டிருக்கிறார். தேசத் தியாகிகள் இந்த ஆங்கில வாசகத்தை ஊன்றி நோக்கி உணரவேண்டும். உண்மையை ஓர்ந்து தெளிவது நன்மையாம்.

இந் நாட்டின் சுதந்திரத்திற்காகவே அயல் நாட்டாரோடு மூண்டு போராடி நாலாயிரம் பேர்களைப் போரில் பலிகொடுத்து அரசு முழுவதும் இழந்து அடியோடு இவ் வீரர் மாண்டு போயுள்ளார். இமயம் முதல் குமரிவரை இந்தியாவில் யாரும் இவ்வாறு ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடியதில்லை. நேரு முதலிய நமது தேசத் தலைவர்கள் இந்த வீர சரித்திரத்தின் உண்மையை நேரே உணர நேர்ந்தால் உள்ளம் உருகி உவந்து போற்றுவர். உரிமையை ஓர்ந்து கடமையைத் தேர்ந்து ஞானம் வீரம் மானம் நேர்மை முதலிய நீர்மைகள் தோய்ந்து இத் தேசம் சீர்மையாய் வாழ்ந்து வர ஈசன் அருள் புரிய வேண்டும்.

திருவள்ளுவர் நிலையம், மதுரை. ஜெகவீரபாண்டியன்.

16—4—1954.

# பொருள் அடக்கம்.

## உரிமையுரை.



என்னை ஈன்றருள் ஆவுடை யம்மை என்று இயற்பேர்
மன்னி நின்றஅவ் அன்னையின் மலரடித் துணையை
உன்னி யான்இந்த வீரமாக் கதையுயர் நூலைத்
துன்னும் அன்பினுக் குரிமைசெய் துவகைமீக் கொண்டேன்.

## இந் நூலின் சிறப்பு.

தென்னன் நாட்டினில் சிறந்துதன் இசைதிசை எங்கும்
முன்னம் நாட்டினன்; முனைமுகத்து எதிர்ந்தவர் எவரும்
பின்னங் காட்டவே பெருந்திறல் காட்டினன்; பெயரை
இன்னங் காட்டினும் இரும்பயம் காட்டுவான் எவர்க்கும்.

அன்ன சீருடை அருந்திறற் கட்டபொம் மென்னும்
மன்ன வன்னுயர் சரிதமின் னமிர்தென மருவி
இன்ன மன்பதைக் கின்பமாய் இசைந்துளது; இதனை
உன்னி ஓர்ந்தவர் உயர்நலம் பெறுகுவர் உயர்ந்தே.

உ

பரமபதி துணை.

# பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்.

## ஆதி நிலை.

திருமலின் தோங்கிய சீர்திகழ் பாஞ்சைப்
பதியுயர் சரிதம் பகர ஒருபதி
மதியிருந் தருளும் மாண்புற இனிதே.

பூமி தேவியின் திருமுக மண்டலம் எனப் பொலிந்து விளங்கும் இப் பாண்டி நாட்டிலே, நெல்லையின் வடகிழக்கில் நான்கு காவத எல்லையில், பாஞ்சாலங்குறிச்சி என்னும் வீரமா நகர் இற்றைக்கு நூற்று முப்பத்தெட்டு ஆண்டுகட்கு முன்னர் யாண்டும் இசைபரப்பி, நீண்ட புகழோடு நிலவியிருந்தது. அருந் திறலும், பெருந்திருவும், பொருந்தகவும், ஒருங்கமைந்து யாரும் வியந்து புகழும்படி மிக்க சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந் திருந்த அந்நகரிலிருந்து அரசு புரிந்து வந்த மன்னர் எவர்க்கும் முன்னுற மூல புருடனாய் நின்றவர் கட்டபொம்மு நாயக்கர் என்பவர். மிகவும் கட்டாண்மை யுடையவர். அவர் கம்பள ஜாதியில் தோக்கலவார் என்னும் குலத்தினர்; தெலுங்கர். அவரது தாய்மொழி தெலுங்கு ஆதலால் அவருடைய மரபினர் வீடுகளில் இன்றும் தெலுங்கு பாஷையே பேசப்பட்டு வருகின்றது. பேசும்மொழி பிறப்புவழியைத் துலக்கியுள்ளது.

அவர் தெலுங்கு தேசத்திலே, பல்லாரி நாட்டிலே, வாடிக் கோட்டை என்னும் நகரிலே விளங்கியிருந்த பால்ராஜா என்னும் சிற்றரசனுக்குப் புதல்வராய்த் தோன்றினர். தாய் பெயர் வீரலக்கம்மாள். அவ் வீரத் தாயின் திருவயிற்றில் இக் குலமகனுக்கு முன்னர் எழுவர் பிறந்திருந்தாராதலால் இவன் எட்டாவதாய் இலங்கி நின்றான். அந்தத் தங்கக்கட்டி வயிற்றில்

தோன்றிய இந்தச் சிங்கக்குட்டி எங்கும் இசை நாட்டும் என இளமையிலேயே சில உளவுகள் அறிய நின்றன. அந்நிலையினை யுணர்ந்து இருமுது குரவரும் பெருமகிழ்ச்சி யடைந்தனர். அக் குறுநில மன்னன் முப்பத்திரண்டு ஊர்களுக்குத் தலைவனாய் நிலவி இருந்தான். அங்ஙனம் இருந்து வருங்கால் கால வேற்றுமையால் மூன்று வருடங்களாக அங்கே சரியான மழை பெய்யவில்லை. அதனால் குடிகளெல்லாரும் மிடிவாய்ப்பட்டு நெடிது வருந்தினர்; சிலர் அயலிடம் புகுந்தனர்; பலர் படுதுயருழந்தனர்; அரசும் நிலை குலைந்தது; எங்கும் அவலமிருந்தது; அரசன் மிகவும் கவலை கூர்ந்து கலங்கி யிருந்தான்.

வடநாடு விட்டுத் தென்னாடு வந்தது.

அவ்வமயம் அத்தேசம் முழுவதையும் ஆட்சி செய்துவந்த மகமதிய அரசன் இக் குறுநில மன்னனிடம் உரிமையோடு பெண்கொள்ள விழைந்தான். அவ்விழைவின் விளைவை அளவு செய்து வந்து, முடிவில் தன் கருத்தை மந்திரிகள் மூலம் இவனுக்கு அறிவித்தான். அதனைக் கேட்டவுடனே இவன் வாட்டமீக்கூர்ந்து வருந்தி அயர்ந்து மானம் அழிய நேர்ந்ததே என்று மறுகி யுளைந்தான். நேரே அவனிடம் மறுத்துரைக்கவும் ஆற்றலின்றிக் கறுத்து நின்று, கருத்து நொந்து உறுவதை ஓர்ந்தான். மரபு நிலையழிய வாழ்வதினும், அரசு நிலையொழிய அயலகல்வதே நலமெனெ உறுதி செய்து, உறவுமுறையாருடன் ஆராய்ந்து ஒருவரும் அறியாவகை இரவிடை எழுந்து பசு நிரைகளை மட்டும் பாதுகாத்துக்கொண்டு, மனைவியும் மக்களும் ஒக்கலும் பிறரும் உடன் தொடர்ந்துவர, தென்திசை நோக்கி நடந்து, ஆங்காங்குத் தங்கி, திங்கள் ஆறு கழிந்தபின் இத் தென்னாட்டையடைந்து * சாலிகுளம் என்னும் பறம்பில் வந்து வேலி வளைத்துக் கன்று காலிகளை நன்று பரிபாலித்து உற்றாரோடு உவந்து உறைந்திருந்தான். அவ் அல்லல் நிலையிலும்

* இது மணியாச்சியிலிருந்து வடகிழக்கில் 10 மைல் தூரத்தில் உள்ளது. சாரலும், ஏரியும் சாரப்பெற்றது, சீர்வளம் உடையது.

தனது இளமையான அருமை மகனை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் போற்றி வளர்த்துப் புனைந்து வந்தான். அப் பொழுது அவனுக்கு வயது பதினைந்து நிறைந்து பதினாறாயது. வாலப் பருவம் வளர்ந்து வந்தது.

ஆண்டு கசு என அன்று அமைந்திருந்த அவ் ஆண்டகையே நீண்ட புகழோடு இன்றும் தன் பெயர் நிலவ நிற்கின்றான் ஆதலால் தலைமையான அவனது நிலைமை நீர்மைகளை இனி ஆவலோடு நாம் அறிய நேர்கின்றோம்.

இளம் பருவத்திலேயே யாதும் அஞ்சா நெஞ்சனாய் ஆண்மை யுற்றிருந்த இவன் உரிய பருவத்தே தெலுங்கும், தமிழும் சேரக் கற்றான். அத்துடன் வாள் வேல் முதலிய படைக் கலங்களையும் ஊக்கமோடு பயின்று தெளிந்தான். மல்லிலும், வில்லிலும், கம்புச் சிலம்பத்திலும் எல்லையில் திறலுடன் இவன் இலங்கி யிருந்தான். போரென வீங்கும் பொலங்கொள் தோளனாய் இவ் வீர மகன் விளங்கி வருவதைக் கண்டு உறவினர் யாவரும் உளங் களித்து நின்றார். வந்து தங்கிய இடம் வளஞ்சுரந்திருந்தமையால் பசு நிரைகளை இனிது புரந்து சிறு குடிசைகள் புனைந்து பெருமகிழ்வுடன் இருந்து வந்தார். அந்நிலையில் ஆண்டுகள் ஐந்து நீண்டு கழிந்தன.

அங்ஙனம் இருந்து வருங்கால் ஒருநாள் இரவு கள்ளர் சிலர் அயலிடங்களில் போய்க் கொள்ளை செய்து நள்ளிருளில் அவ்வழியே வந்தார். அவ்வமயம் தற்செயலாக எழுந்த இவன் ஆளரவம் கேட்டு இவ் வேளையில் இது என்? என வெளியே வந்தான். வந்தவன் அடர்ந்து போகின்ற அவர் முன் அஞ்சாது போய் நின்று "யார்? நீர்!" என்றான். காரிருளில் நேரெதிர்ந்து தனியே துணிந்து வந்து இவன் கேட்ட கேள்வி முதலில் துணுக்கத்தை விளைத்ததேனும் உருவத்தை உற்று நோக்கி ஓர் இளைஞன் என உள்ளிகழ்ந்து அக் கள்ளருள்

ஒருவன் தன் கையிலிருந்த கம்பால் இவன் தலையில் மெள்ள அடித்தான். அடிபடவே இவன் கடிது கொதித்துச் சிங்கக் குருளைபோல் சீறிப்பாய்ந்து அக் கம்பைக் கடுத்து வெளவிக் கறங்கெனச் சுழன்று மறங்கொண்டு மண்டி உரங்கொண்டு மோதி உருத்து அறைந்தான். உற்றவரனைவரும் ஒருங்கே வீழ்ந் தார். அடியில் வீழ்ந்தவரை ஒரு நொடியில் எண்ணினன். பன்னிரண்டுபேர் மண்ணில் கிடந்தனர். உண்ணிறைந்த உவகையுடன் தனது உறவினரைக் கூவியழைத்து உற்றதை உரைத்து அனைவரையும் கட்டிவைத்துக் களவுப் பொருள்களை ஒரு பக்கம் கொட்டி வைத்தான். பொழுது புலர்ந்தது. இரவில் நிகழ்ந்ததை அருகிலிருந்த நகரிலுள்ளவரெல்லாரும் வினவியறிந்து விரைவில் வந்து கண்டு அக் கள்ள மாக்களைக் கடிந்து இகழ்ந்தார்; இப் பிள்ளை வீரனைப் பெரிதும் புகழ்ந்தார். இகழ்ச்சி யடைந்து அச் சோரர்கள் இன்னலுறுவதை நோக்கி இவ் வீர மகன் இரக்கமீதூர்ந்து கட்டவிழ்த்து விட்டு இப்பா டிமைத் தொழிலை இனிப் பண்ணுதீர்! என ஒட்டி யுணர்த்தி ஒழிய விடுத்தான். அவர் உணர்ந்து நாணி உள்ளுநற இவனை வியந்து போனர். அந்தக் கொள்ளைப் பொருள்களை உடையவரிடம் இவன் கொடுத்தனுப்பினன். இவனது உள்ளப் பெருமையையும், வள்ளற் குணத்தையும், தள்ளருந் திறலையும் எல்லாரும் அறிந்து ஏத்தி நின்றுர். அயலிடமெங்கணும் இவனது வலிநிலை புகழுற ஓங்கிப் பொங்கி நின்றது.

நிலையழிந்து பிழைக்க வந்த இடத்திலேயும் தன் நிலைமைய உலகம் அறிய நிலைநாட்டிய இவனது நிலைமையை வியந்து பெற்றோரும் உற்றோரும் பெரிதும் மகிழ்ந்தார். கட்டிய ஆண்மையை நினைந்து கெட்டிபொம்மு என்று அன்று உரிமையோடு இவனை உவந்து அழைத்தார். இவனது இயற்பெயர் பொம்மு என்பதே. திறமையுடன் நின்று தனியே இவன் செய்த திறலை நோக்கிக் கெட்டி என விசேடித்துரைத்தார். கெட்டி என்பதற்குத் தெலுங்கில் வல்லமை என்பது பொருள். இவனது வல்

லாண்மையை நோக்கி அன்று இட்ட கேட்டிபோம்மு என்னும் தெலுங்குப் பெயர் பின்பு கட்டபோம்மு எனத் தமிழில் மருவி வழங்கலாயது. தெலுங்கின் வன்மை தமிழில் வரவும் தன் தன்மை திரிந்து நின்றது; ஆயினும் அப்பேராளன் பெருமை பெருகி வந்தது. அவ்வமயம் இருபத்தொரு வயதை இவன் மருவி யிருந்தான். உறுதி பாரங்கள் பெருகி யிருந்தன.

## அரசடைந்த விதம்.

இங்ஙனம் இருந்து வருங்கால் சாலிகுளத்தின் அருகே யிருந்த அழகியவீரபாண்டியபுரம் என்னும் நகரில் அமர்ந்து ஓர் அரசன் அரசுபுரிந்து வந்தான். அவன் மதுரைப் பாண்டிய மன்னர் மரபைச் சேர்ந்தவன். ஜகவீரபாண்டியன் என்னும் பெயரினை யுடையவன். சிறந்த அழகன். நல்ல அறிவும், நயத்தகு சீலமும் உள்ளவன். எல்லார்க்கும் இனியனாயிதம் புரிந்து நின்றான் ஆதலால் குடிகள் அனைவரும் அவனைக் குலதெய்வமாக நினைந்து யாண்டும் கொண்டாடி வந்தார்.

அக்காலத்தில் புதியம்புத்தூர், ஆரைக்குளம் என்னும் ஈரிடங்களிலும் குறுநில மன்னர் இருவர் இருந்து சில ஊர்களை ஆண்டு வந்தனர். அவர் விசயராமன், உக்கிரசிங்கன் என்னும் பேரினர். மறவர் மரபினர். அவ்விருவரும் இப்பாண்டியன் மீது பொறாமை மீக்கொண்டு பொருமி நின்றார். அமைதியும் பொறுமையுமுடையவனாய் மறுமை நோக்கோடு மருவியிருந்த இம் மாறன்பால் மாறுபட்டுச் சிறுமை நோக்கோடு அவர் செயிர்த்து நின்றார் ஆதலால் வழக்கமாய்த் தந்துவந்த வரிகளையும் செலுத்தாமல் செருக்கு மீக்கூர்ந்து திரிந்து வந்தார். வரவறியாது ஒருமுறை பொருபடை திரட்டி அடுசமர் செய்ய ஆயத்தமாயினர். அவரது நிலையினை எதிரறிந்து அவ்வழுதி மன்னன் மிகவும் வருந்தி "யாது செய்வது?" என்று திகைத்து அலமந்து நின்றான். அவ்வமையம் அங்கு அமைச்ச

ளுயிருந்த சங்கரசிங்கு என்பவன் இக்கட்டபொம்மனது அருந்திறலையும் பெருந்தகவையும் உணர்த்தி அரசனிடம் உதவி கோரக் குறித்தான். தன் எல்லையில் வந்து தங்கியுள்ள இவ் வல்லவனை ஒல்லையில் அழைத்து உற்றதையுரைத்து உறுதித் துணையாய் நின்று உதவி செய்யும்படி அவ் வேந்தன் பெரிதும் வேண்டினன். அவனது வேண்டுகோளுக்கு இவ் வீரமகன் உடனே இணங்கினன். இந்த ஆண்டகையின் மன நிலையை யறிந்து அப்பாண்டிய மன்னன் மகிழ்ந்து வேண்டிய வரிசைகளை விழைந்து செய்து விறலுடன் விடுத்தான்.

மறுநாட் காலையில் மருவலர் இருவரும் பொருபடையோடு பொங்கிவந்து நகரின் அயல் வளைந்து அமர்மேல் மூண்டு சமருக்கு நின்றார். அவரது நிலையினை அறிந்ததும் இக் குலமகன் உடைவரிந்து கட்டி இடைவாள் புனைந்து, படை அயல்வர விடைபோல் விரைந்து பகைமேல் சென்றான்.

மூவாயிரம் படைவீரர்களோடு மூண்டு வந்திருக்கும் அத் தலைவரிருவரும் இவ் ஆண்டகை வருகின்ற அடல் நிலையைக் கண்டு அதிசயம் கொண்டு முதலில் அஞ்சினரேனும் அருகில் அணுகவும் உருவினை நோக்கி ஒரு சிறுவன் என உள் இகழ்ந்து ஊக்கி நின்றார். இவன் நெருங்கி முன்னேறவும் உடனே அவர் ஒருங்கு வளைந்தார். இவன் உள்ளூறப் பாய்ந்து ஒள் வாள் வீசிக் கொள்ளிவட்டம்போல் கொடிது சுற்றித் தன் ளருந்திறலுடன் தடையற ஏறி அடுசமர் புரிந்தான். படு கொலைகள் பல விழுந்தன. தலைகள் உருண்டு கொலைகள் விழவே நிலை திரிந்து நெட்டழிந்து படைமுரிந் தோடியது. ஓடவே புலிக்குருளைபோல் கெலித்தடலேறி வெற்றித்திருவுடன் இவன் விரைந்து மீண்டான். அரசன் அறிந்து அகமிக மகிழ்ந்து தமருடன் எதிர்கொண்டு ஆர்வமீதூர்ந்து அணைத்து மகிழ்ந்து அழைத்து வந்து அரண்மனையில் வைத்து அரிய உபசாரங்கள் செய்து பரிசில் பல தந்து பண்பு பாராட்டி

நண்புடன் விடுத்தான். அன்றுமுதல் உரிமை மிகுந்து இரு வரிடத்தும் உள்ளன்பு வளர்ந்தது. வளர்ச்சி நாளும் கிளர்ச்சி பெற்றுவர அருமையோடு இவனை அவன் ஆதரித்து வந் தான். அவனுக்குச் சந்ததி இல்லாமையால் முடிவில் அரசை இவனிடம் உதவி அவன் முடிவுறலானான். மகன் எனுமுறையில் அகனமர்ந்திருந்து தகனம் புரிந்து கடன்முறை யாவும் கருதிச் செய்து சுருதி முறைப்படி பின்பு இவன் படிபுரந்து வந்தான். பார்ஆட்சி நேர்ஆட்சி ஆயது.

தலைமை நாடு இழந்து, மறுபுலம் அடைந்து, பசுநிரை புரந்துவந்த இவன் இடையே அரசடைந்தவுடன் உரிய கிளைகளை யெல்லாம் உடன் அணைத்து வைத்துத் தந்தை தாய ரைப்பேணித் தரணியைக் காத்துச் சிந்தைமகிழ்ந்து சிறந் திருந்தான். கேளும் கிளையும் நாளும் வளர்ந்தன; குடிகள் உவந்து குலாவி யிருந்தன; நெடிய திருவுகள் நிறைந்து சுரந் தன; விதிமுறைதெரிந்து படிமுறைபுரிந்து இவன் பரவிவந்தான்.

## வேட்டையில் விளைந்தது.

இங்ஙனம் அமர்ந்து வருங்கால், படைவீரருட் சிலர் ஒரு நாள் சாலிகுளம் காட்டில் வேட்டையாடச் சென்றனர். சென்ற இடத்தில் முயல் ஒன்று எழுந்தது. ஏழு நாய்கள் அதன்மேல் இணைந்துபாய்ந்தன. அது ஒன்றுக்கும் எட்டாமல் விரைந்து தாவி வெளியே மேவி வளி எனச் சென்றது. நாய்களும் அதன்பின் வாவித் தொடர்ந்தன. கீழ்த்திசை ஓடி ஒரு மைல் உற்றபின் தன்மேல் மீறி வந்த நாய்களை அது சீறி எதிர்த்தது. வெகுண்டு பின்வந்தன வெருண்டு கலைந்தன; நாய்கள் யாவும் நடுங்கி அகலவே, மாயமாய் அம் முயல் மறைந்து போயது. வேட்டை வீரர் அனைவரும் வியந்து திகைத்தார். வெட்கி மீண்டு வீட்டை அடைந்தார். காட்டில் நிகழ்ந்ததைத் தம் அரசனிடம் வந்து கருத்துடன் உரைத்தார்.

இவன் கேட்டு வியந்தான்; தான் கோட்டை அமைத்துக் குடியிருத்தற்குரிய இனிய இடம் அதுவே யாமெனத் தன்னுள் விழைந்துகொண்டான். விழைவு நாளும் தழைவு கொண்டது. விழுமிய மேன்மை செழுமி வந்தது. வேட்டைக் காட்சியில் வேட்கை மீதூர்ந்து வந்தவன் கோட்டை சமைக்கக் குறிக் கொண்டு நின்றான்.

## கோட்டை வளர்ந்தது.

திங்கள் சில கழிந்தபின், நல்ல ஓரையில் நாட்செய்துகொண்டு செல்வ நகரைச் சீருடன் அமைத்தான். மாடமாளிகைகள், கூடகோபுரங்கள், மணிமண்டபங்கள், ஆடரங்குகள், அம்பலங்கள், பாடல் நிலையங்கள், கோவில்கள், யானைச் சேமங்கள், குதிரை லாயங்கள், முதலிய யாவும் அழகுற அமைத்துக் கோட்டை வளைத்துக் கொத்தளங்கள் குயிற்றித் தன் பாட்டன் பெயராகிய பாஞ்சாலன் என்பதையே பண்புடன் நாட்டிப், பாஞ்சாலன்குறிச்சி எனப் பெயர் சூட்டி நல்ல நாளில் பல்வகைக் கிளைகளும் பக்கம் சூழ அச்செல்வ நகருட் குடிபுகுந்து இவன் சிறந்து வீற்றிருந்தான். அப் புதிய நகரில் அதிக ஆடம்பரங்களோடு அதிபதியாய் இவன் குடியேறியது கொல்லம் ஆண்டு 276ம் வருடம், வைகாசி மாதம், திங்கட் கிழமை மங்களமான சிங்க லக்கினத்தில் என்க.

## குடி புகுந்தது.

கொல்லம் ஆண்டு என்பது இந் நெல்லை மண்டலத்தில் வழங்கிவருகிற காலக்குறிப்பு. சேரர் மலையிலுள்ள கொல்லம் என்னும் ஊர் தோன்றிய நாளில் இருந்து அதன் பேரால் இங்ஙனம் கணிக்கப்பட்டு வருகின்றது. இது கி. பி. ஆண்டுக்கு 825 வருடங்கள் பிந்தியதாம். ஆகவே ஆதிக் கட்டபொம்மு நாயக்கர் பாஞ்சாலங்குறிச்சியை அமைத்து அதில் முதன் முதல் குடி புகுந்தது கி. பி. 1101ம் ஆண்டு என்பது தெளிவாம்.

இதனால், இந்நகரின் நிலைமையும், பெயரின் இயல்பும், அரசின் தலைமையும் காலமும் பிறவும் சாலவும் புலனும்.

முன்பு அமர்ந்திருந்த அழகிய வீரபாண்டிய புரத்திற்கு வடகிழக்கு இரண்டு மைல் தூரத்தில்தான் இந்தப்புதிய நகரம் அதிசய நிலையில் துதிசெய்ய நின்றது. அந்தப் பழையபுரம் இருந்த இடத்தில் இது பொழுது ஓட்டப்பிடாரம் என்னும் ஊர் உருவாகி யுள்ளது. தானுதிபதி சிவசுப்பிரமணியபிள்ளையின் மரபினர் அவ்வூரில் இப்பொழுதும் குடியிருந்து வருகின்றனர். இப் பாஞ்சைப்பதிபால் அங்கே வாஞ்சை வளர்ந்துள்ளது.

தமரடைந்தது.

அருந்திறல் ஆண்மையோடு பெருந்திருவும் அடைந்து இங்ஙனம் இவன் சிறந்து நிற்பதையறிந்து விஜயநகரம், விசாகம், கஞ்சம் முதலிய வடநாடுகளிலிருந்து கம்பளத்தார் பலர் முன்னும் பின்னுமாக இந் நாட்டில் வந்து குடியேறினர். அச்சாதியினர் தோகலவார், மேகலவார், பாலவார், பெல்லவார், சில்லவார், குரு சில்லவார், எற சில்லவார், கொல்லவார், மல்லவார் என ஒன்பது பிரிவுகளை யுடையவர். இப் பிரிவுகளெல்லாம் அவரவரது உடைமைகளையும், உரிமைகளையும் குறித்தே தெலுங்கு மொழியில் எழுந்தன. தோகலவார் என்பதற்குப் பசுமாடுகளை யுடையவர் என்பது பொருள். அது தமிழில் தோக்கலவார் என வழங்கலாயது. இம் மரபினருக்குக் குடிப் பெயரும் கோத்திரங்களும் உண்டு. இப் பிரிவினர் திருநெல்வேலி ஜில்லாவில் மட்டும் உள்ளனர். காடல்குடி, குளத்தூர், மேல்மாந்தை, என்னும் இம் மூன்று ஜமீன்களும் பாஞ்சாலங்குறிச்சி இனத்தைச் சேர்ந்தவை. எட்டையாபுரம், ஆற்றங்கரை,கண்டவநாயக்கனூர், காமயநாயக்கனூர், கூளப்பநாயக்கனூர், போடிநாயக்கனூர், அம்மையநாயக்கனூர், எறசக்காநாயக்கனூர், தொட்டப்பநாயக்கனூர், பேறையூர், தும்பிச்சிநாயக்கனூர், கடலூர், இடையகோட்டை, மருங்காபுரி,

கொல்லபட்டி, கோலார்பட்டி முதலிய ஜமீன்களெல்லாம் சில்ல வார் என்னும் பிரிவைச் சேர்ந்தன.

சில்லவார் என்பதற்கு இளங் கன்றுகளையுடையவர் என்பது பொருள். செம்மை, கருமை, தலைமை பற்றி அவர் எற சில்லவார், நல சில்லவார், குரு சில்லவார் என நின்றுள்ளார். வெள்ளாடுகளை யுடையவர் மேகலவார்; செம்மறியாடுகளை வைத்திருந்தவர் கொல்லவார்; பால் கறந்து உதவி வந்தவர் பாலவார். இவ்வாறு உரிமையுடைமைகளால் பிரிவுகொண்டு பாண்டிநாடெங்கும் பரவி அவர் உறவாய் மருவி யிருந்தனர்.

இச்சாதியினர் ஆதியில் கம்பளம் என்னும நாட்டில் இருந்தமையாலும், காட்டில் பசுநிரைபுரந்து வருங்கால் எப்பொழுதும் ஒருவகைக் கம்பளத்தைப் போர்த் திருந்தமையாலும் கம்பளத்தார் என நின்றார். கம்பளம்=கம்பிளி, போர்வை. "கம்பள ரத்தினம் இருக்க, ரத்தின கம்பளம் விரிக்க" என இந்த இனத் தலைவன் ஒருவனுக்கு இருக்கை இடும்படி பிற்காலத்துப் புலவரொருவர் உரைக்குங்கால் இங்ஙனம் இணைத் திசைத்திருக்கிறார். மரபு முறைநிலைகள் மருமங்களாயுள்ளன.

இருந்த இடம், அணிந்த உடை, புரிந்த வினை என்னும் இவற்றால் இணைந்த பெயரோடு இப் பிரிவினர் இனமாய்ப் பிணைந்து பெருகி யிருக்கின்றமை இதனால் இனிது புலனும்.

இப் பிரிவினருள் தலைமையான நிலைமையில் நிலவியுள்ள தோக்கலவார் என்பவர் இயற்கையாகவே அஞ்சாமையும் அருந்திறலு முடையராய்ச் சிறந்திருந்தமையால் அவரனைவரையும் உவந்தழைத்து உடன் அணைத்து வைத்துத் தம் ஆட்சி மாட்சியுறும்படி இக் கட்டபொம்மு நாயக்கர் ஆதரித்துக் கொண்டார். கொள்ளவே கிளைஞர் அனைவரும் உளம் மிக மகிழ்ந்து அளவளாவி யமர்ந்து தலைமை நிலையில் அவரை

நிலைபெற நினைந்து பலவழிகளிலும் உறுதிசூழ்ந்து உதவி புரிந்து உரிமையோடு பெருகிப் பெருமையாய் வாழ்ந்து வந்தார்.

தலம் புரந்தது.

தன்குலம் தழைக்கத் தழைத்திருந்த இம்மன்னன் தான் புதிதாக அமைத்த பாஞ்சாலங்குறிச்சியில் அமர்ந்து இசை திசை பரவ அரசு புரிந்து வந்தான். அதிசய நிலையில் தனக்குப் புதிதாய் அமைந்த அந்நிதி நிலையைக் கண்டு மதிமயங்கி இவன் மனங்களித்திலன். எல்லையில்லாத அண்டப் பரப்பில் தான் அடைந்துள்ள நில மண்டலம் பரமாணுவினும் மிகச் சிறிதாம் என்னும் உண்மை யுணர்வோடு ஊன்றி நின்றான் ஆதலால் புன்மையான செருக்குகள் ஒன்றும் இவன் உள்ளத்தில் தோன்றவில்லை. இப் படியில் தன்னைக் கடவுள் இப்படி உயர்த்தியது அவனது படைப்பிலுள்ள சீவ கோடிகளுக்கு இயன்றவரையும் ஊழியம் புரியவே என உணர்ந்துகொண்டு எவ்வுயிர்க்கும் ஆர்வமோடு இவன் இதம் புரிந்து நின்றான். தரும நெறி வழுவாமல் சத்தியம் தவறாமல் உத்தம நிலையில் இவன் ஒழுகி யுயர்ந்தான். "அறத்தினூஉங்கு ஆக்கமுமில்லை" என்னும் உறுதி மொழியை உள்ளங் கொண்டு பெரிதும் நெறியோடு தருமம் பேணி நின்றான். புண்ணியமே எண்ணிய இன்ப நலங்களை இனிது நல்கும் என்னும் உண்மை யுணர்வுடன் ஒளிபுரிந்து வந்தான்.

"திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தினும் அறத்திறம் மறத்தல் ஓம்புமின்"

எனத் தன்னிடம் வருகின்ற உறவினரெவர்க்கும் இவன் உரிமையா யுரைத்து இருமையும் இன்புற அருமை புரிந்தான். தரும நலனையும் அதனால் வரும் அருமை பெருமைகளையும் உறுதியோடு கருதி நெறிமுறை ஒழுகி நாளும் ஊக்கி முயன் றமையால் ஆளுந்துறையில் இவன் ஆக்கம் மீக்கூர்ந்தான்.

"யானையும் தேரும் புரவியும் படையும்
அளவில அமைந்து மேலுள்ள
ஏனைய நலங்கள் யாவையும் எய்தி
யிருப்பினும், அறம்ஒன்றுஅங் கிலையேல்
வானையும் வென்று வாகைகொள் வீர
வல்லர சாயினும் வறிதே
ஊனமுற் றழியும் கரையறு குளம்போல்
உள்ளபல் வளங்களும் ஒழிந்தே"

என்னும் உண்மையையுணர்ந்து தன் அரசுக்கு அறமே வெற்றி என ஆர்வமுற்று நின்று எங்கும் அதனை நன்கு ஆற்றிவந்தான்.

நலம் புரிந்தது.

குடிகளுக்கு இதம்புரிவதே தன் கடமையெனக் கருதி உரிமையாக ஓர்ந்து உபகாரஞ் செய்துவந்தமையால் அனைவரும் இவனை அன்னையென நினைந்து அன்புமீக்கூர்ந்து ஆதரித்து வந்தார். உதவியாளனை எவரும் உவந்து போற்றுவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இவன் பெருங் கொடையாளன். யார் வந்து கேட்டாலும் இல்லை யென்னுமல் எதையும் அள்ளிக் கொடுத்தான். தகுதியில்லாதவர்க்கும் மிகுதியாகத் தந்துள்ளான். சிலர்க்குப் பரிசிலாகக் கிராமங்களும் விடுத்துளான். இவனது கொடைநிலையைக் குறித்துப் பலரும் அக்காலத்தில் மிகவும் வியந்து புகழ்ந்தார். "கொடுத்தால் கட்டபொம்மு கொடுக்க வேண்டும், விளைந்தால் கரிசல் காடு விளைய வேண்டும்" என்னும் பழமொழி இன்றும் இந்நாட்டில் வழங்கி வருகிறது. இதனால் இவனது கொடைநிலையும் குணநலனும் மனநிலையும் உணரலாகும். ஈகையானது எல்லாவுயிர்களுக்கும் இன்பம்தரும் ஆதலால் அதனை இயல்பாகவுடைய இவனை உலகம் உவந்து நின்றது. அரிய குணங்களாகிய கொடையும் வீரமும் இவனிடம் குடி கொண்டிருந்தமையால் மறுபுல மன்னரும் மாண்புடன்

புகழ்ந்து இவனை மதித்துவந்தார். இவனது ஆட்சிமுறை யாண்டும் நெறி நியமங்களோடு மிகவும் மாட்சியுற்றிருந்தது.

ஏரிகள், வாவிகள், கூவங்கள் முதலிய நீர்நிலைகளை ஆங்காங்கு உளவாக்கி நிலங்களை வளம்பெறச்செய்து தலங்கள் தோறும் குடிகள் இன்புற்று வாழும்படி அன்புற்று விசாரித்து அறம் புரி கொள்கையோடு இவன் அரசுபுரிந்து வந்தான்.

மகன் பிறந்தது

இவனுடைய அருமை மனைவி பெயர் வெள்ளையம்மாள் அவள் பொற்பிலும் கற்பிலும் பொறையிலும் சிறந்தவள். அப் பதிவிரதையோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இவன் இனிது வாழ்ந்து வருங்கால் ஓர் குலமகன் பிறந்தான். அப்புதல்வனுக்குத் தன் முதல்வனாகிய பழைய வழுதிமன்னன் பெயரையே நன்றியறிவோடு விழைவு செய்து வைத்து உழுவலன்போடு பேணிவந்தான். அவன் பருவம் நிரம்பி உருவிலும் அறிவிலும் சிறந்து உயர்ந்து விளங்கினான்.

"அன்புறு மனைவியோ டமர்ந்து போகங்கள்
இன்புற நுகர்ந்திசை திசைகள் ஏறவே
பொன்புனை கழலவன் புவிபுரந் தெழில்
மன்புனை மகவையும் மகிழ்ந்து கண்டனன்."

என உலகம் புகழ்ந்துவர இவன் உயர்ந்து வந்தான்.

இங்ஙனம் எல்லா நலங்களையும் அடைந்து யாவரும் இன்புற இதம்புரிந்துவந்த இவன் பட்டந்தரித்து நாற்பத்தேழு ஆண்டுகளாக நாட்டை நன்கு பரிபாலித்திருந்தான்.

அதன்பின் இவனுடைய மகன் பட்டத்துக்கு வந்தான். இவ்வகையில் நாற்பத்தெட்டு வழிமுறைகள் வந்துள்ளன. இனி வருகின்ற ஒவ்வொருவருடைய பெயரின் இறுதியிலும் கட்டபொம்மு என்னும் பட்டப்பெயரை கூட்டிக்கொள்ளுக.

# இரண்டாவது அதிகாரம்.

## கட்டபொம்மன் வழிமுறை.

### ஜகவீரபாண்டியக்கட்டபொம்மு.

### உ-வது பட்டம்: 1148—1171.

தனக்கு அன்போடு அரசை அருளிய பழைய பாண்டிய மன்னன் பெயரையே ஈண்டிய நண்போடு தன் மகனுக்குக் கட்டபொம்மு நாயக்கர் இட்டிருந்தார் ஆதலால் ஜகவீர பாண்டியக் கட்டபொம்மு என அவன் பட்டமெய்தி நின்றான். இவ்வழியில் வரும் அரசர்க்கெல்லாம் கட்டபொம்மு என்பது பட்டப்பெயராய்ச் சூட்டப் பெற்றது. அதற்குக் காரணம், அப்பேராளன் பாராளும்படி தன் பரம்பரையை உரஞ்செய்து வைத்துள்ள உரிமையும் அருமையும் கருதி என்க. அம் மகனும் தந்தை போலவே வீரமும் வண்மையும் உடையனாய் யாரும் இன்புற இருபத்துமூன்று ஆண்டுகள் பெரும் புகழோடு அரசுபுரிந்திருந்தான். அதன்பின் அவனுடைய மகனான வீரபொம்மு என்பவன் பட்டத்துக்கு வந்தான்.

### வீரபொம்மு.

### ங-வது பட்டம்: 1171—1201.

இவன் முப்பது வருடங்கள் முறைபுரிந்தான். பாட்டனை பெயரை நாட்டில் நாட்டி ஈட்டம் மிகச் செய்தான். இவனுக்கு மூன்று புதல்வர்கள் பிறந்தனர். மூத்தவன் பெயர் கெட்டி பொம்மு. தந்தை இறந்தபின் இவன் அரசனாய் வந்தான்.

### கெட்டிபொம்மு.

### ச-வது பட்டம்: 1201—1230.

இவன் இருபத்தொன்பது வருடங்கள் இருந்தான் அதன் பின் இவனுடையமகன் ஆதிராமு என்பவன் ஆட்சிக்குவந்தான்.

ரு-வது பட்டம்: 1230—1254.

இவன் இருபத்துநான்கு வருடங்கள் ஆண்டு வந்தான். இவனுக்கு இரண்டு புதல்வர்கள் பிறந்திருந்தனர். மூத்தவன் இளமையிலேயே இறந்துபோனான். ஆதலால் இளையவனான சின்னபொம்மு என்பவன் மன்னவனாய் அரசையடைந்தான்.

சின்ன பொம்மு.

சு-வது பட்டம்: 1254...1282.

இவன் நல்ல நீதிமான். சொல் வன்மை யுடையவன். வில் வலியில் சிறந்தவன். எல்லாருக்கும் இதம் புரிவதே தன் கடமையாக எண்ணி யாண்டும் கருத்தோடு ஒழுகினான். இவன் இருபத்தெட்டு ஆண்டுகள் அரசு புரிந்தான். அதன்பின் இவன் மகனாகிய வீரராமு ஆட்சிக்கு வந்தான்.

வீரராமு.

எ-வது பட்டம்: 1282—1302.

இவன் தந்தைபோலவே எல்லா வகையிலும் சிறந்து இருபது வருடங்கள் இருந்தான். அதன்பின் இவனுடைய மகன் துரைராஜன் முறையே ஆட்சியை ஏற்றான்.

துரைராஜன்.

அ-வது பட்டம்: 1302—1327.

இவன் நல்ல போர் வீரன். குதிரை ஏற்றத்தில் மிகவும் வல்லவன். இருபத்தைந்து வருடங்கள் குடிபுரந்திருந்தான். பின்பு இவனுடைய மகன் நல்லபொம்மு அரசுக்கு வந்தான்.

நல்ல பொம்மு.

கூ-வது பட்டம்: 1327—1354.

இவன் எல்லா வகையிலும் நல்லவன். சிறந்த நீதிமான். இருபத்தேழு வருடங்கள் இருந்தான். பின்பு இவன் மகன் முத்துவிஜயராமு முறை புரிந்து வந்தான்.

முத்துவிஜயராமு.

ய-வது பட்டம்: 1354—1375.

இவன் பல கலைகளிலும் வல்லவன். இருபத்தொரு வருடம் நாட்டை இனிது பேணி இறைமுறை புரிந்தான். பின்பு இவனுடைய மகன் வீரசூடாமணி பட்டத்துக்கு வந்தான்.

வீரசூடாமணி.

கக-வது பட்டம்: 1375—1405.

இவன் அருந்திறலாளன். சிறந்த போர்வீரன். பெருந் தன்மையுடையவன். குடிகள் எவ்வழியும் இனிதுமகிழ முப்பது ஆண்டுகள் இவன் முறைபுரிந்திருந்தான். பின்பு இவனுடைய மகன் தளவாய்க்குமாரசாமி அரசை அடைந்தான்.

தளவாய்க்குமாரசாமி.

கஉ-வது பட்டம்: 1405—1428.

இவன் மல்வலியில் சிறந்தவன். மல்லர்களை வளர்த்து ஒருவரோடு ஒருவர் மல்லாடச்செய்து அவர்தம் வல்லாண்மை காண்பதே பொழுது போக்காகப் பொருந்தி முழுதும் வாழ் வைக் கழித்து வந்தான். இருபத்துமூன்று வருடங்கள் இருந் தான். அதன்பின் இவன்மகன் வீர மல்லு ஆட்சிக்கு வந்தான்.

வீரமல்லு.

கங-வது பட்டம்: 1428—1450.

இவன் நல்ல கல்வியறிவில்லாதவன். பொறியின்பங்களி லேயே அழுந்தி வெறிகொண்டிருந்தான் ஆதலால் ஆட்சி முறை குன்றி நின்றது. குடிகள் வருந்தி யுள்ளூற இவனை இகழ்ந்திருந்தனர். இவன் காலத்தில் ஜமீன் மிகவும் சீர்குலைந் திருந்தது. இருபத்திரண்டு வருடங்களிருந்து இறந்துபோன பின் இவனுடைய மகன் அதிவீர ராமு பட்டத்துக்கு வந்தான்.

அதிவீர ராமு.

கச-வது பட்டம்: 1450—1480.

இவன் சிறந்த போர்வீரன். நல்ல நீதிமான். தன் தந்தை காலத்தில் நிலைகுலைந்திருந்த அரசினை நலமுறத் திருத்திப் பல வகையிலும் உயர்த்தித் தலைமையோடு இவன் நிலவி நின்றான். முப்பதாண்டுகள் முறைபுரிந்து வந்தான். இவனுக்குப் புத்திரர்களில்லை; ஆதலால் தன் ஞாதிகளில் ஒருவனைத் தத்து எடுத்துக்கொண்டான். அவன் பெயர் ரணவீரசின்னு அவனே பின்னர் ஆட்சியை யடைந்து ஆண்டு வந்தான்.

ரணவீர சின்னு.

கரு-வது பட்டம்: 1480—1493.

இவன் ஆண்மையிற் சிறந்தவன். ஆட்சியை மிகவும் மாட்சி பெற நடத்திப் பதின்மூன்று ஆண்டுகள் குடிகளைப் பாதுகாத்து வந்தான். அதன்பின் இவன் மகன் வீரசேகரன் என்பவன் அரசை மேவி உரிமையோடு பேணி நின்றான்.

வீரசேகரன்.

கசு-வது பட்டம்: 1493—1501.

இவன் எட்டு ஆண்டுகளே யிருந்தான். அதன் பின் இவ னுடைய மகன் ரகுநாதன் என்பவன் பட்டத்துக்கு வந்தான்.

ரகுநாதன்.

கஎ-வது பட்டம்: 1501—1513.

இவன் பேரறிவாளன். கலைகள் பல கற்றவன். புலவர்களோடு அளவளாவி அறிவின்பங்களை அனுபவித்து, உலக நிலையை ஓர்ந்து எவர்க்கும் இதம்புரிந்து, இன்னருளுடையனாய்ப் பன்னிரண்டு ஆண்டுகள் அரசைப் பாதுகாத்து வந்தான் இவனுக்குச் சிவத்தையா, ஜெகவீரபொம்மு என இரண்டு புதல்வர்கள் இருந்தனர். முன்னவன் பன்னிரண்டு வயதில் இறந்து போயினன்; ஆதலால் பின்னவன் முறையே அரசினையடைந்தான். வரிசையோடு ஆண்டு வந்தான்.

ஜெகவீரபொம்மு.

கஅ-வது பட்டம்: 1513—1522.

இவன் ஒன்பது ஆண்டுகள் அரசுபுரிந்தான். அதன் பின் இவனுடைய மகனாகிய விஜயராகவன் பட்டத்துக்கு வந்தான்.

விஜயராகவன்.

ககூ-வது பட்டம்: 1522—1532.

இவன் பத்து வருடம் குடிகளைப் பரிபாலித்து வந்தான். அதன்பின் இவன் தம்பியாகிய இராசபாண்டியன் அரசுக்கு வந்தான். ஆட்சி முறையில் மாட்சிகள் வளர்ந்தன.

இராசபாண்டியன்.

உ0-வது பட்டம்: 1532—1544.

இவன் அறிவும் ஆற்றலும் அமையப்பெற்றவன். நினைத்ததை முடிக்கும் வினைத்திறமையாளன். சிறிய ஜமீனாயிருந்தாலும் பெரிய அரசியல் முறையைப் பேணி நின்றான். குடிகளுக்கு நலம்புரிவதே கொற்றவன் பலம் என்னும் தத்துவத்தை முற்றவும் உணர்ந்து முறை புரிந்து பன்னிரண்டு வருடம் நன்கு பாதுகாத்தான். அதன்பின் இவன் மகனாகிய துரைமல்லு என்பவன் முறையே அரசுக்கு அதிபதியாயினன்.

## துரைமல்லு.

உக-வது பட்டம்: 1544—1554.

இவன் தந்தை போலவே பலவகையிலும் சிறந்து பத்து ஆண்டுகள் நாட்டை நன்கு பரிபாலித்துவந்தான். பின்பு பொம்மு துரை என்னும் இவனுடைய தம்பி உரிமையுற்று நின்றான்.

## பொம்முதுரை.

உஉ-வது பட்டம்: 1554—1560.

இவன் சேவல் சண்டைபார்ப்பதில் ஆவல் மிகவுடையவன். அந்தப் போரையே பார்த்துப் பொறி நுகர்ச்சிகளில் ஆழ்ந்து பொழுதுபோக்கி நின்றான்; அதனால் பாளையம் பலவகையிலும் பழுதடைய நேர்ந்தது. இவன் ஆறு வருடங்களே யிருந்தான். இவன் இறக்கும்பொழுது இவனுடைய மகன் துரைச்சிங்கம் சிறுவனாயிருந்தான்; ஆதலால் சிறிய தந்தையாகிய பெரியமல்லு என்பவன் ஜமீனைப் பேணி வந்தான். பருவம் அடைந்தபின் முறையே இவன் உரிமையை அடைந்தான்.

## துரைச்சிங்கம்.

உ௩-வது பட்டம்: 1560—1568.

இவன் அஞ்சா நெஞ்சினன். பெரிய போர்வீரன். உடல் வலியிலும் படைக்கலப் பயிற்சியிலும் பரியூர்தலிலும் சிறந்து அரியேறென அருந்திறல் மிக்கிருந்தான். தன் பெயர் நிலைக்கேற்பவே எங்கும் வெற்றியாளனாய் இசையுற்று நின்றான். ஆட்சிமுறையிலும் மாட்சி மிக்கவனாய் ஆண்மையோடாதரித்து வந்தான். இவன் அகால மரணமடைந்தான். இவனுக்குப் புதல்வரின்மையால் நெருங்கிய ஞாதியாகிய ஜெகவீரராமு என்பவன் ஜமீனையடைந்தான். உரிமையை உவந்து பேணினான்

## ஜெகவீரராமு.

உச-வது பட்டம்: 1568—1575.

இவன் அறிவிலும் ஆண்மையிலும் மிகச் சிறந்தவன், குறிப்பறிதலில் வல்லவன். பெருங்கொடையாளன். புலவர்கள்பால் பேரன்புடையவன். உலக நிலையை ஓர்ந்து ஜமீனைப் பலவகையிலும் உயர்த்திப் பாதுகாத்து வந்தான். பின்பு இவனுடைய மகனாகிய துரைராஜபாண்டியன் அரசுபுரிந்தான்.

## துரைராஜபாண்டியன்.

உரு-வது பட்டம்: 1575—1583.

இவன் தெலுங்கு தமிழ் சமஸ்கிருதம் என்னும் மூன்று பாஷைகளையும் முறையே கற்றுப் புலமையுற்றிருந்தான். சங்கீதத்தில் மிகவும் வல்லவன். இவனுடைய வாய்ப்பாட்டு எவரையும் பரவசப்படுத்துநிலையில் பேரினிமையோடு பெருகியிருந்தது. எட்டு ஆண்டுகள் ஆண்டிருந்தான். இடையே குடல் நோயால் இறந்து போனான். இவனுக்குப் புதல்வர் இல்லை. ஆகவே இவன் தம்பி கெட்டிதளவாய் என்பவன் பட்டத்தை யடைந்தான். ஆட்சியை நடத்தினான்.

## கெட்டிதளவாய்.

உசு-வது பட்டம்: 1583—1588.

தன் தமையன் ஆட்சி நடத்துங்கால் உடனிருந்து இவன் துணை புரிந்து வந்தானாதலால் அரசு முறையை நன்கு தெரிந்திருந்தான். எவரும் வியந்து கொண்டாடும்படி குடிகளை உரிமையோடு இனிது பேணி வந்தான். ஐந்து ஆண்டுகளே யிருந்தான். அதன்பின் இவன் மைந்தனாகிய விஜயரகுராமன் என்பவன் பட்டத்துக்கு வந்தான். பண்புடன் ஆண்டான்.

விஜயரகுராமன்.

உஎ-வது பட்டம்: 1588—1595.

இவன் வாளாடலில் வல்லவன். மல் வலியிலும் வில் வலியிலும் மாண்புற்று நின்முன். ஏழாண்டு வரை யிருந்தான். பின்பு இவன் மகனுகிய ராஜபொம்மு என்பவன் ஆட்சிக்கு வந்தான்.

ராஜ பொம்மு.

உஅ-வது பட்டம்: 1595—1604.

இவன் சிறந்த போர்வீரன். ஒன்பது ஆண்டுகள் இருந்தான். இவனுக்குப் புத்திரரில்லை. இவனுடைய தம்பியாகிய வீரசென்னவன் என்பவன் நேரே அரசை யடைந்தான்.

வீரசென்னவன்.

உகூ-வது பட்டம்: 1604—1611.

இவன் அழகிலும் அறிவிலும் சிறந்தவன். சித்திரம் வரைவதில் மிகவும் கைதேர்ந்தவன். ஏழு வருடங்கள் அரசை இனிது பேணி இருந்தான். அதன்பின் இவன் மகனுகிய பராக்கிரமபாண்டியன் என்பவன் பட்டத்துக்கு வந்தான்.

பராக்கிரமபாண்டியன்.

௩0-வது பட்டம்: 1611—1623.

இவன் பன்னிரண்டு வருடம் பாதுகாத்தான். பின்பு இவன் மகனுகிய விஜயரகுபதி என்பவன் பட்டத்தை யடைந்தான். ஆட்சி முறையை நன்கு ஆதரித்து வந்தான்.

விஜயரகுபதி.

௩க-வது பட்டம்: 1623—1630.

இவன் ஏழு வருடங்கள் ஆண்டு இருந்தான். அதன்பின்பு துரைராஜபொம்மு என்பவன் நேரே ஆட்சிக்கு வந்தான்.

துரைராஜபொம்மு.

௩௨-வது பட்டம்: 1630—1636.

வேட்டையாட்டத்தில் இவன் விருப்பமிக வுடையவன். அதன்பொருட்டு வல்லநாட்டு மலைக்கு அடிக்கடி செல்வது வழக்கம். நாட்டைப் பாதுகாப்பதில் பராமுகமாயிருந்தமை யால் இவன் காலத்தில் பாளையம் சிறிது பழுதடைந்திருந்தது. ஆறு வருடங்கள் ஆண்டான். பின்பு இவனுடைய மகன் வீரதளவாய் வந்தான். நீர்மையோடு நெறிமுறை புரிந்தான்.

வீரதளவாய்.

௩௩-வது பட்டம்: 1636—1641.

தந்தை காலத்தில் தளர்ந்திருந்த ஆட்சியை இம்மைந்தன் வந்து மாட்சியுறச் செய்தான். குடிகளை நன்கு பேணி யாரிட மும் இதமாய் அன்பு செய்திருந்தான் ஆதலால் அனைவரும் மன மகிழ்ந்து இவனை ஆர்வமோடு போற்றி நின்றார். பின்பு இவனு டைய மகனாகிய விஜயரகுநாதன் பட்டத்தை யடைந்தான்

விஜயரகுநாதன்.

௩௪-வது பட்டம்: 1641—1648.

இவன் அரிய பெரிய போர் வீரன். வாளாண்மை யோடு தாளாண்மையிலும் சிறந்து வேளாண்மைகளை யாண்டும் வளம் செய்து ஏழு ஆண்டுகள் நாட்டை யினிது பாதுகாத்தான். பின்பு இவன் மகன் குமாரவீரன் அரசினை யடைந்தான்.

குமாரவீரன்.

௩௫-வது பட்டம்: 1648—1653.

குதிரை ஏற்றத்தில் இவன் மிகவும் கைதேர்ந்தவன். நல்ல கல்விமான். சொல்வன்மை யுடையவன். எல்லா வுயிர்களிடத்தும் இரக்கமுள்ளவன். பேரன்போடு குடிகளைப் பேணி வந்தான். ஐந்து ஆண்டுகளே யிருந்தான். பின்னர் இவ னுடைய மகன் ரணவீரராமு ஆட்சிக்கு வந்து அரசுபுரிந்தான்.

ரணவீரராமு.

கூகூ-வது பட்டம்: 1653—1659.

அருந்திறலும் பெருந்தகவும் இவனிடம் ஒருங்கமைந் திருந்தன. போராற்றலில் பேராற்றலுடையவன். ஆட்சித் திறத்திலும் அதி நிபுணன். இவன் காலத்தில் நாடு பல வகை யிலும் மாட்சி யுற்றிருந்தது. ஆறு வருடம் அரசைப் பாதுகாத் திருந்தான். அதன்பின் ரகுவீரராமன் ஆட்சிக்கு வந்தான்.

ரகுவீரராமன்.

கூஎ-வது பட்டம்: 1659—1670.

இவன் பெருங் கொடையாளி. முன்கோப முடையவன். தம்பாடு கூறித் தன்னை அடைந்தவரை என்னபாடு பட்டேனும் நன்கு ஆதரிக்கும் இனிய இயல்பினன். பதினொரு வருடம் குடிகளை அன்போடு ஆதரித்து வந்தான். அதன்பின் இவன் மகனாகிய பால்ராஜபொம்மு பட்டத்தை அடைந்தான்.

பால்ராஜபொம்மு.

கூஅ-வது பட்டம்: 1670—1676.

இவன் யாவரையும் எளிதில் நம்பும் இயல்பினன். தற் புகழ்ச்சியுள்ளவன். நல்ல கல்வியறிவில்லாதவன். சிற்றின்ப நுகர்ச்சியில் அழுந்தி எப்பொழுதும் வீண்பொழுது போக்கி யிருந்தான் ஆதலால் ஜமீனை இவன் நன்கு பாதுகாக்கவில்லை. குடிகளும் இவனிடம் அனபுபாராட்டாமல் அவமதித்திருந்தார். இவன் ஆறு வருடங்கள் இருந்தான். அதன் பின் இவனுடைய மகன் ஆகிய ரகுவீரணன் என்பவன் பட்டத்துக்கு வந்தான்.

ரகுவீரணன்.

கூகூ-வது பட்டம்: 1676—1681.

தந்தை காலத்தில் பழுதுபட்டுத் தாழ்ச்சி யுற்றிருந்த ஆட்சியை இம் மைந்தன் வந்து மாட்சியுறச் செய்தான்.

உலக நிலையை நன்கு தெரிந்து கலைநலமுடையாரைக் கருதிப் பேணிப் பலவகையிலும் குடிகளுக்கு நலம் புரிந்து இவன் தலைமையொடு ஆட்சியை ஆதரித்து வந்தான். பின்பு இவன் தம்பியாகிய ஜகவீர ராகவன் அரசினை அடைந்தான்.

## ஜகவீரராகவன்.

### சூ-வது பட்டம்: 1681—1689.

இவன் படையிலும் கொடையிலும் உயர்ந்தவன். சிறந்த போர் வீரன். ஆட்சிமுறையில் அதி சமர்த்தன். இவன் காலத்திலேதான் சாலிகுளத்தைச் சாலவும் பெரிதாக்கி நெல் விளைவை நிலைபெறச் செய்தான். இவன் எட்டு வருடம் அட்ட திசைகளும் புகழ அரசுபுரிந்தான். பின்பு இவன் மகன் சின்னபொம்மேந்திரன் பட்டத்துக்கு வந்து ஆட்சி புரிந்தான்.

## சின்னபொம்மேந்திரன்.

### சக-வது பட்டம்: 1689—1694.

இவன சிறந்த அறிவாளன். அருள் பொறை அடக்கம் முதலிய உயர் குணங்களெல்லாம் இவனிடம் ஒருங்கமைந்திருந் தன. நீதிமுறை தவறாமல் குடிகள் இன்புற இவன் கோமுறை புரிந்தான். ஐந்து வருடம் ஜமீனை இவன் இனிது பாதுகாத்து வந்தான். இவனுக்குச் சந்ததி யில்லை. ஆதலால் இவன் தம்பி யாகிய ஜகவீர ராமக்குமாரசாமி பட்டத்துக்கு வந்தான்.

## ஜகவீரராமக்குமாரசாமி.

### சஉ-வது பட்டம்: 1694—1700.

கல்வியறிவிலும் நல்லொழுக்கத்திலும் இவன் மிகவும் சிறந்தவன். வினைசெயல் வகையில் வல்லவன். நிலங்களைத் திருத்திக் குடிகளை வளம்படுத்திப் பலவகையிலும் வருவாய்களை உளவாக்கி அரசை இவன் நன்கு பேணிவந்தான். பின்பு இவனுடைய மகனாகிய இராஜசூடாமணி ஆட்சி புரிந்தான்.

### ராஜ சூடாமணி.

௪௩-வது பட்டம்: 1700—1709.

இவன் சிறந்த அழகன். அருந்திறலுடையவன். பெருங் கொடையாளன். கலையில் தெளிவும் உலகியலறிவும் ஒருங் கமையப்பெற்று உயர்ந்த நீதிமானாய் விளங்கியிருந்த இவன் ஒன்பது வருடங்களாக மன்பதை இன்புற அரசை உத்தம நிலையில் பேணி எத்திசைகளிலும் இசைபரப்பி நின்றான். பின்பு இவன் புத்திரனாகிய ரகுவீரபாண்டியன் வந்து அரசு புரிந்தான்.

### ரகுவீரபாண்டியன்.

௪௪-வது பட்டம்: 1709—1736.

இவன் அஞ்சா நெஞ்சன். அறிவு ஈகை ஊக்கம் முதலிய உயர் நலங்களெல்லாம் இவனிடம் ஒருங்கமைந்திருந்தன. பால்பாண்டியன், சின்னபொம்மு என இரண்டு ஆண் மக்களும், பாஞ்சாலியம்மாள் என ஒரு பெண்மகளும் இவனுக்குப் பிறந்திருந்தனர். இருபத்தேழு வருடங்கள் அரசை இனிது பாதுகாத்தான். பின்பு இவனுடைய மூத்தமகன் பட்டத்துக்கு வந்து நாட்டை எவ்வழியும் செவ்வையாக நன்கு பேணினான்.

### பால்பாண்டியன்.

௪௫-வது பட்டம்: 1736—1760.

இவன் நல்ல அறிவுடையவன். அமைதியும் அடக்கமும் அமையப் பெற்றவன். தெய்வ பத்தியில் சிறந்தவன். தூய மனமுடையனாய் எப்பொழுதும் சிவ வழிபாடு செய்திருந்தா னாதலால் "சைவத்துரை" என நின்றான். உயிர்கள் மாட்டுப் பெருங் கருணையுடையவன். ஓரறிவுயிர்க்கும் ஊறு நேரா வண்ணம் பேரறிவோடு இவன் பெருகியிருந்தான். திருச் செந்தூர் முருகப்பெருமானிடம் உருகிய அன்பினன். புனித மான உணவை ஒரு பொழுதே உண்டு என்றும் விரத வொழுக்கமுடையனாய் இனிது ஒழுகி நின்றான். கறந்தபால்

போல் களங்கமின்றி உளந்தூயனாய் ஒழுகி வந்தமையால் பால்ராசா என உலகம் இவனை உவந்தழைத்து வந்தது. ஜெகவீரக்கட்டபொம்மு, சின்ன பொம்மையா என இரண்டு புதல்வர்களைப் பெற்றுப் பெருமகிழ்ச்சியுற்றுத் திரண்ட திருவோடு இவன் சிறந்து நின்று இருபத்துநான்குவருடம் அரசை இனிது பரிபாலித்து வந்தான். பின்பு இவனுடைய தலைமைப் புதல்வன் தக்கபருவத்தில் முறையே ஆட்சிக்கு வந்தான்.

## ஜெகவீரக்கட்டபொம்மு.

சசு-வது பட்டம்: 1760—1790.

இவன் அருந்திறலாளன். பெருந்தகவினன். சிறந்த போர் வீரன். தெலுங்கும் தமிழும் ஒருங்கு கற்ற பெரும் புலமையுடையவன். பெரிய ராஜ தந்திரி. குறிப்பறிதலில் வல்லவன். வந்தவர் கருத்தை வாய் திறந்து கூறுமுனே முந்துற அறியும் மூதறிவாளன். முன்னவர் எவரினும் தன் அரசினை உன்னத நிலையில் உறுதிபெற நிறுத்திப் பன்னருந்திறலோடு இவன் நன்னயங்கள் பல செய்துள்ளான். இவன் காலத்தில் நாட்டில் செய்துள்ள நன்மைகள் பல. குறுநில மன்னன் ஆயினும் பேரரசர்களும் வியந்து புகழத்தக்க வீர வேந்தனாய் விளங்கி யிருந்தான். ஆரவாய்மொழி வரையும் திசைகாவல் செய்து சேரர் காவலரும் ஆர்வமுற நின்றான். அக்காலத்தில் நாடு முழுவதும் ஆற்காடு நபாபின் ஆட்சியுள் இருந்தது. இத்தென்னாடு எங்கும் குழப்பமாய் அம் மன்னனுக்கு அடங்காமல் மாறுகொண்டு நின்றது. அவன் பலவாறு முயன்றும் நலமொன்றும் கொண்டிலன். அந்த அரசனுக்குப் பிரதிநிதியாய்ப் பெரும் படைகளோடு சாதிகான் என்பவன் இங்கு வரும்படி நேர்ந்தது. அவன் வந்து நெல்லையில் இருந்து கொண்டு எல்லைகளெங்கும் நல்ல வீரர்களை விடுத்து நலமுற அடக்கிப் பார்த்தான். யாதும் பலனில்லை. யாண்டும் தொல்லையினும் தொல்லைகளே மீறின. அல்லல் மீக் கூர

தான். பின்பு வேண்டியவர்களோடு ஆராய்ந்து முடிவில் இப் பாண்டியனிடம் வந்தான். இந்த ஆண்டகை அவனை அன்போடு உபசரித்து வைத்து விருந்து முதலியன பெருந்தகவுடன் அளித்துத் திருந்துற இருந்தபின் வந்த காரியம் யாது? என வகையுடன் வினவினன். வினவவே அவன் "இந்த நாடு முழுவதும் எங்களுக்கு உரிமையாய்ப் பண்டுதொட்டு வரி செலுத்தி வந்தது. இது பொழுது மாறுபட்டு வேறுபாடோடு மீறியுள்ளது. பூலம், நாஞ்சி நாடு முதலிய இடங்களிலுள்ள மறவர் பலர் திரண்டு எங்கும் புகுந்து வெங்கொடுமைகள் செய்து பங்கங்கள் விளைத்துப் படு துயர்கள் புரிகின்றனர். காட்டிலும் கொள்ளை, வீட்டிலும் கொள்ளை, நாட்டிலும் கொள்ளை, நகரிலும் கொள்ளை என உள்ள குடிகளெல்லாம் உள்ளம் துடித்து உளைந்து கூக்கலிட அவர் கூட்டம் கூட்டமாய்க் கொடுமைகள் செய்து வருகின்றார். படைகளையும், படைத்தலைவர்களையும் அடுத்தடுத்து ஏவி அடக்கிப் பார்த்தேன். யாதொரு பயனும் இல்லை. எல்லாம் இடையூறுகளாகவே மண்டியுள்ளன. என்றால் இயன்றவரையும் முயன்று வருந்தி முடியாமல் முடிவில் அருந் திறலோடு கொடையும் வாய்ந்துள்ள நும்மிடம் குறை முடிக்க வந்தேன்" என முறையிட்டு அன்பு ததும்ப உரைத்தான். இங்ஙனம் அவன் கூறவே இவன் உவந்து ஆறுதல்கூறி "இரண்டு மாதத்துள் ஏதம் அகற்றி ஆண்டவனருளால் ஆவனசெய்வல்; யாதும்கவலல்!" என்றான். அவன் மகிழ்ந்து விடைகொண்டு மாண்போடு சென்றான்.

## திக்கு விசயம்.

வாரம் ஒன்று கழிந்தபின் சிறந்த போர் வீரர்களோடு இவன் தென்திசை நோக்கி எழுந்தான். நட்டுவன் என்னும் தனது பட்டத்துப் பரிமீது இவர்ந்து படைகள் புடைசூழ அடைவுடன் நடந்து * பூலம், மறவக்குறிச்சி முதலிய ஊர்களை

* இவ்விரண்டு ஊர்களும் நாங்குநேரித் தாலுகாவிலுள்ளன. மறவர் மரபினர் அங்கு மிகுதியாய் இப்பொழுதும் வாசஞ்செய்கின்றனர்.

யடைந்தான். அடையவே ஆங்காங்குள்ள குறுநிலக் கிழவரும், குறிகாரர்களும் எதிர்கொண்டு கண்டு இனிது உபசரித்தார். வந்துள்ள நிலையை அறிந்து சிந்தை கலங்கி "இனிமேல் தீயன யாதும் நிகழாவண்ணம் இப் பக்கங்களெங்கும் பாதுகாத்து வருகின்றோம் பாண்டியா!" எனப் பணிவுடன் கூறினர். இவன் மனம் மகிழ்ந்து எழுந்து நாஞ்சிநாடு புகுந்து, நடலையுருவகை அடலுறச் செய்து, ஆரவாய்மொழி வரையும் ஆணையை நிறுத்தி, மேற்றிசை அடைந்து, சொக்கம்பட்டி முதலிய ஜமீன்களையெல்லாம் எச்சரிக்கை செய்து வரி செலுத்தி வரும்படி பணித்து வடதிசை ஏறினன். ஏறவே யாரும் மாறு கோராமல் விரைந்து பணிந்து விழைந்த வண்ணம் நடந்து வருவதாக உறுதி கூறி உவந்து நின்றார். அவர்களை நிறுத்தி, வடமேற்றிசை புகுந்து ஆங்கு அடர்ந்து நின்ற குறும்பர்களையெல்லாம் அடலாற்றி வென்று மீண்டும் குறும்புகள் அரும்பாமல் வரும்படி விதித்து வடகீழ்த்திசை அடைந்தான். ஆங்கு நின்ற சிற்றரசரெல்லாரும் சீர்செய்து போற்ற நேர்செய்து நிறுத்தி இறுதியில் சேதுபதிபால் வந்து சேர்ந்தான். இக் குலமகன் வந்த நிலைமையை அத்தலைமகன் அறிந்து உளம்மிக மகிழ்ந்து விழைந்தழைத்து விருந்தளித்து இராமேசுவரம் கொண்டுபோய் இராமனாதனைச் சேவைசெய்து வைத்து ஆவனசெய்வதாக ஆணைகூறி ஆவலுடன் அனுப்பினன். அங்கிருந்தெழுந்து சிவகங்கையைச் சார்ந்து சீர்திருத்திக் கீழ்திசை வந்தான். வரவே தன் இனத்துப் பாளையகாரரெல்லாரும் பரிவுடன் வந்து பணிந்தேத்தி உரிமைசெய்து நிற்ப இவன் உறுதிகூறி நிறுத்தித் தன் திருநகர் அடைந்தான். ஒருமாதம் கழிந்தபின் சாதிகானை அழைத்துத் தான் தொகுத்து வந்திருந்த வரித்தொகையை உதவி இனிமேல் யாதும் நாட்டில் அல்லல் நிகழாது; எல்லாரும் வரியை இனிது உதவி வருவர் என உரிமையொடுரைத்தான். இவனது உறுதிமொழியைக் கேட்டு அவன் பெரிதும் மகிழ்ந்தான். அரிய விலையுடைய ஒரு மணி மாலையை எடுத்து

இவன் கழுத்தில் அணிந்து, இனித்தமொழிகள் பல இன்புற இசைத்து அன்பு கொண்டாடினன். "இனித் தொகுக்கும் தொகையில் ஆறிலொரு பங்கை எடுத்துக்கொண்டு மீதத்தை அனுப்பிவருக; நும் நன்றியை என்றும் மறவோம்; இன்றுமுதல் தென்னாட்டுக்கு உம்மைச் சின்ன நபாவு என நாட்டியிருக்கின்றேம்; இக்கட்டுறவு என்றும் நீண்டு தொடர்ந்து நெறியே வளர்ந்து வரும்படி ஆண்டவனை வேண்டி நிற்கின்றேம்; ஈண்டு இனிதிருந்து நலம் புரிந்து நண்பு செய்தருள்க" எனப் பண்புரையாடி நண்பு பாராட்டி நயந்து நின்று அன்புடன் அகன்றான்.

இவ்வாறு அவன் உவந்துகூறி உறவுகொண்டு சென்றான்; இவன் உரிமையை உண்மையோடுதவி உறுதிசெய்து வந்தான். நான்கு திசைகளிலும் சென்று தன் வெற்றியை நிலை நிறுத்தி வந்தமையால் திக்குவிசயன் என்னும் திருநாமம் எய்தி நின்றான். இவ் வீரப் பெயரையே பின்பு யாரும் சிறப்போடு அழைத்து வந்தார். வரவே இவனுடைய இயற் பெயர் வழங்காமல் இச் சிறப்புப் பெயரே எங்கும் வழங்க நேர்ந்தது.

சேரநாட்டு அரசனும் இவ்வீரவேந்தனை விழைந்து மகிழ்ந்து வியந்து புகழ்ந்து உவந்து வரைந்து உயர்ந்த சீர்கள் புரிந்து ஆர்வம் மீதூர்ந்து ஆதரவு செய்துவந்தான்.

ஆரவாரம் மொழிவரையும் ஆணையிவன் செலுத்தி நின்றான்<br>
சேரர்கா வலருமே திசைகாவல் செய்தி என<br>
ஆரவொரு பெருந்தொகையை ஆண்டுதொறும் அன்பாகச்<br>
சேரஇவன் தனக்கனுப்பிச் சீர்பலவும் செய்து வந்தார்.

செகவீரன் ஆணையென்றால் தேசமெங்கும் நடுநடுங்க<br>
மிகவீறு கொண்டுமிகை செய்தவரும் மெல்லியராய்ப்<br>
புகவீர முடன்யாரும் புகலடைந்து போற்றி செய்யத்<br>
தகவீர முடனமர்ந்து தனியரசு செய்திருந்தான்.

இவனது ஆட்சிமுறை எவ்வழியும் மாட்சி நிறைந்திருந்தது.



## மூன்றாவது அதிகாரம்.

## திக்குவிசயன் தெய்வப்பணி.

சிறந்த போர் வீரனாக இருந்ததோடல்லாமல் நிறைந்த பத்திமானாகவும் இவர் நிலவி நின்றார். திருச்செந்தூர்ச் சண்முகக்கடவுளை ஆரா ஆர்வத்தோடு அநவரதமும் இவர் ஆராதித்து வந்தார். அப் பெருமானுக்குப் பொன்னணியும் மணியணியும் அணியணியாக அமைத்து அன்பொடு புனைந்து இன்பமீதூர்ந்து ஏத்தி வந்துள்ளார். அவ்வணிகள் யாவும் அரிய விலையுடையன. கோவில் கருவூலத்தில் இவ் அதிபதியின் பேரால் இன்றும் அவை இருந்து வருகின்றன. திருவிழாக் காலங்கள் தோறும் உரிமையோடு எடுத்துப் பெருமானுக்கு அணியப்படுகின்றன. பாஞ்சை மன்னன் வாஞ்சையோடு செய்து வைத்துள்ள தெய்வ ஆராதனைகளை வையகம் கண்டு மகிழ்ந்து மெய்யன்புடன் வழிமுறையே புகழ்ந்து வந்துள்ளது.

உதயமார்த்தாண்டம், உச்சிக் காலம், நயினார் கட்டளை, நித்திய அபிடேகம், நிறையலங்காரம், நைவேத்தியம் முதலிய பூசனைகள் நாளும் நன்கு நடைபெற்று வரும்படி சூழ்முறை யோர்ந்து பங்குகள் குறித்துப் பாங்குடன் அமைத்துப் பெரும் பொருளைச் சேம நிதியாகச் செய்து வைத்திருக்கிறார்.

கரிசல் நிலத்தில் 320 ஏக்கர்கள், செவலில் 205 ஏக்கர்கள், வயல்களில் 36 கோட்டை விதைப்பாடுகள், முதலிய நிலச் சொத்துக்களும் நிலையாகத் தந்திருக்கிறார். அவை செந்திலாதிபன் பண்ணை என இன்றும் நின்றுவருகின்றன. ஆனால் அவற்றின்பேரால் குறித்த தரும காரியங்கள் சரியாக நடைபெற்றுவரவில்லை. வள்ளிமணாளனைப் பூசித்து வரும்படி உள்ளமுருகி இவ்வள்ளல் உதவிய வெள்ள நிதி இதுபொழுது வெளியுதவியா யுள்ளது. மூன்று கிராமங்கள் ஆன்ற வருவாயுடன் அமைந்து என்றவர்க்கு இதம் புரிந்திருக்கின்றன.

செந்திற்பதியில் முருகக்கடவுளுக்கு உச்சிப்போதில் பூசை முடிந்ததை அறிந்த பின்னரே இவர் உணவு உண்பது வழக்கம். அதனை அறிவதற்காகத் திருச்செந்தூரிலிருந்து பாஞ்சாலங்குறிச்சி வரையும் இடையிடையே பெரிய முரசங்கள் வரன்முறையாக நிரலே நாட்டப்பட்டிருந்தன. இடைவழி நடையளவில் நான்குகாவத தூரம் உள்ளது. அந்த அளவை அளவுசெய்து பேரிகைகள் பிறங்கி நின்றன. பூசனைமுடிந்ததும் முதலிலுள்ள நகராவை முழக்குவர்; அம் முழக்கம் கேட்டு, இரண்டாவது பேரிகையை அடிப்பர்; அவ் அடியோசையை அறிந்து மூன்றாவது முழக்கப்படும்; இம் முறையே பிறவும் அறைந்து இறுதியின் ஒலிவந்து இனிதறிந்த பின் இவர் உளம்மிக உவந்து உணவுண்ண எழுவர்.

செந்திலம்பதியில் கந்தவேளின் பூசனையின் முந்துற இவரது போசன நினைவே போற்றிமார் உள்ளத்தில் பொங்கி எழும். இவ் வீரமன்னனது உணவு நிலையில் அணவி நிற்றலால் கணமும் தாழாது பூசையை அங்குக் கருத்தோடு செய்வர். இம்முறையை இறையும் வழுவாது புரிந்து நாளும் உண்டு வருவதென்றால் இவரது உள்ளன்பும் உறுதிநிலையும் இறைவழிபாடும் எவ்வாறிருந்திருக்கும்? என்பதை எளிதா அறிந்து கொள்ளலாம். பேரிகைகளை அன்று நிறுவி யிருந்த நிலையங்கள் நகராமண்டபங்கள் என்னும் பெயரால் இன்றும் நிலவியுள்ளன. திங்கள் கிழமை தோறும் செந்திற்பதியிலிருந்து பாஞ்சைப்பதிக்கு அஞ்சலில் இலை விபூதி வரும். அதற்காக ஆறு அஞ்சற் குதிரைகள் ஏற்படுத்தி யிருந்தார்.

இங்ஙனம் பேரன்போடு பேணிவருகின்ற இவ்வீரரது பத்திநிலையைப் பாரறியும்படி செய்ய விழைந்து ஆறுமுகப் பரமன் ஒருமுறை அதிசயமான ஓர் அருளாடல் புரிந்தார்.

## கண் கொடுத்தமை.

இரண்டு கண்ணும் ஒளியிழந்து குருடனாய்த் தன்னை நோக்கிச் செந்தியில் வந்து தவங்கிடந்திருந்த காசிபன் என்னும்

வேதியனுக்கு இறுதியில் ஒரு கண் மட்டும் ஒளியுறச்செய்து "மற்றொரு கண்ணைக் கட்டபொம்மு கொடுப்பான்; போ" என்று அசரீரியாக் கட்டளையிட்டருளினார். அவ்வொலியைக்கேட்டு உளம்மிக வியந்து மறையவர் சிலருடன் அவன் பாஞ்சைக்கு வந்தான். அரசைக் கண்டான். பரமன் அருளியுள்ளதை உரிமையொடு உரைத்தான். அவ்வுரையைக் கேட்டதும் இவர் உள்ளந்திகைத்து உவந்து வியந்து ஆண்டவன் ஆட்கொண்டிருக்கும் நிலையை நினைந்து நெக்குருகி நின்றார். பின்பு உறுவது உறுகவென ஒருமனதாகி மறையவனை நோக்கி, "பரமன் பணி இதுவேல் நாளை அது தருவல்" என வேளையை விதித்துப் படி முதலியன கொடுத்து அவனை அன்று உபசரித்திருத்தி இரவு உணவுகொள்ளாமல் விரதமோடிருந்து மறுநாள் பூசையை முடித்து வாளும் கையுமாய் வெளியே வந்தார். கருதிய விழி கண்ணுறுதாயின் தன் உயிரை மாய்த்துக்கொள்ள உறுதி செய்து இம் மன்னன் வரவும் அங்கு நின்றவரெல்லாரும் நிலையெதிர்கண்டு நெடுந் திகில் கொண்டார். இவர் நெருங்கி வந்து முருகனை உருகி நினைந்து, மருங்கு நின்ற மறையவன் கண்ணில் தம் வண்ணக் கையை வைத்து உள்ளொளி வருக என உள்ளுறத் துதித்தார். உடனே கண் ஒளி வந்தது. இவ் அண்ணல் அகமிக உருகிப் பரவசராயினர். அருகே கண்டு நின்றவரெல்லாரும் வியப்பு மீக்கொண்டு பெரிதும் வியந்து இவரைத் தொழுது துதித்தார். அறுமுகப்பரமன் அருள் புரிந்துள்ள அருமையை மனமார எண்ணிக் கண்ணீர் மாலை மாலையாய் மார்பிலோட, ஆரா அன்போடு அழுது நின்ற இவர் பின்பு தெளிவு கொண்டு குழுமி நின்றவரெல்லாரையும் விழைவுடன் இருத்தி விருந்து புரிந்தார். செந்தியிலிருந்து வந்திருந்தவரெவர்க்கும் வரிசை மிக தந்தார். கண்கொண்ட மறையவன் பெண் கொண்டு மணம் செய்து கொள்ளும்படி பெரும் பொருளுதவிப் போக விடுத்தார். இவரது அருளின் பேற்றையும் பொருளின் கொடையையும்

யும் வியந்து புகழ்ந்து அனைவரும் விடைபெற்றுச் சென்றார். இவரது தந்தையாரிடமும் கந்தசாமிப்புலவர் என்பவர் கருதி வந்து கண்ணொளி பெற்றுச் சிந்தை மகிழ்ந்து செந்திற் பெருமானைப் புகழ்ந்து சிந்து ஒன்று பாடியுள்ளார். அது அச்சாகியுள்ளது. தெய்வ அருளும் தீரமும் சுரந்து செவ்விய நிலையில் இங்ஙனம் சிறந்திருந்த இப் பெருந்தகையிடம் அருந் தவர் சிலர் அடிக்கடி வந்து பரத்துவ நிலையை உரைத்திருந் தனர். அவருள் போதகாயன் என்னும் மாதவரிடம் ஆதரம் பெருகி இவர் ஆர்வமுற்று நின்றார். அப் பெரியார் இவருடைய குண நலங்களை வியந்து அரிய உறுதி நலங்களை உரிமையுடன் இவர்க்கு உணர்த்தியுள்ளார். தத்துவ நிலையிலும் வித்தகக் கலையிலும் சிறந்து மத்திசையும் புகழ மெய்த்திறலோடு விளங்கி ஒத்ததறிந்து சத்திய சீலராய் இத்தரை புரந்து எவர்க்கும் இவர் இதம் புரிந்திருந்தார். இவரது குணமும் செயலும் கொடையும் நடையும் விறலும் வென்றியும் உலகம் புகழ உலாவி நின்றன.

## மனைமாட்சி.

இத்தகைய உச்ச நிலையில் ஒளி செய்திருந்த இவர் சண்முகக்கனி என்னும் பெண்மணியை மணந்து எண்ணிய போகங்களை இனிது நுகர்ந்து இன்புற்று வந்தார். அத் தேவிக்கு ஆறுமுகத்தம்மாள் எனவும் பேருண்டு. அன்பு நலங்கனிந்த அப்பண்புயர் மனைவியோடு இன்பந்துய்த்து இவர் ஒழுகிவருங்கால் ஒரு புதல்வன் பிறந்தான். கொல்லம் ஆண்டு தொளாயிரத்துமுப்பத்தைந்து மார்கழி மாதம் இருபதாம் தெய்தி (3—1—1760) சிங்க ஓரையில் அக்குலமகன் இந்நிலமிசை நலமுறத் தோன்றினன்.

## மக்கட்பேறு.

அத்தலைமகனைக் கண்டவுடனே இக்கோமகனார் உளம்மிக மகிழ்ந்து அளவில் தானங்கள் செய்து ஆர்வமீதூர்ந்தார். உரிய சடங்குகளை முறையே புரிந்து உறவினரெல்லாரும்

உவந்துசூழ நல்ல ஓர் நாளில் அச்செல்லமகனுக்கு வீரபாண்டியன் எனப் பேரிட்டு விழாக்கொண்டாடினர்.

### வீரபாண்டியன் விளைந்தது.

இத்தென்பாண்டி நாடடில் வீரத்தை நிலைநாட்டிப் பாஞ்சாலங்குறிச்சியை உலகமெங்கும் இன்றும் என்றும் யாரும் வியந்து புகழும்படி விளக்கி வெற்றிவீரனாய் விளங்க நிற்கும் இளங்குமரனுக்குப் பெற்றோர் அன்று இட்ட பெயர் பெரிதும் உரிமையாய்ப் பொருந்தியிருந்தது. பாண்டிநாடு வீரமுடையதென யாண்டும் புகழ இவ் ஆண்டகை நீண்டிருந்தமையால் வீரபாண்டியன் என்னும் இயற் பெயர் காரணப்பெயராய்க்கருதநின்றது. பேரின்சீர் வீரநீர்மையை விளக்கியுள்ளது.

### ஊமையன் உற்றது.

இத்திருமகன் பிறந்து ஆண்டு ஒன்பது கழிந்தபின் மீண்டும் ஒரு மகன் பிறந்தான். அவனுக்குத் தளவாய்க்குமாரசாமி என்று பெயரிட்டார். அச்சேய்க்கு வாய் சிறிது கொன்னல் உண்டு; அதனால் யாரோடும் அதிகம் பேசாமல் பெரிதும் மௌனமாய் இருந்து வந்தமையால் ஊமைத்துரை என நின்றான். இவன் யாரும் நேரிலாப் பேராண்மையாளன். இவனது பேராற்றலும் போராற்றலும் ஓராற்றானும் முழுதும் உரைத்தல் அரிதாம். இந்நாட்டை ஊமையன்சீமை என இன்றும் உலகம் சொல்லிவருவதினால் அன்று இவன் புரிந்துள்ள அரசியல் முறையும் அருந்திறலும் பெரும்போர் வீரமும் தலைமையும் நிலைமையும் இனிது புலனாம்.

### துரைச்சிங்கம் தோன்றியது.

இவனுக்குத் தம்பியாகப் பின்பு ஒரு புதல்வன் பிறந்தான். அவனுக்குத் துரைச்சிங்கம் என்று பெயர். சுப்பையா என்வும் அழைப்பார். முருகன் திருநாமத்தை உரிமையோடு அழைத்து வந்தமையால் இளையவன் இங்ஙனம் செல்லப் பேரால் விளங்கி யாண்டும் வெல்லும் திறலை விளக்கி நின்றான்.

அவனுக்குப் பின்னர் இரண்டு புதல்வியர் பிறந்தனர். அவர்க்கு முறையே ஈசுரவடிவு, துரைக்கண்ணு என்று பெயர். ஆக ஐந்து மக்களைப் பெற்று அறுமுகக்கனி அரசனது ஐம்புலன்களுக்கும் இன்பநிலையமாய் இனிது அமர்ந்திருந்தாள். அன்புயர் மனைவியும், இன்புறு மக்களும் இனிது சூழ்ந்திருப்ப அரிய போகங்களை நுகர்ந்து அறம்பல புரிந்து குடிகள் மகிழ இவர் படிபுரந்துவந்தார். முதல் மனைவியாகிய ஆறுமுகக்கனி யோடு பொம்மு அம்மாள், போடம்மாள், காந்திமதியம்மாள் என்னும் மனைவியர் மூவரும் இம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணைவியராய் இனிதமர்ந்திருந்தார். தேவியர் நால்வரும் ஆவியென அமைந்து கோவிேைனாடு மேவிக் குலாவி வந்தனர்.

குமரர் மூவரும் கலைகள் பல பயின்று தலைமையோடு தழைத்து வளர்ந்தனர். வில்வலியிலும், மல்வலியிலும், வாள் வேல் முதலிய படைக்கலப் பயிற்சியிலும் பரியூர்தலிலும் சிறந்து அரியிளங் குருளைகள் போல் ஆண்மை மீக்கூர்ந்து அவர் மேன்மையுற்றுவந்தார். பருவம் அடைந்து உருவிலும் அறிவிலும் சிறந்து கண்கவர்வனப்போடு கனிந்து நின்ற மூத்த மகனுக்கு வீரசக்கம்மாள் என்னும் கன்னியை மணம் புணர்த்தி மன்னன் மகிழ்ந்தான். அவள் பேரழகினள். அறிவு அருள் நிறை பொறை அமைதி முதலிய குண நலங்க ளெல்லாம் அவளிடம் குடிகொண்டிருந்தன. அக்குலமகளோடு அமர்ந்து அலகில் போகங்களை நுகர்ந்து இத்தலைமகன் உளம்மகிழ்ந்து வந்தான். அதன்பின்பு பின்னவரிருவருக்கும் சௌந்தரவடிவு, ஞானமுத்தம்மாள் என்னும் மங்கையர் இருவரையும் முறையே மணம் புரிவித்துச் சின்னாட் கழிந்த பின் எந்நாளும் இல்லாதவகையில் முன்னவனுக்கு மன்னன் முடிசூட்ட விழைந்தான்.

## பட்டம் சூட்டியது.

நல்லநாளில் மாமறைப்படி கோமகனுக்கு மங்கலநீராட்டிக் கிளைகளும் குடிகளும் உளம் மகிழ்ந்து ஏத்த உலகம் அறிய

உரிமையை உதவிப் பெரியவர் ஒருவி யிருந்தார். பட்டம் தரித்தபின் பட்டத்து யானைமேல் அமர்ந்து குடை கொடி விருதுகள் நெடிது முன் செல்ல, பரிகளில் அமர்ந்து துணைவர்கள் அயல்வர, அரிய பெரிய ஆடம்பரங்களுடன் பவனிவந்து, சபாமண்டபம் அடைந்து, உயர்ந்த ஆதனத்தில் உவந்து வீற்றிருந்து தமர்முதல் எவரும் தாழ்ந்து வணங்கத் தண்ணளிபுரிந்து, தெய்வம் பராவிச் செய்வன செய்து இவர் சிறந்து விளங்கினர். அரசநீதிகளை உரிமையோடு உணர்த்தித் தந்தையார் ஆறுதல் அடைந்திருக்க இம்மைந்தர் குடிகள் இன்புறக் கோமுறைபுரிந்தார். ஆட்சிநிலை மாட்சியுற்று வந்தது.

"நீதியும் வீரமும் கொடையும் மன்னர்க்குச்
சாதியின் தருமமாய்ச் சார்ந்து நின்றவை;
ஓதிய மூன்றினில் ஒன்று குன்றினும்
போதிய அரசியல் புகழ்பெ றுதரோ. (1)

வீரமே பகைவரை அடக்கும்; மெய்க்கொடை
வாரமே புகழினை வளர்க்கும்; நீதியின்
சாரமே தரணியைத் தாங்கும்; இந்நமுச்
சீரமை அரசனே தேவன் ஆவனால். (2)

செயிருறு களைகளைச் செருத்து நீக்கிநற்
பயிர்களைக் காத்தல்போல் படுவெம் பாதக
வயிரரைச் சுட்டற மடித்து மாண்புறும்
உயிர்களைக் காப்பதே உலகம் காப்பதே." (3)

(வீரபாண்டியம்)

இவ்வாறு கருதி எவ்வழியும் இவர் இனிது காத்து வந்தார்.

இவரது ஆட்சிக்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே பாஞ்சாலங்குறிச்சிச் சரித்திரத்தில் மிகவும் மாட்சிமையுடையன. ஆதலால் அந்த உண்மைக்காட்சிகளை இனிமேல் நாம் உரிமையோடு தருவி நோக்குவோம். இதுவரை எழுதியுள்ளது இச் சரித்திரத்துக்குப் பூர்வபீடிகையான பாயிரமாம்; இனிவருவன சரித நிலைக்குத் தனிஉரிமைகளாம். நூலை மேலே காண்போம்.



## நான்காவது அதிகாரம்

## வீரபாண்டியன்.

௪௭-வது பட்டம்: 1790—1799.

இக்கோமகன் பட்டத்துக்கு வந்தது, கொல்லம் ஆண்டு ௯௬௫ தை மாதம் இருபதாம் தெய்தி. அப்பொழுது இவருக்கு வயது முப்பது. தக்க பருவத்தில் அரசுரிமையை யடைந்து, தம்பியர் இருவரும் இளவரசராய் நின்று இதம் புரிந்துவர, உறவினரும் குடிகளும் உவகை மீக்கூர, உரிமை யோடு உறுதி பல சூழ்ந்து பெரிதும் பேணி அரசை இவர் ஆட்சி புரிந்தார். காப்பு முறைகள் கருத்துடன் நடந்தன.

இவருக்கு அமைச்சுத் துணையாய்ச் சிவசுப்பிரமணிய பிள்ளை என்பவர் அமர்ந்திருந்தார். அவர் வேளாளர் மரபினர். தாளாண்மை மிக்கவர். கல்வியறிவிலும், செல்வநிலையிலும் சிறந்தவர். சொல்வன்மையிலும், சூழ்ச்சித்திறத்திலும் வல்லவர். உறுதியும் ஊக்கமும் பெரிதும் உடையவர். கருதிய எதையும் கடைபோகச்செய்யும் திடம்மிக வாய்ந்தவர். அவருடைய தந்தை பெயர் குமாருப்பிள்ளை.

இக்குமரன் தந்தையாகிய திக்குவிசயத்துரையிடம் அவர் மந்திரியா யிருந்தார். தந்தையின் உரிமையை முறையே பெற்று இவ் அருமை மைந்தரிடம் வந்து கருமத்துணைவராய் அவர் மருவி யிருந்தார். வீரபத்திரபிள்ளை, பாண்டியம்பிள்ளை என்னும் சகோதரர் இருவர் அவருக்கு இருந்தனர். அண்ணன் சொன்னபடியே என்ன வகையிலும் இசைந்து அப்பின்னவரிருவரும் பின்னமின்றி நின்றார். கருமச்சூழ்ச்சி யில் அவரும் முன்னவனோடு நன்னயம் புரிந்து மன்னியிருந் தார். அம்மூவரும் அரசை ஆவலோடு ஆதரித்து வந்தார்.

உடன் பிறந்த துணைவரும், உற்ற துணைவரும் உறு துணையாய்ப் பக்கம்நின்று உதவிவரத் தக்க முறையில் மிக்க கவனத்தோடு ஜமீனை இவர் நன்கு பாதுகாத்து வந்தார்.

தம் குலதெய்வமாக முன்னோர் முதல் வழிபட்டு வந்த முருகக்கடவுளிடம் உருகிய பத்தியுடையராய் உரிமை பூண்டு நின்று அரிய பணிகள் பல ஆற்றி இவரும் ஆராதித்து வந்தார். திருவிழாக்காலங்கள் தோறும் திருச்செந்தூர் சென்றிருந்து உற்சவங்களைச் செவ்வையாக நடத்தி எவ்வழியும் எழில் செய்து நின்றார். வீதிகள் தோறும் சிறந்த மண்டபங்கள் அமைத்து ஏழாந்திருநாள், ஒன்பதாம் திருநாள்களில் ஆண்டவனை ஆண்டு எழுந்தருளச்செய்து வேண்டிய விமரிசைகளோடு அலங்கரித்துப் பூசனைகள் புரிவித்து ஈண்டிய அன்புடன் இவ் ஆண்டகை இனிது போற்றி நீண்ட புகழுடன் நிலவி வந்தார்.

மாசி மாதம் ஒருமுறை சந்நிதியில் சாமியைத் தொழுது நிற்கும்பொழுது தம் மெய்யில் அணிந்திருந்த மணியணிகளையும், முத்துமாலையையும் முற்றும் கழற்றி "எம் ஐயன் முருகனுக்கு உரியன இவை" என இவர் பருகுகாதலோடு உருகிக் கொடுத்தார். அருகு நின்ற மறையவர் அனைவரும் பெரிதும் வியந்து இவரது பேரன்பைப் புகழ்ந்து மகிழ்ந்தார்.

அன்று இரவு தன் நாயகனோடு ஏகாந்தமாகத் தனியே தரிசனைக்கு வந்திருந்த வீரசக்கம்மாள் என்னும் இம்மன்னன் மனைவியும் தான் அணிந்திருந்த அரிய ஆபரணங்களெல்லாவற்றையும் அவிழ்த்து "இவை ஆண்டவன் தேவியருக்குரியன" என ஆர்வமோடு தந்தாள். அக் கற்பரசியின் அற்புதச் செயலை நோக்கி இவ் விற்பன வேந்தனும் வியந்து மகிழ்ந்தான். இச் சதிபதிகளின் உழுவலன்பும் கெழுமிய பண்பும் தொழுதகு தன்மையும் உள்ளூறு பத்தியும் உலகம்புகழ நிலவி நின்றன.

செந்திற் பெருமான் இவரிடமும் இடையிடையே சில அருளாடல்கள் புரிந்துள்ளார். உரிய அன்பரிடம் பரமன் உல்லாசமாய் உறவாடி வருகிருன். நீடிய பேரருளோடு ஆடிய ஆடல் ஒன்று ஈண்டு அறிய வருகின்ருேம்.

உடைமைகள் யாவும் உடையவனுக்கு உரியன என்னும் உரிமையோடு உரிந்து உதவித் தமது திருநகரடைந்து இவர் பெரு மகிழ்வுடனிருந்தார். பழையன பழம் பொருட்குக் கிழமை மிகத் தந்து கெழுதகைமையோடு வந்து நங்கையும் நம்பியும் அங்கு நிகழ்ந்ததை வியந்து இங்ஙனம் உவந்திருக்கத் திங்கள் சில கழிந்தன. நெடுநாள் இனிதுற ஆய்ந்து தனது அருமை மனைவிக்குப் புதிய மணியணிகள் அதிக விலையில் அமைத்து இவ் அதிபதி அணியலானுர். அத்துடன் சிறந்த வயிரப் பதக்கம் ஒன்று உயர்ந்த நிலையில் சமைத்து உவந்தணிந்து துணைவியோடு இணைபிரியாது உளம்மகிழ்ந்திருந்தார்.

அன்று இரவே முருகக் கடவுள் இவர் கனவில் தோன்றி "உன் மனைவிக்கு அமைத்ததுபோல் என் மனைவி வள்ளியும் பதக்கம் ஒன்று வேண்டும் என என்னைப் படாதபாடு படுத்துகின்ருள்; துரைச்சி அணிந்ததுபோல் குறத்தியும் அணியப் பார்க்கிருள்; அரிய விலையுடைய அதற்கு ஆண்டியாகிய நான் எங்கே போவேன்? பாண்டியா!" என்று வேண்டி மறைந்தார். அயர்ந்து உறங்கியிருந்த இவர் வியந்து விழித்து அமளியில் அருகே உடன் தழுவிக் கிடந்த மனைவியை எழுப்பிக் கனவு நிலையை உரைத்தார். அதனைக் கேட்டவுடனே அவள் உளமிக உருகி இருகை குவித்து "முருகநாதன் நம்மீது வைத்துள்ள பேரருள் நிலை என்னே!" என்று பெரிதும் துதித்துத் தன் மார்பில் அணிந்திருந்த அந்த மணியாரத்தை விரைவில் எடுத்து நீராட்டி "இது வள்ளித்தாய்க்கு" என உள்ளமுவந்து பாராட்டி ஒரு பேழையில் அமைத்து, விடிந்தவுடன் பல்லக்கில் வைத்துச் செந்திலம்பதிக்கு அனுப்பிச் சிந்தை மகிழ்ந்திருந்தாள். அவளது உள்ளப் பண்பை வியந்து இவ் வள்ளலும் புகழ்ந்து உவகைமீதூர்ந்து உழுவலன்போடு தழுவி ஒழுகி வந்தார்.

இக் குலமகனது இயல்பும், அத் தலைமகளது உயர்வும், இதனால் இனிது புலனும். இங்ஙனம் பேரன்போடு தெய்வம் பேணி யாரும் இன்புற அரசை இவர் நன்கு ஆதரித்து வந்தார்.

## புலவரைப் போற்றியது.

வீர நிலையில் உயர்ந்திருந்தது போல் கல்வியறிவிலும் இவர் சிறந்து நின்றார் ஆதலால் நல்ல புலமையாளரை நாளும் நயந்து பரிசில் பல தந்து உரிமையோடு உவந்து பேணினர்.

தமது சமுகத்தில் புலவர்களுக்கு மாத்திரம் சம இருப்புத் தந்து வரிசை யறிந்து போற்றி வந்தார். வேங்கட சுப்பையர், வீரபாண்டியப் புலவர் என்னும் இருவரும் வடமொழியிலும், தென்மொழியிலும் முறையே புலமை யடைந்து இவ்வாதீனத்தில் சிறந்த வித்துவான்களாய் அமர்ந்திருந்தனர்.

அந்த இருவரையும் இரண்டு கண்களாகப் பாவித்து — அன்போடு ஆதரித்து வந்தார். அவருள் வீரபாண்டியப் புலவர் என்பவர் நல்ல சீலமுள்ளவர். தூத்துக்குடி என்னும் திருமந்திர நகரில் பிறந்தவர். பாணர் குலத்தினர். அவரது இயற் பெயர் சங்கரமூர்த்திபிள்ளை என்பதே. இந்த அரசனுடைய அபிமானத்தை மிகவும் அடைந்திருந்தமையால் இவ்வாறு பட்டப் பெயரோடு விளங்கி நின்றார். "கொற்றமலி பாஞ்சாலங் குறிச்சி யதனிற் குலவும், சிற்றரசனும் ஒருவன் சிந்தை விருப்பினில் திளைத்தோன்" எனப் புலவர் புராணமுடையார் அப் புலவரைக் குறித்துக் கூறியிருத்தல் ஈண்டு அறியத் தக்கது. அவர், முருகக்கடவுளிடத்து உள்ளங் கனிந்த பத்தியுடையவர். சடாக்கரத்தைச் செபித்துச் சிறந்த வாக்குப் பலிதமுடையராய் விளங்கியிருந்தார். ஒருமுறை சிவிகையூர்ந்து அரசன் திருச்செந்தூருக்குப் போனபொழுது பரிவாரங்களுடன் அப் புலவரும் உடன் போயிருந்தார். ஆத்தூரை அடைந்த பொழுது வழியிடையே ஒரு புளியமரக்கிளை மிகவும் கோணலாய்த் தாழ வளைந்து நீள நின்றது. அதனை மன்னன் நோக்கி

"வழிப்போக்கர்க்கு இடையூருகத் தடை செய்துள்ள இக் கொப்பு ஒடியப் பாடமுடியுமா?" என்று அருகில் நின்ற அப் புலவரை உல்லாசமாக வினவினர். உடனே அவர் முருகனை உருகி நினைந்து "எப்படியும் இப்புளியங் கொப்பொடிய வேண்டும் குருபரா" என்ருர். அப்பொழுதே நெறுநெறென அது இடைமுறிந்து விழுந்தது. விழவே அரசர்விரைந்து இறங்கி அவரைத் தழுவி வியந்து அழகிய பொன்மாலை ஒன்றை அவரது கழுத்திலிட்டுப் புகழ்ந்து நின்ருர். அவரிடம் பல உத்தம குணங்கள் நிறைந்திருந்தமையே இத்தகைய சித்தியடைதற்குக் காரணமாயிருந்தது. "தாரத்தைத் தாரம் என்பேன் மற்றை மாதரைத் தாயர் என்பேன், சூரைத் துளைத்தவன் ஆணை" என ஒருமுறை பாரறிய அவர் பகர்ந்து நின்ருர். இதனுல் அவரது உள்ளப் பான்மையும், ஒழுக்கத்தின் மேன்மையும் நன்கு உணர லாகும். இந்த அரிய விரத ஒழுக்கத்தை வியந்து முருகதாச சுவாமிகள் அவரை மிகவும் புகழ்ந்து கூறியுள்ளார்.

முதலில் துறவு நிலையை மேற்கொண்டிருந்து, பின்பு உள நிலைதிரிந்து மங்கையரை மருவி மயலோடு வாழநேர்ந்த சிலரைக் குறித்து இவ் விரதசீலரது நிலையோடு பொருத்தி அச்சுவாமிகள் குறிப்பாக இகழ்ந்திருக்கிருர். அடியில் வருவது காண்க.

"தாரமன்றி மற்றைத் தையலரை யெல்லாம்
ஈரமுறு தாய் என்றே என்றும் நினைப்பேன் இதுமெய்
சூரற்செகுத்தோன் ஆணை" என்னும் ஒருபாச் சொன்ஞன்
பாரதனிலிவ் விரதம் பலரும் கொளற்பாற் றன்றே, (1)

அந்தவிதி அன்னவனுக்கு அமையத் தலையில்எழுதிக்
கந்தமலர்மேல் வாழும் கடவுள் கரங்கள் தழைக;
இந்தவுலகை வெறுத்திட் டிரந்துண்டு அதன்பின் மடவார்
பந்தஞ் சிலருக் கெழுதும் பனவன் கரம்இற்றுகவே." (2)

பனவன்=பிரமன். (புலவர் புராணம்)

ஒழுக்க நிலையிலுயர்ந்து விழுப்பேறுடையராய் அப்புலவர் உறுதி செய்திருந்த வுண்மை இதனுல் இனிதறியலாகும். இந்தவாறு

எவரும் வியந்து சொல்லும்படி விரத சீலராய் விளங்கியிருந்த அவர் பரிசில்கருதி இவ் அரசரிடம் வரும் புலவர்கள் எவர்க்கும் உடனிருந்து இதம் புரிந்து வந்தார். இங்ஙனம் அவர் சாதுவா யிருந்தாலும் வாது புரிய நேர்ந்தால் யாதும் தாழாது மிகவும் மோதி நிற்பர். ஒருமுறை அரங்கமால் என்னும் அரசமாளிகை யில் பரதம் ஒன்று நடந்தது. அப்பரத நாட்டியத்தைக் கண்டு மகிழப் பலரும் வந்து அங்குக் குழுமியிருந்தார். இவ் அரசர் வந்து சிறந்த ஆதனத்தில் அமர்ந்தவுடன் நாட்டியக் கலையில் மிகவும் வல்லவளாகிய வாசவதி என்னும் தாசி அரங்கிலேறி அதிசய நிலையில் நடனம் புரிந்தாள். அவள் ஆடி வருகையில் ஆதீனப் புலவரது அருகேயிருந்த வரதராயன் என்னும் புலவன் அவளைச் சுட்டிக் காட்டித் "தையல் நல்ல தையல்" என்று அவ ரிடம் பரிகாசமாகப் பையச் சொன்னன். தையல் என்னும் சொல் பெண்ணையும், தையல் தொழிலையும் குறிக்கும் ஆதலால் சிலேடையாக வைத்து அவரது குலநிலை தெரியக் குறிப்போடு உரைத்தான். தைக்கும் தொழிலினன் எனத் தம் சாதியைக் குறித்துக் குறும்பாக இளித்துக் கூறினன் என்று இவர் அறிந்துகொண்டு உடனே "ஆட்டுக்கு நல்ல தையல்" என்றார். ஆட்டு என்பது நடனத்தையும், ஆட்டையும் உணர்த்தும். அவ் வாயாடிப் புலவன் ஆயர் குலத்தினன் ஆதலால் ஆடுமேய்க்கும் இனத்தான் என அவ் இடைச் சாதியின் இயல்பு தோன்ற இங்ஙனம் இவர் மாறி உரைத்தார். அதனால் இருவருள்ளத்தும் கலாம் விளைந்து கதித்து நின்றது. பரதம் முடிந்து அவளுக்குப் பரிசில் தந்து அனுப்பியபின் புலவரிடை நிகழ்ந்த இக் குறு மொழிகளைக் கேள்வியுற்று, அரசர் ஒரு நாள் அவ்விருவரையும் அழைத்து உடனிருக்க வைத்து அறிவுரைகள் பல ஆடி வந்து முடிவில் "கல்வியறிவுக்குப் பயன் யாது?" என அவரிடம் நயனுற வினவினர். வினவவே ஒழுக்கம் எனவும், அடக்கம் எனவும், உணர்ச்சி எனவும் தத்தமக்குத் தோன்றியதைத் தனித் தனி யுரைத்தார், அவற்றை யெல்லாம் மறுத்து "ஒருவனது

பேரறிவுக்குப் பயன் ஓரறிவுயிர்க்கும் ஊறு நேராவகை ஓம்பி வருதலே" என உறுதிபெற உரைத்து, மேலும் பல உணர்த்தி, அவர் குறுமொழியாடிச் சிறுமை கொண்டு நின்றதை இளித்து வெறுத்தார். அவர் உள்ளம் நாணி உணர்ந்து திருந்திப் பின்பு குறுகிய நோக்கை விட்டு மறுமை நோக்கோடு மருவி யமர்ந்து உரிமைமீக்கொண்டு உறவாடி நின்றார். பிழைகள் கண்ட இடத்துக் கடுமையாக இடித்துரைத்து, அடுத்தவரை அணைத்து ஆதரித்து, உண்மையும் திண்மையும் உடையராய் யாவருக்கும்உறுதி நலங்களைச் செய்தருளிக் கள்ளம் முதலிய அல்லல்கள் யாதும் தம் நாட்டில் அணுகா வண்ணம் இவர் ஆராய்ந்து காத்தார்.

## தந்தையின் பிரிவு.

இங்ஙனம் காத்து வருங்கால் தந்தையார் காலமாயினார். ஆனது 1—2—1791ல் என்க. திக்குவிசயத்துரை என எத்திசையிலும் இசைபெற்று நின்ற அவ் வீர வேந்தன் பிரிந்ததை அறிந்து நாடும் நகரமும் நைந்து புலம்பின. இவர் பெரிதும் வருந்தி மறுகி நொந்து உரிய கடன்களை உறுதிபெறச் செய்து உள்ளம் தேறிப் பின்பு அரசை அன்போடு ஆதரித்து வந்தார்.

## ஆட்சியின் மாட்சி.

இவ் ஆண்டகையின் ஆட்சித் திறம் பாண்டிமண்டலத்தில் பதிந்திருந்தாலும் மறுபுலம் எங்கணும் மாட்சி நீண்டிருந்தது. எல்லாரும் வியந்து புகழ வல்லாண்மை புரிந்து இவர் இசை பெற்றிருந்தார். நல்லோரை நாடிப்பேணித், தீயோரை மாய நூறி, அளியும் தெறலுமுடையராய் ஒளிசெய்து வந்தமையால் இவரது ஆணை யாண்டும் ஆண்மையுற்று நின்றது. அறநெறியுடையார் அமிர்தென அணுகினார்; பிறநெறியுடையார் பெயர்ந்து நடுங்கினர்; தஞ்சமென நின்றவர் தழைத்து வந்தனர்; வஞ்ச நெஞ்சினர் நஞ்செ்ன அஞ்சினர்; புலையும் களவும் பொய்யும் பொன்றின. கலை நலங்கள் எங்கும் கவித்தெழுந்தன; பொல்லாத நிலைகளில் பழகியிருந்தவரும் உள்ளம் திருந்தி நல்லவராய் ஒழுகிவர இவ் வல்லவர் வழிமுறைகளை வழங்கி வந்தார்.

"குற்ற முள்ளார் குலைநடுங்கக் குணமுடையார்
உளமகிழக் கோவின் செங்கோல்
பற்றியிவன் பாராண்டு பண்புபா
ராட்டிவரும் பான்மை நோக்கி
மற்றமறு புலத்துயர்ந்த மன்னவரும்
மனமகிழ்ந்து மாண்பு செய்ய
வெற்றிமிகு திருவோடு வீரமிகு
பாஞ்சையினில் விளங்கி நின்றான்."

என உலகம் எங்கும் இங்ஙனம் உளங்கனிந்து கூற அரசியல் நெறியில் இவர் துலங்கி வந்தார். இன்னவாறு உன்னத நிலையில் மன்னி நின்ற இவர் முன்னோர் செய்துள்ள தரும நிலையங்களை நன்கு பேணி வந்ததோடு தாமும் அருமையான பல திருப்பணிகள் இயற்றி அற நலங்களை யாண்டும் ஆர்வ மீதூர்ந்து புரிந்து யாரும் இன்புற நீர்மை சுரந்து சீர்மையோடு ஆதரித்திருந்தார். பேரும் புகழும் பெருகி வந்தன.

## தரும நிலையங்கள்.

ஆழ்வார்திருநகரியில் சுவாமி சந்நிதி முன்பு ஒரு அழகிய மண்டபம் அமைத்து வைகாசி உற்சவந்தோறும் ஏழாந் திருநாளில் பெருமாளை அங்கு எழுந்தருளச்செய்து பூசனை புரிந்து வரும்படி போற்றி வைத்துள்ளார். அத்தெய்வ காரியம் செவ்வையாய் நடந்து வருவதற்காக வெள்ளமடம் என்னும் கிராமத்தில் இருபத்தேழு கோட்டை விதைப்பாடு இனமாக உதவி யிருக்கிறார். சில வேதியர்க்கு மாத வேதன மும், நாளும் பலருக்கு அன்னதானமும் நல்கி யருளினார். சந்நிதியில் தீர்த்தம் முதலிய மரியாதைகளை முந்துற உவந்து செய்து, தேர் ஓட்டத்தன்று முன்னதாக இம் மன்னன் வடம் தொட்ட பின்னரே அது பேர்ந்து செல்லும் உரிமையைத் தலத்தார் ஓர்ந்து செய்துள்ளார். அத்தலத்தில் அமைத்த அம் மண்டபத்தில் இதுபொழுது வேத அத்தியயனம் நடந்து வரு கின்றது. நீதி வித்தகன் நிலையங்கள் எங்கும் நிலவியுள்ளன.

பசுவந்தனை என்னும் ஊரில் முன்னர்ச் சமைத்த திருக் கோவில் இன்னமும் முதன்மையுற்றுள்ளது. அத் தலத்துச் சுவாமி பெயர் கைலாசநாதர். அம்பிகை பெயர் ஆனந்தவல்லி. அந்த ஆலயத்துக்கு வேண்டிய மூலதனமும் நிலபுலங்களும் சாலவும் நல்கி ஆறு காலமும் பூசனை நடந்துவரும்படி ஈசனை வணங்கி, மாசனங்கள் மகிழ யோசனையோடு இவர் உதவி புரிந்துள்ளார். "தென் பசுந்தாபுரிக் கைலாசநாதரைத் தேவி ஆனந்தவுமையைச், சிந்தையில் அநுதினம் முந்துற நினைந்தரசு செய்கின்ற செம்மலே!" எனச் செந்தமிழ்ப் பனுவல் பல பெற்றுப் புலவர் பாடும் புகழுடையராய் இவர் நிலவியுள்ளமை யால் இவரது தெய்வ வழிபாடும், மெய் யறிவுடைமையும், செய்தவ நிலைமையும் சீர்மையும் நீர்மையும் தெரியலாகும்.

ஆத்தூர், காயல், வீரபாண்டியபுரம், வேடநத்தம், பட்டணமருதூர் முதலிய இடங்களில் சத்திரங்கள் கட்டி யாவருக்கும் வரையறையின்றி அன்னதானங்கள் செய்திருக் கின்றார். இன்ன வகையில் இம் மன்னன் மரபினர் முன்னும் பின்னும் செய்துள்ள அறநலங்கள் பல. தருமமும் கொடையும் தகவுடன் அமைந்ததுபோல் கருமமும் வீரமும் பெருமித நிலையில் மருவி யிருந்தமையால் பாரெங்கும் இவரது புகழ் பரவி நின்றது.

அக்காலத்தில் இந்நாடு பல பிரிவுகளாய்ப் பிரிந்து ஒவ் வொன்றும் தனித் தனியாய்த் தலைமையோடு தழைத்து நின்றது. ஊற்றுமலை, சொக்கம்பட்டி, அளகாபுரி, சேற்றூர், சிவகிரி, நெற்கட்டஞ்செவல், தலைவன்கோட்டை, கடம்பூர், மணியாச்சி, காடல்குடி, குளத்தூர், மேல்மாந்தை, நாகலா புரம், எட்டையாபுரம், ஆற்றங்கரை, எழாயிரம் பண்ணை, முத லாக முப்பது ஜமீன்கள் இந் நெல்லை மண்டலத்தில் நிலவியிருந் தன. அவ்வெல்லாவற்றுள்ளும் செல்வத்திலும், வீரத்திலும் சிறந்து இப் பாஞ்சாலங்குறிச்சி பண்புடன் உயர்ந்து நின்றது.

## பாஞ்சையின் மாண்மை.

இது 96 கிராமங்களையுடையது. சில கிராமங்களில் உள்ளடங்கிய பல ஊர்களும் உண்டு. அவை ஆறு வணிதங்களாகப் பகுக்கப்பட்டிருந்தன. செவுனகிரி வணிதம், பசுவந்தனை வணிதம், புதியம்புத்தூர் வணிதம், ஆதனூர் வணிதம், வேடநத்தம் வணிதம், பட்டணமருதூர் வணிதம், என வகுத்து வரன்முறையாக ஆண்டுவந்தனர். வணிதம்=பகுதி, பிரிவு. இவ் ஆட்சியுடன் தலம் காவல், திசை காவல் என இரண்டு உரிமைகள் இவர்க்கு இசைந்திருந்தன. தலம் காவல் என்பது நபாவின் கிராமங்களின் பாதுகாப்பு. திசை காவல் என்பது ஜில்லா முழுவதும், எல்லைப் புறமும் பாதுகாத்து நிற்பது. இவ்விரண்டிற்கும் முறையே குடிகளிடத்தும்,அவ்வவ் அதிபதிகளிடத்தும் வரி வசூலித்துக் கொள்வர். ஆரவாய் மொழிவரையும் இருந்த திசை காவலுக்காகச் சேரர் அதிபதிகள் வருடந்தோறும் பெரியதொரு தொகையை இவர்க்கு அனுப்பி வந்தனர். அவ் விருவகை வருவாய்களைக் கொண்டு பொருபடைகளை இவர் பேணி வந்தார். தகுதியான வீரர்களை ஆங்காங்கு வைத்துத் தலம் காவலை நலங்காண ஆற்றினர். திசை காவலைத் தமது ஆணையின் திறலால் மாணுறப் புரிந்தார். வழிப்பறி, கொள்ளை, கள்ளம் முதலிய பொல்லாச் செயல்கள் யாண்டும் புல்லாதபடி எல்லா இடங்களையும் இனிது நோக்கி நாடோறும் இவர் நன்கு போற்றி வந்தார். எங்கேனும் இடையூறு நேர்ந்ததாயின் இவர்க்கு அது விரைந்தறிவிக்கப்படும்; படவே உடனே அது நேர்ந்த வகையைத் தேர்ந்து, நீதியோடு ஆராய்ந்து, செய்த பிழையாளரைத் தண்டித்து மீண்டும் அது நேராவண்ணம் ஓர்ந்து முறை புரிந்து உறுதி செய்து அருளுவர். இத்துடன் மேற் குறித்த முப்பது பாளையகாரரிடமிருந்து உரிய பருவங்களில் திறைகளைத் தொகுத்து ஒரு சிறு பகுதியைத் தாம் எடுத்துக் கொண்டு மீதத்தைத் திருச்சியிலிருந்த சாதிகான் மூலம் ஆர்க்காடு நபாவுக்கு அனுப்பி வந்தார். இவ்வாறு மரபுநிலை திரியாமல் வரன்முறை

யே விதிமுறை புரிந்து துறைகள்தோறும் அறநலங்கள் கனிய இவ் வீரபாண்டியர் பாராண்டு சீரோடு சிறந்திருந்தார்.

## பாளையங்களின் நிலை.

நெல்லை எல்லையிலுள்ள முப்பது பாளையங்களோடு பாண்டிமண்டல முழுவதிலும் சேர்ந்து அக்காலத்திலிருந்த பாளையங்களின் தொகை எழுபத்திரண்டாம். அந்த எழுபத்திரண்டு பாளையகாரரும் இப் போர்வீரரிடம் ஆர்வமிகுந்து சார்பு கொண்டு எவ்வழியும் செவ்வியராய் இணங்கி நடந்து இசைந்து நின்றார். அப் பாளையங்களின் பெயர் விவரங்களை அயலே காண்க.

## எழுபத்திரண்டு பாளையங்கள்.

1 பாஞ்சாலங்குறிச்சி.
2 எட்டையாபுரம்.
3 நாகலாபுரம்.
4 ஏழாயிரம் பண்ணை.
5 காடல்குடி.
6 குளத்தூர்.
7 மேல்மாந்தை.
8 ஆற்றங்கரை.
9 கொல்லபட்டி.
10 கோலார்பட்டி.
11 கடம்பூர்.
12 மணியாச்சி.
13 தலைவன்கோட்டை.
14 நெற்கட்டஞ்செவல்.
15 சொக்கர்பட்டி.
16 ஊற்றுமலை.
17 சேற்றூர்.
18 சிவகிரி.
19 சிங்கம்பட்டி.
20 அளகாபுரி.
21 ஊர்க்காடு.
22 சுரண்டை.
23 சந்தையூர்.
24 எழுமலை.
25 இரசக்கனார்.
26 கோட்டையூர்.
27 மருங்காபுரி.
28 மன்னார்கோட்டை.
29 பாவாலி.
30 இலக்கையனார்.
31 முல்லையூர்.
32 கடலூர்.
33 இடையகோட்டை.
34 நிலக்கோட்டை.
35 தேவாரம்.
36 இராமகிரி.
37 கல்போது.
38 கன்னிவாடி.

39 தொட்டப்பநாயக்கனூர்.
40 கம்பம்.
41 காசையூர்.
42 வாராப்பூர்.
43 தோகைமலை.
44 படதூர்.
45 ஆய்க்குடி.
46 சமுத்தூர்.
47 விருப்பாச்சி.
48 படமாத்தூர்.
49 கண்டவநாயக்கனூர்.
50 காமயநாயக்கனூர்.
51 தும்பிச்சிநாயக்கனூர்.
52 நத்தம்.
53 வெள்ளிகுன்றம்.
54 மலையபட்டி.
55 வடகரை.
56 அம்மையநாயக்கனூர்.
57 போடிநாயக்கனூர்.
58 சக்கந்தி.
59 மதவானையூர்.
60 ரோசலைபட்டி.
61 வீரமலை.
62 பெரியகுளம்.
63 குருவிகுளம்.
64 ஆத்திபட்டி.
65 இளசை.
66 மதுவார்பட்டி.
67 கோம்பை.
68 கூடலூர்.
69 கவண்டன்பட்டி.
70 குமரவாடி.
71 உதயப்பனூர்.
72 கொல்லகொண்டான்.

இந்த எல்லாப் பாளையகாரரும் இவ் வல்லாளரைத் தழுவிக் கெழுதகைமை மிகுந்து கிழமை புரிந்து வழிமுறையோடு ஒழுகி வந்தனர். குடிகள் மகிழ இவரது அரசுமுறை விழுமிய நிலையில் விளங்கி எவ்வழியும் இனிது நடந்து வந்தது.

இவர் காலத்தில் ஜமீன் திருவினும் திறலினும் சிறந்து உயர்ந்த நிலையில் ஒளி செய்திருந்தது. மறு மண்டலங்களெங்கும் இவரது புகழ் மண்டி யெழுந்தது. யாண்டும் தீராத வழக்குகளெல்லாம் இவ்வீரமகனிடம் வந்து விரைந்து தீர்ந்தன. எளியவர் எவர்க்கும் இனிய துணைவராய் நின்று இவர் அருள் புரிந்து வந்தார். பாளையகாரர்களும் இடையூறான வேளை நேர்ந்தபொழுது இவரிடம் வந்து துணை வேண்டி நின்றார். யாருக்கும் நாளை என்று சொல்லாமல் அவ் வேளையிலேயே விரைந்து உதவி வரன் முறை பிறழாமல் இறைமுறை புரிந்தார்.

ஒரு முறை சொக்கம்பட்டி ஜமீனுக்கு நேர்வாரிசு ஆன சின்னணைஞ்சத்தேவனை அயலேதள்ளிவிட்டு வெள்ளையத்தேவன் என்பவன் பட்டத்தை அபகரித்துக் கொண்டான். இவன் அஞ்சா நெஞ்சினன். அருந்திறல் உடையவன். மிகுந்த படை வீரர்களைத் தொகுத்து வைத்திருந்தானுதலால் சிறுவனுயிருந்த அவ்வுரிமையாளனைச் செயிர்த்து விலக்கி ஜமீனை வலிந்து கவர்ந்து கொண்டான். பதி இழந்த அவன் இப் பதியை வந்தடைந்து தன் கதியினை யுரைத்தான். உரிமை யுண்மைகளை வினவி யுணர்ந்து தாயாதி ஆனதால் தகுந்த செல்வத்தை யடைந்துகொண்டு ஜமீனை யுடையவனிடம் ஒப்புவிக்கும்படி முடங்கல் ஒன்று எழுதி ரணவீரசின்னு என்னும் வீரனிடம் தந்து இவர் விளைவுகூறி விடுத்தார். அவன் சென்று அதனை வெள்ளையத் தேவனிடம் கொடுத்தான். அவன் பார்த்தான்; வேர்த்து மறுகினுன்; ஆயினும் படைச் செருக்கின் வலியால் உடனே இசைந்துகொள்ளாமல் போக்குச் சொல்லி யனுப்பினுன். போனவன் வந்தான்; ஆனதை யுரைத்தான். இம்மானவர் கொதித்து ஒரு படையினை ஏவினுர். முத்துக்குமாரு நாயக்கர், தும்பிச்சிநாயக்கர், ஆதிராமுநாயக்கர், புலிகுத்தி நாயக்கர், அய்யாவுநாயக்கர் என்னும் ஐவரும் அப் படையை நடத்திச் சென்று தடை செய்த தேவனை அடைய வளைந்தார். வளையவே, அடுபோர் விளைந்தது. அதில் அவன் படைவீரர்கள் பலரை இழந்து, படாதபாடு பட்டு, முடிவில் வந்து, இப் பாண்டியனைச் சரண் புகுந்து வேண்டியவாறு நடந்துகொள்வதாக விண்ணப்பித்து நின்றுன். உடனே உள்ளம் இரங்கி அவ் இருவரையும் உறவுறச் செய்து, விரைவுடனழைத்து வந்து, அரசுரிமையை உடையவனுக்கு அடையத் தந்து, மற்றவனுக்குத் தக்க நிதியை யுதவி, மிக்கமகிழ்வுடன் அங்கு மேவி வாழும்படி யாவும் வரைந்து ஆணை புரிந்து வைத்துத் தம் பதியினை யடைந்து இவ் அதிபதி இருந்தார். எவ்வழியும் நீதி நெறியே ஒழுகி யாவரும் செவ்வியராய் வாழ்ந்து வர ஆழ்ந்து சூழ்ந்து விதிமுறைகளை ஓர்ந்து நாளும் நலம் செய்து வந்தார்.

## அடைந்தாரை ஆதரித்தது.

மெலியரை வலியரும், வறியரைச் செல்வரும் நலிவு செய்யாதபடி யாண்டும் அளிசெய்து நின்று முறை புரிந்து வந்த இவரிடம் நாளும் பலர்வந்து குறையிரந்து நின்று குணமடைந்து சென்றார். அடைந்தவர் எவராயினும் அவரை ஆதரித்தருளுவது இம் மன்னனது வழக்கமாய் மன்னி நின்றது.

"இடைந்தவர்க்கு அபயம் யாம்என் றிரந்தவர்க்கு எறிநீர்வேலை
கடைந்தவர்க் காகிஆலம் உண்டவற் கண்டிலீரோ?
உடைந்தவர்க் குதவானாயின் உள்ளதொன்று ஈயானாயின்
அடைந்தவர்க்கருளானாயின் அறம்என்னாம்? ஆண்மைஎன்னாம்?"

என்னும் இவ் உன்னதமான உறுதி நிலையை உள்ளங்கொண்டிருந்தார் ஆதலால் உதவி நாடி இவ் வள்ளலிடம் வந்தவர்க்கெல்லாம் எள்ளலின்றி இடையூறு நீக்கி இதம் புரிந்து வந்தார். இம் மன்னனுடைய முன்னோரெவரும் இன்னவாறே இன்னல் ஒழித்து ஏழைகளை ஆதரித்துத் யாவரிடமும் தோழமையோடு தோள்வலிகாட்டி நாளும்நலம்புரிந்து நாடுஆட்சிசெய்துள்ளனர்.

## பலி விலக்கிப் பாதுகாத்தது.

மதுரைமா நகரில் திருமலை நாயக்கர் தமது அரண்மனையைக் கட்டத் தொடங்கியபொழுது தென்திசைச் சுவர் நன்கு அமைந்து நேரே நின்று நிகழாமல் நிலை சிதைந்து வந்தது. அந் நிலையினை நிமித்திகன் ஒருவன் நுனித்து நோக்கிப் "பூதம் புகுந்து ஏதம்புரிகின்றது; இதற்கு நரபலிஒன்று இடின்நலமாம்" என்றான். அறநல முடைய அந்த அதிபதி அம் மறநிலைக்கு இசையாமல் முதலில் மறுத்து உரைத்தார். பின்பு விதிமுறை செய்வதால் பழுதில்லை என்று வேதியர் சிலர் அவரிடம் ஓதி நின்றமையாலும், வேறுவழி யில்லாமையாலும் அவர் சரிஎன்று இசைந்தார். இசையவே தளகர்த்தர் சிலர் பல இடங்களிலும் தேடி எளிய மக்களாகிய சக்கிலியர் இருவரைப் பற்றிவந்தார்.

மாடன், முத்து என்னும் பேரினரான அவ் விருவரையும் குறித்த நாளில் பலியிடும்படி சிறையில் இட்டிருந்தார். வலைவாய்ப்பட்ட வன விலங்குகள்போல் பலிவாய்ப் பட்டுப் பதைத்திருந்த அப் பகடைகள் இனத்தவர் பாண்டி நாட்டிலுள்ள பாளையகாரரிடங்கள் தோறும் புகுந்து இடர் நீக்கும்படி பணிந்து நின்று பரிந்து வேண்டினர். "திருமலை செயலுக்கு மறுமொழி இல்லை" என்று அனைவரும் மறுத்து விடுத்தார். அவர் மறுகி அலைந்து முடிவில் வந்து பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தார். அவ்வமயம் அங்கு *வீரதளவாய்க்கட்டபொம்மு அரசு புரிந்திருந்தார். அப்போர்வீரரது அடியில் வீழ்ந்து அனைவரும் அழுதுமுறையிட அவர் கடிதிரங்கி நெடிது சூழ்ந்து, முடங்கல் ஒன்று எழுதிச் சேனைத் தலைவரிடம் தந்து, மதுரைக்கு அனுப்பினார். நிருபம் வந்தது. "நரபலி இடவேண்டாம்; தேவியின் வர பலத்தாலேயே தங்கள் திருமதில் யாதொருதடையுமின்றிப் பெரு நலமோடு பெருகியெழும்; இத்துடன் வைத்திருக்கும் மஞ்சள் காப்பை மதிலில் இட்டுக் கட்டிப் பாருங்கள்" எனச் சுட்டி யிருக்கும் வாசகத்தை நோக்கித் திருமலை நாயக்கர் பெரு மகிழ்ச்சி யடைந்து அவ்வாறே செய்து பார்த்தார். செவ்வை யாயது. உடனே சிறையிலிருந்தவரை வெளியேற்றிப் பொருளும், உடையும் கொடுத்து அயலகல விடுத்துப், பாஞ்சைப்பதியிடம் வாஞ்சை மிகுந்து பரிசில் பல அனுப்பிப் பண்பு பாராட்டி அன்பாற்றி நின்றார். விடுதலை யடைந்த அந்த எளிய குலத்தவர் எல்லாரும் களிமிகுந்து ஒருங்கு திரண்டு பாஞ்சை நகர் அடைந்து, அரசைக் கண்டு, அடிபணிந்தெழுந்து, உயிருதவி புரிந்த அவ்வுபகாரநிலையைப் புகழ்ந்துபோற்றி, உலகம் உள்ளவரையும் குடிக்கு ஒரு பணம் வீதம் கோவின்குடிக்கு வருடந்தோறும் தாம் கொடுத்துவருவதாகப் பட்டயம் எழுதிக் காணிக்கை வைத்துக் கைகுவித்து வந்தார். அவ்வாறே இன்றும் தந்து வருகின்றார்.

---

* பக்கம் 30, 33-வது பட்டம் பார்க்க.

இங்ஙனம் அடைந்தவர்க்கெல்லாம் அருள்புரிந்து அருந் துணையாய் நின்ற பெருந்தகையாளருடைய பரம்பரையில் வந்த இவ் அருந்திறலாளரும் அவ்வாறே திருந்திய வுதவிகள் திறந் தெரிந்து ஆற்றி இருந்தலம் புரந்து இதம் புரிந்து வந்தார். இவரது காரியவிசாரணை யாண்டும் சீரியநிலையில் சிறந்திருந்தது.

நகர் சோதனை செய்து நலம் புரிந்தது.

காரிருளில் மாறுவேடந் தரித்து யாரும் அறியா வகை ஊருள் உலாவி உளவுகளோர்ந்து களவு முதலிய இளிவுகள் யாதும் எங்கும் ஏரு வண்ணம் மதிநிறிந்து காத்தார். ஒருமுறை சோரர்களோடு சோரராய்ச் சென்று சோரம் புகுந்து வாரம் பகுந்து வரன்முறை தெரிந்து அரமனை யடைந்து மறுநாள் அவரை ஈர்த்து வரும்படி செய்து வேத்தவை நிறுத்தி விரகுடன் வினவிக் கரவினை வெளிப்படுத்திக் காட்சி யளித்தார். கண்டவ ரெல்லாரும் இவரது அறிவின் திறத்தையும், ஆட்சியின் மாட்சி யையும் போற்றிப் புகழ்ந்தார். படியில் படிறு நிகழாவண்ணம் அன்று இவர் பரிந்து செய்த படியை உலகம் தெரிந்து வியந்து மகிழ்ந்தது. அவ் விளைவினை அயலே வரும் கவிகளில் காண்க.

கரவு காண ஒருநாள் இரவு நேர்ந்தது.

"மாறு வேடங்கொண் டோரிரவு இவனொரு நகர்வாய்த்
தேறு நோக்குடன் உண்மையைத் தெளிந்திடச் சென்றான்;
மாறி லாதவல் லிருளினில் கள்ளர்கள் நால்வர்
ஏறி வந்தனர் இடையிவன் கண்டனன் எதிர்ந்தே. [1]

இடையில் வாளுயர் கையினில் கம்பொடும் எதிரே
நடையில் வந்திட நம்மினத் தானென இவனை
அடைய நின்றவர் உசாவினார்? ஆம்வகை யுரைத்தான்;
தடை யிலாதவர் சேர்ந்தனர் தொடர்ந்தனன் சார்ந்தே. (2)

களவு செய்தனர் ஓரில்லில் கண்டதைப் பாகம்
அளவு செய்தனர் அவரவர் அயல்பிரிந் தகன்றார்;

உளவு செய்துபோய்க் காலைஅந் நால்வரை ஒருங்கே
தளைவு செய்துடன் தன்னவை யுய்த்திடப் பணித்தான். (3)

காவல் வீரர்கள் அவ்வகை கையுடன் கொணர்ந்து
மேவ வைத்தனர்; விசாரணைத் தலத்தினில் வேந்தன்
ஆவ லோடவண் அடைந்தனன் அவரைநேர் நோக்கி
நீவிர் கள்ளங்கள் நேர்ந்தெவண் செய்தனிர்? என்றான். (4)

ஒன்றும் இல்லையே ஆண்டவா! என்றவர் உரைத்து
நின்று காலினில் நெடிதுவீழ்ந் தழுதனர் நேர்ந்து
நன்று நன்றுநீர் நவில்வது நும்முடன் ஒருவன்
ஒன்றி வந்துளான் உண்டுமா? இல்லையா? என்றான். (5)

அந்த வாய்மொழி கேட்டதும் அவர்மிகத் திகைத்துச்
சிந்தை யுள்ளுறத் திகிலடைந்து, ஒருவரை யொருவர்
முந்த நோக்கினர் மூண்டுமீண் டில்லையே என்றார்;
வந்த அவ்வுரை * வரவையும் உணர்த்திய தன்றே. (6)

இல்லை யென்றஅச் சொல்லினால் அவர்கள்ளம் எளிதாய்
மெல்லவே வெளி யானதை அறிந்தனர் விரகாய்
வல்ல மன்னவன் வாய்மொழி யாடிய திறனைச்
சொல்லி யாவரும் துதித்தனர் அமைச்சரும் புகழ்ந்தார். (7)

சோரர் நெஞ்சகம் அஞ்சியே துளங்கினர் ஒருவன்
யார்கொல் என்றவண் உள்ளவர் யாவரும் தியங்கி
நேர்வ தென்கொலோ எனநிலை குலைந்தனர் நின்றார்;
வீர மன்னவன் உண்மையை விளக்கினன் விரித்து. (8)

இரவிற் சென்றதும், அவர்களைக் கண்டதும், இசைந்து
கரவில் கொண்டதும், கண்டவெம் பொருள்களைப் பகுத்தே
உரவுட் கொண்டுபின் மீண்டதும் உணர்த்தி முன்னுற்ற
வரவைக் கொண்டெதிர் வைத்தனன் வகைபெற மன்னன். (9)

---

* இல்லை என்ற அச் சொல்லே அவர் களவுசெய்யப் போன உண்மையை ஒண்மையாக உணர்த்தி நின்றது. என்னை? போகாதிருந்தால் ஒருவன் வரவில்லை என்று அவர் சொல்ல முடியாது. தன்னை மறந்து அவர் வாயால் சொல்லும்படி மன்னன் முன்னுற நன்னயமாக நவின்றிருக்கும் நளின நிலையை நாடி யறிந்து கொள்க.

வெளியி லிட்டஅப் பொருள்களைக் கண்டதும் வெய்யோர்
ஒளிசெய் மன்னனே யுற்றவன் என்பதை யுணர்ந்து
விளிவு நேர்ந்ததென் றுளமுயிர் வெருவியே நின்றார்
தெளிவு ளோர்களும் திகைத்தனர் செய்வது தெரியார். (10)

அன்னா நால்வரை மன்னவன் அருள்கொடு நோக்கி
இன்ன தாகிய இழிதொழில் ஈனமே யாகும்;
துன்னு வெம்பழி பாவங்கள் இம்மையில் துய்த்து
மன்னு வெந்துயர் நரகிடை மறுமையில் மடிவீர்; (11)

உமது புன்பொருள் ஒருவன்கை கவர்ந்திடில் உள்ளம்
கமை யிழந்துறு துயருறக் காண்கிலீர் கொல்லோ?
அமையும் அத்தகை அநுபவம் உள்ளுற அறிந்தும்
தமது நல்லறி விழந்திது செய்வது தாழ்வே. (12)

கொண்டு போயுள்ள பொருள்களைக் கூடிய விரைவில்
கொண்டு வாரும்என் றவர்களைக் கோமகன் விடுத்தான்;
மண்டி யோடினர் மானமும் நாணமும் கொண்டார்
தண்டி வந்துடன் அரசவை வைத்தனர் தாழ்ந்தே. [13]

அடியில் வீழ்ந்தனர் கடவுள்மேல் ஆணையா யிங்குக்
கொடிய தீமையைக் கனவிலும் குறித்திலம் இனிமேல்;
படிறு நீக்கியிப் படியெம்மைப் பவித்திர மாக்கிக்
குடிசெய் தாண்டநற் குணமலையே யெனத் தொழுதார். [14]

உற்ற அப்பொருள் உடையவன் அடைந்திட உதவி
மற்ற வர்க்குண வுடையொடு வளநிலம் உதவிப்
பெற்ற இந்நிலம் பேணியே எவரினும் விளைவை
முற்றி டச்செய்து முறையொடு வாழ்மின் என் றுய்த்தான்.

வள்ளல் செய்தவிவ் வகையினை யாவரும் வியந்தார்;
கள்ள நீர்மையில் கழிந்திழிந் தொழிந்திட நின்றார்
தள்ளரும் பெருந் திருவின ராய்த்தழைத் துயர்ந்தார்
உள்ளம் இன்புற உருகியிம் மன்னனைத் துதித்தார். [16]

பாவ காரிய மாகிய களவினைப் பயின்றே
ஏவ மாயிழிந் தொழிந்திடா தின்புறக் காத்தான்
காவ லன்புரி கருத்தினைக் காசினி யுள்ளார்.
ஆவ லோடறிந் தார்வமீ தூர்ந்தன ரன்றே. [17]

இழிந்த வாசனை யுளத்திடை யிருந்திடில் இழிவே
எழுந்து தீவினை யியற்றிவெந் நரகினுக் கிரையாய்
ஒழிந்து மன்பதை யுழந்திடு மென்றுளம் இரங்கிப்
பொழிந்த அன்பினல் மறங்கடிந் தறம்பெறப் புரிந்தான். [18]

குற்றஞ் செய்தபின் கொடுந்தண்டம் செய்வது தன்னின்
உற்ற குற்றமுன் ஒழித்திடல் நலமென வுணர்ந்து
பற்று தீங்குகள் பாரினில் பரவிடா தோம்பி
வெற்றி வேந்திவன் விரகுடன் அருள்செய்து நின்றுன். [19]

உயிர்கள் இன்புற உலகிடை யுள்ளுறக் கிளர்ந்த
செயிர்கள் நீக்கினன் களைகளைக் களைந்தெழில் சிறந்த
பயிர்கள் ஓங்கிடப் பண்ணுநல் லுழவனே போல
அயில்கொள் வேலுடை யுழவனும் அருந்திறல் மன்னன்."

[வீரபாண்டியம், குடிபுரந்த படலம்.]

தமது அரசில் பட்டிமை யாதும் படியா வண்ணம் பாது காத்து இவர் படிபுரந்திருக்கும் பான்மையும், குற்றம் கடிந்து குணம் புரிந்திருக்கும் மேன்மையும் இதனுல் இனிது புலனும். கள்ளம், பொய் முதலிய தீய இயல்புகள் உள்ளம் புகுந்திடின் வாசனை வசமாய் வளர்ந்து மக்களை நீச நிலையில் தள்ளிவிடும் ஆதலால் அவற்றை இளமையிலேயே உள்ளுற ஒட்டாது கிள்ளி யெறியவேண்டும் என்பது ஒள்ளியோர் கருத்து; அவ்வாறே இவ் வள்ளியோரும் உள்ளி ஓர்ந்து வழிமுறை ஆய்ந்து, வரன் முறை தோய்ந்து, பழிநிலை களைந்து பண்பாற்றி ஒழுகி வந்தார்.

மானமும் வீரமும் மருவி வானுயர் புகழொடு மருவி நின்ற இக்கோனிடம் திரண்ட சேனைகள் செறிந்திருந்தன. தோள்

வலியோடு வாள்வலியிலும் சிறந்த இவரது ஆள்வலியை நோக்கி யாவரும் அஞ்சினர். மல்வகை முதலிய பல்வகை யினத்திலும் வல்லுநரைத் தொகுத்து எல்லையில் திறல்களை இனிதுபயிற்றி எவ்வகை நிலைகளிலும் வெல் வலியுடன் இவர் விளங்கி யிருந்தார்.

## படை நிலை.

தம் சாதி வீரர்கள் 6000; மறவர் 5000; பரிவாரம் 3000; பட்டாணிகள், கவுண்டர், கவரையர் வலையர் முதலிய பலவகை மரபுகளிலும் திரண்டது 2000; ஆகப் பதினாயிரம் போர்வீரர்கள் இந்த அதிபதியிடம் ஆதரவு கூர்ந்து அமர்ந்திருந்தனர்.

## படைக்கலன்களின் அளவு.

வாள்கள் 6000, வேல்கள் 6000, வல்லயங்கள் 6000, கம்புகள் 6000, வில்லுகள் 500, கவண்கள் 300, வெடிகள் 200 வளைதடி, பரசு பிண்டிபாலம் முதலியபலவகைஆயுதங்களும் 1000 ஆக இருபத்தாறாயிரம் படைக்கலன்கள் இக்கொடைக் குரிசிலின் நிலை துலக்கி நெடியதிறல்களோடு ஆயுதசாலையில் மேவியிருந்தன.

## வாகனங்கள்.

குதிரைகள் 120, யானைகள் 4, ஒட்டகங்கள் 2, பெட்டி வண்டிகள் 24, சிறந்த காளைமாடுகள் 250, போர் மூட்டிப் பொழுது போக்குவதற்கு வீரநிலையில் விளங்கியிருந்த செம்மறிக் கிடாய்கள் 60, வேட்டைநாய்கள் 80 கோட்டையுள் கூட்டமுற்றிருந்தன. அவையாவும் நாட்டமுடன் பேணப்பெற்றன.

## பட்டத்துக் குதிரை.

குதிரைக் கூட்டத்தில் உயர்ந்த நிலையுடையனவாய் ஐந்து குதிரைகள் மிகவும் சிறந்து நின்றன. பட்டத்துக் குதிரைக்கு முத்துராமு என்று பெயர். அது அழகில் சிறந்தது; வெண்மை நிறமுடையது; அறிவு, வேகம், ஆற்றல், தோற்றம், கம்பீரம் முதலிய ஏற்றங்கள் யாவும் எய்தப்பெற்றது. பரியின் இலக்கணங்களெல்லாம் பரிபூரணமாக அதனிடம் இனிதமைந்திருந்தன.



வீர பாண்டியக் கட்டபொம்மு.
(1760—1799)

இம் மன்னனைத் தவிர அதன் மீது வேறு யாரும் ஏறுவதில்லை. அதனை அடுத்து பாலராமு, கோதண்டராமு, நீலவேணி, பஞ்ச கல்யாணி என நான்கு குதிரைகள் நன்கமைந்திருந்தன. நாட்டியம் முதலியவற்றில் சிறந்த வேறு சில பரிகளும் வீறு கொண்டு நின்றன. இங்ஙனம் படை முதலிய பலங்கள் நலமுற அமைந்து பலவகையிலும் சிறந்து தலைமையுற்று நின்று இக் குலமகனார் நாட்டை நன்கு பரிபாலித்து எங்கும் இசைநாட்டி வந்தார். இவரது பிறப்பும் இருப்பும் பயிற்சியும் முயற்சியும் ஆட்சி முறையும் அரிய பல சீர்மைகளோடு மருவியிருந்தன.

## உருவ நிலை.

இவர் சிவந்த மேனியர்; வட்டமான ஒளியமைந்த அழகிய முகத்தினர்; படர்ந்த நெற்றியினர்; அடர்ந்த புருவத்தினர்; கரிய பெரிய கண்ணினர்; இருண்டு அடர்ந்து சுருண்டு நெரிந்த குஞ்சியர்; சொருகு கொண்டையர்; திரண்டு உருண்ட திண்ணிய தோளினர்; அகன்று விரிந்து பரந்து நிமிர்ந்து நிவந்து விளங்கிய மார்பினர்; நீண்ட கையினர்; செறிந்து மேல்நோக்கி அரும்பியடர்ந்த மீசையினர்; கதுப்பின் இருபுறமும் கனிந்து வார்ந்த கிருதாக்களை யுடையவர்; ஏறுபோன்ற வீறுகொள் நடையினர்; மருவிய எதிலும் பெருமித நிலையினர்; அருந்திறலினர்; பெருங் கொடையினர். உருவும், திருவும், அறிவும், ஆண்மையும், இயலும், செயலும், உயர்நலம் பிறவும் ஒருங்கே யுடையராய் உயர்ந்திருந்த இவர் சிறந்த முறையில் எதனையும் தெளிந்து ஆராய்ந்து குடிகளை உரிமையோடு உவந்து பேணி வந்தார். நாடும் நகரமும் நலம்பலபெற்று வளம்படிந்து வந்தன.

அழகும் வீரமும் விழுமிய நிலையில் இவரிடம் செழுமி யிருந்தமையை வியந்து உலகம் புகழ்ந்து வந்தது. உருவ அமைதி நேரே கண்டவர் கண்களுக்குக் களிப்பை யூட்டியது; வீரத் திறல் வெளியே கேட்டவர் நெஞ்சங்களில் கிளர்ச்சியை நீட்டியது. பிரியமான நீர்மைகள் அரிய சீர்மைகளை வளர்த்துப் பெரிய மேன்மைகளைவிளைத்து உரியமகிமைகளுடன் ஓங்கிவந்தன.

கரிய கண்ணினன்; செய்யநன் மேனியன்; கனிந்த
அரிய தண்கலை மதியென அழகிய முகத்தன்;
உரிய தானமா வீரமா மகளுவந் துறையும்
பெரிய திண்டிறல் தோளினன்; பெருந்தகை யாளன்; (1)

மத்த யானைநன் மழவிடை மால்கொண்டு திகைத்துச்
சித்தம் நாணிடச் செம்மலோ டுயர்தரு நடையன்;
முத்த மாமணி மாலையும் முளரியந் திருவும்
ஒத்து வாழ்வுற உயர்ந்தொளி திகழுநன் மார்பன்; (2)

வீர மாதுளம் விழைந்தினி துறைந்திட விளங்கி
ஆர மாமலை அருவியில் அமைந்துறத் திரண்டு
பார மேருவின் பான்மையின் பருத்தெழுந் துயர்ந்து
தீர மோடொளி திகழ்ந்தெழில் தவழ்ந்திடு தோளன்; (3)

கச்சை யங்கரி கடும்பரி அடும்படை முதலாம்
விச்சை யாவையும் பயின்றபே ரறிவினன்; வினைமுன்
வைச்ச காலைப் பின் வைத்திடா வலியினன்; என்றும்
அச்சம் என்பதை அறிகிலா அருந்திற லாளன்; (4)

மண்கலங்கினும் மறிகடல் கலங்கினும் மயங்கி
விண்கலங்கினும் விறல்மலை கலங்கினும் விண்ணோர்
கண்கலங்கினும் கதிநிலை கலங்கினும் கருதார்
எண்கலங்கினும் அமரினில் என்றுமே கலங்கான். (5)

கண்ட கண்ணையும் மனத்தையும் கவர்ந்த கட்டழகும்
தண்டமிழ்ப் பெரும் புலமையும் தலைமையும் தகவும்
திண்டிறற்பெரு வீரமும் செம்மையும் கொடையும்
கொண்ட நல்லரு ளுடைமையும் குலாவியே நின்றான். (6)

அன்ப மைந்துமெய் யருளுடன் கலந்தறம் கனிந்தே
இன்ப மைந்ததோர் இனியமென் சொல்லினன்; எவரும்
முன்பு வந்தபோதே அவர் முகக்குறிப் போர்ந்து
துன்பகன்றிட உதவிசெய் திதம்புரி திறலோன். (7)

இன்ன வாறிவன் பருவமும் உருவமும் சிறந்து
மன்னன் மாதவப் பயனென மாநிலம் மகிழத்
தென்ன ளுட்டுயர் திறல்திசை தெளிந்திடத் திகழ்ந்து
பன்ன ருஞ்சிறப் புடனிவன் பண்பமைந் திருந்தான். (8)

(வீரபாண்டியம்)

வீரபாண்டியனுடைய நிலைமைகளை இக் கவிகளால் ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். பாசுரங்களில் பதிந்துள்ள பான்மைகளை மானச நோக்கால் மருவிக் காண்பவர் அரிய பல காட்சிகளை அறிந்து கொள்ளுவர். இவ் வீரனுடைய சீவிய நீர்மைகள் யாவரும் புகழ்ந்து யாண்டும் வியந்து நோக்கத் தக்கன.

## வாழ்க்கைத் துணை.

உரிய மாமன் மகளை இக் கோமகன் பிரியமா விழைந்து மணந்து கொண்டான். அவள் அழகும் குணமும் அமைதியும் உடையவள். வீரலட்சுமி என்னும் பேரினள். வீரசக்கம்மாள் என்றே யாவரும் அழைத்து வருவது, வழக்கம் ஆதலால் அப் பெயரே தழைத்து வந்தது. அக் குலமகளோடு அமர்ந்து இத் தலைமகன் இனிய பல போகங்களை நுகர்ந்து உரிய அரசை உவந்து பேணி அரியசீர்மைகளை அடைந்து பெரிய மகிழ்வோடு பெருகி வந்தான். பருவ உருவங்களில் சிறந்து உருகிய அன்போடு மருவி மகிழ்ந்து வந்த இந்தச் சதிபதிகளுடைய நிலைமை நீர்மைகளைத் தலைமையாக உவந்து நோக்கி உலகமக்கள் அதிசயமாய் வியந்து யாண்டும் துதிசெய்து நின்றனர்.

மன்னனே அழகன் என்பார்; மங்கையே அழகி என்பார்;
கன்னல்வில் ஒளித்து வந்த காமனே இவனும் என்பார்;
இன்னமிர் தனைய மென்சொல் இவளிடை காணும் என்பார்;
அன்னமென் னடைகாண் என்பார்; அம்புயத் திருவே என்பார்.

ஒளிதவழ் மேனி இந்த ஒண்ணகைத் திருவைக் கொள்ள
அளிதவழ் கண்ணன் என்ன அருந்தவம் செய்தான்? என்பார்;
களிமயில் அனைய சாயல் காமரு கன்னி முன்னம்
விளிவரு தவம்செய் துள்ளாள் வேந்தனை அடைந்தாள்என்பார்.

மாந்தருள் மதனன் அன்னான் மகளிருள் இரதி யன்ன
ஏந்திழை யாளை எய்தி இன்பமீக் கூர நின்றான்
ஆந்தவம் உடையார்க் கன்றி அடைவரி திப்பே றென்பார்;
வேந்தருள் இவன்போல் மேன்மை வேறெவர் பெற்றார்என்பார்.

குரிசிலைப் பெற்றார் என்ன குலத்தவம் செய்தார் என்பார்;
வரிசிலை நுதலைத் தந்த மாதுமா தவமே தென்பார்;
பொருசிலை மதனும் அந்தப் பொன்னுல காளும் தெய்வத்
தருநிழல் அமர்வோன் தானும் சரியிவன் தனக்காம் என்பார்.

கொடையினில் கன்னன் என்பார்; கோலத்தில் குமரன் என்பார்;
நடையினில் இராமன் என்பார்; நலத்தினில் சயந்தன் என்பார்;
படையினில் விசயன் என்பார்; பரியினில் நகுலன் என்பார்;
விடையும்வெம் மடங்கலும்மே விறல்நடைக் கெதிராம் என்பார்.

இன்னவாறு யாவரும் வியந்து புகழ இவரது மனை வாழ்க்கை இனிமை சுரந்து மகிமை நிறைந்து நின்றது. பண்பு நலம் கனிந்த மனைவி அமைந்தமையால் இவர் வாழ்வில் இன்ப நலன்கள் பொங்கி எவ்வழியும் இசைகள் பெருகி யிருந்தன.

இல்லவள் இனியளேல் யாவும் இன்பமாம்.

என்பதை இக்கோமகன் நன்கு அனுபவித்து வந்தான்.

நாட்டைப் பாதுகாத்து நலங்கள் பல நாட்டிக் குடிகளை எங்கும் நன்கு பேணி வந்தமையால் தேசம் முழுவதும் வாஞ்சை மீதூர்ந்து பாஞ்சையைப் புகழ்ந்து வந்தது. செல்வ வளங்களை அடைந்து எல்லாரும் எவ்வழியும் இனிது வாழ்ந்து வர இவர் தனி உரிமையுடன் இறை முறை புரிந்து வந்தார்.

செல்வ வளங்கள் செழித்துவர நல்ல
சீர்த்திகள் எங்கும் தழைத்துவர
நல்ல வழிகளில் நாடாட்சி செய்துமே
நாட்டில் இசைகம்பம் நாட்டி நின்றான். (1)

காட்டில் திரிந்தாலும் நாட்டில் இருந்தாலும்
கள்ளர் பயம்எங்கும் இல்லை என்று
கூட்டில் கிளிகளும் பாஞ்சைமன் கீர்த்தியைக்
கூறி யுவந்தன சீருடனே. (2)

என இன்னவாறு பாடி வருகிற நாட்டுப் பாடல்கள் இவருடைய ஆட்சியின் மாட்சிகளை நன்கு காட்டியுள்ளன. உயிரினங்கள் துயர் உறாமல் இயலுரிமையோடு இவர் அரசு புரிந்து வந்தது உயர்தகைமையாய் ஒளி வீசி யிருந்தது.

இங்ஙனம் இருந்து வருங்கால் மாறுபாடு ஒன்று புதிதாய்க் கிளர்ந்து இவருடைய ஆட்சியுள் மீறி எழுந்தது. அது எழுந்த நிலையையும், எய்திய வகையையும் இனிமேல் காண்பாம்.

---

# ஐந்தாவது அதிகாரம்

## கும்பினி சார்ந்தது.

ஐரோப்பாக் கண்டம் ஆகிய மேல் நாட்டில் இருந்து எழுந்து இந்நாட்டில் வந்து ஆங்காங்குத் தங்கி வெள்ளைக்காரர் சிலர் வியாபாரம்செய்தனர். முதலில்வட இந்தியாவில்புகுந்தனர்; பின்பு தென் இந்தியாவை அடைந்தனர். அக் காலத்தில் சந்திரகிரி அரசினுள் செங்கற்பட்டிலிருந்து அரசு புரிந்து வந்த சென்னப்பநாயக்கர் என்னும் சிற்றரசனிடம் வந்து தாங்கள் தங்கியிருத்தற்குக் கடற்கரை ஓரம் சிறிது இடம் வேண்டும் என்று அவர் நயந்து கேட்டார். அவ்வாறே அவன் இரங்கிக் கொடுத்தான். கொடுக்கவே அத் துறைமுகத்தை யடைந்து தங்கள் வர்த்தக நிலைக்கு வசதியாகச் சிறிய கோட்டை ஒன்று கட்டினர். அவரோடு வியாபாரம் செய்யும் நிமித்தம் அக் கோட்டையைச் சுற்றிச் சிலர் வந்து குடியேறினர். அந்த ஊருக்கு அம்மன்னன் பெயரால் சென்னப்பனூர் என்று பெயரிட்டார். முன்னம் சின்ன நிலையில் இருந்தது; பின்னை அது சென்னை ஆயது.

## சென்னை சேர்ந்தது.

அதுவே பின்னுளில் சென்னபட்டணம் எனத் திரிந்து இதுபொழுது நமது தேசத்துக்குச் சிறந்த இராசதானியாய்ச் சீரும் பேரும் பெற்றுச் சிறப்போடு விளங்கி நிற்கின்றது. அங்கு முதலில் தங்கியிருந்த அவ் வர்த்தகக் கூட்டத்தார் வணிக முறையை நுணுகி ஆராய்ந்து, இந் நாட்டிலுள்ள உப்பு மிளகு முதலியவற்றைத் தம் நாட்டுக்கு அனுப்பி, அங்குள்ளவற்றை வரவழைத்து இங்கு விற்றுப், பண்டம் மாற்றுகளைக் கண்ட இடங்களிலெல்லாம் கருதிச்செய்து பெரும் பொருள் திரட்டினர். திரண்ட செல்வம் வரவே ஆங்காங்குச் சில நிலங்களை வாங்கினர். அவ் வமயம் இத்தேச முழுவதையும் ஆண்டிருந்த நபாவுகளுக்கும் கடன் கொடுத்தனர். அம் மகமதிய மன்னர் ஒருவரோடு ஒருவர் கலகம் விளைத்து நின்றமையால் நாளடை

வில் நாடு முழுவதும் இவர் கைவசம் வந்தது. தாம் வாங்கிய கடனுக்குத் தம் நாட்டிலுள்ள வருமானத்தை வசூலித்துக் கொள்ளும்படி அவ் அரசர் ஒப்படைத்து விட்டனர். விடவே இவ் வெள்ளையர் உள்ளம் மகிழ்ந்து உறுதி சூழ்ந்து தம் சங்கத் தலைமையில் தரணி ஆள ஆய்ந்தார். அவ் வர்த்தக சங்கத்திற்குக் கிழக்கிந்திய சங்கம் (East India Company) எனக் குழூக்குறி யான பேர் வழக்கமா இடப்பட்டது. தம் நாட்டிற்குக் கீழ்பா லுள்ள இந்தியாவில் வந்து கூட்டமாய் நின்று தேட்டம் மிகுந்து நாட்டைக் கொண்டமையால் அச் சங்கம் ஈஸ்ட்டு இந்தியக் கம்பேனி என இங்ஙனம் பெயர் பெற்று நின்றது. தேசம் அடைந்தவுடன் வருமானம் பெறுவதில் ஆசை மீக்கூர்ந்தார்.

## தேசம் ஆள நேர்ந்தது.

சென்னையில் இருந்த தலைமை நிலையத்திற்கு அநுகூலமாகத் திருச்சிராப்பள்ளியிலும், திருநெல்வேலியிலும் கிளைச் சங்கங்கள் தாபிக்கப்பட்டன. நாட்டில் வாரமும், வரிகளும் வாங்குதற்கு வசதியாக முதலில் நிலங்களை அளவு செய்து வரையறை [Settlement] செய்ய நேர்ந்தார். குடிகளின் நிலங்களை அளந்து ஒழுங்கு செய்தபின் முடிவில் ஜமீன்களிடம் வந்தார். புதியராய் வந்த அவ் அதிகாரிகளைக் கண்டவுடன் ஜமீன்தார்களெல்லாரும் சார்ந்து பணிந்து உரிமையோடு உறவாடி நின்றார். அவருள் எட்டையாபுரம் ஜமீன்தார் எட்டப்ப நாயக்கர் என்பவர் மிகவும் நயந்து அன்புடையராய் அடைக்கலம் புகுந்து நின்றார். இந் நாட்டின் உளவுகளை அறிதற்குப் பலவகையிலும் அவர் நிலையான துணையாவர் என்பதை அளவறிந்து கொண்டு அவ் அதிபதிகள் அவர்பால் ஆதரவு செய்பவர் போன்று அன்புகொண்டாடினர். பின்பு இங்குள்ள ஜமீன்களின் எல்லைகளைத் தீர்மானித்தற்கு யாண்டும் வேண்டிய ஆதரவுகளோடு ஒல்லையில் முயன்றனர்.

## வம்பு விளைந்தது.

அங்ஙனம் முயன்று வருங்கால் பாஞ்சாலங்குறிச்சிக்கு உரிமையாய், ஆதனூர் வணிதத்தில் இருந்த அருங்குளம், சுப்பலா

புரம் என்னும் இரண்டு ஊர்களையும் எட்டையா புரத்திற்குச் சேர்த்தார். அப்பொழுது நில அளவை அதிகாரியாய் (செட்டில் மெண்டு ஆபீஸராய்) வந்திருந்தவர் லெவ்ட்டினென்று, கர்னல் மேக்ஸ்வேல் (Lieut. Col. Maxwell) என்னும் ஆங்கில தள கர்த்தர். அவர் மிகுந்த தந்திரமுடையவர். எல்லாப் பாளையகார ரும் தன்னை வந்து பார்த்தனர். பாஞ்சாலங்குறிச்சியான் மட்டும் நாளது வரையும் நேரில் வரவில்லையே! என்ற புழுக்கம் அவர் நெஞ்சில் அழுத்தமாப் புகுந்திருந்தது. அத்துடன் புகார் களும் புகுந்தன. அதனால் மனம் மாறி நின்ற அவர் ஊரை அவ் வாறு வேறு செய்தார். மாறுபாடோடு அவர் மீறிச் செய்துள் ளதை இவ் வீரர் அறிந்தார். தமது உரிமையில் தலையிட்டது சிறுமையை விளைக்கும் என்று முடங்கல் ஒன்று எழுதி அவர்க்கு முன்னுற விடுத்து, அவ்வூர்களில் அயலார் யாரும் சாரலாகாதென ஆணை கூறி இவர் ஆண்மையோடு நின்றார். தேச அதிபதிகள் இவரது நிலையை அறிந்து திகைத்து உளைந்து யாதும் செய்ய மாட்டாமல் அயர்ந்து நின்றார். இது நிகழ்ந்தது 16—12—1792 ல் என்க. இதிலிருந்துதான் குழப்பங்கள் தொடர்ந்து வளர்ந்தன. இவ் வளர்ச்சி எட்டப்ப நாயக்கருக்கு ஒரு கிளர்ச்சியா யிருந்தது. அதிகாரிகள் வட்டவாரியில் வலிந்து கவர்ந்து தமக்குச் சேர்த்த அந்நகர்களின் கிட்ட நெருங்காமல் கட்டபொம்மு ஆணையை அஞ்சிக் கடுங் கிலேசமுற் றிருந்தா லும் ஒட்டியுள்ள உறுதியை நினைந்து அவர் உள்ளுற உவந்து நின்றார். கால நிலைகள் கடிது மாறி நெடிது பிறழ்ந்து வந்தன.

## வரி வளைந்தது.

இந் நாட்டிலுள்ள பாளையகாரர்களுடைய நிலைகளை யறிந்து திறைகளை விதித்துக் கும்பினியார் நேரே இறைகொள்ளலானார். எல்லா ஜமீன்தார்களிடமு மிருந்து வரிகள் வசூலாயின. நெற் கட்டுஞ்செவல் பாளையகாரனாகிய பூலுத்தேவரும், இப் பாஞ்சைப்பதியும் வரி தர மறுத்து வன்மமுற்று நின்றார். பின்னர் அத்தேவரும் செலுத்தினார். யாவரும் இசைந்தனர்.

இவர் மட்டும் எவ்வகையிலும் இணங்காமல் வெவ்வலியாளராய் விளங்கி நின்ருர். இவரது நிலையினை நினைந்து கும்பினி நெடிது கவன்றது. இனி என்ன செய்வது? எனப் பன்னி யுளைந்து நன்னயமாகத் திறைகொள விழைந்து இம் மன்னனிடம் வந்து பலவகையிலும் முயன்ருர். ஒரு வகையிலும் பலியவில்லை. இறை நிலையில் இவ்இறை இறையும் இறங்காமல் இகல் மீக்கொண்டு இறுமாந்திருந்தார். எல்லாப் பாளையகாரரிடத்தும் வரிகளைத் தொகுத்து ஒரு பகுதியைத் தாம் வைத்துக்கொண்டு, மீதத்தை நபாவுக்கு அனுப்பி வந்தார் ஆதலால் அவ் வரவு நிலை கும்பினி வரலால் அதுபொழுது வறந்து போனதை நினைந்து இவர் வருத்தமுற்று நின்ருர். அவ்வளவோடு அமையாமல் புதியராய் வந்தவர் தம் பாளையத்தில் என்றுமில்லாத புதிய வரி முறையைப் புகுத்தத் துணிவதை எண்ணி எண்ணிக் கொதிப்பு மீக்கொண்டார். அவரும் தொடர்ந்து நெருக்காமல் இடையிடையே வந்து வரி செலுத்த வேண்டிய உரிமையை வரன்முறையாக ஞாபக மூட்டி நின்ருர். வணிக முறையில் வல்லவர் ஆதலால் வரித் தொகையின் நிலுவையை வருடந்தோறும் கணக்குக் கூட்டி வந்தார். அதிகாரத்துடன் அடர்ந்து கேட்கவும் அதுபொழுது அவர்கட்கு ஆற்றல் இல்லை. குழப்பத்தை நாட்டில் வளர்த்து விடின் தமக்கு இழப்பம் வந்து நேரும் என எதிரறிந்து நின்ருர். குடிகளுக்கு நல்லன செய்வதுபோல் நடந்து மெல்ல மெல்லத் தம் உரிமையையும், உதவியையும் உலகறியச் செய்தார். இவ் அரசரிடம் பிறருக்கு மனம் மாறும்படியான சில இனமான காரியங்களையும் எட்டப்பன் மூலம் எடுத்துரைத்து வந்தார். முன்னம் இவரால் தண்டிக்கப்பட்டவரையும், வரி வசூலிக்குங் கால் சிலரை இவர் வருத்தி நின்ற நிலையையும் குறித்துரைத்தார். இங்ஙனம் பலவாறு உள்நாட்டில் நிலைதிரியச் செய்து இவரது நிலையினைக் குறைத்தார். ஆயினும் பெரிய போர்வீரன் என்று இவரை நினைந்து நெடுந்திகில் கொண்டு நின்ருர் ஆதலால் கடுமையாக ஒன்றும் கடிந்து செய்யவில்லை. காரிய சாதனைகளைக் கூரிய நோக்கோடு குறித்து நின்று உரிய காலம் கருதி வந்தார்.

## ஆலன் வந்தது.

இவ்வாறு வந்ததில் ஆண்டுகள் ஆறு கழிந்தன. கி. பி. 1792ல் இந்நாட்டு உரிமையை நபாவிடம் பெற்று வந்தவர் 1798 வரையும் இவரிடம் வரியைக் கேட்டுக்கேட்டு வந்தார். முடிவில் பெற்றோம் என்ற பேருக்குச் "சிறிது வரியை உதவி வருக; அதனால் பிறரும் அடங்கி நடப்பர்; எங்கள் உரிமைக்கும் பெருமையாம்" என உறவுரிமை கூறித் திறையை உறுதிசெய்து வரும்படி ஆலன் என்னும் துரையை இவ் அரசிடம் விடுத்தார். அவர் நல்ல அறிவாளி; அமைதி யுடையவர்; இந் நாட்டு வழக்கத்தை நன்கு அறிந்தவர்; தெலுங்கும், தமிழும் சிறிது பேசத் தெரிந்தவர். திருநெல்வேலியிலிருந்து பரிமீதிவர்ந்து பாஞ்சையை நோக்கி வந்து தெற்கு வாசலை யடைந்து வாசியை விட்டிறங்கித் தேசுடைய அந்நகரை ஆசையுடன் நோக்கினார். அதன் அழகு அமைதிகளைக் கண்டு உளம் மிக வியந்தார். பின்பு வாசலை அணுகினார். அங்கே வாள், வேல், வல்லையம் முதலிய ஆயுதங்களைக் கையிலேந்தி யாரும் அஞ்சும் வகையில் காவல் செய்து நிற்கும் வீரர்களைக் கண்டார். * "காகம் பறவாது கட்டபொம்மு கோட்டையின் மேல்" என்று இந் நாட்டில் வழங்கும் மொழியினை முன்னம் கேட்டு நின்றேன்; இன்று நேரே அதன் மகிமையைக் கண்டறிந்தேன் என அவர் கருதிப் புகழ்ந்து அருகில் நெருங்கித் தாம் வந்துள்ள விவரத்தை அரசிடம் உரைக்கும்படி இதமாக வேண்டினார். அல்லும் பகலும் மல்லினையே அவாவிக் காப்பாளராய்க் கடுத்து நின்ற அவ் வல் வீரர் அவரை "அங்கே நில்லும்" என்று நிறுத்தி உள்ளேபுகுந்து அடுத்த வாசற் காவலரிடம் அறிவித்தார்; அம்முறையே சென்று இறுதியில் வந்து அவ் வெள்ளையரது வரவு நிலையை இவ் வள்ளலிடம் வணங்கியுரைத்தார். உடனே "யார் அது? அழைத்து வருக". என்று அயலே நின்ற சின்னபொம்மு நாயக்கரை மன்னவர் விடுத்தார்.

---

*பறவைகளும், விலங்குகளும் கூடக் கட்டபொம்முடைய ஆணையைக் கடவாமல் அஞ்சி நிற்கும் என்பது இதனால் அறியலாகும்.

10

### அரசைக் கண்டது.

அவன் வெளியே வந்து அங்கு நின்ற வெள்ளையரைக் கண்டு அளியோடழைத்து வழியே உட்சென்றான். அரங்க மாளுட் புகுந்து ஆலன்துரை அரசைக் கண்டார். இவர் உவந்து உபசரித்துச் சிறந்த ஆதனத்தில் அவரை இருக்கும்படி பணித்தார். இருந்த அவர் இவரது உருவத் தோற்றத்தையும், பெருமித நிலையையும், அகன்று பரந்து விரிந்து நிவந்த மார்பையும், திரண்ட தோள்களையும், வீரப்பொலிவோடு விளங்கி யிருக்கும் திருமுக எழிலையும் ஒருமுகமாக விழைந்து நோக்கி உள்ளுற வியந்து உவந்து நின்றார். அவரை இவர் பலநாள் பழகிய கிழமையாளர் போல் பண்போடு பார்த்து "தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? இங்கு வந்த காரியம் என்ன? யாது செய்ய வேண்டும்?" என அன்புடன் வினவினார்.

### வரி வகை யுரைத்தது.

அவர் யாவும் உரைத்தார்: "இத் தேசம் கம்பெனியாரிடம் வந்துளது; பாளையகாரர் யாவரும் கப்பம் கட்டி வருகிறார்கள்; தங்களது மட்டும் வரவில்லை; பாக்கியாயுள்ளது: ஆறு ஆண்டுகள் ஆயின; வேறு ஜமீன்தார்களுக்கு விதித்தது போல் தங்களுக்கு வரி விதிக்கவில்லை; சிறிதே வகுத்துளது; இங்கு மறுத்தால் எங்கும் இடையூறும்; * சங்க உரிமைக்கும் பங்கமாகும்; ஆறு வருடங்களுக்கும் சேர்த்து ஆறாயிரம் பொன் கொடுத்தால் போதும்; குணம் பொருந்தி இணங்கி அருளின் இருதலையும் இனிமையாம்; இதனை உறவுரிமையோடு எங்கள் அதிபதிகள் உங்களிடம் உரைத்து வர விடுத்தார்; உவந்து வந்தேன்; உணர்ந்து உதவ வேண்டும்" என அவர் நயந்து உரைத்தார்.

---

* சங்கம் என்றது இங்கு கம்பெனியை. பலர் கூடி வாணிகம் செய்த கூட்டம் ஆதலால் Company என நின்றது. கம்பெனி என்னும் ஆங்கிலமொழிக்குக் கூட்டுறவு என்பது பொருள். அது, தமிழில் கும்பினி என வழங்க வந்தது. கும்பினியார்—வர்த்தக சங்கத்தார்.

### மன்னன் மறுத்தது.

அவர் வரி என்று குறித்தவுடனே இவர் எரி எனச் சினந்தார்; எதிர்ந்து சிலமொழிந்தார்; "என்றும் இல்லாத வழக்கத்தை இன்று நீர் புகுத்த வந்தீர்! நன்று நன்று நும் வரவுரை" என நகைத் திகழ்ந்தார். "நாற்பத்தேழு தலைமுறையாக நாங்கள் இந்த நாட்டை ஆண்டு வருகின்றோம்; யார்க்கும் திறை தந்த தில்லை; முறையின்றி வந்து நீர் வரி என்று குறித்தது மிகவும் இழிவான செயல்" என வழிவகையுடன் தொகுத்துத் தமது தான நிலைமையும் மான மாட்சியும் உறுதியுடன் அவர் உணர்ந்து கொள்ளும் படி உருத்து மொழிந்தார். உரைத்த படியை அடியில் பார்க்க.

### திறை மறுத்த திறம்.

"வானம் மாமழை பொழிதர மாநிலம் விளைய
ஆன பேரரசு யான்புரந் தருளுவன் இடையே
ஊன மாகவந் தொருவரி தருகவென் றுரைத்தாய்!
தானம் என்னிலோ தருகுவன் வரிஎனில் தாரேன். (1)

உழுது தன்குடி ஓம்புமோர் உழவனே போலத்
தொழுது காணிக்கை தந்துநின் சொல்வழி வாழ்தல்
எழுதும் கீர்த்திசால் மன்குலத் தெம்மனோர்க் கென்றும்
இழுதை நீரதால்; இனியிதை எம்மிடம் இயம்பேல்." (2)

என்றுமே இலா வழக்கத்தை எம்மிடம் புதிதாய்
இன்று வந்துநீர் இசைத்திடல் ஈனமே அன்றோ?
நின்று நீதியை நெறிமுறை நேர்ந்துநீர் ஆய்ந்து
நன்று நாடியே நண்புடன் அமைவது நலமால். (3)

எனத் தமது இட நிலையை இங்ஙனம் இவர் திடமோடு உரைக்கவும் அவன் மனம் மிக மருண்டான். மீண்டும் தெருண்டு இவ் ஆண்டகையை நோக்கி "இப்படி விடாப்பிடியாகத் தொடுத்து நின்றால் கம்பெனியார் பகை கடுத்து மூளும்; அதனால் கடுந்துயர் நீளும்" என்று அடுத்து மொழிந்தான். அதனைக் கேட்டவுடனே இவருடைய நாட்டங்கள் சிவந்தன; "வரியை

வாங்க வந்தவனது உயிரைவாங்கினன் என்னும் வன் பழிக்கு அஞ்சி நான் இதுவரை பொறுத்திருந்தேன்; கருத்து அறிந்திலே; இனி யாதும் இங்கு மறுத்து மொழியற்க; இந்த இடத்தின் இயல்பை எண்ணி யுணர்ந்திலே; பின்னமாக இன்னம் யாதும் பிதற்றேல்; உன்னை விடுத்தவரிடம் போய் யான் உன்னிடம் இங்கே உரைத்தவற்றை உணர்த்துக; சொன்னதைச் சொல்வதே உன்னது வேலை; உடனே செல்க" என இவர் உரைத்து விடுத்தார். அவன் மறுத்து ஒன்றும் பேசாமல் வருத்தமாய் எழுந்தான்; அரசு கடுத்தமையால் இடையே ஆபத்து நேருமோ? என அவன் அஞ்சி நின்றான். அந் நிலையினை நோக்கிப் "பரிவாரங்கள் யாதொருதீதும் இவருக்குச் செய்து விடாதபடி கையுடன் அழைத்துப் போய் இவரைக் கருத்துடன் அனுப்பி வருக" என வீரர் இருவரை ஈரமுடன் அனுப்பி இவ்வீரரிருந்தார். அவன் வெளியில்வந்து பரியில் ஏறி விரைந்துசென்று நெல்லையை அடைந்து அங்கு உள்ள அதிபரிடம் இவர் சொல்லிய யாவும், உள்ள நிலையும், உணர்த்தி நின்றான். அவர் உணர்ந்து திகைத்தார். உள்ளங்கொதித்தார்; உறுவதை ஆய்ந்தார்; ஒருங்கு கூடி ஓர்ந்து சூழ்ந்து மேலுள்ள கும்பினித் தலைவர்க்கு இங்கு, இவர் வணங்கா முடியராய் இணங்காதிருப்பதை எழுதி விடுத்துத் தங்கள் நிலைமைக்குப் பழுது வந்து விடுமோ? என்று பயந்து, மேலிருந்து வருகின்ற உத்தரவை எதிர்பார்த்து உளம் மறுகி யிருந்தார். அவரது இருப்பு அவல நிலையில் கவலை தோய்ந்து நின்றது.

வெள்ளைத் துரைநேரே வீரத் துரையிடம்
வேண்டி வரியினைக் கேட்க வந்தான்
உள்ளம் கலங்கியே சொல்லாமல் ஓடிப்போய்
ஒல்லையில் நெல்லையைக் கூடிநின்றான்.

ஆலன் வந்து போன நிலையை இச் சிந்து காட்டியுள்ளது

———

# ஆருவது அதிகாரம்

## மந்திரா லோசனை.

வரியை நினைந்து வாஞ்சையோடு வந்து முன் பாஞ்சையை அடைந்த ஆலன்துரை அலமந்து போனபின் இவ் அரசர் உரிய அறிஞரை ஒருங்கு கூட்டி உற்ற நிலையைக் குறித்து உறுதி சூழலானர். தமது தம்பியரும், தானுதிபதிகளும், சிறிய தந்தையாரும், மாமனும் மைத்துனமாரும், மதியுடை முதியோர்களும் அவையிடை யடைந்தார். அடையவே இவ் அதிபதி வந்து ஆதனத்து அமர்ந்து புதிதாய் நேர்ந்துள்ள வரி நிலையைக் குறித்து உரியராய் நெருங்கிய அவ் அறிவுடையாரிடம் முறையுடன் விளக்கித் தெளிவு கொள விழைந்து உறுதி பெற வுரைத்தார்.

### மன்னன் முன்னுரை.

நம் முன்னோர் முதல் பன்னருஞ் சிறப்புடன் இந் நகரிலிருந்து இன்னருள் புரிந்து நன்னயமாகக் குடிகளை இனிது பேணி முறைபுரிந்து வருகின்றோம். வரி என்று இதுவரை யாதும் யார்க்கும் தந்திலம். நாமே பாளையகாரர்களிடம் திறைகளை வாங்கி நபாவுடன் நண்பாற்றி வந்துளோம். அப் பழமையை ஒரு சிறிதும் உணராமல் புதியராய் வந்தவர் வரி என மண்டி நம்முடன் வம்பாடி வருகின்றார். ஆண்டுகள் ஆறுக அகற்றி விடுத்தும் மீண்டும் மீண்டும் வந்து வேண்டி நிற்கின்றார். ஒரு முறை வரி என உதவி விடின் பின்பு வருகிற வழிமுறை எல்லாம் வணங்கி வாழ வரும். கரு வருபோதிலே களையலாவிடின் உரு வருபோதிலே உளைய நேரும். வரி என்னும் பேரால் வந்துள்ள இது நம் உரிமையைக் குறைக்கவும், பெருமையைக் குலைக்கவும், சிறுமையை விளைக்கவும் மருவியதாகவே நான் கருதுகின்றேன். வருவது ஒன்றும் சரியாக இல்லை. இந் நிலையில் நாம் நடந்து கொள்ள வேண்டிய வழி என்ன? நாடி ஆராய்ந்து நன்கு சூழ்ந்து இங்கே கூடியுள்ள நீங்கள் குறித்துச் சொல்லுங்கள் என்று எடுத்துச் சொல்லி இவர் எதிர்நோக்கியிருந்தார்.

### சிவசுப்பிரமணியபிள்ளை பேசியது.

மந்திரிப்பிள்ளை முந்துற எழுந்து மன்னன் முகம் நோக்கிப் பேசலாயினர். "வீரவள்ளலே! இதுவரை அங்கிருந்து உத்தரவானவை யாவும் அறிந்தேன். வெள்ளைக்காரர் வந்தநாள் முதல் நாட்டில் நமக்கு வரும் வருவாய் குன்றியது. திசை காவலுக்கும், தலம் காவலுக்கும் கூட வரிகள் சரியாக வசூலாக வில்லை. நமது ஜமீன் குடிகளைத் தவிர அயலிலுள்ள குடிகளிடமெல்லாம் நொடி சொல்லி நமக்கு வரிதராவகை இடர்செய்து வருகின்றார். நபாவிடமிருந்து தாம் நேரே ஆட்சியைக் கொண்டுள்ளதாக மாட்சிகள் கொண்டாடுகின்றார். நாட்டில் பலரைக் கலைத்து உளவறிந்து தம்பக்கம் அநுகூலமாகக் கூட்டிக் கொண்டார். பிரித்தாளுவதில் கருத்தூன்றியுள்ளார். முதலில் வந்த தொடக்கத்தில் இங்குக் கொஞ்சம் அஞ்சி நின்றனர்; வரவர மிஞ்சுகின்றார். இந்நாட்டு மக்களைக் காட்டுமாக்களாகக் கருதி நின்று தமக்கு உறுதி காண்கின்றார். வெளிநாட்டிலிருந்து இங்கு வந்து வந்து மிகவும் களியாட்டம் கொள்கின்றார். உலகமுழுவதும் தனித்தலைமை கொண்டு தழைத்தாள ஓர்ந்து உழைத்தோங்கி வருகின்றார். சங்கம் சேர்ந்தோம்; வங்கம் பெற்றோம்; கலிங்கம் கொண்டோம்; தெலுங்கம் அடைந்தோம்; மராடம் வந்தது; விராடம் சேர்ந்தது; இனி எங்கும் தங்கொடி எளிது நாட்டி, இந்நாட்டை இனிது ஆளலாம் எனக்களிமிகுந்து அங்கங்கே ஆரவாரம் செய்கின்றார்; இங்கு ஓர் சிங்கம் உள்ளது என்று தெரியாமல் இங்ஙனம் அவர் பொங்கி நீள்கின்றார். இவ் அரசின் வரன் முறையை அறிந்து ஒதுங்காமல் வரிகொள விழைகின்றார். கனவிலும் நனவிலும் வரவையே கருதுகின்றார். அவர்க்கு இன்று சிறிது இடங்கொடுத்தால் பின்னர்ப் பெரிதும் இடரும். ஊர்க்கு இடைபுகாமலே இருந்ததாயினும், நீர்க்கு இடம்விடின் அது நெடிது பாயும் ஆதலால் பார்க்குள்ளே தலைமையில் பதிந்திருக்கின்ற நாம் யார்க்குமே வரிதருதல் கூடாது. பள்ளம் கண்ட இடத்தில் வெள்ளம் பாய்வதுபோல

என் அளவு இடங் கண்டாலும் வெள்ளையர் உள்ளே மண்டிக் கொள்ளைகொண்டு நிற்பராதலால் அவரை இங்கே குடிகொள்ள விடலாகாது; அடியோடுஅகற்றவேண்டும்'' என்று தம் உள்ளம் கொண்ட நிலையைப் பிள்ளை உரைத்தார். அவர் சொன்னவை யாவும் மன்னன் கேட்டு மதியுடன் ஓர்ந்து அயலே நோக்கினர். அதன் பின்பு சின்னபொம்மையா என்பவர் நேரே எழுந்தார்.

## சின்னபொம்மையா சொன்னது.

அரசின் சிறிய தந்தையும், நல்ல அறிவாளியுமாகிய சின்னபொம்மையா எழுந்து மன்னனைநோக்கி இன்னுரை யாடினர். ''அரசே! இடம் காலம் வலி முதலியவற்றை நலமுற ஆராய்ந்து நாம் வினை செயல் வேண்டும். காலத்தின் கோலம் கணித்தற்கரியது; அது, ஆலத்தைஅமிர்தம் ஆக்கும்; அமிர்தத்தை ஆலமென மாற்றும். இன்ன காலத்தில், இன்ன இடத்தில், இன்னருக்கு இன்னது நடக்கும் என முன்னறிந்து முடிவுறச் சொல்லுதல் யார்க்கும் அரிது. நேர்ந்தபொழுதுதான் யாவும் ஓர்ந்து கொளலாகும். காலவேற்றுமையால் எல்லாப் பொருள் களும் கலங்கி வேறுகும். மெலியவர் வலியராய், வலியவர் மெலியராய்ச், சிறியவர் பெரியராய், வறியவர் திருவராய், திருவினர் எளியராய்த் திரிந்து வருதலை உலகில் அறிந்து வருகின்றோம். வெளிநாட்டிலிருந்து வந்தவர்என்று எளிமையாக நினைந்து வெள்ளைக்காரரை நாம் எள்ளலாகாது. அவர் அரும் பெரு முயற்சியால் பெரும்பொருள் ஈட்டி அரசுரிமையடைந்து அதிலிருந்து வரும்படி பெருக்கவிரும்பி வரிகளை வகுத்து உரிமை நிலைகள் ஓங்க ஆங்காங்குத் திறம்பட அமர்ந்து உரம்பெற முயன்று உறுதி செய்து வருகின்றார். அம்முறையில் நம்மிடமும் வந்துள்ளார்; வரினும் நமது இடத்தின் இயல்பையும் பழமை யையும் இனிதாக எடுத்துக்காட்டின் அவர் அறிந்து அமர்ந்து முன்போல் நாம் இருந்துவரும்படி நம்பால் அன்போடு இணங்கி நிற்பர். அங்ஙனமின்றிப் பதிபெயர்ந்து அயலிருந்து வந்தவர்

புதியர் என்று எளிதாக நினைந்து இகல்மீக்கொண்டு எதிர்த்து நின்றால் அவர் பகை மீக்கொள்வர். அதனால் படுதுயராகும். நடுவு நிலைமையாய் நாடி ஆராய்ந்து நயத்தகு முறையில் அவ் அதிபதிகளோடு இதுபொழுது நாம் நடந்து கொள்வதே நலமாம்; யாண்டும் முரண்கொள்ளலாகாது'' என உரங்கொண்டு உணரும்படி உரிமையோடு உரைத்தார். மனநலமும் மதிநலமும் உடைய அவர் இனமாக இனிது மொழிந்தது தெளிவமைந்து ஒளி புரிந்து நின்றது. அதன்பின் தானைத் தலைவன் எழுந்தான்.

ரணசிங்கன் மொழிந்தது.

"அரசே! என் உள்ளம் அறிந்ததை நான் இங்கு உரைக்கின்றேன். வெள்ளையர் வரவால் நம் அரசில் எள்ளல் வர நேர்ந்தது. வாணிகம் செய்து வருபொருள் பெருக்கி, மதி மயங்கி நின்ற மகமதியரிடம் அவனியைக் கவர்ந்து ஆணைசெய்ய வந்தார். உப்பும் மிளகும் விற்று நின்றவர் உலகாள வந்தமையால் தலைமையான இவ் அரசின் நிலைமை தெரியாமல் கப்பம் என்று மெல்ல அப்ப நேர்ந்தனர். சுத்த வீரனுக்கே உலகம் உரியது என்னும் உண்மை ஒழிந்து போயது. ஒரு முறையும் இல்லை. தோன்றின பேரெல்லாம் துரைகள் ஆயினர். திறை திறை என்று பறையறைகின்றனர். நம் வழியில் இல்லாத வரி எனும் இழிவை ஒழிவு செய்யவேண்டும். ஊறுபடபோதே துடைத்து ஒழியாவிடின் பின்பு இடையூறுகள் மீறியேறி என்றும் வெந்துயர் விளைக்கும். இன்று ஒரு வரி என இசையின் நாளை ஒரு வரி, நாளை நின்று ஒருவரி, அதன்பின் ஒரு வரி அயலே ஒரு வரி என மயலே மிகுந்து பொருள் வரவில் ஆசை நீள வளர்ந்து ஆளடிமை யாக்கி மாளும் வகை செய்வர். நாம் வளர்த்து நம் கொல்லையில் நட்டுள்ள மாமரத்திலும் பங்கு என வந்து பாமரப் பறியாகப் பறித்து அவர் காமுறும் வரி காணும் தரத்ததோ? இனி நாம் சும்மா இருத்தலாகாது; இவ்விடத்தின் அருந் திறலையும் பெருந்தகவையும் அறவே மறந்தார்; முன்னம் இருந்த மன்னவர் போல் நம்மிடம் அவர் உரிமைகொண்டிருப்பின்

நாம் உறவுகொண்டாடலாம்; இன்றேல் நம் உயர்திறல் காட்டி உறுதியை நாட்டவேண்டும்; எங்கும் பொறுதி கூடாது" என இங்ஙனம் அச் சிங்கன் நன்கு மொழிந்தான். அவன் பேசி முடிந்தபின் அருகே யிருந்த துரைச்சிங்கம் எழுந்தான்.

**துரைச்சிங்கம் உரைத்தது.**

இவன் சிறந்த மதிமான். பலகலைப் பயிற்சியும் உலகிய லறிவும் ஒருங்கே அமைந்தவன். தலைவனை நோக்கி நலமுற நவின்றான். அருந்திறல் அண்ணலே! முன்னுற மொழிந்த மூவருள்ளும் இடை மொழிந்த ஏந்தல் மொழியையே என் உளம் ஏந்தியுள்ளது. எளியர், வலியர், அயலினர், உறவினர் என எவரையும் வரம்பற்றி ஓரம்பேச லாகாது. அந்நிய நாட்டினின்று இங்குப் பிழைக்க வந்தவர் தழைத்து நின்று தரணியாள வந்தாரே என்று முரணுடன் அவரை முகந்தெரி யாமல் இகழ்ந்து பேசுதல் முறைமை அன்று. எவரிடமும் உள்ளுறு தகுதியை ஊன்றி யறிந்து நல்லதாயின் உவகை கொள்ள வேண்டும். வெள்ளைக்காரர் மிகவும் நல்லவர். உழைப் பில் வல்லவர். காலம் கருதிக் கருமமே கண்ணாய் உறுதியுடன் நின்று ஊக்கி முயலும் ஒண்மையாளர். புதிது புதிதான அதிசயப் பொருள்களை மதிவலியுடன் ஆராய்ந்து நாளும் நாளும் உழைத்து விளைத்து நீளவும் தழைத்து வருகின்றார். ஒருங்கு நெருங்கிய அவரது உழைப்பின் வரவு உலக மக்க ளுக்குப் பெருங்கிளர்ச்சியை வளர்த்து வருகின்றது. பொறி நுகர்ச்சிகளுக்கு உரிய அரிய பெரிய இனிய பொருள்களைச் செய்வதில் தம் அறிவைப் பயன்படுத்தி அற்புதங்கள் பல ஆற்றி வருதலால் விற்பனர்களாய் அவர் விளங்கி நிற்கின்றார். ஆன்ம நிலையில் அயலகன்று இருப்பினும், உலக நிலையில் அவர் மிக வுயர்ந்துள்ளனர். அயர்ச்சி யில்லாத முயற்சியால் அவர் உயர்ச்சி யுற்றனர். அரும்பாடு பட்டுக் கருங்கடல் கடந்து, இந்நாட்டை யடைந்து, ஒருங்குகூடி ஊக்கி முயன்றார்; பெரும் பொருள் திரண்டது. மரம் செடி கொடிகள் போல் நின்ற இடத்திலேயே நின்று, ஒன்றும் செய்யாமல் முன்னோர் படைத்து வைத்ததை அழித்துக் கிடைத்ததை யுண்டு, மடத்தை

மீக்கொண்டு, பழுதே பொழுது போக்கும் இழுதை நீரர் இங்கு இழிந்து நின்றார்; அல்லும் பகலும் அயராது முயன்ற அவர் உயர்ந்து வந்தார். பொருள் வரின் எல்லாம் வரும் ஆதலால் இத்தேச ஆட்சியும் அவர் வசம் சேரவந்தது. முயன்றவர் உயர்ந்தார்; அயர்ந்தவர் இழிந்தார்; என்னும் முதுமொழிப்படி அவர் முதன்மை எய்தி நின்று நில வுரிமையும் அடைந்தார். அடையவே மேலும் தம் இனத்தார் இங்கு வரும்படிக்கான வரும்படியை வளர்த்துப் பெரும்பொருள் திரட்ட விழைந்து குடிக ளிடமும் குறுநில மன்னர்க ளிடமும் வரிகளை விதித்தார். அந்த முறையில் இந்த இடத்தையும் அடைந்தார். முந்தை நாள் முதல் நமக் கிருந்துவரும் சொந்த முதன்மையைப் புதியராய் வந்த அவர் அறியார் ஆதலால் திறை என நெருங்கி மிறை செய நேர்ந்தார். உரிய உண்மையை யுணர்த்தி வரியை நீக்கச் செய்து அவரோடு நட்பாய் உடன்பட்டு வாழ்தலே இப்பொழுது நமக்கு உறுதியான கடமையாகும். மாறுபாடு கொண்டு மண்டி நின்றால் அதனால் ஊறுபாடுகள் விளையும்; இகலை எதிர் வளர்க்காமல் அயல் ஒதுக்கி ஒழுகலே எவ்வழியும் நலமாம்.

* "இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம்; அதனை
மிகலூக்கின் ஊக்குமாம கேடு. (குறள்)

என்பது பொய்யாமொழி. சமுகம் சுமுகமாக இகல் ஒழிந்து, நகல் புரிந்து, புதியராய் அடைந்த அவருடன் பழமை பாராட்டி அன்புரையாடி அகந்திருத்தி அமைதியுற வேண்டும்; அதுவே இதுபொழுது நாம் செய்யத்தக்கது என இதமாய் நின்று அம்மதிமான் பதமாக உரையாடினான். இவ்வாறு அவ் அவையி லிருந்த அறிஞர் பலரும் தத்தம் எண்ணங்களை மன்னனிடம் சுவையுறச் சொல்லி முடித்தார்; முடிக்கவே முடிவில் இவர் முடிவுரை கூறினார். அவ்வுரைகள் அரசு நிலையை விளக்கின.

* குறள் 858. இகல்—மாறுபாடு. அஃதாவது ஒருவர் மேல் சினம்மீறி மனமாறி நிற்றல். இப்பகை நிலையை உள்ளுறக் கொள்ளா மல் பராமுகமாய்த் தள்ளிவிடின் அல்லல் யாதுமின்றி எல்லா நலங் களும் இனிதமைந் திருக்கும் ஆதலால் "இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம்" என்றார். எதிர்சாய்தல்—நேரே மாறு ஏற்காமல் வேறொரு வழியில் விலகி நிற்றல். "சாயின் ஆக்கம், ஊக்கின் கேடு" என்றது அதன் சாதக பாதகங்களை ஆதரவோடு நோக்கி அமைதிகொள்ள என்க.

## முடிவுரை.

நீவிர் இதுவரை உரைத்துவந்தன யாவும் ஒவ்வொரு வகையில் உண்மை யுடையனவே. வெள்ளையர் மேல் நாம் எள்ளளவும் இகல்கொள்ள வில்லை. அவரே முந்துற எம்மை இகழ்ந்து நிற்கின்ருர். பாளையகாரர் அனைவரும் பணிந்து திறை தந்தார்; நான் மாத்திரம் வந்து பார்க்கவில்லை என்று சிந்தை திரிந்து செற்றம் கொண்டு அற்றங்கண்டு குற்றங் கொழித்துக் குறைகள் பல பேசுகின்ருர். துடுக்கன், மிடுக்கன், கலகக் காரன் என இன்னவாறு இழுப்பம் ஏற என்னை இகழ்ந்து வருகின்ருர். புதியராய் இங்கு அடைந்தவர் நம்மை நேரே வந்து பார்த்திருக்கலாம்; அன்றெனின் அவரை வந்து பார்க்கும்படி அன்பாக ஒரு முடங்கல் அனுப்பியிருப்பினும் யான் போய்ப் பார்த்திருப்பேன்; யாதும் செய்யவில்லை. அழையாதவரிடம் வலியப்போய் யான் நுழைவது ஏன்? இதுவரை எவரையும் போய்ப் பார்த்த வழக்கமு மில்லையே. கி. பி. 1639ம் ஆண்டில் எம்போன்ற மன்னவனை சென்னவ நாயக்கரிடம் சிறிது நிலம் யாசகம் வாங்கிக் குடியிருந்து வந்தவர் நாளடைவில் வளர்ந்து சின்னளின் முன் இந்நாட்டுரிமையை யடைந்தார். நான் பரம்பரையான மன்னர் மரபில் வந்துள்ளேன். என்னை அவமதித்தால் இது என்ன மதி? நேற்று வரையும் உப்பும் மிளகும் விற்று வந்தவர் இன்று இப் படி அடைந்து இப்படி நிமிர்ந்தால் எப்பொழுதும் அரசுரிமையை யுடைய யான் எப்படி நிமிரேன். இதனை எண்ணி நோக்காமல் மனம்போனபடி புரிந்து வம்புகள் பேசி வருகின்ருர். குடல் வளர்த்த பசிக்கஞ்சி இங்கு உடல் வளர்க்க வந்தவர் தம் பழைய நிலைமையை மறந்து எம்மைப் பிழைகள் மிகப் பேசுகின்ருர்; இனி யான் யாதும் பொறுத்திரேன். எவ்வகையிலும் அவரை எதிர்த்தே தீர்ப்பேன் என்று அறுதியிட்டு மன்னன் உறுதிபெற வுரைத்தான். அங்கிருந்தவர் எவரும் எதிர் ஒன்றும் பேசாமல் சரி யென்று இசைந்தார். அவ்வளவில் ஆலோசனை முடிந்தது. அரசன்எழுந்த வுடன் அனைவரும் எழுந்து தத்தம் இடங்களை அடைந்தார்.

---

## ஏழாவது அதிகாரம்.

## கும்பினித் தலைவர் கூடி ஆய்ந்தது.

---

இங்கு இவர் இவ்வாறிருக்க அங்குச் சங்கத் தலைவர்கள் சூழ்ந்து ஆய்ந்தபடியை இனிச் சார்ந்து காண்பாம். முன்பு வந்த ஆலன் அலமந்து போனபின் நெல்லை அதிகாரி இவர் திறைதர மறுத்த நிலைமையைக் குறித்து மேலுள்ளவர்களுக்கு விவரமாக எழுதிவிடுத்தான். அந்த எழுத்து வரவும் அதனை அவர் மிகவும் அழுத்தமாகப் பார்த்தார். அறிந்து உளைந்தார். ஆலோசனைகள் செய்தார். உடனே அங்கிருந்தவ ரனைவரும் ஒருங்குகூடி உசாவி ஆராய்ந்தார். அப்பொழுது சங்க ஆட்சிக்குத் தலைவராய் (Governer in Council) அங்கு இருந்தவர் பெயர் எட்வர்டு (Edward Saunders). வில்லியம் பீட்டர் (William Petrie), இர்வின் (Irwin), ஜோசவ் வெபு (Joseph Webb) முதலிய துரைகள் பலர் காரிய நிர்வாகிகளாய் வீரிய மோடு அவண் விளங்கி யிருந்தனர். அவ் எல்லாரும் ஒல்லையில் சேர்ந்து இவ் வல்லவன் புரிந்த வரி மறுப்பைப் பற்றி உறுதி யுரையாடி ஒருமுகமா யோசித்தார். அங்ஙனம் யோசிக்குங்கால் அனிமிசன் (Anemison) என்பவன் முதலில் எழுந்து இதமொடு பேசினான். அவனுடைய வார்த்தைகள் வரன்முறையாய்வந்தன.

### அனிமிசன் உரை.

நாம் அரிய பெரிய முயற்சியால் இத் தேச வுரிமையை அடைந்திருக்கின்றோம். குடிகளும் ஜமீன்தார்களும் வரிகளைச் செலுத்திப் படிகடவாமல் பணிந்து வருகின்றார். நாட்டிலுள்ளவ ரெவரும் நாம் இட்ட கட்டளைகளை மீறாமல் நம் ஆணைக்குக் கட்டுப்பட்டு இருக்கின்றார். இக் கட்டபொம்மு மட்டும் விதித்த திறையைச் செலுத்தாமலும், மேலும் நம்மை அவமதித்துக் கதித்து நிற்கின்றான். வெள்ளையர்கள் என்றால் மிகவும் எள்ளல் செய்கின்றான். நமக்கு உரிமையான கிராமங்களில் வலிந்து

புகுந்து தனக்கே வரி செலுத்தி வரும்படியும், திசையின் காவலுக்குப் பணம் தரும்படியும் தன் படைகளை ஏவிக் குடிகளைப் படாதபாடுகள் படுத்துகின்றான். தன் நாட்டின் அருகேயுள்ள எட்டப்பன் என்னும் பாளையகாரனுக்கு இடையூறுகள் பல செய்கின்றான் என இவனைக் குறித்து நாளும் அவன் வருந்தி எழுதி நமக்கு அனுப்பி வருகின்ற விண்ணப்பக் கட்டுகள் எண்ண முடியாதபடி இங்கு நண்ணியுள்ளன. அவன் நம்மையே நம்பி நிற்கின்றான். அவனது பாளையமாகிய எட்டையாபுரத்தை இக் கட்டபொம்மு எப்பொழுது வந்து பறித்துக் கொள்வானோ என்று நெடுந்திகில் கொண்டிருந்தவன் நமது ஆணைக்குள் ஒதுங்கி அடைக்கலம் புகுந்தபின் சிறிது ஆறுதலுற்றிருப்பதாகவும், இவனை உடனே அடக்கி ஒடுக்காவிடின் தென்னாட்டிலும் மற்று எந்நாட்டிலும் நம் ஆட்சி செல்லாதெனவும், நம்மை மிகவும் எள்ளி நின்று இவன் இயற்றிவரும் அல்லல்கள் சொல்லி முடியா எனவும் அடிக்கடி அவன் சொல்லி வருகின்றான். இன்று இவனை எளிதாக விட்டுவிடின் நாளை எவரும் நமக்கு வரி தர மறுத்து விடுவர். அத்துடன் வலியிலர்என நம்மை மெலிதாகவும் எண்ணி இகழ்வர்; அதனால் இழிவு மீக்கூர்ந்து நாம் ஒழிவுற நேரும். ஆதிமுதல் யாருக்கும் இவன் வரி செலுத்தி வரவில்லையாயினும் அதனை நம்மிடம் நேரில் வந்து நயந்து சொல்லி நட்புடன் அமைந்தால் தென்னாட்டில் திறை வசூலித்து அனுப்பும் பொறுப்பை இவனிடம் நாட்டிப் பழமை போல் தன்னாட்டில் தலைமையோடு இவனை இருந்து வரச் செய்யலாம். இவன் அதுவும் செய்திலன்; யாரையும் மதியாமல் ஆண்மை மீறி வீரமே கருதி வீறுகொண்டு நிற்கின்றான். இவனை விரைந்து அடக்கினால் அன்றி நம் ஆட்சி சிறந்து நில்லாது. அதற்கு ஆவனவற்றை இன்றே நாம் ஆற்ற வேண்டும்; இனித் தாமதித்திருப்பது நன்றாகாது எனத் தன்னுள் ஒன்றியிருந்த கருத்தை உறுதி பெற அவன் உரைத்து நின்றான். நிற்கவே இர்வின் எழுந்தான்.

## இர்வின் இசைத்தது.

இவன் நல்ல அறிவுடையவன். எதையும் ஆழ்ந்து சிந்திக்கும் அமைதியாளன். அனிமிசன் உரைத்தவற்றைக் கூர்ந்து கவனித்துத் தன் கருத்தைச் சுருக்கியுரைத்தான். நமக்குத் திறை செலுத்த மறுத்து நிற்கும் கட்டபொம்மைக் குறித்து நண்பர் உரைத்தவை யாவும் நன்கு கவனிக்கத் தக்கன. உள் நாட்டிலிருந்து அவன்மேல் வரும் புகார்களை ஒரு பொருளாக நாம் நம்பலாகாது. பொறாமையினால் அவை வரவும் கூடும். வலியரை மெலியரும், செல்வரை வறியரும், அறிஞரை அறிவிலிகளும், சாதுக்களைத் துட்டர்களும் தம்முள் எள்ளி யிகழ்தல் இயல்பு. ஒத்த தன்மையின்மையால் சித்தம் திரிந்து இங்ஙனம் சிறுமை பல பேசுவர். வீரர்கள் யாண்டும் புறங்கூறார். வஞ்சகம் தெரியார். கோழைகளே கோளும் குண்டணியும் நாளும் செய்து நயந்து திரிவார். நான் இதுவரை தீரவிசாரித்ததில் கட்டபொம்மு நல்ல வீரன் என்றே தெரிகிறது. வீரர்கள் விரைந்து வந்து எவரையும் வியந்து நயவார். செல்வம் கல்வி முதலியவற்றால் உண்டாகும் செருக்கினும் வீரச்செருக்கு மிகவும் வீறுடையது. புதியராய் வந்துள்ள நம்மை அவன் மதியாதிருப்பதும் ஓர் புதுமையன்று; மனித இயல்பே. நமது உரிமையையும் ஆற்றலையும் அறியும்படி இனிய முறையில் உணர்த்தி அவனை உரியவனாக அணைத்துக் கொள்ளுதலே நமக்கு நல்ல உறுதியாம். வீரனுடைய துணை எக்காலத்திலும் பேருதவியாகும். நாம் உரிமையாக இப்பொழுது ஆதரித்து நின்றால் நாளடைவில் வரியையும் செலுத்தி என்றும் நம்பால் பிரியமுள்ளவனாக அவன் பேணி வருவான். இகலை வளர்க்காமல் தகவுடையாரை அனுப்பி அவனை வகையுற வணக்கி வசஞ்செய்து கொள்ளலே இனிய முறை. துனிமிகச் செய்யின் தொல்லைகள் வளரும்; அல்லல்களை யாண்டும் வளர்க்கலாகாது. நல்லதை நாடிச் செய்ய வேண்டும் என்று அவன் நலமுற உரைத்தான். அவனுடைய சொற்களில் நற் கருத்துகள் பல பதிந்து விற்பனமா யிருந்தமையால் எல்லாரும் வியந்து

கேட்டு நயந்து நின்றார். இன்னவகையே அங்கு மன்னியிருந்தவ ரனைவரும் இம் மன்னவன் மறுத்துள்ளதைக் குறித்துத் தத்தம் கருத்துக்களைத் திருத்தமுடன் விரித்துத் திறம் பெற வுரைத்தார். முடிவில் வெபு [Joseph Webb] எழுந்து விநயமாய் மொழிந்தான்.

### வெபு விளம்பியது.

இவன் சிறந்த மதியூகி. பெரிய ராஜதந்திரி. சங்கத்தின் காரியங்களை யெல்லாம் நன்கு கவனித்து நலம்பல புரிந்தவன். ஆட்சியின் அதிகார முறையில் அவ் அமையம் அங்கு இவன் காரியதரிசியாய் (Secretary) அமர்ந்திருந்தான். சொல்லாடலில் மிகவும் வல்லவன்; நல்ல நோக்கமுள்ளவன். இவன் எழுந்த வுடனே எல்லாரும் எதிர்நோக்கி ஒருமுகமாய்க் கவனித்திருந் தார். இவன் உரையாடலானான்: “பெருந்தகையீர்! குறித்த கருமத்தைப் பற்றித் தங்கள் கருத்துக்களைப் பெரியோர்கள் இதுவரையும் திருத்தமுற விளக்கினார்கள். அவை யாவும் கலை அறிவும் உலகியலுணர்வும் அனுபவ நிலையும் அமைந்து ஒவ் வொரு வகையில் உறுதியுடையனவா யுள்ளன; ஆயினும் அபிப்பிராய பேதங்கள் தம்முள் அமைந்து நிற்கின்றன. உருவங் களில் வேற்றுமையிருத்தல் போல் உள்ளூறும் எண்ணங்களிலும் வேறுபாடுகள் பெரிதும் உள்ளன. எல்லாவற்றையும் ஒருமுகப் படுத்தித் துருவி நோக்கி உண்மை தெளிந்து உறுதியை மேற் கொள்ள வேண்டும். அரசாளுதல் அரிய பெரிய ஆண்டகைச் செயல். அது தெய்வீகமானது. உலகத்தை நிலை குலையாமல் காத்துப் பலவகையிலும் நலமுற நாடி உயிர்களை நெறிமுறை ஒழுக்கித் தலைமையோடு நிலவி நிற்றலால் அரசன் கண் கண்ட தெய்வம் என்று எண்ணப் படுகிறான். அத்தகைய சிறந்த அரச பதவியைத் தெய்வாதீனமாக நாம் அடைந்திருக்கிறோம். வியாபாரிகளாகிய நமக்கு இந்த அரிய பெரிய தேசவுரிமை வலியக் கிடைத்தது. ஆயினும் இப் புதிய பாக்கியத்தை நாம் எளிதில் அடைந்து விடவில்லை. அளவிடலரிய அல்லல்கள் பல அடைந்து அவற்றையெல்லாம் கடந்து இது பொழுதுதான்

மெல்லத் தலைநீட்டி யிருக்கின்றோம். முதலில் போர்த்துக் கேசிய ரும், பின்பு டச்சுக்காரரும், அதன்பின் பிரெஞ்சுக்காரரும், இறுதியில் ஆங்கிலேயராகிய நாமும் முறையே வணிகமுறையை நாடிப் பிழைக்கும் பொருட்டு இங்கு வந்து சேர்ந்தோம். உழைத்தோம். முன்குறித்த மூன்று வகுப்பினரும் வர்த்தகப் பொருமையால் நமக்கு இழைத்து வந்த இடையூறுகள் அளவிடலரியன. அவற்றை எண்ணி நோக்கின் எண்ணில் அடங்குமா? அவருள் பிரஞ்சினர் வெகுண்டெழுந்து வெம்போர் தொடங்கி நம்மை அடியோடு இங்கிருந்து குடியெழுப்பிவிடக் கொதித்துச் செய்த கொடுமைகள் இன்று நினைப்பினும் வயிற்றைப் பற்றி எரியுமே. இற்றைக்கு 35 ஆண்டுகளுக்கு முன்னர் நேர்ந்த பாரிசின் (Paris) உடன்படிக்கையால் அவர் ஆற்றிவந்த அல்லல்கள் ஒருவாறு அடங்கி நின்றன. அவ் இடறுகளையெல்லாம் தடையற நீக்கி நாம் இந்த நிலையில் நிற்கும்படி செய்த நம் குல வீரர்களாகிய * 1. கிளைவ் (Clive) 2. வாரன் ஹேஸ்டிங்ஸ் (Warren Hastings) 3. காரன்வாலிஸ் (Lord Cornwallis) முதலிய பெரியோர்களுக்கு நாம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். அருந்திறலோடு நின்று பெரும்பாடு பட்டு நம் முன்னோர் வருந்திப் பெற்ற இத் தேச ஆட்சியைப் பெருந்தகவுடனிருந்து நாம் பேணி வர வேண்டும். தென்னாட்டுரிமை வந்து சில ஆண்டுகள் தாம் ஆகின்றன. முன்னும் பின்னும் அறியாத இடத்தில் வீணே முனைந்து கலகத்தை விளைத்துவிடக் கூடாது. எங்கும் அமைதி

---

* 1. இவர், இந்தியாவை ஆங்கில ஆட்சிக்கு முதலில் உரிமை யாக்கிய அருந்திறலாளர். 1765ல் வங்காளங் கவர்னராகவும், சேனைதி பதியாயுமிருந்து திறமுடன் உழைத்துத் தீரங்கள் செய்தவர்.

2. இவர், 1774 லிருந்து 1785 வரை வங்காளத்தில் கவர்னரா யும், கவர்னர் ஜெனரலாயும் அமர்ந்து வெள்ளையர்களுக்கு வேண்டிய நலங்களை விளைத்து யாண்டும் அருந்திறல் புரிந்து வந்தவர்.

3. இவர், 1786 முதல் 1793 வரை அரசப்பிரதிநிதியாய் நின்று ஆட்சிக்கு இதமா அருந்துணை புரிந்தவர், பெருந்திறலுடையவர்,

யாகவே சயம்பெற்று வந்துள்ளோம்; இங்கு வந்து திகைக்கின்றோம். வங்கர் அடங்கினர்; கங்கர் ஒடுங்கினர்; கொங்கர் மடங்கினர்; சிங்களர் தேய்ந்தனர்; கலிங்கர் ஓய்ந்தனர்; தெலுங்கர் சோர்ந்தனர்; மராடர் மறைந்தனர்; விராடர் குறைந்தனர்; துலுக்கர் தொலைந்தனர்; பாண்டிய நாட்டில் பாஞ்சாலங்குறிச்சியான் மட்டும் பணியாது நம்மை எதிர்த்து நிற்கின்றான். அந்நிலைக்குக் காரணம் அவன் முன்னோர் முதல் யாருக்கும் திறை செலுத்தாமல் நிமிர்ந்து வந்துள்ளமையே யாம். என்றும் தலைமையான நிலைமையில் நின்று வந்துள்ளவனை இன்று புதிதாய்ப் போந்து குனிந்து வரி செலுத்துக என்று நாம் கூறினவுடன் அவன் சினந்து பார்க்கின்றான். நாமும் இனந்தெரியாமல் மனந்திரிந்து முனைந்து ஊக்கலாகாது. தன் கன்றுக்கன்றிவேறுஒன்றுக்கும் கொடாத கடும்பசுவைத் திடுமெனப் போய்க் கறந்துகொள்வது மிகவும் சிரமமேயாம்; அல்லல் செய்யாமல் மெல்ல நெருங்கி மெய்யைத் தடவின் நாளடைவில் நல்லதாய் நின்று நயந்து சுரந்து வரும். அங்ஙனமின்றி வலிந்து புகுந்து விரைந்து இழுத்தால் வெருண்டு உதையும். அதனால் இருதிறத்தும் பெருந்துயரமாம். இக் காரியத்தில் நாம் இதமாகவே நடந்துகொள்ள வேண்டும். அஞ்சா நெஞ்சமும், வஞ்சம் இலாமையும், அருந்திறலும், பெரும் போர்வீரமும் ஒருங்குடையவன் எனப் பல வகையிலும் அவனை நிலையாக அறிந்திருக்கின்றோம். கருமம் சிதையாமல் உரிமை கொண்டாடி உண்மையை யுணர்த்தின் உடனே வரியைச் செலுத்தி அன்புடன் மருவி நிற்பன். நமக்கும் பெருமையாம்; ஆதலால் நம்மில் தகுதியான ஒருவரை நெல்லைக்கு அதிபதியாக அனுப்பி அவனை ஒல்லையில் நேர்ந்து உறவாய் வணக்கி இதமாக்கிக்கொள்ளலே எவ்வகையிலும் தேர்ந்த முடிவென ஓர்ந்துரைத்து உறுதிபெற முடித்தான். அவனது உரைகளைக் கேட்டு அனைவரும் உவந்து இசைந்தார். தலைவரும் நலமெனச் சார்ந்து மொழிந்தார். இங்ஙனம் எல்லாரும் ஒருமுகமாய் முடிவு செய்த பின்பு தெற்கே யாரை அனுப்

பலாம்? என ஆராய்ந்தார். அறிவுமட்டும் போதாது; அஞ்சாமையும் ஆள்வினையும் ஆற்றலும் உடையவனே ஏற்றவன் என்று எண்ணிப்பார்த்து இறுதியில் ஜாக்சன் (W. C. Jackson) ஒருவனே தகுதியானவன் என்று தீர்மானித்தார். அவன் கல்வியறிவில் அவ்வளவு சிறந்தவன் இல்லை; ஆயினும் போரில் நல்ல பழக்கமுள்ளவன். படைகளில் நெடுநாளாகத் தளகர்த்தனாயிருந்தவன்; எதையும் அஞ்சாமல் துணிந்து செய்யும் இயல்பினன்; மூரனை இவரிடம் வந்து காரியத்தை முடித்தற்கு அவனே பொருத்தம் என ஆராய்ந்து தேர்ந்து அனுப்பி வைத்தார். அனுப்புங்கால் இவரது திறலையும் நிலையையும் தெளிவுற வுணர்த்தி இதமுடன் நெருங்கி வரி வரைந்து முறை புரியும்படி இனிது மொழிந்து விடுத்தார். விடவே, பட்டாளம் ஒன்று பாதுகாவலுக்காக உடன் தொடர்ந்து எழுந்தது. அவன் கலெக்டர் என்னும் பதவியைப் பெற்று வேண்டிய வசதிகளோடு இப்பாண்டிமண்டலத்தை யடைந்தான். உரிய சேனைகள் புடைசூழ மேலான வலிமைகளுடன் ஈண்டு மூண்டு வந்து சேர்ந்தாலும் அவனுடைய நெஞ்சில் கடுங்கவலையும் நெடுந்திகிலும் கலந்து நின்றன.

## சிந்தனை புரிந்தது.

கும்பினி ஆட்சி இந்நாட்டில் குலையாமல் நிலை நிற்க வேண்டுமே என்னும் கவலை நெடிது நீண்டு நின்றமையால் உள் நாட்டு வகைகளையும் வெளிநாட்டு நிலைகளையும் கூர்ந்து ஓர்ந்து ஆர்ந்த துணைகளை அவன் தேர்ந்து வந்தான். தென்னாட்டுச் சிங்கம் என எந் நாட்டவரும் புகழ்ந்து போற்ற இசைமிகப் பெற்றுப் பாஞ்சை அதிபதி அருந்திறலாளனாய் அமர்ந்திருப்பதை நினைந்த போதெல்லாம் மனம் மிக மறுகினான். சினமும் பொருமையும் தினமும் அவனிடம் இனமாய் வளர்ந்து கனமுடன் விரிந்தன. காலமும் கருமமும் கருதி வருமம் மீதூர்ந்து மருமங்களோடு மருவி அரிய சூழ்ச்சிகளை ஆராய்ந்து இருந்தான்.

---

## எட்டாவது அதிகாரம்.

### ஜாக்சன் சந்திப்பு.

சிறந்த சேனைப் பாதுகாப்போடு தென்னாட்டின் அதிபதியாய் வந்த ஜாக்சன் இந்நாட்டின் இயல்புகளையும், நிலைகளையும் இடங்கள் தோறும் அமர்ந்து நின்று திடம்பெற ஆராய்ந்தான்.

### பாண்டி நாட்டின் பழைய நிலை.

இப்பொழுது உள்ளது போலத் திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரங்களைத் தனித்தனி ஜில்லாக்களாக அப்பொழுது வகுத்து வைக்கவில்லை. பாண்டிய மண்டலத்தைப் பல பிரிவுகளாகப் பிரித்துப் பாளையகாரர் பலர் ஆண்டுவந்தார் ஆதலால் வேண்டியவாறு ஒரு முகமா வரம்பு செய்யாதிருந்தது. அந்நிலையில் அவன் திருநெல்வேலியை அடைந்து படைவலியுடன் அரண் செய்துகொண்டு பருவம் நோக்கியிருந்தான். அங்ஙனம் இருக்குங்கால் ஜமீன்தார்களெல்லாரும் அவனை வந்து பார்த்து வணங்கிச் சென்றார். அவருள் எட்டையாபுரம் ஜமீன்தாராகிய எட்டப்பநாயக்கர் அடிக்கடி வந்து ஒட்டி நின்று மிகவும் உரிமையாளராய் உறவுகொண்டாடி உவகை யுரையாடி உறுதி சூழ்ந்து போனார். அங்ஙனம் போங்காலம் இக் கட்டபொம்முமீது அடாப்பழிகள் பல விடாப்பிடியாகப் படைத்துக்கூறினார். "வெள்ளையர்களை மிகவும் எள்ளி இகழ்கின்றான்; குடிகளிடம் கொள்ளை செய்கிறான்; கொடுமையாக எங்களுக்கு என்றும் அல்லல் புரிகின்றான்; உங்களுடைய எல்லையை மீறித் தொல்லைகளை விளைத்து அல்லும் பகலும் அடலே கருதி நிற்கின்றான்; இப் பொல்லாதவனை உடனே அடக்கி ஒழியாவிடின் உங்கள் கும்பினி ஆட்சி இனி இங்குச்செல்லாது; எங்கும் நில்லாது" என இன்னவாறு பல பல பன்னிப் பதம்பெற நின்று இதம் பெறச் சென்றார். அடுத்தடுத்து மொழிந்தமையால் அவனும் மனம் மிக

மாறிச் சினம் மீறி நின்றான். அந்நிலைக்கு ஏற்ப இவரும் அவனை யாதும் மதியாமல் ஆண்மையோடிருந்தார். எல்லாரும் தன்னை வந்து பார்த்தார்; இக் கட்டபொம்மு மட்டும் கட்டாயமாய் வராமலுள்ளான் என அவன் உள்ளங்கறுத்து இவர்மேல் உருத்திருந்தான். இடையிடையே எச்சரிக்கைக்கடிதங்களும் எழுதப்பட்டன; அவற்றிற்கெல்லாம் யாதொரு பதிலும் இல்லை. திங்கள் சில கழிந்த பின் சங்கப்பிரதிநிதியாய்த் தான் வந்திருக்குந் திறனையும், தன்னை வந்து பார்க்கவேண்டிய முறையையும், வராமலிருக்கும் தவறையும் விவரமாக விளக்கி உரிமையாளன் போல் எழுதி வினை வல்லார் இருவரிடம் கொடுத்துப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பினான். அவர் வாங்கிச்சென்றார். துருவசன் மதாரன் என்னும் பெயர்களையுடைய அக் கருநட வீரர் இருவரும் விரைந்து சென்று பாஞ்சையை யடைந்து முறையே புகுந்து அரசைக் கண்டு வணங்கி நின்று தாங்கள் கொண்டு வந்த கடிதத்தைத் தாழ்ந்து கொடுத்தார். மன்னன் நோக்கி இன்னது என்று அறிந்து வந்தவரை உபசரித்து "ஒரு வாரத்துள் நான் வருவேன் என்று அவரிடம் போயுரைமின்" என உரைத்து விடுத்தார். அவர் மீண்டு போய் இப்பாண்டியன் உரைத்ததை அவனிடம் உரைத்தார். வருவதாகச் சொன்னானே என்று சிறிது உவந்தான். ஆயினும் "என் காயிதத்துக்கும் வாயிதாவா? என்ன திமிர்! என்ன அடம்! எவ்வளவு பெருமிதம்!" எனத் தன்னுள் மொழிந்து தருக்கியிருந்தான். மனக்கடுப்பு சினத்துடுக்காயது.

## மன்னன் கருதியது.

அங்ஙனம் அவன் இருக்க இங்கு நிருபம் வந்த நிலைமையைக்குறித்து மந்திரி பிரதானிகளுடன் மன்னன் ஆராய்ந்தான். "உரிமையாளன் போல் நம்மைக் காண விரும்புவதாய்க் கடிதம் எழுதியிருக்கிறான்; அதில் அதிகாரத்தொனி ஒன்றும் காட்டவில்லை ஆதலால் நாம் போய் அவனைக் கண்டுவரலாமே" என்று அவ்வமயம் அங்குக் கூடியிருந்தவரது குறிப்பினையறியுமாறு

தம் கருத்தினை முந்துற இவர் குறித்துரைத்தார். தானுபதியும் பிறரும் மாறு ஒன்றுஞ் சொல்லவில்லை; சரி என்று இசைந்தார்; அருகே இருந்த தம்பி ஊமைத்துரை மட்டும் தடுத்து உரைத்தார்.

ஊமைத்துரை:— (அண்ணனை மரியாதையோடு நோக்கி) சமுகம் இப்பொழுது துணிந்து நிற்பது சரி என்று எனக்குத் தோன்றவில்லை. எதையும் தெளிவாக ஆலோசித்துக் காலம் இடம் முதலியவைகளைக் கருதி நடப்பதே சாலவும் நன்றும்.

அண்ணல்:—தம்பி! என்ன அது? கருதிய கருத்து யாது? எண்ணியிருப்பதை நன்கு விளக்கிச் சொல்ல வேண்டும்.

ஊமைத்துரை:— புதிதாய் இந்நாட்டுக்கு வந்தவன் நேரே நம் நகரில் வந்து பாராமல் நம்மை அவனிடம் வரும்படி எழுதியிருக்கிறான். இந்த இடத்து அதிபதிகள் அடிபெயர்ந்து போய் இதுவரை எவரையும் எதிர் பார்த்ததில்லை. எந்நாளும் இல்லாத வழக்கத்தை இந்நாள் நாம் இடையில் செய்வது எதற்கு? பிரதானிகளுக்கு வழக்கமே பிரதானம். பிரியமிருந்தால் அவன் இங்கே வந்து பார்க்கட்டும்; இல்லையானால் நெல்லையிலேயே இருக்கட்டும்; நாம் அங்கே செல்ல லாகாது. சென்றால் சீரா யிராது.

அண்ணல்:—நீ சொல்லிய யாவும் சரியே. தேச உரிமையை அடைந்துள்ள கும்பினியாரே இங்கு அவனை அனுப்பி யிருப்பதாகத் தெரிகிறது. பழைய நபாவுகளுக்காயின் நமது நிலைமையும், முறைமையும் தெரியும்; அயல் நாட்டினர் ஆதலால் நம் இயல்பினை அறியார்; அறியாதாரிடம் போய் முதலில் நாம் அறிவித்து வந்தால் பின்னர் அறிந்துகொள்வர்; அதனால் நமது அருமை குறைந்துபோகாது. இம்முறை உரிமையாய்ப்போய் வருவோம்.

ஊமைத்துரை:—ஒருமுறை போனால் பின்பு மறுமுறையும் வரும்படி எழுதுவான்; நமக்கும் குறையாய்த் தோன்றாது; முதல்நாள் வழக்கமாய் நின்றது மறுநாள் பழக்கமாய்விடும். மனிதன் பழக்கத்தின் கட்டு. முறை திறம்பாமல் நிற்பதே

இறை திறம்பாமையாம். இந்த இடங்கொண்டுள்ள முறையை இடையே இகந்து நாம் யார்க்கும் இடங்கொடுக்கலாகாது. கலெக்டர் என்றால் வரிகளைத் தொகுப்பவன் என்று பொருள்; அப்பதவியை இன்று ஏற்று வந்துள்ள அவன் என்றுமுள்ள நம் பதவியையும் அறிந்துகொள்ள வேண்டும்; அறியாது அகஞ் செருக்கி நிற்பவனிடம் அணுகா திருப்பதே நலம். அணுகினே அவமதிப்பேயாம். மரியாதை குறைய நாம் மருவ லாகாது.

அண்ணல்:—முன்னர் வந்து முடுக்குற்றுச் சென்ற ஆலன் நம்மைக் குறித்து என்னவெல்லாம் சொல்லியுள்ளானோ? அம் மன்னவர் என்ன நிலையில் இவனை அனுப்பியிருக்கின்றாரோ? பொல்லாதவன், வம்பன் என நம்மை மாறுபட எண்ணி எல் லாரும் மனந்திருகி நிற்கின்றார். இப்பொழுது போகாமல் இருந் துவிடின் மேலே கும்பினியாருக்கு வெப்பமுற எழுதித் தப்பு நிலையை வளர்த்து இவன் தவறு மிகச் செய்வான். கோளரும் இடை புகுந்து கொடுமைகள் விளைப்பர். அப் பழி விளைவுகள் விளையாதபடி இம்முறை நாம் அளி செய்து சென்று நம் வழி முறையைத் தெளிவுறுத்தின் சிந்தை திருந்தி முந்தை நிலையை யுணர்ந்து பண்பமைந்து நின்று பழைமை பாராட்டிக் கிழமை யோடு கெழுமி வளமையாய் வரவும் கூடும்; அதுவுமன்றி அவர் உள்ள நிலையும் உளவும் உணரலாம். எல்லா நிலைகளையும் எதிர் அறிந்துகொள்ள ஏதுவா யிருத்தலால் இச்சமயம் அங்குப் போதலேநல்லது. பொறுமையாய்ப் போவதால்சிறுமைநேராது.

ஊமைத்துரை:—அப்படியாயின் நான் போய் வருகிறேன். எப்படியும் சமுகம் இடம் பெயரலாகாது. நானே சென்று அவனை நேரில் கண்டு நிலைமைகளைத் தெரிந்து வருகின்றேன்.

அண்ணல்:— முன்னரே நான் வருவதாகச் சொல்லிவிட் டேன்; என்னை எதிர்நோக்கி யுள்ளவன் உன்னை நேரேகண்டால் பின்னமாய் நினைந்து பெருஞ்சினமே கொள்வன். ஆதலால் எல்லாருஞ் சேர்ந்து உல்லாசமாய்ப் போய் வருவோம்; நம் முருகேசன் அருளால் எல்லாம் நல்லதாம்; யாவும் இனிதேயாம்.

அதன்பின் ஊமைத்துரை ஒன்றும் சொல்லாமல் நல்லது என்று இருந்தார். கருதிய இடத்திற்குச் சென்றுவர அரசு உறுதி கொண்டு முடிவுசெய்த பின் அனைவரும் ஒருமுகமாய் உவந்து ஊக்கிநின்றார். வெள்ளைத்துரையை நேரில் காண வீரத்துரை மனம் இசைந்துள்ளமை ஊர் எங்கணும் தெரிய நின்றது.

ஜாக்சனைக் கண்டுவர எழுந்தது.

நல்ல நாளில் நெல்லை செல்ல மன்னன் நேர்ந்தபின் பிரயாணத்துக்கு வேண்டிய எல்லா ஆயத்தங்களையும் காரிய நிர்வாகிகள் கருதிச் செய்தனர். பரிவாரங்களுடன் பலவகை உபகரணங்களும் நிலைபெற நேர்ந்தன. ஒரு வெள்ளைத் துரையைக் கண்டு வரும்படி தங்கள் துரை புதுமையாய்ப் புறப்படும் அதிசய நிலையை அறிந்ததும் படைகள் அடைவுடன் திரண்டன. வேலாளர், வாளாளர், வில்லாளர் முதலாக நாலாயிர வீரர்கள் எழுந்தனர். நல்ல நேரம் நாடி அரசு எழுந்து சிறந்த பச்சைப்பல்லக்கில் ஏறவும், தம்பிமார் மைத்துனமார் தானாதிபதி முதலிய உரிமையாளர் யாவரும் உயர்ந்த பரிகளில் ஏறினர். முன்னும் பின்னும் படைகள் தொடர்ந்து அடலுடன் செல்லப், பல்லியம்முழங்கக், காளம் ஊத, வழியிடை நீளக் கண்டவர் எவரும் கைகுவித்து நின்று மண்டலாதிபதியே! என வணங்கி வாழ்த்தத் தண்டிகை நடந்தது. அங்ஙனம் சென்ற காலம், கொல்லம் ஆண்டு கூளசு காலசுத்தி வருடம், ஆவணி மாதம், ஒன்பதாந் தெய்தி வியாழக் கிழமை, தசமி திதி என்க. இது கி. பி. (24-8-1798) ஆகும். இவர் பேட்டிக்கு வெளிவந்ததைக் கண்டு யாவரும் வியந்து கொண்டார். நாட்டுமக்கள் உவந்து நோக்கி உள்ளம் களித்தார்.

பொருபடைகள் புடைசூழ்ந்து வர, அரிய காட்சிகளும் பெரிய மாட்சிகளும் வழியெங்கணும் திகழப் பேராடம்பரங்களோடு எழுந்து இவ்வீர மன்னர் திருநெல்வேலியை அடைந்தார். அங்கு ஜாக்சன் இல்லை. கரவு நிலையில் அவன் அயல் அகன்றான்.

## ஜாக்சன் குற்றாலம் கூடாரம் கொண்டது.

வாரம் ஒன்று ஆகியும் தன்னை நேரே வந்து பாஞ்சை மன்னன் காண வில்லையே என்று கடுத்திருந்த அவன் அடுத்து அகம் திரிந்தான். நிந்தையாகத் தன்னை அவமதித்துள்ளான் என்று சிந்தை கனன்று இவர்மேல் அவன் சீறியிருக்கும் பொழுது கோளர் சிலர் இடையே புகுந்து கோள்களும் மூட்டினர்; "கட்டபொம்மு மிகவும் பொல்லாதவன்; யார்க்கும் அடங்கான்; எவரையும் ஒரு பொருளாக எண்ணான்; உங்கள் கடிதத்தையும் அவமதித்துக் கர்வமுற்றிருக்கிறான். கொடிய திறலுடையனாய்ப் படிமுழுதும் தானே ஆள அடி கோலி நிற்கின்றான்; வெள்ளைக் காரரை மிகவும் எள்ளலாக எண்ணி இகழ்ந்து வருகின்றான். வரி என்பது என்றும் உங்களுக்கு ஒன்றும் தாரான். உடனே அடுபடைகளுடன் வந்து விரைந்து அடக்கினாலன்றி அரசுரிமை யையிழந்து நீங்கள் அகன்று போகவே நேரும்" என இன்ன வாறு பல இன்னலுரைகள் ஏறின. அச்சொற்களைக் கேட்டுப் பற்களைக் கடித்து அவன் பரிந்திருந்தான். பின்னர் இம் மன்னர் நெல்லையை நோக்கி வருவதை அறிந்து முன்னதாக ஒல்லையில் புகுந்து உள்ளுறும் விரகோடு உளந்திரிய மொழிந்தார். "முரண் கொண்டிருந்த அவன் இப்பொழுது திரண்ட படைகளுடன் சேர்ந்து இங்கே காணவருவதாகக் கடுத்துவருகின்றான். கருத்து நிலையாதோ? திருத்தமுறத் தெரிந்து கொள்ளவேண்டும்." என்று அத்துரையின் சிந்தை திரிய விந்தையுற நின்று அவர் முந்துற வுரைத்தார். படை என்று கேட்டவுடனே அவன் கொஞ்சம் குடல் கலங்கினான். இனி இங்கிருந்து பேட்டி செய்யலாகாது; வருகின்றவன் ஊர் அருகேயுள்ளது; கருமம் சரி அன்று என்று கருதி ஆய்ந்து உரிய துணைகளுடன் முதல் நாள் பிற்பகலில் குற்றாலத்துக்கு முகாம்செய்து போயினான். அங்ஙனம் போகும் பொழுது "கட்டபொம்மு வந்தால் குற்றாலத்துக்குத் தனியே வந்து என்னைக்கண்டு போம்படி சொல்லும்" எனக் காரியா லயத்திலுள்ளவர்களிடம் அவன் விரகோடு உரைத்துக் கரவோடு சென்றான், அவனது போக்கு புன்மை நோக்கி நின்றது.

### அரசு திருநெல்வேலி வந்து செய்தி அறிந்தது.

வீரியமாய் வந்த இவர் நெல்லைபுகுந்து ஒல்லை உசாவினர்; அங்கு அவன் இல்லை என்பதும், இருப்பும், பிறவும் அவண் இருந்தவர் சொல்ல உணர்ந்தார். உள்ளத்தில் மாறுக வேறொன்றும் ஊன்றியுணர்ந்திலர். "பெருத்த காரியங்களையுடையவன் குறித்த எல்லைவரையில் எதிர்பார்த்திருந்து, வரவு காணுமையால், நெல்லை நீங்கிக் கருமமே கண்ணுய் மேலே செல்லலாயினன். சொல்லிய படியே குற்ருலம் போய்க் கண்டுவருவோம்" என்று பெருந்தன்மையோடு உறுதி செய்து கொண்டு அன்று இரவு அங்குத் தங்கியிருந்தார். அங்ஙனம் இருந்தவர் சாமி தரிசனைக்கு எழுந்தார். தரும கருத்தா முதலிய கோயிலதிகாரிகள் எதிர்கொண்டழைக்க முதிரன்புடன் புகுந்து அபிடேக ஆராதனைகளை அழகுறச் செய்வித்து * நெல்லையப்பரையும், அம்மையையும் ஆர்வமொடு தொழுது சீர்பல பெற்றுச் சந்நிதிக்கு ரூபாய் 2000 நன்கொடை அளித்துப் பண்புடன் வந்தார். இவரது தகவும் கொடையும் அங்கு மிகவும் புகழ நின்றன. "மனிதனைக் காண வந்தோம்; தெய்வ தரிசனம் கிடைத்தது" என்று மனமகிழ்ந்து கூறி மந்திரி பிரதானிகளுடன் இனிதமர்ந்திருந்தார். மறுநாட் காலையில் எழுந்து நீராடி நியமம்முடித்துச் சேனை தளங்களுடன் சென்று இருநாளில், திருக்குற்ருலத்தைச் சேர்ந்தார். இவரது வரவை யறிந்தவுடன் கரவில் முறுகி மறுகி நின்ற அவன் தன்பால் காரியதரிசியாயுள்ள இராகவையா என்பவரைத் தனியே அழைத்து "இக்கட்டபொம்மு நமக்குத் திறை செலுத்தாமல் கட்டாண்மையோடு கடத்திவருகிறுன்; இங்கே இவனைத் தடை செய்து சிறையில் வைத்தால் உடனே அடங்கிவிடுவான்; பின்பு நம் அடலாண்மையை அறிந்து முறையே திறை செலுத்தி வருவான்; படைகளும் உள்ளன; இடமும் இசைவாக இருக்கிறது; இவ் அடக்குமுறையை இது பொழுது நாம் உபயோகித்துக்

---

* திருநெல்வேலியில் கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர் நெல்லையப்பர். அம்பிகையின் திருநாமம் காந்திமதி.

கொள்வது நல்லதாம்" எனத் தன் உள்ளக் கருத்தை அவன் மெல்லக் குறிப்பித்தான். இதைக் கேட்டவுடனே அந்த ஐயர் கெடுக்கலங்கினர்; மதத்து மேல் வரும் மதயானைமேல் மண்ணுருண்டையை எறிந்து கோபம் மூட்டியது போல் நீர் எண்ணிய இது பெருங்கேட்டிற்கே ஏதுவாகும்; அவரது தன்மையை அறியாமல் இவ்வன்மை செய்ய நினைந்தீர்! அவர் அஞ்சா நெஞ்சினர்; அருந்திறலுடையவர். நாம் இவ் வஞ்சனை செய்யின், அவர் வெஞ்சினம் மிகுந்து எல்லாரையும் வன்கொலை செய்து தம் வளநகரடைவர்; பின்பு பெரும்புலையாய்ப் பிழை மிக நேரும். இக் கரவு நிலையை அறவே ஒழித்து அவரை நேரில் அழைத்து அன்புடனிருத்திச் சங்க ஆட்சியின் உரிமையைத் தகவுடன் உரைத்தால் அவர் உணர்ந்து இசைந்து உதவ நேர்வர். இங்கே நாம் பிணங்கி நிற்பது பெருங்கேடாம்" என அம்மதிமான் இதமுடன் உணர்த்தினன். உணர்த்தவே அவன் ஒன்றும் பேசாமல் உளந்திருகி யிருந்தான். கரவான சூழ்ச்சிகளைக் கருதியிருந்தான்.

## சொக்கம்பட்டி துன்னியது.

மறுநாள் அங்குத் *துபாஷியாயிருந்த விசுவநாதபிள்ளையை அழைத்துத் தாம் வந்திருப்பதைத் துரைக்கு அறிவிக்கும்படி இத்துரைமகனர் உரைத்தார். அவன் சென்றான்; மீண்டுவந்தான்; இவ்வாண்டகையை அணுகினன். "சொக்கம்பட்டிக்கு அவசரமாகப் போகவேண்டியிருப்பதால் அங்கு வந்து பார்த்துக்கொள்ளும்படி துரை சொல்லுகிறார்" என்றான். என்னவே சரி போம் என்று அவனை அனுப்பிவிட்டு தானாபதிப்பிள்ளையை நோக்கி "இவ் வெள்ளையன், நம்மை எள்ளலாக எண்ணி உள்ளந்திருகியுள்ளான்; ஏதோ கள்ளம் செய்யக் கருதி யிருக்கிறான். அந்நிலையினை முழுதும் அறிந்து வருகின்றேன்; பரியிவர்ந்து தனியே நான் இவனைத் தொடர்ந்து செல்கின்றேன்; படைகளையும் தம்பி

* துபாஷி—பாஷையை மொழிபெயர்த்துச் சொல்பவன். துவிபாஷி என்பது துபாஷி என நின்றது. இரண்டு பாஷைகளை அறிந்தவன் என்பது பொருள். துவி—[illegible]

மார் முதலானவர்களையும் அழைத்துக்கொண்டு நீர் பாஞ்சைப் பதிக்குப் போம்'' என்று இவர் வாஞ்சையுடனுரைத்தார். கேட்டபிள்ளை வாட்டமுற்று "அரசே! தனியாகச் செல்வது சரி அன்று; தானையோடு தான் ஏகவேண்டும்; தங்களைத் தனியேவிட்டு நான் என்னமாய் போவேன்?'' என இன்னலோடு உரைத்தார் "சிங்க ஏறு எங்கே போயினும்என்? எந்த மிருகமும் அதனை என்ன செய்யமுடியும்? நாட்டிலிருந்தாலும் காட்டில் நின்றாலும் என்னை யார் வெல்ல வல்லார்? இவன் என்னதான் செய்கிறான் என்பதைத் தன்னந்தனியே போய்த்தான் நான் அறிந்துவர வேண்டும்; நீர் யாதும் வருந்தவேண்டாம்; பரிவாரங்களுடன் நம் திருநகர்க்கே போம்'' என மன்னன் உறுதிபெற வுரைத்தும் பிள்ளை இசையவில்லை. பின்பு குற்றாலத்திலேயே இருதினங்க ளிருந்து அருவி நீராடி இறைவனைத் தொழுது எல்லாரும் சேர்ந்து உல்லாசமாகச் சொக்கம்பட்டிக்கே சென்றார். அது ஒரு ஜமீன்தார் இருக்கும் ஊர். குற்றாலத்திலிருந்து 12 மைல் தூரமுள்ளது. அங்குப் போனவுடன் துபாஷிப்பிள்ளை வந்து, "துரை சிவகிரிக்குப் புறப்பட்டுவிட்டார்; உங்களை அங்கே வரச் சொல்லியிருக்கிறார்'' என்றான். தேச பாஷையை மொழிபெயர்த்துத் துரைக்குச் சொல்லி, துரையின் கருத்தை வந்தவர்க்கு உரைக்கும் செயலினனான அவன் அங்ஙனம் சொல்லி நீங்கிய பின் தானாதிபதிப் பிள்ளைக்குக் கோபம் வந்தது. "இனி இந்த வெள்ளை மனிதன் பின் செல்லலாகாது; நம் ஊருக்கே போக வேண்டும்; பாருக்குள் உயர்ந்திருக்கும் சமுகம் நேருக்கு நேர் வந்தும், யாருக்கு வந்த விருந்தோ என இவன் அவமதித்து நிற்கின்றான். பெருந் தகையே! திரும்புங்கள்'' என்றார். பிள்ளை இங்ஙனம் உள்ளம் வருந்தி உரிமையோடு சொல்லவும் மன்னர் அவரை மறுத்து மொழிந்தார். "இங்கிருந்து திரும்பிப் போனால் பயந்து போய்விட்டான்; தன் சொந்த இடத்திலன்றி அயலிடத்தில் இவனால் யாதும் செய்ய முடியாது; செயலிழந்தவன்'' என மயலுழந்து நம்மை இவன் எளிதாக எண்ணுவன் ஆதலால்

இடையே நாம் வழி மீளலாகாது; பின் தொடர்ந்து சென்று இவன் முடிவினை முடிவாக அறிந்தே மீளவேண்டும்" என்று மிடலுடனுரைத்தார். அதன் பின் அனைவரும் எழுந்து சென்றார். இவர் சிவகிரியை அடையவும், அவன் சேற்றூருக்கு வருக வென்று ஆள் மூலம் சொல்லிவிட்டு அகன்று போனான். இவர் சேற்றூர் புகவும், அவன் ஸ்ரீவில்லிபுத்தூரில் வந்து கண்டுகொள்க என்று மண்டிமுன் போனான். அவன் போக்கை நோக்கி இவர் புன்னகை புரிந்து "என்னதான்செய்வான்பார்ப்போம்!" என்று எக்களிப்போடு தொடர்ந்து போனார். போகப் போக அவன் ஏகலானான். இன்னவாறு முன்னும் பின்னுமாகப் பேறையூர், பாவாலி, பள்ளிமடை, கமுதி முதலிய பல ஊர்களிலும் பார் வைக்குத் தங்கி முடிவில் இராமநாத புரத்தை இருதிறத்தாரும் அடைந்தார். கருதிய கருத்துகள் பொரு திறத்தில் பொங்கின.

## இராமநாதபுரம் பேட்டி.

தான் கருதி யிருந்த இடம் வந்தவுடன் ஜாக்சன் பெரிதும் மகிழ்ந்து தன் படைகளுடன் சேதுபதியின் அரண்மனைக்கு அருகே பெரிய மாளிகையில் பெருமிதத்துடன் இறங்கியிருந் தான். இராமலிங்க விலாசம் என்னும் அரசமாளிகையில் இவ் அரசர் உரிய பரிவாரங்களுடன் அமர்ந்திருந்தார். படைவீரர்கள் அயலே தங்கி யிருந்தனர். அப்பதியின் அதிபதி இருதிறத்தும் பொதுவாயிருந்தார். அன்றிரவு கோபால ஐயர் என்பவர் இரகசி யமாக வந்து அவ்வெள்ளைத் துரையின் உள்ளக் கிடக்கையையும், கள்ளமாகச் சதி சூழ்ந்திருக்கும் நிலையையும் இவ் வள்ளலிடம் உரைத்துச் சென்றார். அக் கலெக்டருடைய கணக்கனான ஒரு வன் மூலம் அக்கள்ளம் தெரிந்து வந்து அவ் ஐயர் உள்ளன் போடு இங்ஙனம் சொல்ல நேர்ந்தார். உரிமை கூர்ந்து உணர்த் திய அவரை உறவு கொண்டாடி விடுத்து அருகே நின்ற தம்பி தானாதிபதிகளுடன் அவனது கரவு நிலையையும் வரவினுள்ளதை யும் வருந்திச்சொல்லி நேர்வதை எதிர்நோக்கி இவ்வீரர் வீறு கொண்டிருந்தார். இரவு கழிந்தது. முடிவு தெரிய விடிவு வந்தது.

### சந்திப்பில் நிகழ்ந்த சமர்.

மறுநாள் விடிந்தது. சூரியன் உதயமாகி எட்டு நாழிகை யளவில் தன் மாளிகைக்கு வரும்படி ஜாக்சனிடமிருந்து இம் மன்னனுக்கு ஆள்மூலம் செய்தி ஒன்று வந்தது. வரவே இவர் ஆயத்தமாய் எழுந்தார். அங்ஙனம் பேட்டிக்கு எழுந்தது கி. பி. 1798 செப்டம்பர் மாதம் 10ங் தெய்தி காலை 10 மணியாம். இந்த மன்னன் எழுந்து செல்லுங்கால் தம்பியும், தானுபதிப் பிள்ளையும், மெய்க்காப்பாளர் கூ பேர்களும் உடன்தொடர்ந்து சென்றார். ஏதேனும் இடையூறு நேருமென்று எதிரறிந் திருந்தமையால் மாளிகையின் அயல் அங்கங்கே படை வீரர் ஆயத்த மாய் அடல் கூர்ந்து நின்றார். இவர் கம்பீரமாய் இராசகோலத் துடன் வருவதை மேன் மாடத்திலிருந்து ஜாக்சன் கண்டான். அச்சமையம் தான் முதன்முதல் இவரை அவன் கண்டது. அக் காட்சியில் இவரது மாட்சியை யுணர்ந்து வியந்தானுயினும் மனங் திருகி யிருந்தமையால் மதிப்பு மீக்கூராமல் மறுகி நின்றான். இவர் மாளிகையின் அருகடைந்தார்; அடையவே இரண்டு படை வீரர் விரைந்து எதிரே வந்து "துரை தங்களை மாத்திரம் தனியே மேல் வீட்டுக்கு வரச்சொல்கிறார்" என்றார். இவர் சரி என்று உள்ளே சென்று படிகளில் ஏறினார். மன்னனைத் தனியேவிட மனமில்லாமையால் பின்வந்தவர் அனைவரும் அடுத்துத் தொடர்ந் தார்; அங்கு நின்ற போர்ச் சேவகர் கடுத்துத் தடுத்தார். தடுக் கவே மற்றவரெல்லாரும் மறுகி நின்றார்; தம்பியும் தானுபதிப் பிள்ளையும் காவலரைக் கனன்று தள்ளிவிட்டு மேலே தொடர்ந்து போயினர். அம்மாடம் பல படிக்கட்டுகளையுடையது; நிலைக்கட் டான காவல் அமைந்தது; கோட்டை மதிலால் சூழப்பெற்றது; விழுமிய நிலையது; அழகிய பெரிய சில அறைகள் அமைந்தது. மேலே இத்துரை மகன் வரவும், அத்துரை வருக என்று வாயால் சொல்லி அருகேயிருந்த ஆதனத்தில் இருக்கப் பணித்தான். எதிரே இவர் அமர்ந்திருந்தார். பின் வந்த இருவரும் அயலே நின்றார். சிறிது பொழுது கழிந்ததும் "பாஞ்சாலங்குறிச்சி

ஜமீன்தார் நீர்தானே?" என்று அவன் நேரே கேட்டான். இவர் ஆம் என்றார். என்னவே இம் மன்னனை நோக்கிப் பலபல அவன் பன்னலானான். அவன் சொன்னவற்றிற்கெல்லாம் நன்னயமாக இவர் நன்கு பதில் சொன்னார். இருவரும் அன்று சொல்லாடிய முறைகள் மல்லாடியபடியாய் மருவி நின்றன. அடியில் பார்க்க.

ஜாக்சன்:— உம்மீது புகார்கள் பல வந்திருக்கின்றன; பிழைகள் மிகப் பெருகி யுள்ளன. நாம் உமக்கு முன்னம் எழுதியுள்ள கடிதங்கள் எல்லாம் கிடைத்தனவா?

மன்னன்:— எல்லாம் கிடைத்தன.

ஜாக்சன்:— அந்த எழுத்துகளுக்கு உடனே நீர் ஏன் சரியாகப் பதில் செய்யவில்லை.

மன்னன்:—சிலவற்றிற்குச் செய்துள்ளேன்; சில செய்ய வேண்டாதன. விலக்கி விட நேர்ந்தன.

ஜாக்சன்:— ஆத்தூர், ஆறுமுகமங்கலம் என்னும் அயன் கிராமங்கள் இரண்டையும் நீர் அடமாகக் கவர்ந்துகொண்டு உமது பாளையத்தில் சேர்த்திருக்கிறீர்! பாசனத்தைத் தடுத்திருக்கிறீர்! அதற்குக் காரணம் என்ன?

மன்னன்:— அவை என் எல்லையில் உள்ளன; நல்ல நெல் விளைவுக்கு உரியன; பழமையாய்ப் பதிந்தன; ஆகலால் உவந்து உரிமையோடு அவற்றைப் பாதுகாத்து வருகின்றேன்.

ஜாக்சன்:— எங்களுக்கு உரிமையான நாடுகளில் புகுந்து குடிகளை வருத்தி வரிகளை வசூலிக்கின்றீர்! கொடுமைகள் செய்கின்றீர்! எங்கும் தன்னரசாக இறுமாந்து நிற்கின்றீர்! கும்பினி ஆட்சியை இகழ்ந்து வம்புகள் பல புரிந்து வசைமொழிகளாடி வருகின்றீர்! இப் படுதொழில்கள் கெடுகுறிகள் அல்லவா?

மன்னன்:— குடிகளுக்கு யாண்டும் நாங்கள் இடறுகள் செய்யோம்; இதங்களே செய்வோம்; எங்கள் திசைகாவலுக்கு உரிமையான தொகைகளையே எங்கும் இசைவாக வசூலித்து வருகின்றோம்; நசையாக எதையும் நயந்து கொள்ளோம்; யாரையும் இகழோம்; எங்களை இகழ்ந்து நிற்பாரை வேரோடு

அகழ்ந்தெடுப்போம்; அல்லாதவரை ஆதரித்து வருவோம்; இல்லாத பழிகளை யெல்லாம் எம்மேல் வீணே சுமத்தி விருதாவாகச் சொல்லாதன வெல்லாம் நீரே சொல்லல் இங்கே நல்லதல்ல.

ஜாக்சன்:— நல்லது. எங்களுக்குச் செல்லவேண்டிய கிஸ்தியை நீர் இதுவரையும் யாதும் செலுத்தவில்லை; நாளைக்கடத்தி வருகின்றீர்; பாக்கியைக் கேட்க வந்தவரிடம் போக்குரைகள் ஆடிப் பொல்லாங்கு செய்கின்றீர்; அவ் அல்லல்கள் எல்லாவற்றையும் அறவே ஒழித்து இனிமேல் நல்லவராய் நின்று வரிகளை ஒல்லையில் செலுத்திவரவேண்டும்; இல்லையேல் உமக்குத் தொல்லைகள் பல தொடரும்; உள்ளதை யுணர்ந்தொழுகாவிடின் உமது பாளையம் ஒழிந்து போக நேரும்; விரைந்து தெளிந்து எங்கள் திறையைக் கொடுத்து விடும்; உம் கருத்து என்ன? உறுதியாகச் சொல்லும்.

மன்னன்,—உறுதியை இறுதியாக அறுதியிட்டுச் சொல்லுகின்றேன்; வரி செலுத்தும் வழக்கம் எமக்கு என்றும் இல்லை.

ஜாக்சன்:— நீர் மனத்திமிரோடு மதத்துப் பேசுகின்றீர்! மேலிருந்து உத்தரவு வரும்வரையும் நீர் இங்கேயே தங்கியிருக்க வேண்டும்; சங்க ஆணையால் உம்மை நான் தடை செய்திருக்கிறேன்; இடைபிரிந்து எங்கும் நீர் வெளியே போகக் கூடாது.

### போர் மூண்டது.

இங்ஙனம் சொல்லி முடியவே முன்னரே மறைவாகச் சூழ்ந்து வைத்திருந்த மல்லர் சிலர் இம்மன்னன் மேல் மண்டிப் பாய்ந்தார்; பாயவே இவர் உள்ளங்கொதித்து ஒள்ளெரி யென்னத் துள்ளி யெழுந்து உடைவாள் உருவி உருத்து வீசினர். தலைகள் சில உருண்டு தரையில் வீழ்ந்தன; கொலைகள் விழவே அவன் குலை நடுங்கி அயலே நிலைகலங்கி ஓடினன். அவனது நிலையை அறிந்து நேரே இகழ்ந்து விடுத்துத் தாழிட்டிருந்த கதவுகளை யெல்லாம் தாளால் உதைத்துத் தகர்த்தெறிந்து இவ்வாள் வீரர் கீழிறங்கி வெளியே வந்தார்; வரவே உள்ளே நிகழ்ந்த கலகக் கூக்குரலையறிந்து பட்டாளங்கள் வெடிகளோடு கடுத்தடர்ந்தன. அடுதிறலோடு சுடுமுறையில் ஆர்த்து மூண்டன.

## பொருது மீண்டது.

அச் சேனைகளின் உப தளகர்த்தனை கிளார்க் (Lieut. Clarke) என்பவன் கிளர்த்தெழுந்து படைவீரர் சிலருடன் பாய்ந்து இம்மன்னனை இடையே தடுத்து மறித்தான். உடனே இவர் வலக்கை வாளால் படைகளை அடுத்து வராவகை வீசி, இடக்கையில் பிடித்திருந்த ஈட்டியால் அவனை எதிர்த்துக் குத்தினார். அக்குத்து அவனுடைய மார்பின் வலப்புறத்தே பாய்ந்தது; பாயவே அவ் வெள்ளை வீரன் அவ்விடத்தேயே துள்ளி வீழ்ந்து துடித்து மாய்ந்தான். மாயவே மருங்குநின்ற பட்டாளங்கள் ஒருங்குகூடி உருத்துச் சுட்டன. சுடவே மன்னன் படைகள் மண்டி யேறின. கும்பல் கும்பலாய்க் கம்புகள் எங்கும் கொதித்துச் சுழன்றன. வாள்கள் மின்னின; வேல்கள் துன்னின. வல்லயங்களும் வளைதடிகளும் எல்லையில்லன எங்கும் எழுந்து துள்ளின. கொள்ளிவட்டம் போல் கொடிது சுற்றி இப் படைவீரர் பாயவே அப்படைகள் உடைந்து இடை மூரிந்து ஓடின. ஓட்டங்கண்டதும் இப் படைகள் ஊக்கம் மீக்கொண்டு எங்கும் தாவி ஏறி மோதிச் சூறையாடி வீரவெறியோடு விரைந்து திரிந்தன. வீரபத்திரர்போல் வெகுண்டு நின்ற இவ்வீர மன்னர் வேகம் குறைந்து வெளியேறலானார். தம்பி ஊமைத்துரை தறுகண்மையோடு தொடர்ந்து அடர்ந்து விரைந்து வந்தார். தானைவீரர் யாவரும் எக்களிப்போடு கொக்கரித்துக் கெக்கலி கொட்டிப் பக்கம் நெருங்க இவர் பரியில் தாவிப் பாஞ்சையை நோக்கி விரைவில் போனார். அனைவரும் ஆர்த்து அடர்ந்து சென்றார். தானாபதிப்பிள்ளை மட்டும் உள்ளே அகப்பட்டுக்கொண்டார். இங்கிருந்து முன் கொண்டுபோயிருந்த சிங்கமுகத் தண்டிகை குடை கொடி சாமரம் விருதுகள் முதலிய அரிய பொருள்கள் பல அங்குத் தங்கி நின்றன. சேனைகள் பொங்கிப் போயின.

## திரும்ப நினைந்தது.

பரி இவர்ந்து படைகளுடன் தென்திசை நோக்கி வெகுதூரம் வந்தபின் கூட்டத்தில் பிள்ளையைக் காணமையால் இவ் வள்ளல் உள்ளம் வருந்தி உளைந்து இரங்கினார். போரில் பலர்

இறந்திருத்தலை யறிந்து மேலும் வருந்தினர். தானுபதியை மீட்டி வரக் கருதிச் சேனையை மறுபடியும் இராமநாதபுரத்திற்கே திருப்பச் சொன்னர். சேனைத்தலைவர்கள் அவ்வாறே செய்யலாயினர். உடனே தம்பி ஊமைத்துரை நேரே தடுத்து நிறுத்தி அண்ணனை அடுத்து அமைதியாய் நின்று “பிள்ளை உயிருடன் இருக்கின்ருரோ? இல்லையோ? மாண்டுபோயிருந்தால் நாம் மீண்டு போயும் பயன் இல்லை; மாளாதிருந்தாரேல் வேளைநோக்கி விரைந்துவந்து மீட்டிக்கொள்ளலாம்; இப்பொழுது அங்கே போகவே கூடாது; போனல் பெருங்கேடு நேரும்; நம் ஊருக்கே நேரே போய்விட வேண்டும்” என உறுதியுடன்உரைத்தார். தம்பி வற்புறுத்தவே நம்பி சரி என்றிசைந்து தானையை நடத்திக் கமுதி வழிகூடிப் பெருநாழி வந்து ஒருநாளிருந்து மறுநாள் இரவு ஏழு நாழிகை யளவில் பாஞ்சாலங்குறிச்சியைஅடைந்தார். அடையவே அரண்மனையிலிருந்தவர் அனைவரும் அரசுக்கு நிகழ்ந்துள்ள அவல நிலையை யறிந்து கவலை மீக்கூர்ந்து கலங்கி நின்ருர். குடிகளும் தெரிந்து நெடிது வருந்தினர். நாடும் மறுகி வாடி நின்றது.

## நேர்ந்ததை நினைந்து நெஞ்சம் கவன்றது.

பதி பெயர்ந்து போகவேண்டாம் என்று தம்பி முன்பு தடுத்ததையும் கேளாமல் அதிபதிகள் உத்தரவு என்று நம்பி நாம் மதி பெயர்ந்து போய்ப் புதியவனைக் கண்டு புன்பழி யடைந்தோம்; இது, விதிவழி நேர்ந்த வெந்துயரம் என இவ் வேந்து உள்ளம் நொந்து வெதும்பி யிருந்தார். படைவீரர் பலர் மாண்டுபோனதையும் ஒரு பொருளாக மதியாமல் தானுபதியின் நிலையினை நினைந்தே ஆருது கவன்று அகம் மிக வுளைந்து இவர் அலமந்து நின்ருர். நல்ல மானம் உடையவர் ஆதலால் ஊனம் அடைந்ததே! என்று உருத்து நொந்தார். உற்ற பிழைகளை உன்னி உன்னி வெற்றி மனம் வெதும்பி வீறுகொண்டு நின்றது.

———

# ஒன்பதாவது அதிகாரம்.

## டேவிசன் வந்தது.

இரு தினங்கள் கழிந்தன. ஒரு வழியும் தெளியாமல் உளம் மயங்கி யிருந்த இவர் தூத்துக்குடியிலிருக்கும் டேவிசன் (Devison) என்னும் துரைக்கு ஓலை ஒன்று எழுதி உரிமையுடன் அனுப்பினார். அவ்வெள்ளைக்காரர் மிகவும் நல்லவர். கல்வியறிவுள்ளவர். வர்த்தக வழியில் பெரும்பொருள் ஈட்டிச் சிறந்த செல்வாக்கோடு அங்கு அவர் விளங்கி யிருந்தார். இந் நாட்டு மொழிகளையும் நிலைகளையும் நன்கு தெரிந்து யாருக்கும் பேருபகாரியாய்ப் பெருகியிருந்தமையால் அவரது சீரும் பேரும் எங்கும் சிறந்து நின்றன. அன்று அவர் பேரால் வழங்கப்பட்ட டேவிசுபுரம் என்னும் ஊர் தூத்துக்குடிக்கு வடக்கே 2 மைல் தூரத்தில் இன்றும் விளங்கியுள்ளது. விளைபுலங்கள் முதலிய வளங்கள் மிகுந்து கிளைகளோடு கெழுமி யிருந்த அவர் இப் பாஞ்சை மன்னன்பால் வாஞ்சை மிகுந்து வரிசை செய்து வந்தார். இருவரும் உரிமைமீக்கூர்ந்து பெருநட்போடு மருவி யிருந்தார் ஆதலால் தாம் அடைந்துவந்துள்ள அவல நிலையை நேரில் சொல்லக் கருதி அவரை இவர் அழைத்திருந்தார். ஓலை கண்டதும் உவந்தெழுந்து ஒண்பரி ஏறி ஒல்லையில் வந்து அவர் பாஞ்சையை அடைந்தார். அடையவே இவர் எதிர் எழுந்து போய் முதிரன்போடு தழுவி மகிழ்ந்து முகமன் உரையாடி லட்சுமிவிலாசம் என்னும் அரச மாளிகைக்கு அவரை அழைத்து வந்தார். அழகிய ஆதனங்களில் இருவரும் அமர்ந்து அளவளாவி யிருந்தார். தம்மை அழைத்த காரியம் யாது? எனத் தழைத்த அன்புடன் இம்மன்னனை நோக்கி அவர் புன்னகை செய்து கேட்டார். கேட்கவே ஜாக்சன் துரை பேட்டிக்கு வரும்படி அழைத்துத் திருநெல்வேலி குற்றாலம் முதலிய பல இடங்களுக்கும் அலைத்து முடிவில் இராமநாதபுரத்தில் வைத்துத் தமக்குச்

செய்த பழிநிலையான பிழைகளை யெல்லாம் தெளிவுற வுரைத்தார். அதில் தாம் அடைந்து வந்துள்ள அல்லல்களையும், அழிவுகளையும், பிள்ளை அங்கே பிடிபட்டிருக்கும நிலையினையும் குறித்துணர்த்தித் தம் வருத்தத்தைப் புலப்படுத்தினர். அவற்றைக் கேட்டவுடனே அவர் வாட்டம்மீக்கூர்ந்து வருந்தியுளைந்தார். பின்பு இவரை ஆதரவுடன் தேற்றி ஆறுதல் கூறினர்: "தங்களுடைய பெருந்தகவையும், அருந்திறலையும், வழிமுறையையும், தெளிவுற வுணராமல் இளிநிலையில் நிமிர்ந்து இப்பிழைகளைச் செய்துள்ளான். இந்நாட்டிற்குப் புதியவன்; மதிநல மில்லாதவன்; படைத்திறத்திலேயே பழகியிருந்தவன்; ஆதலால் மனத்துணிவோடு மீறி இங்ஙனம் தங்களுக்கு மாறுசெய்ய நேர்ந்தான். இனி வேறு நினைந்து வருந்தி யாவது என்? உங்கள் பெருமையையும், அருமையையும் வரன்முறையே வந்துள்ள உரிமையையும் கும்பினித் தலைவர்க்கு நான் நேரே எழுதி, நேர்ந்ததையும் உணர்த்தி, மேல் யாதோர் இடையூறும் நேராவகை புரிந்து, ஈரரசும் பேரன்போடு சேர்ந்து பெருகி வாழும்படி விரைவில் செய்வேன்; யாதும் கவல வேண்டாம்" என்று இவரை ஆற்றி யிருத்தி ஆர்த்தியுடன் விடை பெற்று அவர் அகன்று போனர். போனவர் உடனே தமது மனைவியாகிய லாலி என்பவளிடம் இந்த இடத்தில் நேர்ந்த இடர்நிலைகளை யெல்லாம் எடுத்துரைத்தார். இவ் அரசடைந்துள்ள அவல நிலையை அறிந்தவுடனே அவள் உளம் மிக வருந்தினள். தனது கணவனோடு கூடி அடிக்கடி பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து வாஞ்சையுடன்விருந்து அருந்தி அந்தப்புரத்து அரசிகளோடு உல்லாசமாய் அளவளாவியிருந்து அன்புமிகுந்து சென்றவளாதலால் இங்கு நிகழ்ந்த பிழைநிலைகளை நினைந்து பெரிதும் இரங்கினள். பின்பு கணவனும் மனைவியுமாகிய அவ் இருவரும்சேர்ந்து இவ் அரசின் தலைமை நிலைமைகளை விளக்கி உரிமையுடன் ஒரு நிருபம் எழுதிச் சங்க அதிபதிகளுக்கு அஞ்சலில் விடுத்து ஆவலோடு பதிலை எதிர்பார்த்து ஆண்டு அவர் மேவியிருந்தார்.

இங்ஙனம் அவரிருக்க இனி அங்கே அகப்பட்டுள்ள பிள்ளை

நிலையையும், பின் நிகழ்ந்த செயலையும் மெள்ளப் பார்ப்போம். கரும நிகழ்ச்சிகள் அதிசய வியப்புகளாய் விளைந்து விதியின் வேகங்களை விளக்கி வித்தக நிலைகளில் விரிந்து நிற்கின்றன.

## உள்ளே நின்ற பிள்ளை நிலை.

முன்பு இராமநாதபுரத்தில் ஜாக்சன் சந்திப்புச் செய்த மேல்மாடத்தில் தானுபதிப்பிள்ளை தங்கித் தவித்து நின்றார். மன்னன் வெட்டி இறங்கும்பொழுது ஒட்டி உடன்வர முடியாமல் உள்ளம் கலங்கிப் பிள்ளை உள்ளே நின்றதால் மல்லர் வந்து பிடித்துக்கொண்டார். பிடிபட்டுள்ள இப் பிள்ளையைக் கண்டதும் அவ்வெள்ளையன் வெகுண்டு "இவன் பொல்லாத பாவி; இவ்வளவும் இக் கொடியவன் செய்த கொடுமையே; இப்படு கொலைக்கெல்லாம் இவனே காரணம்" என்று வடுவுரை யாடி வைதிகழ்ந்தான். அங்ஙனம் எள்ளி இகழவும் பிள்ளை உள்ளம் பொருமல் அவனை எதிர்த்து நோக்கி "கெடுநினைவோடு கொடு வஞ்சம் புரிந்து படுபழியை வளர்த்துவிட்டு என்மேல் ஏன் அடாப்பழி கூறுகின்றாய்? இது மிகவும் அடாத செயல். காண வருக என்று கரவுடன் அழைத்து வீணாகும் கருதாத வெவ் வினையை நாணாது செய்தனை; அவ்வினைப்பயன் விளைந்தது; முடிவறியாமல் முனைந்து துணிந்து கெடுதி புரிந்தாய்; படுகொலைகள் விழுந்தன; நடுவே நான் என்ன செய்வேன்? எம் ஆண்டகை வெகுண்டெழுந்த பொழுது நீ அஞ்சி ஓடி அயலே ஒளிந்தாய். பேடியர்போல் ஓடினன் என உள்ளம் நாணி உன்னைக் கொல்லாது விட்டு அவ்வள்ளல் போனார். அவ் வாள்வாய்க்கு இரையாகாமல் நாள்வாய் பெற்று இங்கே நண்ணி நிற்கின்றாய். அரசு நல்கிய ஆருயிர் உதவியைஅறவே மறந்து அவரதுஅமைச்சை அவமதிப்பது அவமே. உன்னை உணராமல் என்னை இகழ்தல் ஈனமாகும். எய்திய போரில் இருவரும் அஞ்சி இழிந்து கிடந்தோம். கழிந்துபோனதை நினையாமல் இதுபொழுது கதித்துநின்று வல்லவன் போல வாய் பிதற்றுகின்றாய். இனி யாதும்

வீண்வார்த்தை பேசவேண்டாம்; உன்னுடைய மனம்போல எது வேண்டுமோ அதைச் செய்துகொள்" என்று இவர் சினந்து பேசவும் அவன் சீறி நோக்கி இக் கொடியவனைச் சிறையில் போடுங்கள் என்று செயிர்த்துரைத்தான். உடனே சேவகர் புகுந்து இவரைக் கைகளைக் கட்டி கடுத்துக் கொண்டுபோய் அடுத்திருந்த இடத்தில் தனியே அடைத்து வைத்தார்.

விலங்கு பூட்டிப் பிள்ளையை இங்ஙனம் கடுஞ்சிறையில் வைக்கவும் கொடுந் துயருடன் உள்ளே அவர் கொதித்திருந்தார்.

பிள்ளை பிடிபட்டுள்ளதை நினைந்து உள்ளூற உவந்திருந்த ஜாக்சன் துரை மேலே கும்பினி அதிபதிகளுக்கு அங்கு நிகழ்ந்த கொடும்போர் விளைவையும், கொலை நிலைகளையும் குறித்துத் தன் பக்கம் அனுகூலமாகச் சதுரோடு தழுவி எழுதினான். அன்று அவன் எழுதிய படியை அடியில் பார்க்க.

"பாஞ்சாலங்குறிச்சிப் பாளையகாரனாகிய கட்டபொம்மு நாயக்கன் என்னைப் பேட்டிகாண வருவதாகப் பாவனை காட்டி 4000 போர்வீரர்களுடன் வந்து இராமநாதபுரத்தில் தங்கிப் படைகளை அயலே மறைய வைத்துவிட்டு நாளது செப்டம்பர் மாதம் ஒன்பதாந்தேதி (9—9—1798) மாலை 5 மணிக்கு என்னைக் கண்டுகொள்ளவேண்டும் என்று ஆள்மூலம் சொல்லி அனுப்பினான். அந்த ஆள் இடம் மறுநாள் காலை 10 மணிக்கு வந்து காணலாம் என்று நான் நேரே பதில்சொல்லி விடுத்தேன்.

அவ்வாறே குறித்த காலத்தில் அவனும், அவனுடைய தம்பி ஊமையும், தானாபதியும், படைவீரர் சிலரும் அடைவாக வந்தனர். வரவே அவனை உரிமையோடு இருக்கச்செய்து நம் ஆட்சிக்குரிய வரியைச் செலுத்தவேண்டிய முறையைக் குறித்து உரைத்தேன். ஒன்றுக்கும் சரியான பதில் சொல்லாமல் உள்ளஞ் செருக்கி ஊக்கமொடு பேசினான். கண்ணியம் வாய்ந்த நம் கும்பினி ஆளுகையை மதியாமல் திண்ணியனாய் நின்று நாளும் அவன் செய்துவரும் தீங்குகளையெல்லாம் தெளிவுற எடுத்துக்காட்டி இனிமேல் பாங்குடன் அடங்கி நடந்துவரும் படி பண்போடு கூறினேன். அங்ஙனம் இதமாக நான் கூறி வருங்கால் அவன் மதம் மீறித் திடீர் என்று திமிரி எழுந்து

வெளியே போனான். போகவே நம் தளபதியாகிய கிளார்க் (Lieutenant and Adjutant Clarke) வேகமாய் எதிரே புகுந்து அவனை இடைமறித்தான். மறித்த அவனை மறுத்து ஒன்றும் சொல்லாமல் தன் கையிலிருந்த கட்டாரியால் அக் கட்ட பொம்மு கடுத்துக் குத்தினான். குத்து மார்பின் வலப்புறத்தில் மடுத்துப் பாயவே அவ்விடத்திலேயே வீழ்ந்து அவன் துடித்து இறந்தான். அடுத்திருந்த அவன் படைகளும் தொடுத்துப் புகுந்தன. பாதுகாப்பிற்காக வைத்திருந்த நம் பட்டாளங்களும் பரிந்து வந்தன. பெருங் கலகம் மூண்டது. பலர் மாண்டனர். பின்பு அனைவரும் பறந்து போயினர். அக் கொடியவன் குதிரையிலேறித் தானையோடு தருக்கிப் போனான். தானாபதி மட்டும் அகப்பட்டான். அவனைப் பிடித்துச் சிறைப்படுத்தி யிருக்கிறேன். கட்டபொம்மு என்னும் துட்டனைக் கொட்டம் அடக்கி அடியோடு தொலைத்து ஒழிக்காவிடின் நம் கும்பினி ஆட்சி இங்கு நிலைத்திருக்காது. இந்நிலைமையை மாட்சிமிக்க அதிபதிகள் ஆழ்ந்து ஆலோசித்து ஆவனவற்றை உடனே விரைந்து செய்யவேண்டும். விளைந்துள்ள விளைவுகள் வெய்ய நிலையின.

இச் சண்டையில் இறந்த தளகர்த்தனை கிளார்க் பல வகையிலும் மிகவும் சிறந்தவன். படைகளில் நின்று நெடுநாளாகத் துணிவோடு உழைத்து வந்துள்ளான். அநியாயமா யிங்கே இறந்து போயினன்; அவனுடைய மனைவியும், மூன்று குழந்தைகளும் அநாதரவாயுள்ளனர். தகுந்த ஆதரவு தந்து அக் குடும்பத்தை பாதுகாக்க வேண்டியது கும்பினியின் கடமையாம்.

இனி இங்கு நான் நடக்கவேண்டிய நிலையைக் குறித்து அங்கிருந்து வரும் உத்தரவை ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறேன்." என்று இவ்வாறு ஒரு கடிதம் எழுதிச் சங்கத் தலைவர்க்கு அஞ்சல் மூலம் அனுப்பிவிட்டு முடிவை அவன் கடிதாக எதிர்பார்த்திருந்தான். கடித வேலையில் கரவுகள் கலந்து நின்றன.

அக்காயிதம் 1798 செப்டம்பர் மாதம் 21ந் தெய்தி எழுதப்பட்டது. 10ந் தேதி நிகழ்ந்த படுநிலையை உடனே அறிவியாமல் பத்து நாள் வரையும் இடை தெரிந்து சூழ்ந்து முடிவில் இங்ஙனம் அவன் முடித்து விடுத்து முடிவோர்ந்து நின்றான்.

# பத்தாவது அதிகாரம்.

## நியாயம் தெளிந்தது.

---

கருமம் கருதி அவன் அனுப்பியிருந்த நிருபம் வந்தது. உரிமையுடன் உடைத்துப் பார்த்தார். கொலையும் போரும் குவிந்துள்ளமையைக் கண்டு கும்பினித் தலைவர் பெரிதும் வருந்தினார். திறையையும் செலுத்தாமல் முறை மீறி வந்து இப்படிக் கலகமும் செய்தானே! என்று கட்டபொம்மு மீது கடுங் கோபம் கொண்டார். நம்முடைய ஆணைக்கு யாண்டும் பணியாமல் பல ஆண்டுகளாக நீண்டு நிற்கிறான்; எவ்விதமும் இணங்காமல் வெவ்வினை விளைத்து வருகின்ற இவனை எவ் வகை அடக்குவது? யாது செய்வது? என எண்ணி யுளைந்து இறுதியில் எல்லாவற்றையும் ஜாக்சனிடம் நேரில் விசாரித்து அதன்மேல் நேர்வன செய்வோம் என்று தீர்மானித்து அவனுக்கு ஓர் உத்தரவு அனுப்பினார். அதிபதிகள் கடிதம் விதிமுறையே வந்தது.

"சிறைப்படுத்தி யிருக்கிற பாஞ்சாலங்குறிச்சித் தானாபதியை உடனே திருச்சிக்கு அனுப்புக: போரில் நேர்ந்துள்ள பொல்லாங்குகளின் புலன்கள் தெளிவாகத் தெரிய வேண்டும் ஆதலால் நீயும் நேரில் வருக" என அச் சீரியோர் அனுப்பியிருந்த அக் கட்டளை வந்தது. அதனைக் கண்டதும் அங்கே அவன் கொடுமையாகச் சிறையில் வைத்திருந்த பிள்ளையை வெளியேற்றித் தன்முன் கொண்டுவரச் செய்தான். அவர் வந்து நின்றார். சரியான உணவின்றி உடல் மிக மெலிந்து புழுதி படிந்து அழுக்கு நிறைந்த ஆடையுடன் அயர்ந்து தளர்ந்து நின்ற அவரை விரைந்து பார்த்ததும் அவன் அகம் திகைத்தான்.

அந்த நிலையில் அவரை மேலே அனுப்பினால் தனக்கு நிந்தை மிக நேரும் என்று முந்துற அறிந்து தந்திரமாக வெள்ளையான உடைகளைக் கொணர்வித்து அவற்றை உடுத்திக்கொள்ளும்படி பிள்ளையிடம் கொடுத்தான். அவர் கொள்ள மறுத்தார்.

அவன் மெள்ள நெருங்கி "நல்ல வெள்ளை இது; எடுத்து உடுத்திக்கொள் பிள்ளை!" என உள்ளுறவாளன் போல் உரைத்து நின்றான். வேண்டாம் என்று அவர் வெறுத்துத் தள்ளினார். மேலும் நயந்து வேண்ட அவர் இகழ்ந்து மொழிந்தார்: "இழுக்குடைய உன்னுடைய உடையை நான் எடுக்க மாட்டேன்; இந்த அழுக்குடையுடனேயே போய்க் கும்பினி அதிபதிகள் முன் நின்று எனது விழுக்குடிப் பிறப்பையும், ஒழுக்க நிலையையும், உனது பழிச்செயலையும் வெளிப்படுத்துவேன்" என்று வெகுண்டு மொழிந்தார். இங்ஙனம் மொழியவே "சரி போ; உன் உயிருக்கு உலை வைத்திருக்கிறேன்" என உருத்து மொழிந்து போர்ச்சேவகர் எண்மருடன் இவரை அவன் போக விடுத்தான். முன்னும் பின்னும் பாதுகாவலோடு இன்னல் நிலையில் இவர் எழுந்து போனார். மறுநாள் அவன் குதிரையில் ஏறி விரைந்து சென்று திரிசிரபுரத்தை அடைந்து அயலிடம் அமர்ந்து உரியவர் சிலருடன் உறவாடி உறுவினை நாடி உறுதி சூழ்ந்து இவரது வரவினை எதிர்பார்த்திருந்தான். இவர் வந்து சேர்ந்ததும் முன்னறிக்கை செய்து வாயிதா நியமித்துக் குறித்த காலத்தில் வேண்டிய ஆயத்தங்களுடன் சபையுட் புகுந்தான். ஈண்டிய யாவரும் அங்கு இறைமையான உரிமையோடு இடம்பெறலாயினர்.

இந்த நீதி முறையை விசாரணை செய்ய மேலிருந்து தலைமை அதிபதிகள் அங்கு வந்திருந்தாராதலால் சார்ந்தவர் நிலைகளை ஓர்ந்து விசாரித்தார். நியாய மன்றத்தில் பிள்ளை வந்து நிற்கவும் அங்கிருந்தவர் எல்லாரும் அவரது உருவ நிலையை நோக்கிச் சிறிது உள்ளம் இரங்கினர். பின்பு ஜாக்சனைப் பார்த்து "உண்மையாக நிகழ்ந்தது என்ன?" என நேரே கேட்டார். அவ் அதிகாரி மரியாதையுடன் துரைகளை முறையே நோக்கி இவர் மீது குறைகளைக் கூறினன். வாதி நிலையில் உரைகள் மோதி வந்தன.

### ஜாக்சன் தானுபதி மேல் சாற்றிய குற்றங்கள்.

பிள்ளையைச் சுட்டிக்காட்டி "இவன்தான் பாஞ்சாலங்குறிச்சி ஜமீன் மானேஜர். இராமநாதபுரத்தில் நடந்த அக்

கலகத்தில் கூட இருந்தவன். பொல்லாத செயலினன். வெள்ளையர்களை என்றும் எள்ளும் இயல்பினன். வஞ்சச் சூழ்ச்சியன்; அஞ்சாநெஞ்சனாகிய அக் கட்டபொம்மைப் பல வகையிலும் கெட்டவழியில் ஊக்கிக் கேடு புரிகின்றவன். நம் ஆட்சிக்கு அடங்கி அவன் வரி செலுத்த எண்ணினும் தாழ்ச்சி பல சொல்லி இவன் தடுத்துக் கெடுத்தவன். கடுங்கோளன்; வெளியில் நல்லவன்போல் வேடம்கொண் டிருப்பினும் உள்ளம் கொடியவன். நீற்றினை நெற்றியில் தீற்றி, மற்றவர் சோற்றினில் மண்ணினைத் தூவும் துன்மதி. பாளையத்தின் ஆளுகை இவன் கையிலிருத்தலால் எந்த வேளையும் துட்டர்களை ஏவிக் கெட்ட காரியங்களையே செய்து வருகின்றான். இவனுடைய சொல்லாலேதான் நாட்டில் அல்லல்கள் பல விளைந்துள்ளன. நமது கும்பினி ஆளுகையை எங்கும் இகழ்ந்து வம்புகள் விளைத்து நம்மவர் மதிப்பைக் கெடுப்பதே தனக்கு ஒரு மதிப்பாக எண்ணி மாறு செய்து நிற்கின்றான். நம்முடைய ஆணையை மீறி அக் கட்டபொம்மை வெளியேறிப் போம்படி இவனே அன்று கண்சாடை காட்டினான் என்று பின்பு தெரிய வந்தது. இவன் தூண்டுதலால் அங்கே மாண்டவர் பலர். எல்லாக் கலகங்களுக்கும் இனிய துணையாய் நின்று தன் சொல்வலியை அல்வழியில் செலுத்தி அல்லல் புரிந்து வருகின்ற இவன் இச்சமயம் நல்ல வேளையாக நம் கையில் சிக்கினான். இனி விரித்துக் கூறுவானேன்! இக் கோளன் இல்லாமல் ஒழியின் அப் பாளையகாரன் நல்லவனாய் அடங்கி நமக்கு வரி செலுத்தி வருவான். இவனுடைய கோளுரைகளாலேதான் அவன் கொடியவனாயினன்; கொலைகளும் விழுந்தன; நிலைமையை ஆராய்ந்து நீதி செலுத்துவது தலைவர் தம் கடமை" என அவன் தாழ்ந்து மொழிந்து தணிந்து நின்றான்.

நீதிபதிகள் வினவியது.

அவனுடைய உரைகளைக் கேட்டவுடனே அங்கு அமர்ந்து இருந்த துரைகள் உள்ளந்திரிந்து பிள்ளையைச் சினந்து நோக்கி "இவற்றிற்கு என்ன சொல்லுகிறீர்! இங்கே கலெக்டர் இப்

பொழுது உம்மேல் சொல்லியன வெல்லாம் உண்மைதானே? எவ்வளவு கொடுமையாய் நீர் நடந்திருக்கின்றீர்! குற்றங்களை ஒப்புக் கொள்ளுகிறீரா? அல்லது ஏதேனும் பதில் சொல்ல வேண்டியது உண்டா? இருந்தால் சொல்லும்" என்று அவர் சொல்லியருளினர். அங்ஙனம் சொல்லவே பிள்ளை எழுந்து பேச லானர். அவருடைய பேச்சுகள் சாதுரிய சாகசங்கள் தழுவி வந்தன. மதிநலம் மருவி நியாய வாதங்களாய் நிலவி எழுந்தன.

## பிள்ளையின் பதில்.

உள்ளம் துணிந்து உறுதி ஓர்ந்து உரிமையோடு பேச நேர்ந்தார்: "அருமைத் துரைகளே! தரும நீதிபதிகளே! இந்தப் புனிதமான நியாய சபையில் ஜாக்சன் துரையவர்கள் இதுவரை அநியாயங்களையே நிரப்பினர். கண்ணியம் வாய்ந்த மேலோர் களாகிய உங்கள் முன்னிலையில் கொஞ்சமும் வாய்கூசாமல் நெஞ்சமும் அஞ்சாமல் படுமோசமாய் என்னைப் பழித்து இகழ்ந்தார்! கொடியன், கோளன், வஞ்சன், என இழிவான வசைமொழிகளை வாரி இறைத்து என்னை வைது பழித்தார். அவருடைய நெஞ்சு நிலைகளையே வஞ்சமாக என்மேல் வரைந்து சுமத்தினர். உள்ளத்துள் உள்ளன வெளியேவாய்வழி ஒழுகின.

"கௌரவம் பொருந்திய கும்பினியாரின் பெருமையைக் குலைக்க இவர் சிறுமை பல செய்துள்ளார். அவ் வுண்மைகளுள் சிலவற்றை இப்புண்ணிய மன்றத்தில் கூறுகின்றேன். அவரைப் போல நான் வாய்சாலகன் அல்லன். அறிந்ததை எனக்குத் தெரிந்த மொழிகளில் இயன்ற வரை சொல்லுகின்றேன். ஏழை சொல் அம்பலம் ஏறாது என்னும் பழமொழி யிருந்தாலும் நீதி யான இக் கும்பினி மன்றத்தில் எனக்கு நல்ல நியாயம் கிடைக்கும் என்றே உள்ளம் உறுதியாய் நம்பி நிற்கின்றேன்.

"தருமத் துரைகளே! தெய்வ சாட்சியாகவே நான் சொல்லுகின்றேன்; கருணை செய்து கவனிக்க வேண்டும். இந்த ஜாக்சன் துரையவர்கள் திருநெல்வேலியில் இருந்து கொண்டு

தன்னை வந்து கண்டுபோம்படி எம் மன்னனுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினர். அது ஆகஸ்டு மாதம் பதினறாந் தேதி (16—8—1798) மாலை 4 மணிக்குப் பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்தது. அந்தத் திருமுகத்தைக் கண்டதும் எங்கள் அரசு திகைத்தது. அவர் எளிதாக இடம் பெயர்ந்து போய் எவரையும் பார்ப்பதில்லை. ஆயினும் சங்கத்தின் அதிகாரம் பெற்று வந்துள்ளவராதலால் நேரே போய்ப் பார்த்து வருவோம் என்று மாட்சிமை மிக்க தங்கள் கும்பினி ஆணையை மதித்து அவர் அன்புசெய்து பிரயாணத்திற்கு ஆயத்தமாயினர். தம்பியும் நானும் தானையும் உடன் தொடர்ந்தோம். உரிய ஆடம்பரங்களுடன் ஒரு முகமாய் நடந்து திருநெல்வேலியை அடைந்தோம். அங்கு இவர் இல்லை என்பது தெரிந்தோம். எங்களைக் குற்றாலத்துக்கு வரும்படி சொல்லி விட்டு முதல்நாள் பிற்பகலில் அங்குப் போயிருப்பதாகக் காரியாலயத்தில் உள்ளவர் உணர்த்தினர். உணர்த்தவே நாங்கள் மாறென்றும் கருதாமல் உரிமையுடன் அனைவரும் அங்குச் சென்றோம். வந்துள்ளதை அறிவித்தோம். இப்பொழுது சமயம் இல்லை; சொக்கம்பட்டிக்கு வரச்சொல்லு பார்த்துக் கொள்ளலாம் என்று துபாஷி மூலம் சொல்லி விட்டு இவர் துரிதமாய்ப் போய்விட்டார். அங்கும் போனேம். இங்கே இடமில்லை; சிவகிரிக்கு வருக என்று சென்றார். அப்பொழுது தான் இவருடைய செயல் எங்களுக்கு வெகுளியையும் வெறுப்பையும் விளைத்தது. சந்தேகத்தையும் உண்டு பண்ணியது. ஆயினும் சங்கத்தின் நீதிநிலையையும் நெறிமுறைகளையும் நினைந்து தீதுயாதும் நிகழாதென்று துணிந்து பின் தொடர்ந்து சென்றோம். அங்கும் ஏமாற்றி விட்டுச் சேற்றூர்க்கு வருக என்று போனர். அவ்வாறே ஸ்ரீவில்லிபுத்தூா, பாவாலி, தும்பிச்சிநாயக்கனூர், கூடலூர், திருச்சுழி, கமுதி முதலிய இடங்களுக்கெல்லாம் வீணே அலைத்து முடிவில் இராமநாதபுரத்தை அடைந்து தக்க சமயம் பார்த்துப் பேட்டிக்கு வரச் சொன்னர். யாதொரு தடையும் சொல்லாமல் சரி என்று நம்பி எம் அரசர் எழுந்தார்.

முறைப்படி நானும் பரிவாரங்களும் தொடர்ந்து பின் போனோம். இவரிருந்த மாளிகையை அடையவும் இருவர் எதிர்வந்து "ஜமீன்தார் மட்டும் தனியே வர வேண்டும்; வேறொருவரும் உள்ளே வரக் கூடாது" என்று எங்கள் எல்லாரையும் தள்ளி வெளியே நிறுத்தினர். அரசைத் தனியே விட மனமில்லாமையாலும், இவர் சதி சூழ்ந்திருப்பதாக முன்னரே சிறிது அறிந்திருந்தமையாலும் ஊமைத் தம்பியும், நானும் உடன் தொடர்ந்தே உட்புகுந்தோம். பாராச்சேவகர்கள் கொஞ்சமும் இரக்கம் பாராமல் எங்கள் பரிவாரங்களைப் பார்த்துப் பக்கத்தே அடித்துத் துரத்தினர். அரசு முன்னும் நாங்கள் பின்னுமாக மேல்மாடத்தை அடைந்தோம். இவர் சுமுகமின்றிக் கடுத்து எங்கள் சமுகத்தைச் சுழித்து நோக்கி வரிவரவுகளைக் குறித்து வசைமொழியாடினர். அவர் மானம் மிகவுடையவர்; யாரிடமும் ஈனமுற இசைந்து நில்லார் ஆகலான் இங்கிருப்பது சரியில்லை என்று வெறுப்போடு விரைந்து எழுந்தார். அங்ஙனம் எழுந்தவுடன் மல்லர் சிலர் பாய்ந்து அல்லல் செய்ய நேர்ந்தார். அவர் அருந்திறலாளர் ஆதலால் உடைவாளை யுருவி இடையே தடுத்தவரைத் தடையறச் செய்து தாவி இறங்கினர். அவரது வீர நிலையைக் கண்டதும் இவர் வெருவி ஓடி ஒரு மறைவில் ஒளிந்தார். அன்று அங்கு ஒளியாது நின்றாரேல் இன்று இவரை இங்கே காண முடியாது. இவர் ஓடியதை நோக்கி உள்ளூற இகழ்ந்து அவர் கீழே போனார்; போகவே சேனைகளுடன் வந்து சேனாதிபதி எதிர்த்தார். எங்கள் படைகளும் இடை வந்து சேர்ந்தன. கலகம் மூண்டது; கொலைகள் நீண்டன. இடையே தளபதி செத்துத் தரையில் உருண்டான். யாருடைய ஆயுதத்தால் அவன் ஆவி துறந்தானோ அது யாதும் தெரியாது. எதிர்த்த படைகள் உடையவும் அவர் கெலித்துப் போனார். பரிவாரங்களும் பின் தொடர்ந்து போயினர். நான் மட்டும் கீழே இறங்க முடியாமல் மெய்ம்மறந்து மேலே நின்று விட்டேன். இவர் என்னைப் பிடித்துக் கொண்டதாக வீணே இங்கு பிதற்றுகின்றார்.

மனச்சாட்சி கொஞ்சமுமின்றி இவர் பேசுவதை நினைத்தாலும் நெஞ்சம் வேகின்றது. என்னுடைய ஜமீன்தார் வஞ்சம் அறியாதவர்; அஞ்சா நெஞ்சினர்; அருந்திறலினர்; பெருந்தகையாளர்; பெரிய போர் வீரர்; தனி அரசாகவே தழைத்து நின்றவர். சங்க ஆணைக்கு மட்டும் கீழ்ப்படிந்து அங்கு வந்தார். அச் சிங்க ஏற்றின் திறலை அறியாமல் இவர் பங்கம் செய்யப் பார்த்தார்; இங்ஙனம் பாடு விழ நேர்ந்தது. கொடிய இப் படு கொலை வினைவுகளுக்கெல்லாம் இவரே முடிவான காரணராய்ப் படியறிய நின்றார். இந் நிலையில் என்னைக் கெடுமதியன் என்று வடுவுரைக்கின்றார். இவர் கொடுமதி என்னே! அரிய ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டிருந்தும் பெரிய நோக்கமில்லாமல் இவ்வாறு பிழைமிகச் செய்தார். மாட்சிமை தங்கிய கும்பினி ஆணையை நாங்கள் மீறி நின்றால் இவர் வரச் சொன்ன இடங்களுக்கெல்லாம் வாயடங்கி வந்திருக்க முடியுமா? பெருந்தன்மை நிறைந்த துரைமார்களே! இவ் வுண்மையைச் சிறிது சிந்தனை செய்தருள வேண்டும். வா என்றால் வந்தும், இரு என்றால் இருந்தும், நில் என்றால் நின்றும் இங்ஙனம் சொல்லியபடியெல்லாம் ஒல்லையில் கீழ்ப்படிந்து நாங்கள் யாருக்காக அடங்கி நடந்தோம்? மேலான கும்பினி ஆணைக்காக அன்றோ? அந்த அருமையை இவர் ஒரு சிறிதும் உணர்ந்திலர்; பதவியின் இறுமாப்பு இவரிடம் மிதமிஞ்சி நின்றது. இந்த ஒருவர் செய்த சிறு செயலால் பெரிய பகை விளைந்து இரு வழியிலும் கொலைகள் பல விழுந்தனவே! அம்மா! இக் கொலைப்பழி சும்மா போகுமா? இப்படி அடாத செயலைச் செய்து விட்டு மேலும் என்மேல் அடாப்பழி கூறுகின்றாரே! அந்தோ! ஒரு வீர அரசுக்கு நான் பாரமந்திரி என்பதையும் பாராமல் என்னைச் சீரழித்துச் சிறையில் இட்டுச் சிறுமையாகப் பட்டினி போட்டுப் படுதுயர் விளைத்து இந்த அழுக்கு உடையுடன் கிடந்து இழுக்குறும்படி இழிவு செய்துள்ளார். வழிவழியாக அரசவுரிமையைச் சிறிது உணர்ந்திருந்தாலும் இப்பழி வழியை எவ

ரும் மறந்தும் நினையார். இவர் நினைந்து செய்துள்ள வஞ்சகங் களை நினைத்த போதெல்லாம் என் நெஞ்சம் நிலைகுலைந்து கலங்கு கின்றது. தலைமையை இழந்து தவித்து வருந்துகின்றேன்.

சங்கமே தஞ்சம் என்று நான் சார்ந்து வந்திருக்கின் றேன். நடுவு நிலைமையுடைய இந்த நீதி மன்றத்தில் நல்ல நியாயம் கிடைக்கும் என்றே நம்பி நிற்கின்றேன். இனத்தவர் என்றும், அயலவர் என்றும், உறவினர் என்றும், பகையினர் என்றும், வலியர் என்றும், மெலியர் என்றும், பாரபட்சம் பாராமல் யாரிடமும் நேர்மையுடன் நின்று நிலைகளை ஓர்ந்து நெறிமுறைகளை ஆராய்ந்து நீதி புரிகின்ற தெள்ளிய வெள்ளைத் துரைமக்கள் இப் பிள்ளையிடத்து மட்டுமா பிழைபடுவார்கள்? ஒதுபோதும் படார்; உண்மை கண்டு உரியதே செய்வார் என்று நான் உள்ளுற நம்பி உறுதி கொண்டு இருக்கின்றேன். இனி மேலும் பேசல் மிகையாம். தங்கள் அருமையான காலத் தை இதுவரை வீணாக்கியதற்கு இரங்குகின்றேன். என்னு டைய சிறுமொழிகளை இவ்வளவில் நிறுத்துகின்றேன். தரும நிலையமான அருமை நீதிபதிகளே! இது வரையும் நான் இங்கே சொல்லி வந்தனவெல்லாம் உண்மையில் நிகழ்ந்த உறுதி மொழி கள் என்பது திருவுளம் அறியும். நேர்ந்துள்ள நிலைகளை ஆராய்ந்து தேர்ந்து நீதி செலுத்தி என் அரசினையும், என்னையும் ஆதரித்து அருள் புரிய வேண்டும்; எனது விண்ணப்பம் இதுவேயாம்" என மிகவும் விநயமாய் நின்று அபயங்கூறி இவர் அமரலானார்.

இங்ஙனம் பிள்ளை சொல்லிய முறையீடுகளை யெல்லாம் கேட்டு வந்த அவ் வெள்ளை அதிபதிகள் உள்ளதை உள்ளபடி யே சொல்லினார் என உள்ளம் இரங்கினார். உண்மைகளை ஊன்றி ஆராய்ந்து ஊகித்து உணர்ந்தார். பல இடங்களுக்கும் அலைத்து அலைத்து அலக்கழித்து இறுதியில் நேரே பொறுதி யிழக்கும்படி செய்திருத்தலால் உறுதியாளனை அக் கட்டபொம்மு மனந் திரிந்து சினந்து போர் செய்து அங்ஙனம் விரைந்து போயுள் ளான் என அவர் உணர்ந்து கொண்டார். கொள்ளவே முன்

னம் கொண்டிருந்த கோபம் தணிந்தது; தணியவே இம் மன்ன னது மன நிலையை எண்ணி மதிப்பு மீக் கொண்டார். ஒருவன் அயலிடம் புகுந்து இடைஞ்சலான இடத்தில் தனியே அஞ்சாது நின்று படை நிலைகளையும் கவனியாமல் பல பேருடன் பொருது வென்று தலைமையோடு தாவிப் போயுள்ளானே! என்று அப் போர் வீரத்தை நினைந்து நினைந்து பெரிதும் வியந்தார். அங்ஙனம் வியந்து நின்றவர் இப் பிள்ளையை உவந்து நோக்கி "உமது ஜமீன்தார் வேறு ஆள்வலி இன்றித் தம் தோள்வலி ஒன்றாலே தான் அன்று அப் படையை வென்று போனாரா?" என்றார். அவருடைய உரைகளைக் கேட்டதும் உள்ள நிலையை யுணர்ந்து பிள்ளை உறுதி மீக்கொண்டு உரிமையுடன் நின்று தம் அரசின் அருந்திறலாண்மையை அத் துரைகளிடம் முறையே விரித்து மிகவும் புகழ்ந்து பேசினார். அப் பேச்சுகள் அங்குள்ளவர்களின் உள்ளங்களைக் கவர்ந்தன. நல்ல உணர்ச்சிகளை நன்கு விளைத்தன.

பிள்ளை பேசப் பேச அவ் வெள்ளைத்துரைகள் இம் மன்ன னது வீர நிலையைக் குறித்து உள்ளே ஆர்வம் மீக்கூர்ந்தார். ஒரு தனி மனிதன் சூழநின்று சுட்ட பட்டாளத்தையும் மதியாமல் எதிர்த்தவர் எல்லாரையும் தொலைத்து யாருக்கும் எட்டாமல் ஓர் ஊறும் ஒட்டாமல் நேரே நின்று வென்று போயுள்ளானே என்று அன்று இக் குலவீரர் கொன்று போன திறலையும் விறலையும் நினைந்து மிகவும் வியந்து நின்றார். அவர்களுடைய வியப்பு நிலையையும், உள்ளுற நயப்புற்றுள்ள வகையையும் இவர் நன்கு தெரிந்து கொண்டார்; கொள்ளவே உள்ளந் துணிந்து உவந்து நின்று இப்பிள்ளை மேலும் வியந்து பேசலானார்.

பிள்ளை:—அருமைத் துரைகளே! அவர் அசகாய சூரர். அரிய போர் வீரர். அருந்திறலுடன் பெருந்தன்மையுமுடைய வர். நம்பினார்க்கு இனியராய் நயமே புரிவார்; வம்பு செய்ய நேரினோ தீயெனக் கொதித்து நோய்மிகச் செய்வார். கும்பினி யாரின் அருமை பெருமைகளை மதித்து ஆணைக்கடங்கி உரிமை யுடன் அன்பு கொண்டிருந்ததனாலேதான் அவ் வீரச் சிங்கம்

எதிரே கிடைத்தவரை மட்டும் அன்று அவ்வளவில் கொன்று போனது: இன்றேல் கொலைகள் பல அங்கே குவிந்திருக்கும்.

துரைகள்:—அப் போரில் அவர் தூரம் நின்று சுடுதற்குரிய வெடி முதலிய சுடு கருவிகள் ஏதாவது வைத்திருந்தாரா?

பிள்ளை:—வெடி இல்லை. வேட்டும் இல்லை; ஈட்டியும் சுருட்டு வாளும் தாம் அவ்வமையம் அவரிடம் இருந்தன.

துரைகள்:—பிடிவாளால் அவ்வளவு படைகளை வெல்ல முடியுமா? நீர் சொல்லுவது மிகவும் அதிசயமாக உள்ளதே!

பிள்ளை:—மெய்யாகச் சொல்லுகின்றேன் துரைகளே! அவர் கைவாளை நோக்கின், எதிரியின் வாழ்நாளைக் காலன் நோக்குவான். அவர் வேலாயுதக் கடவுளின் மேலான அருள் மிகப் பெற்றவர். வாளாயுதம் முதலியன யாதும் இல்லாமல் தம் தோள்வலியாலேயே எவ்வளவு ஆள்வலிகளையும் அவர் தொலைக்க வல்லவர். உள்ளதையே உறுதியாகச் சொல்லுகிறேன்; அவ் வீர வள்ளலைக் கண்டவரெவரும் இத் தீர நிலையை நேரே தெரிவர்.

துரைகள்:—அவர் இங்கே வருவாரா?

பிள்ளை:—சமுகத்திலிருந்து ஒரு கடிதம் போனால் உடனே வருவர். தடை யாதும் இராது.

துரைகள்:—இடையே இகல் விளைந்துள்ளமையால் அவர் ஐயுற்றுத் தடை சொல்லவும் கூடும். நாம் அவரை இங்கே நேர் முகமாய்க் கண்டுகொள்ள ஆர்வமாய் விரும்பி யிருக்கின்றோம்; ஆகையால் நீரே நேரில் போய் அவரை அழைத்து வரலாமா?

பிள்ளை:—துரைகள் எப்படி உத்தரவு செய்தாலும் அப்படியே செய்யக் காத்திருக் கின்றேன்.

இப்படி உடல் வளைந்து உள்ளங்குழைந்து பிள்ளை உரைத்து நிற்கவே இவரது விநயமான இனிய மொழியையும், பணிவுடைமையையும் கண்டு அவர் உவகை மீக்கொண்டார். யாண்டும்

இணங்காமல் வணங்கா முடியனுய் மீறி நின்ற ஒருவன் வலிய வந்து தம்மை அடைந்து அடங்கி நிற்க நேர்ந்தான் என்பதை அவ்வெள்ளை அதிபதிகள் உள்ளுற நினைந்து உவந்து நின்றமை யால் இம் மதியுடைய பிள்ளைக்குப் புதிய நல்ல வெள்ளை யுடைகளைக் கொடுத்து உடுக்கச் செய்து, வழிச் செலவுக்குச் சிறிது பொருளும் உதவி, ஒரு குதிரையும் தந்து "இருதினம் இளைப்பாறி யிருந்து பின்பு போய் உம்முடைய ஜமீன்தாராகிய கட்ட பொம்மு நாயக்கரை இங்கேஅழைத்து வாரும்" என்று அனுப்பி வைத்தார். அவ்வமயம் தானுபதிப் பிள்ளைக்கு உண்டான மகிழ்ச்சியை யார் சொல்ல வல்லார்? தலை போய்விடும் என்ற நிலைமையில் படுமோசமாய் ஒரு புறமே ஒதுங்கி அநாதரவா யிருந்த வழக்குத் தனக்கு அநுகூலமானதும், ஆதரவமைந்ததும், புகழோடு பொருளும் கிடைத்ததும், மேலும் உறவுநலங் கனிந்து பெருமை யுற வுள்ளதுமாகிய உறுதி நலங்களையெல்லாம் நினைந்து நினைந்து பிள்ளை உள்ளங் குளிர்ந்தார். உவந்தெழுந்தார். வெள்ளை அதிகாரிகள் எல்லாரையும் வியந்து புகழ்ந்து "கும்பினிஆணையின் மேல் போய் என் நம்பியை இங்கே அழைத்து வருகின்றேன் அருமைத் துரைகளே! விடை அருளுங்கள்" என்று வணங்கி வாழ்த்தி வெளியே வந்து வசதியான இடத்தில் வதிந்திருந்தார்.

கும்பினியார் குறித்திருந்தது.

அங்ஙனம் அவர் நீங்கவும் சங்க அதிபதிகள் அங்கு நடந்த விசாரணைகளை யெல்லாம் நன்கு ஆலோசித்துப் பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்தார் வந்தால் நேரில் கண்டு நேர்ந்துள்ளதை மேலும் தெளிந்து எல்லாவற்றையும் முடிவு செய்துகொள்வோம் என்று ஒருமுகமாய் உறுதி செய்து பொறுதியா யிருந்தார்.

இங்ஙனம் அவர் இருக்க முன்பு தூத்துக்குடியிலிருந்து டேவிசன் விடுத்திருந்த கடிதம் அன்று மாலை 6 மணிக்கு அங்கு வந்து சேர்ந்தது. தங்கள் நண்பன் அனுப்பியுள்ள நிருபம் என்று தெரிந்து சங்க அதிபதிகள் உவந்து அதனைப் பிரித்துப் பார்த்

தார். உள்ளே கட்டபொம்மைக் குறித்து எழுதியிருப்பதைக் கண்டார். வியந்தார். மேலே விழைந்து சாலவும் உவந்து சதுருடன் நோக்கினர். அக் கடிதநிலையை அடியில் காண்க.

## டேவிசன் கடிதம்.

" அருமை ஐயன்மீர்! கண்ணியம் வாய்ந்த தங்களுக்கு ஒரு கடிதம் எழுதும்படி வாய்த்த இச்சந்தர்ப்பத்தை நான் எண்ணி இன்புறுகின்றேன். இங்கே நண்ணியுள்ள பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்தார் நல்ல சுத்தவீரர். பரம்பரையாய் இத்தென்னாட்டில் சிறந்திருந்து தனியரசு புரிந்துவரும் இனிய மரபில் வந்தவர். வஞ்சனையும் சூதும் நெஞ்சறியாதவர். காலம் கண்டு, இடம் நோக்கிச் சமயம் பார்த்து இச்சகம் பேசி இதமாய் நடந்து தம் காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் சிலர் போல் அவர் யாண்டும் கொச்சை இயல்பு கொள்ளாதவர். எவர்க்கும் வசமாய் அடங்கி இளிவாக இணங்கிப்போகும் எளிய தன்மையின்மையால் வணங்காமுடியன் என இவ்வையஞ் சொல்லும்படி அவர் வாய்ந்து நின்றார். அவரது நிலை தகவு மிக வுடையது.

உடனிருந்து பழகி ஊன்றி நோக்கினல் உயர்ந்த குணங்கள் பல அவரிடம் நிறைந்திருப்பதை நேரே காணலாம். பழகினர்க்கு உயிரையும் கொடுக்கும் உரிமை யுடையவர். தாம் பிடித்ததைச் சாதிக்குந் தன்மையும், தம்மை அடுத்தவரை ஆதரிப்பதில் என்ன அல்லல் நேர்ந்தாலும் தளர்ந்துவிடாத திண்மையும் அவரிடம் இயற்கையாகவே அமைந்துள்ளன. அவரது இயல்பு அறிந்து உறவுகொண்டார்க்கு எளியராய் நின்று எல்லா வுதவிகளையும் அளியுடன் செய்வார். அவரை நயமாக அணைத்துத் தனக்குத் துணை செய்துகொள்ளாமல் நமது ஜாக்சன் இகல் கொண்டு இடர் செய்துள்ளமையால் இராமநாதபுரத்தில் இருவருக்கும் பெருங்கலகம் விளைந்திருக்கின்றது. அவ்விளைவின் மூலகாரணத்தை ஆராய்ந்து நோக்கிப் பாரபட்சம் பாராமல் நீதிசெய்வது கும்பினியாரின் குலக்கடமையாகும். அயல்நாட்

டிலிருந்து வந்துள்ள நாம் இந் நாட்டின் இயல்பறிந்து வலி தெரிந்து இதமாய் நிற்றல் நலமாம். நாம் நன்முக அரண் கொள்ளுமுன் யாண்டும் முரண் கொள்ளலாகாது. பாளையகாரருள் தலைமையாயுள்ள அக் குலவீரரை இவ்வேளையில் நாம் இதமாய் வணக்கித் துணையாக்கொள்ளின் நம் ஆட்சி மிகவும் மாட்சிமை யடையும். அடுத்திருந்து நெடுநாளாக அவரது உண்மையை அறிந்துள்ளமையால் இவ்வண்ணம் எடுத்து எழுதலானேன். பிழையிருந்தால் பொறுத்துக் கொள்ளுங்கள். நம் சங்க அரசு எங்கும் பங்கமின்றி வாழத் தேவனைப் பிரார்த்தித்திருக்கின்றேன்." என இங்ஙனம் உரிமையுடன் எழுதியிருந்த அவ் அருமைக் கடிதத்தைஆவலோடு முழுவதும் படித்தறிந்து தலைமை அதிகாரிகள் எல்லாரும் ஒருங்குகூடி இவருடைய நிலைமைகளை நீள நினைந்து ஆழமாக ஆலோசித்தார். ஒரு கறுப்பு மனிதனைக் குறித்து நம்மவன் இவ்வளவு தூரம் புகழ்ந்து எழுதுவதென்முல் அவன் எவ்வளவு உயர்ந்தவனு யிருப்பான்! என்று உள்ளுற எண்ணி அவர் உவந்து வியந்தார். இவ் வீர மன்னனை நேரே காணவேண்டும் என்று அவர் கருதியிருந்த ஆசை பெருகி வளர்ந்தது. மறுநாளே டேவிசனுக்கு ஒரு கடிதம் எழுதினுர்.

"தாங்கள் நண்புகூர்ந்து அனுப்பிய நிருபம் வந்தது. விவரம் முழுவதும் தெரிந்து அனைவரும் உவகை கூர்ந்தோம். அப் பாளைய காரரை நேரே கண்டு மகிழ வேளையை எதிர்நோக்கி நாம் விரும்பியிருக்கிறேம். கூடுமாஞல் அவரை இங்கே அழைத்துக்கொண்டு வரவும். மற்றவை நேரில்." என இவ்வாறு சுருக்கமாக எழுதி அனுப்பி மேலே நிகழ்வதை அவர் வருக்கமாக எதிர்பார்த் திருந்தார். இந்த வீர மன்னனை நேரே காண வேண்டும் என்ற ஆவலும் மதிப்பும் கும்பினி அதிபதிகளிடம் அது பொழுது குதூகலங்களாய்க் குலாவி நின்றன. அந்த அன்பு நிலையில் புதுமை விளைவுகள் இனிது பொலிந்திருந்தன.

நீதி மன்றத்தில் நடந்த விசாரணைகள் யாவும் யாதொரு முடிவுங் கொள்ளாமல் ஆலோசனையில் அமர்ந்து நின்றன.

---

## பதினொராவது அதிகாரம்.

## பிடியுண்ட பிள்ளை மீண்டு வந்தது.

---

முன்பு துரைகளிடம் விடைபெற்று முறையே வெளி வந்த தானுபதிப் பிள்ளை திருச்சிராப்பள்ளியில் மலைக்கோட்டை அருகே ஒரு வீட்டில் தங்கி இரண்டு நாளாக இளைப்பாறி யிருந்தார். தமக்குக் காரியம் அநுகூலமானதை நினைந்து களிப்பு மீக்கூர்ந்து தாயுமானவர் கோவிலுக்குப் போய் அருச்சனை ஆராதனைகள் புரிந்து சுவாமி தரிசனம் செய்து கொண்டு நல்ல நேரம் பார்த்துக் குதிரையி லேறித் தென் திசை நோக்கிப் புறப்பட்டு விரைந்து வந்தார். வரும் வழியில் இடையே திருமங்கலத்தில் இறங்கி நாகம ரெட்டியார் என்னும் தனிகர் வீட்டில் ஒருநாள் தங்கி யிருந்தார். அங்ஙனம் இருக்குங்கால் பிள்ளை நெஞ்சில் சில சந்தேகங்கள் துள்ளி எழுந்தன. "வெள்ளையர்கள் மிக்க சூழ்ச்சி யுடையவர்கள்; காரிய சாதனையில் கைதேர்ந்தவர்கள்; நம் வீரிய மன்னனை நேரில் அழைத்து வரும்படி ஆவலோடு என்னை ஏவி யுள்ளனர். என்ன நோக்கமோ? முன்னம் நேர்ந்தது போல் இன்னமும் நேருமோ ? இராமநாதபுரத்தில் தப்பிப் போய்விட்டான் ; இங்கே தப்பாமல் வேலையை முடிக்கவேண்டுமென்று பலத்த படைகளைப் பக்க பலமாக வைத்துக்கொண்டு சதி செய்யவும் கூடுமே! அதிகாரிகளை எப்படி நம்புவது? ஆனால் சொல்லிலும் செயலிலும் நல்லவர் என்று தெரிகின்றது; பொல்லாத நிலை ஒன்றும் தோன்றவில்லை. அப்படியே மாறுபட்டாலும் அந்த வீர மடங்கலை யார்தான் என்ன செய்ய முடியும்? ஆனதை நேரே போய்ச் சொல்வோம்; ஆவது ஆகட்டும்" என இன்னவாறு பல பல எண்ணி யுளைந்தார். வீரமும் விநயமும் மிகவும் உடையவராதலால் இங்ஙனம் ஐயங்களில் உழந்து அலமந்து நின்றார். பின்னர் எழுந்தார். பெரிதும் விரைந்து

பெருவழி கடந்து நாலாம் நாள் மாலை ௫ மணிக்குப் பாஞ்சாலங் குறிச்சியை வந்தடைந்தார். வடக்குக் கோட்டை வாசலில் குதிரையை விட்டு இறங்கவும் பிள்ளை வந்துள்ள செய்தியை உள்ளே இருந்த இவ் வள்ளலுக்கு அறிவித்தார். உடனே இவர் பேராவலோடு விரைந்து வெளியே வந்து பிள்ளையைக் கண்டார். பண்டு முதலையுண்ட பிள்ளை மீண்டுவரக் கண்ட தாய் தந்தையரைப் போல் வெள்ளையர் கையில் நின்று மீண்டு வந்த அப் பிள்ளையைக் கண்ட அளவில் இவ் ஆண்டகை கொண்ட உவகைக்கு அளவே யில்லை. மாண்டே போவார்; மீண்டு வாரார்; என மனத் துயருடன் மறுகி யிருந்த இவர் அவ் வுரிமையாளர் வரவும் உள்ளங் குளிர்ந்து உள்ளே கொண்டுபோய் அருகிலிருத்தி ஆர்வம் மீதூர்ந்து "எங்கிருந்து வருகிறீர்! என்ன நிகழ்ந்தது? எப்படித் தப்பினீர்?" என இப்படி வியப்பும் விம்மிதமும் மிகுந்து விரைந்து வினவினர். வினவவே விநயமாக இவரை உவந்து நோக்கி "எல்லாம் செந்திலாதிபன் கிருபையும், இந்த இடத்தின் மகிமையுமே நான் மீண்டு வந்து இங்கே சமுகத்தைக் கண்டுகொள்ளச் செய்தன. அங்கே நடந்த கதைகள் மிகவும் நீண்டன; பட்ட பாட்டுக்கெல்லாம் நல்ல பலன் கிடைத்துள்ளது" என்று பிள்ளை சொல்லி மேலும் சொல்ல வாய் திறந்தார். அவ்வமயம் அங்கே தூத்துக்குடியிலிருந்து டேவிசன் துரை வந்தார். இத் துரை பேராச்சரியமும் பெரு மகிழ்ச்சியும் அடைந்து உவந்து அழைத்து உள்ளே கொண்டுபோய்ப் பக்கத்தே தக்க ஆதனத்தில் அமர்த்தி மிக்க மரியாதை செய்து "ஆபத்து வந்தாலும் சம்பத்து வந்தாலும் தனியே வராது; திரண்டுதான் வரும்" என்னும் பழமொழி ஈண்டு நினைவுற வருகின்றது. பிள்ளையும் நீங்களும் உள்ளமும் உயிரும் போல் இங்கே ஒருங்கே வந்துள்ளமை பெரும் பாக்கியமேயாம் என்று உவகை யுரையாடி உவந்திருந்தார். புதியராய் வந்த அந்த இருவரும் அதிசயமுடன் ஒருவரை ஒருவர் விழைந்து நோக்கிக் குசலம்

விசாரித்துக் குதூகலத்தோடு குலாவி அமர்ந்தார். அதன் பின் பிள்ளையைப் பார்த்து இவ் வள்ளல் தூண்ட அவர் உள்ளம் உவந்து அங்கே உற்ற நிலைகளை எல்லாம் மேலே சொல்லலானார்.

### தானாபதி தப்பி வந்தமை சொன்னது.

"இராமநாத புரத்தில் போர் மூண்ட பொழுது மேல் மாடத்தில் நான் பொறிகலங்கி நின்றேன். நீங்கள் பொருது வென்று போகவும் அருகு நின்ற மல்லர்கள் இறுக வந்து என்னைப் பிடித்துக்கொண்டார். நான் மறுகி யிருந்தேன். போரில் வெருவி ஒளிந்த ஜாக்சன் பிறகு வந்து என்னைக் கண்டான்; என் உயிரைப் பருகிவிடுபவன் போல் படு சினங்கொண்டான். கொடுமையாக வடுவுரைகளாடி என்னை வைதிகழ்ந்தான். நானும் எதிர்த்துப் பேசினேன்; பேசவே அவன் கொதித்து எழுந்து என்னைக் கொடுஞ் சிறையிலிட்டுப் பட்டினி போட்டுப் பதைக்கச் செய்தான். வாரம் இரண்டு கழிந்தபின் என்னைத் திருச்சிராப்பள்ளிக்கு அனுப்பினான். அவனும் உடன் வந்தான். அங்கே துணைப்பலம் கொண்டு அவன் துணிவுற்று நின்றான். அயலிடம் ஆயிற்றே! என்ன நேருமோ? என நான் ஏங்கி யிருந்தேன். குறித்த காலம் வந்தது. கும்பினித் தலைவர்கள் எங்கள் இருவரையும் எதிர் நிறுத்தி நிகழ்ந்ததை உசாவி நீதி விசாரணை செய்தனர். நியாய வாதங்கள் நெறிமுறையே நடந்தன.

முதலில் ஜாக்சன் எழுந்து தனக்கு அனுகூலமாகவும், நம் இடத்துக்கு இடையூறாகவும், சமர்த்துடன் அமைத்துப் பேசினான். பின்பு என்மேல் பிழைகளை ஏற்றிப் பெரிதும் தூற்றினான். எல்லா வம்புகளும் என்னாலேதான் விளைந்துள்ளன என்றும், வெள்ளையரை இகழ்ந்து அல்லல் பல செய்கின்றேன் என்றும், பொல்லாதவன் என்றும், மூண்ட சண்டைக்கு மூலகாரணம் நானே என்றும் என்னைக் கொலைத் தூக்கில் இடும்படியான நிலையில் பழிகளைத் தூக்கி என்தலையில் சுமத்தினான். அவன் கூறிய சொற்களைக் கேட்டதும் துரைகள் எல்லாரும் பற்களைக் கடித்து

என்னைச் சினந்து பார்த்துச் செய்த குற்றங்களுக்கு உய்தி என்ன? என்று உருத்துக் கேட்டார். நான் தெய்வமே துணை என்று துணிந்து நின்று நடந்தவற்றை யெல்லாம் தொடர்ந்து எடுத்து ஆதியோடந்தமாக அவர் உணர்ந்து கொள்ளுமாறு பணிந்து மொழிந்தேன். மேலும் அங்கே நான் பட்டினி கிடந்ததையும், பட்ட பாட்டையும், கட்டியிருந்த அழுக்கு வேட்டியை இழுத்துக் காட்டிப் பழித்துயருடன் பதைத்து உழந்ததையும், ஜாக்சன் துரை அநியாயமாய் அலைக்கழிவு செய்து கொலைப்பழி விளைத்ததையும், தங்கள் மான வீரங்களையும் சங்க மன்னர் மனங் கொள்ளும்படி மறுகி யுரைத்தேன்; உரைக்கவே அவர் உள்ளம் இரங்கி உணர்ந்து தெளிந்து தங்களை நேரில் காண ஆசை மீக் கூர்ந்து பொருளும் பரியும் பொருந்த உதவிச் சமுகத்தை அங்கு அழைத்து வரும்படி என்னை இங்கு அனுப்பி யருளினார்" எனத் தமது வரவு நிலையுடன் வரவிருக்கும் உறவு நிலையையும் உணர உரைத்தார். அவருடைய மொழிகள் உணர்ச்சி ஒளிகளை வீசின.

அவ்வுரைகளை அறிந்ததும் உடனிருந்த டேவிசன் துரை உளம்மிக மகிழ்ந்து இவ் அரசை நோக்கி "அண்ணலே சங்கத் தலைவர் தங்களை நேரில் காண விழைந்து எனக்கு அனுப்பியிருக் கும் நிருபம் இது; நெருநல் வந்தது" என உரிமையோடு காட்டினார். நேர்ந்துள்ள நிலைகளை யறிந்து மன்னர் மகிழ்ச்சி மீக்கூர்ந்து இனி நாம் என்ன செய்யவேண்டும்? என அவ் இருவரிடமும் இனிது உசாவினார். உசாவவே "நாம் அனைவரும் நேரே சென்று பேரரசாயுள்ள கும்பினித் தலைவர்களைக் கண்டு பெரு நட்புக் கொண்டு உற வுரிமையுடன் மீளவேண்டும்; வேளையை வீண் கழிக்கலாகாது; நாளை நின்று நல்ல வேளையில் புறப்பட வேண்டும்" என்று டேவிசன் துரை சொன்னார். பிள்ளையும் அவ் வாறே உள்ளந் துணிந்து உறுதி பகர்ந்தார். அங்ஙனம் பகரும் பொழுது கோவிலில் இயல்பாக நகரா முழங்கியது; அம் முழக் கத்தைக் கேட்டு நல்ல சகுனம் இது; வீரியத்துடன் காரியசித்தி யாகும் என்று அங்கு நின்றவர் எல்லோரும் சேர்ந்து சொல்லி

னர். இவ் வள்ளல் உள்ளம் உவந்து திரிசிரபுரம் செல்ல இசைந் தார். குறித்த நாழிகை வந்தது. பிரயாணத்திற்குரிய ஆயத்தங்க ளெல்லாம் அமைவுடன் ஆயின; பரிவாரங்கள் எழுந்தனர்; படை வீரர்கள் திரண்டனர். குடை கொடி விருதுகள் குலாவி ஓங்கின. அடலாண்மையுடன் ஆரவாரங்கள் பெருகின.

## திரிசிரபுரம் சென்றது.

அரசர் பூசனை புரிந்து முருகனை உருகி நினைந்து உள்ளன் புடன் துதித்து அயலெழுந்து உணவருந்தி அரச கோலங்கள் புனைந்து, உள்ளாயுதம் ஒன்று உடை யுட் பொதிந்து, அரண் மனை யிடையிருந்த செச்சையில் வந்தமர்ந்து, அருகே நின்ற மாமனை நோக்கி "யாம் இங்கே வரும் வரையும் பதியை நன்கு பாதுகாத்து வருக" என்று பணித்து, எங்கும் துதிகள் பொங்கி முழங்க அதிக ஆடம்பரங்களுடன் வெளியே வந்தார். இவரைக் கண்டவுடனே சந்திரனைக் கண்ட கடல் என அங்கு நின்ற படைகளெல்லாம் நெடுங்களி கொண்டன. காவலர் ஆவலுடன் வழி விலக்கினர்; விழுமிய நிலையில் அவண் அலங்கரித் திருந்த சிங்கமுகத் தண்டிகையில் இச் சிங்க ஏறு ஏறவும், எங்கணும் இன்னொலிகள் எழுந்து மீறின. டேவிசன் துரையும், தம்பியரும், தானுபதியும் உயர்ந்த பரிகளில் ஏறினர். படை வீர ரெல்லாரும் அடைவே எழுந்தார். உரிமையானவர் இருமருங்கும் அருகே வரத் தானை ஏகத் தண்டிகை நடந்தது. கருந்தூளும் செந்தூளும் கலந்து வான் மண்டப், பெருந் திரளுடன் நடந்து, அருந் திறலாளர் வருகின்றார் என இடை யிடையே பாளையகாரர் பரிந்து வந்து விருந்து புரிய ஆங்காங்கு அருந்தி அமர்ந்து திருந் திய சீருடன் இவர் திருச்சிராப்பள்ளியை அடைந்தார்.

மன்னவன் திருச்சியை மருவ முன்னுற
இன்னியம் முழங்கவும் இனிய காளங்கள்
துன்னிய இசைகளைத் தொனிசெய் தேகவும்
மன்னிய புகழுடன் மகிழ்ந்து வந்தனன்.

## பன்னிரண்டாவது அதிகாரம்.

## துரைகள் நட்பானது.

---

இவரது வரவினை அறிந்ததும் கும்பினி அதிபதிகள் நம்மை நம்பி வந்தாரே என்று உளம்மிக வியந்து உவந்து அழைத்து உபசரித்து அரச மாளிகையில் அமர்ந்து அனைவரும் அளவளாவியிருந்தார். டேவிசன் துரையும் தம்பியரும் தானுபதியும் உடனமர்ந் திருந்தார். இவருடைய உருவ அமைதியையும் பெருமித நிலையையும், வீரப் பொலிவோடு விளங்கி மிளிரும் திருமுகத் தெளிவையும் ஒரு முகமாய் நோக்கி அவரனைவரும் உள்ளங் களித்தார். ஆளுக்கு ஆள் ஆசை கொள்ளத் தக்க கட்டழகுடன் திண்டிறல் மிகுந்து யாண்டும் கம்பீரமாய்க் கதித் திருந்தமையால் கண்டவர் எவரும் இவர் கைவச மாயினர். மருவலரும் பருகு காதலோடு மருவ நேர்ந்தமையால் உருவின் பெருமை அங்கு உணர நின்றது. "* உருவு திருவூட்டும்" என்னும் அருமை மொழி ஈண்டு நன்கு நினைவுற அமைந்தது. இவ்வண்ணம் இவரை நேரில் கண்டு களித்தவர் முன்னம் போரில் நிகழ்ந்த புலனறியத் துணிந்து "இராமநாதபுரத்தில் நடந்த காரியம் என்ன?" என்று இவரிடம் இதமுடன் கேட்டார். அவ்வுரை வரவும், துரைகளை உறவுடன் உவந்து நோக்கி "அது நடந்துபோன காரியம்; ஈண்டுத் தொடர்ந்து நினைத்தால் துயரமாகும்; வழிமுறையில் வராத இளிவரவை வளர்த்து, என்மன நிலையைக் கெடுத்துச் சினமிகச்செய்து கண்ணியம் வாய்ந்த கும்பினியாருக்கும் எனக்கும் வெம்பகை விளையும்படி நண்பர் ஜாக்சன் அவர்கள் விரகுபுரிந்து அடாதன செய்து படாதபாடு

---

*பழமொழி 106. இங்கே திரு என்றது செல்வம் சிறப்பு காரிய சித்தி முதலிய அநுகூலங்களை. ஊட்டும் என்றது அரிய நலங்கள் யாவும் எளிதில் கொண்டுவந்து கூட்டும் என்றவாறு. "உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலும் அரிதே" (சீவக சிந்தாமணி 2752) என்றதனால்அவ் உருவம் பெறலரும் பேறுயுள்ளமை இனிது புலனும்.

படுத்திவிட்டார். அவரை நோவதில் யாதும் பயன் இல்லை; அன்று அவர் சொல்லை நம்பி வழி முழுவதும் தொடர்ந்துபோன என் பழிவினையே அவ் இழிவினை விளைத்தது; விழுமிய உங்கள் பெருந்தகைமையை நினைந்து கழிவில்நேர்ந்தஅழிவுகளையெல்லாம் மறந்து வழி முழுதும் கடந்து நேரே கண்டு மகிழ்ந்து கருணை பெற வந்துள்ளேன்" என்று கெழுதகைமை தோன்ற இவர் அழுகுடன் மொழிந்தார். அவ்வுரைகளைக் கேட்டதும் துரைகள் உளம் மிக வுவந்தார். முன்னைய டேவிசன் கடிதமும், பிள்ளையின் வாக்குமூலமும், இம் மன்னன் உரையும் ஒரு முகமாய் மருவி யுள்ளமையான் முன்னம் நிகழ்ந்திருக்கும் நிலைகளையும், இவரது உண்மையையும், திண்மையையும் உறுதிபெற அவர் ஓர்ந்து உணர்ந்து கொண்டார். கொள்ளவே, தள்ளருந்திறலுடைய இவரது உறவை நயந்து உரிமை மிகுந்து தனித்தனி விருந்தாற்றி இனித்த மொழிகள் ஆடி இனிதமர்ந்திருந்து "இனி நீர் நமக்கு இனியராய் நின்று என்றும் இதம்புரிந்து வரவேண்டும்" என்று பதம்பெற வுரைத்தார். துரைகள் உரைத்த அவ் வுரைகளைக் கேட்டு இவர் உளம் மிக மகிழ்ந்து கிழமை பகர்ந்தார். "பழமை யான என் நிலைமை குலையாமல் நெறிமுறை தெரிந்து நீதி செலுத்தி வரின் தலைமை அதிபதிகளாகிய தங்கள் ஆணையை யான் யாண்டும் கடவேன்; வேண்டும் உதவிகளை விழைந்து புரிவேன்; கும்பினி அரசுக்கு இடையூறாக யாரேனும் தடை செய்ய நேரின் யானே நேரெதிர்ந்து அவரை நிலையழித்து இங்கு நலமுறச் செய்வேன்; பல பல கூறி என்? உலகறிய நின்று எந்நிலையிலும் தளராமல் கும்பினிக்கு உறுதியா யுழைப்பேன்; இது வான் அறிய மண்அறியச் சொன்ன உண்மை" என ஆணை கூறித் தந்தார். இவ்வாறு ஒத்துழைக்க இவர் உறுதி செய்து தரவும், இத்தகைய சுத்த வீரன் துணை அமைந்தது தங்களுக்குப் பேருறுதியாமென அவர் பெரிதும் மகிழ்ந்தார். இவரது உரை களையும் உறவுரிமைகளையும் பாராட்டி உள்ளங் குளிர்ந்தார். நல்ல தீரன் என்று நயந்துட் புகழ்ந்தார். இங்ஙனம் உரிமை

மிகுந்து உறவுகொண்டாடி இரு வாரங்களாக அங்கு இவர்க்குப் பெருவிருந்துகள் செய்தார். கும்பினிக்கு அமைந்திருக்கும் நில வுரிமையையும், இந்த நாட்டிலுள்ள பாளையகாரர்களுடைய நிலைமைகளையும், வரி வரவுகளையும், மேலே புரிய வேண்டிய நெறி முறைகளையும், இவருடன் நேர்ந்து பேசி ஓர்ந்து உரிமை செய்ய உறுதி புகன்றார். மாலை வேளைகளில் சாலை வழிகளில் உல்லாசமா யுலாவிச் சல்லாப வுரைக ளாடினர். அவ்வண்ணம் இன்ப நலங்கள் நுகர்ந்து இனிய மொழிகள் பகர்ந்து கனியும் நண் புடன் இனிதமர்ந்து வருங்கால், குதிரை ஏற்றத்தில் இவர் மிகவும் வல்லவர் என்பதை டேவிசன் மூலம் அறிந்தார். ஒரு நாள் அந்த ஆடலைக் காண யாவரும் ஆர்வமுடன் விழைந்தார்.

அவ் விழைவினை இவரிடம் உறவுடன் உரைத்தார். இவர் சரி என இசைந்தார். குறித்த வேளை வந்தது. அதிவேக முள்ள பரிகளை ஆராய்ந்து அவற்றுள் ஏழு குதிரைகளைத் தெரிந் தெடுத்து வெளியே கொண்டுவந்து நிறுத்தினர். நிறுத்தவே இத் திடவீரர் உடை வரிந்து கட்டி விடை என வெளிவந்தார். வரவே வாசி ஏற்றத்தின் வாசி காண ஆசை மீக்கூர்ந்து வாதுவர் பலர் தம்முள் வாது பேசி வந்தார். அவ் ஆடற் காட்சியைக் கண்டு மகிழப் பல்லாயிரக் கணக்கான சனங்கள் அங்குத் திரளாக வந்து கூடிப் பேராவலோடு பெருகி நின்றார்.

துரைமார்கள் நிரைநிரையே ஆசனங்களில் நிறைந்திருந்தார். வெறி ஏறிய புரவிகள் அரி ஏறுகள் என வெளி வந்து நின்றன. அவற்றின் ஏற்றமும் தோற்றமும் இசை மிகுந்து விளங்கின.

## குதிரை ஏற்றம்.

வையாளி வீதியில் ஒய்யாரமாய் வந்து காதுகளை நெறித்துப் பெருமிதத்தோடு கடுவேகந் தெரியக் கதித்து நிற்கும் அப்பரி களைப் பார்த்தவுடனே இவற்றின் அருகு போவது யார்? அம்மா! என அனைவரும் அதிசயித்து நின்றார். அந்நிலையில் இம் மன்னர் புகுந்தார். செண்டு வெளியில் மடங்கலேறென மண்டியெழுந்த

இவரது திண்டிறல் நிலையை நோக்கிக் கண்டவர் திகைத்தார். அருகே அணுகவு முடியாதென அச்சம் விளைத்து உச்ச நிலையில் நின்ற அப்புரவிகளுள் ஒன்றின்மேல் இப் போர்வீரர் தாவிப் பாய்ந்து தட்டிவிட்டார். விடவே குயவன் திகிரிபோல் நிலை ஒன்றும் தெரியாமல் அவ்வயமா வாவி எழுந்தது. ஆவி போவது காணுமல் வாவித் தாவிய அது இருமுறை சுற்றுமுன் இளைத்து நின்றது. இவர் அதனை இகழ்ந்து விடுத்து மற்றொரு குதிரை மேல் விரைந்து தாவினர். அது பறந்தெழுந்தது. வானிடை வாவிவரும் விஞ்சையன் போல இக் கோனெடு குலாவி வந்த அது சிறிது பொழுதில் கொட்டநுரை தள்ளித் தட்டழிந்து நின்றது. அதனை எள்ளிவிட்டு மற்றொரு புரவிமேல் இம் மன்னர் துள்ளி ஏறினர். அது கொள்ளிவட்டமும் காற்றுடி யும் போல் உள்ள நிலை ஒன்றும் தோன்ற வகை உயர் வேகத்து டன் சுற்றி வந்தது; சற்று நேரத்தில் எய்த்து நின்றது. அதனை எற்றி அகன்று மற்றொன்றின் மேல் தாவி இவர் வாவி வந்தார். அதுவும் இடையே தளர்ந்தது. இவ்வாறே அவ் ஏழும் இளைக்க இவர் யாதும் இளையாமல் மேலும் ஏற வீறுகொண்டு வேள் என நின்றார். ஆளரிபோன்று அடலமைந்து நின்ற இவரது திடநிலையைக் கண்டு அங்கே திரண்டு நின்றவர் யாவரும் வியந்து புகழ்ந்தார். குதிரை ஏற்றத்தில் வல்லவரான வெள்ளைக்காரத் துரைகள் எல்லாரும் இவருடைய திறலினை மெச்சித் தீரன் என வியந்தார். ஊரெங்கும் இவர் பேர் பேரன்போடு பேச நின்றது.

இவ்வாறு யாரும் போற்றச் சீரும் சிறப்பும் எய்தி இவ் வீர மன்னர் விறலொடு நின்றார். அதன்பின் சங்க அதிபதிகள் தென்னாட்டுச் சிங்கம் எனச் சிறப்புரை பகர்ந்து இரண்டு தினங் கள் கழிந்தபின் தம்முட் கலந்து ஆராய்ந்து இவருக்குச் சிறந்த வெகுமதிகள் செய்ய விழைந்தார். சிறப்புகளை நாடினர்.

## கும்பினியார் கொடுத்த வரிசைகள்.

இம் மன்னருக்கு இன்னுயிர் நண்பரான டேவிசன் துரை யொடு ஆலோசித்துத் தங்கள் ஞாபகம் என்றும் மறவாது

இருக்கும்படி மதித்து உயர்வான வரிசைகள் இவருக்கு உரிமையுடன் துரைமார்கள் செய்யலானூர். ஆறுயிர ரூபாய் விலை மதிப்புள்ள ஒரு முத்துமாலையை இவருடைய கழுத்தில் அணிந்தார். சங்க முத்திரை பொறித்ததும், இருபுறமும் கூர் உள்ளதுமான வடிவாள் ஒன்று கொடுத்தார்; அன்று ஏறியுலாவிய ஏழு குதிரைகளையும் நல்கித் தந்தத்திஞல் செய்த அழகிய ஒரு சிவிகையையும் தந்தார். தங்கள் தொடர்பு எங்கும் எவரும் தெரியும்படி துரைகள் சூடாமணி என்று ஒரு பட்டப் பெயரும் சூட்டிப் பண்பு பாராட்டி நண்புகளை நன்கு நாட்டினூர்.

இங்ஙனம் அணியும் ஆயுதமும் வாகனங்களும் பேரும் பிறவும் பிறங்கத் தந்து சீர் செய்தருளிய அப் பேரரசரது பெருந்தன்மையை நினைந்து பெரிதும் வியந்து உளம் மிக வுருகி இவர் உவகை மீக்கூர்ந்தார். அவ் வள்ளல்களுக்கு என்றும் நன்றியறிவுடன் நின்று இனிது துணை செய்வதே தம் கடமையென நெடிது துணிந்து முடிவு செய்து முடிவில் அவர்களிடம் இவர் விடை பெற நேர்ந்தார். விநய மொழிகள் இனிது பகர்ந்தார்.

## விடை பெற்று மீண்டது.

"ஐயன்மீர்! என்னை ஒரு பொருளாக மதித்துச் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்துச் சீர்பல செய்துள்ள மேலோர்களாகிய உங்கள் முன்னிலையில் இனி யான் யாது சொல்ல வல்லேன். சேய் என நின்று ஆயதைச் செய்வேன். வாய் பேசி ஆவது என்? வந்து நாளாகின்றது; விடையருளுங்கள்" என்று கும்பினித் தலைவரிடம் பண்பு மிகுந்து இவர் நண்புடன் வேண்டினூர். அவர் அன்புரை புகன்று இணங்கி யருளினூர். டேவிசன் துரையும் விடைபெற்றூர். யாவரும் எழுந்தனர். அங்குப் பெற்ற வரிசைகளுடன் பெருமையோடு எழுந்து அவர் தந்த தந்தச் சிவிகையில் இந்த வீரர் ஏறினூர். அருகே புரவிகளில் உரியவர் அமர்ந்தனர். பெரிய ஆடம்பரங்களுடன் சேனைகள்

தொடர்ந்து தென் திசை நோக்கிப் படர்ந்தன. இம் மானவர் சிவிகை மாண்புடன் நடந்தது. மகிமைகள் விரிந்து வந்தன.

இம்மன்னர் இங்கே வரவும் அங்கே கும்பினித் தலைவர் ஜாக்சனை அழைத்தனர். எதிரிகள் முன் வைத்துத் தம்மவனைக் குற்றஞ்சாட்டுதல் குறையாம் என்று அத்துரை மக்கள் குறித்திருந்தார் ஆதலால் இத்துரை மகன் அயல் அகலவும் அவனை முறையுடன் வருத்தினுர். அவன் வந்து நின்றுன். பிள்ளையின் வாக்குமூலத்தோடு மன்னன் வாய்மொழியையும் நேரே அறிந்து கொள்ள விழைந்து காரியம் சூழ்ந்து கருதியவாறே உறுதிபெற வுணர்ந்து உண்மையை முடிவு செய்து கொண்டமையால் திண்மையுடன் அனைவரும் அவனைக் கடிது நோக்கி முடிவுரை பகர்ந்தார். நியாயத் தீர்ப்பு நெறிமுறையே நிகழ்ந்தது.

## கும்பினித் தலைவர் ஜாக்சனை நோக்கிச் செய்த தீர்ப்பு.

"தென்னுட்டின் தலைமை அதிகாரத்தை உனக்குத் தந்திருந்தும் அந்நாட்டின் நிலைமை தெரியாமல் நீ நிமிர்ந்து நடந்திருக்கின்றுய். முன்னம் உன்னை அனுப்புங்கால் கட்டபொம்முடைய நிலைமை முழுவதையும் நேரே உணர்த்தி மாறுபாடு மீருமல் இதமாக நெருங்கி அவரை இனிது வசமாக்கி வரி வரைந்து கருமமே கண்ணுய்க் காரியம் புரிந்து வருக என்று கருத்துடன் விடுத்தும் அதனைச் சிறிதும் கருதவில்லை. நிலையறியாமல் புலை புரிந்து கலகம் விளைத்தாய்; கொலைகள் விழுந்தன. சொல்லிய பொருள் வரவும் இல்லையாய் முடிந்தது. பரம்பரையாய் அங்குச் சிறந்து வந்துள்ள ஒரு பாளையகாரனை வேளையறியாமல் பல இடங்களுக்கும் அலைத்து வெகுளியை மூட்டிய அதனுலேதான் இவ் வினை விளைந்துள்ளது. விநயமில்லாத உன்னை இன்று முதல் இப்பதவியில் நின்று விலக்கியிருக்கிறேம்" என்று விதித்துணர்த்திஞர். உணர்த்தவே அவன் மனங்கலங்கி மாறென்றும் கூருமல் தலைகவிழ்ந்து நிலைகுலைந்து போஞன். போனவன் அந்த அவமானத்தால் அலமந்து நொந்து சில நாளில் பொன்றவும் ஆஞன்.

இங்ஙனம் நீதிநெறி நின்று நேரே நியாயம் செய்த பின்பு முன்பு போரில் இறந்த தளகர்த்தனுகிய கிளார்க்கினுடைய குடும்பத்திற்கும் கும்பினியார் தக்க உதவி புரிந்தனர். அவ்வுதவி நிதியானது அவன் பெற்று வந்த சம்பளத்தின் தொகையளவை நோக்கி அதற்கு இயைய வகுத்து மாதந்தோறும் கொடுக்கப் பட்டது. அக்கொடைப் பொருள் *73 வராகன், 19 பணம் 20 பைசா என்க. அச் சமரில் பட்ட மற்றவர்களுக்கும் உற்ற வுதவிகளை ஓர்ந்து புரிந்து, இராமநாதபுரத்தில் அவ்வமயம் தங்கிக் கிடந்த தண்டிகை முதலிய பொருள்களையும் இத் திண்டிறல் மன்னரிடம் கொண்டுபோய்ச் செலுத்தி விடும்படி பணித்தருளினுர். குறித்தன யாவும் முறையே சிறப்புடன் முடிந்தன.

இதனுல் கும்பினி அதிபதிகளுடைய மதிநலனும், மனநிலையும், வாரம் பற்றுமல் ஆராய்ந்து முறை செய்யும் அருமையும், அடுத்தவரை ஆதரிக்கும் பெருமையும், காலம் கண்டு இடம் நோக்கி இகல் ஒதுக்கிக் கருமமே கண்ணுய்க் காரியம் புரிந்து அரசுரிமையைப் பாதுகாத்துவரும் சீர்மையும், ஓர்மையுடன் ஒத்துழைக்கும் நீர்மையும், பிறவும் அறியலாகும். பின்பு எஸ். லஷிங்டன் (S. Lushington) என்பவரை இப் பாண்டி மண்டலத்திற்குக் கலெக்டராகக் கும்பினியார் நியமித்தார். அவர் பதவியை ஏற்று வந்து பண்புடன் இருந்தார்.

அங்கு இவ்வகை யிருக்க அன்று தென் முகமாய்ப் புறப் பட்டு இம் மன்னர் வருங்கால் இடை வழியில் புதுக்கோட்டை அரசராகிய விஜய ரகுநாத தோண்டைமான் எதிர் கொண்டு கண்டு தமது அரண்மனையில் ஒரு தினமாவது விருந்தினராய் இருந்து போம்படி இவரை விரும்பி வேண்டினுர். அவ்வேண்டு கோளுக்கு இவர் இணங்கியருளினுர். அருளவே மிகுந்த ஆடம்பரங்களுடன் அழைத்துச் சென்று சிறந்த மாளிகையில்

---

* "Government granted his widow a pension of 73 Star pagodas 19 fanams and 20 cash per mensem". (R. G)

இருத்தி உயர்ந்த மரியாதைகளுடன் உவந்து உபசரித்து இவருக்கு அரிய பெரிய விருந்து ஒன்று அவர் ஆர்வமொடு செய்தார். அம் மன்னரது பேரன்பை வியந்து உளம் மிக மகிழ்ந்து ஒரு நாள் இருந்து மறுநாள் இவர் விடை பெற்று எழுந்தார். அவர் சிறிது தூரம் உரிமையோடு உடன் வந்து உறவு கொண்டாடிப் பரிவுரை பகர்ந்து உவந்து வழியனுப்பி அகன்று நின்றார்.

இவர் படையுடன் எழுந்து அடைவுடன் நடந்து மறு நாள் வந்து மதுரையை அடைந்து அங்கு மகிழ்ந்து தங்கினர்; இரவு திருக்கோவில் சென்று சொக்கநாதப் பெருமானையும், மீனாட்சியம்மையையும் தொழுது வணங்கிப் பெருநிதி வழங்கி, அருகு அடைந்த மறையவர் எவர்க்கும் தகுதி யறிந்து உறுபொருள் உதவி ஒருபொழுது இருந்து வருபொழுது எழுந்து உரிய பரிவாரங்களுடன் பெருவழி கடந்து தம் திருநகர் வந்து சிறப்புடன் சேர்ந்தார். சேரவும் கார்கண்ட பயிரென இவரை நேர் கண்ட வுடன் குடிகளெல்லாரும் குதூகலங்கொண்டு கூடி மகிழ்ந்து அடி பரவி நின்றார். கும்பினித் தலைவர்களாகிய அருமைத் துரைகள் இவருக்குப் பெருமையாகத் தந்துள்ள உரிமைப் பொருள்களை நோக்கி அங்குள்ளவரெல்லாரும் உவகை மீக்கூர்ந்தார். இவரது திறலையும் விறலையும் வரவு நிலையையும் வியந்து கொண்டாடி அனைவரும் புகழ்ந்து நிற்க இவர் "கொண்டுவந்த பொருள்கள் எல்லாம் செந்திலான் வரவு" என்று குறித்து வைத்தார். வைத்தபின் தமது அருமைத் தாயிடம் சென்று, தாள் பணிந்து நின்று, தாம் சீமை அதிபதிகளிடம் போனதும், சீரும் பேரும் பெற்றுத் திரும்பி வந்ததும் தெரிய வுரைத்தார். அவ் வீரத்தாய் இவ் வீர மகனை விழைந்து நோக்கி "அருமை மகனே! பெருமை வாய்ந்த அப் பேரரசோடு என்றும் உரிமையாய் நின்று உதவி புரிந்து வருக" என இனிது மொழிந்து கனியும் அன்புடன் உவந்து வாழ்த்தினள். இவர் வணங்கி வெளி வந்தார். வரவே தமது அருமை நண்பராகிய டேவிசன் துரை

தூத்துக்குடிக்குச் செல்ல விரும்பி இவரிடம் விடை சொல்லி நின்ருர். பிரியமான அவரைப் பிரிய மனமில்லாமல் ஒருவாரம் வரையுமாவது உடன் இருந்தருள வேண்டும் என்று இவர் உளங்குழைந்து வேண்டினுர். அவ்வாறே அவர் அமர்ந்திருந் தார். பரிவாரங்கள் யாவர்க்கும் ஆவன செய்து அகல விடுத்து அத் துரையுடன் உல்லாச வுரைகளாடி இவர் உவந்திருந்தார். "கும்பினியாரிடம் இதுபொழுது அடைந்துவந்துள்ள பெருமைக ளெல்லாம் உங்கள் அன்புரிமையால் அமைந்தன; அவ்வுரிமையை எழுமையும் மறவேன்; இந்த இடம் என்றும் உங்கட்கு நன்றி செலுத்துங் கடமை யுடையது" என உள்ளன்புடன் உரிமை யுரை பகர்ந்து உளம் மிக மகிழ்ந்து அரிய விருந்துகள் செய்து அளவளாவி யிருந்தார். நல்ல நீதி முறைகளை நயந்து கூறி நட்புற் றமர்ந்து வாரம் ஒன்று கழிந்தபின் அவ் வெள்ளைத்துரை விடை பெற்றெழுந்தார். இக் கொடை வள்ளல் உடனே அவர்க்குச் சிறந்த குதிரை ஒன்று உரிமையோடு உவந்து தந்து உபசரித்து நின்ருர். அவர் புகழ்ந்து மகிழ்ந்து அப் புரவியில் எழுந்து உறவு முறையுடன் உரிமைகள் பாராட்டி அருமை யுரைகள் கூறி இவரிடம் விடை பெற்றுத் தம் ஊர்க்கு விரைந்து சென்ருர்.

அதன்பின் தானுபதிக்கும், சேனுபதிகளுக்கும், சேர்ந்து வந்தவர் எவர்க்கும் தகுதி நோக்கிச் சிறந்த வரிசைகள் செய்து நிறைந்த கீர்த்தியுடன் நிவந்து இவர் உவந்து வீற்றிருந்தார்.

இவர் ஜாக்சன் சொல்லை நம்பி இராமநாதபுரம் பேட்டிக் குச் சென்றதும், அங்கே பெருங் கலகம் மூண்டதும், பொருது மீண்டதும், பின்பு கும்பினி அதிபதிகள் வேண்டச் சேனை தளங்களுடன் திருச்சிராப்பள்ளி போனதும், துரைகளைக்கண்டு அளவளாவி யிருந்ததும், அவர் உற வுரிமையோடு அன்பு கொண்டாடிப் பரிசில் பல தந்து இவரைப் பண்பு பாராட்டி நின்றதும், அவரது பெருந் தன்மையை வியந்து மகிழ்ந்து என்றும் கும்பினுக்கு நண்பன் என ஆணை தந்து ஆர்வ வுரை யாடி அவரிடம் விடைபெற்று இவர் அகன்று வந்ததும் ஆகிய இச் சம்பவங்களை யெல்லாம் ஒரே கவியில் அமைத்து அக்காலத் திலிருந்த * புலவர் ஒருவர் பாடி யிருக்கின்ருர். அது வரு

*இவர் பெயர் தெரியவில்லை. சிலர் ஆதீனப்புலவர் என்பர்.

சீர்களையுடையதாய்ப் பாதம் ஒன்றுக்கு 32 வீதம் 128 அடிகளில் அமைந்திருக்கின்றது. "இராமநாதபுரம் பேட்டி விருத்தம்" என ஏட்டின் முகப்பில் எழுதப்பட்டுள்ளது. நேர்ந்த நிகழ்ச்சிகளை நன்கு விளக்கியுள்ள அப்பாட்டு அயலே வருவது காண்க.

## பேட்டி விருத்தம்.

"சீர்கொண்ட *சந்தவரை மேவுசுந் தரவல்லி
தேவ குஞ்சரி பாகனைச்
சிவசுப்ர மணியகும ரேசனைப் பரமென்று
சிந்தை தனிலே நினைந்து,
தேவிமக மாயிசக தேவியபி ராமியிரு
சேவடி தனைத் துதித்துத்,
தென்பசுந் தாபுரிக் கயிலாச நாதரைத்
தேவி ஆனந்த வுமையைத்
திருவடிச் சரணார விந்தத்தை அனுதினம்
சிரசினி லுகந்து வைத்துச்,
செய்யமனு நீதிமுறை வழுவாமல் ஒழுகியருள்
செகவீர பாண்டியப் பேர்த்
தென்பாஞ்சை அதிபதி எப்பதியும் இன்புறச்
செங்கோல் செலுத்தி வருநாள்,
சீமையுறும் ஆங்கிலர்கள் தேசமுழு தும்கொண்டு
தென்திசைக் கதிப னாகத்
திண்மைமிகு ஜாக்கிசன் என்பவனை யுய்த்தனர்
சேர்ந்தவன் நெல்லை சார்ந்து
தேர்ந்ததுணை சேனையொடு சீருடன் இருந்தனன்
சிற்றரசர் வந்து வந்து
தெரிசித்து மீண்டனர் பாஞ்சைமன் மாத்திரம்
சேரா திருந்த படியால்,

---

*சந்தவரை என்றது திருச்செந்தூரை. சுந்தரவல்லி— வள்ளி நாயகி. தேவ குஞ்சரி—தெய்வயானையம்மை.

சிந்தையுள் வெகுண்டுமே விரகோடு வெளியினில்
தெரிய வொட்டா தடக்கிச்
சீருடன் நேர்வருக என்றுசதி யாகவே
திருமுகம் அனுப்ப நம்பிச்
சேனைபரி வாரங்க ளுடனிந்த மன்னவன்
சென்றுவர நேர்ந்த பொழுது,

கட்டியம்.

சேனாதி பதிநெல்லை மண்டலா திபதிமறு
தேசாதி பதிக ளெல்லாம்
சேமமுற வந்துதுணை தந்தரு ளனத்தினம்
சேரவருள் வீர பதியே!
தீரமிகு சூரர்பதி செய்யதமி ழாதிபதி
சேர்ந்தவர்க் கருள்செய் பதியே!
செய்யவெண் குடைமீது திகழுவரு கின்றபதி
செம்பொன்முடி சூடு பதியே!
சிங்காச னாதிபதி மனுபதி கஜபதி
திகழிரத துரக பதியே!
திண்மையுறு தன்மையுயர் கம்பள குலாதிபதி
சீமையும் சீர்சொல் பதியே!
சேதுகன் யாகுமரி வடகாசி டில்லியும்
செயவா னெனத் துதிக்கத்
திக்குவிச யம்புரிந் தெக்குலமும் வென்றவுயர்
தீரனருள் உக்ர வீர!
சீவக வசீகர மனோகர கிருபாகர
திக்கு விசயப் பாண்டியா!
தேசமிகு துரைகள்சூ டாமணிப் பாண்டியா!
ஜெயவிருது பெறு பாண்டியா!
தென்னாட்டு வேந்தனே எந்நாட்டி னும்புகழ்
சேரவுயர் வீர பாண்டியா!

தெய்வேந்தி ராபராக் கென்றுகட் டியவுரைகள்
திசைதிசை முழங்கி யேறத்
தித்திமத் தளமுதல தத்திமிதி என்னவே
செப்பமுடன் ஒத்தொ லிக்கத்
தெய்வமறை வேதியர்கள் ஆசிமுறை சொல்லியே
தேசுவரு கென்று வாழ்த்தச்
செந்தமிழ்ப் பாவலர்கள் வந்தருகில் நின்றுயர்
செயமங் களம் படிக்கத்
தெள்ளிய தோளாயிரத் தெழுபத்து நாலாண்டு
திகழ்கால சுத்தி வருடம்
செய்ய ஆவணிமாதம் ஒன்பதாம் தெய்தியுயர்
தேசமிகுரு வார நாளில்
திடவிகட குஞ்சரத் திரள்களும் பரிகளும்
சேனையு மருங்கு சூழக், (வ)
கார்கொண்ட முகிலொலியும் நாணகக ராத்தொனி
கணகண கணீர் என்னவே
கனகதண் டிகைமிசை யனைவரும் கைதொழக்
காமன் எனவே எழுந்தான்;
கண்டுவழி நின்றவர்கள் யாவரும் கைதொழுது
காதலுடன் வாழ்த்தி யேத்தக்
காமர்திரு நெல்வேலி கண்டுகுற் றாலநகர்
கருதிவந் தினிது காணக்,
கரவுடன் துரைசொன்ன வுரையறிந் தித்துரை
கனன்றுபின் உடன் தொடர்ந்து
களிகூர்ந்து சொக்கபுரி சிவகிரிப் பாதைவழி
காமர்சிரி வில்லி புத்தூர்
கமலைகோ மளவல்லி கோதைப் பிராட்டியிரு
கழலிணை பணிந்து போற்றிக்
கதியுதவு சதுரகிரி தம்பிச்சி நாய்க்கனூர்
காவுபா வாலி மார்க்கம்

கமழ்திருச் சுழியிலமர் ஈசரைப் போற்றியே
கழுதியூர்ப் பாதை கூடிக்
கங்கையுத் தரகோச மங்கைநகர் தனில்வந்து
கடவுள் சரணம் பணிந்து
காராழி சூழ்ராம நாதபுர மேசென்று
கனம்பெற இருந்த பொழுது
கண்டுகொள லாம்என்று ஜாக்கிசன் துரைசொன்ன
காரியம் நிசம் என்னவே

45. காணலாம் என்றுமே சேதுபதி கோட்டையைக்
கண்கொண்டு பார்க்கும் அளவில்,
கட்டாயம் நெட்டாயம் இட்டகல் கோட்டையுட்
கதவிட்ட சீப்பு வாசல்
கட்டென்ன! மெட்டென்ன! வாட்காரர் செறிவென்ன!
கடியவேல் திரள்க ளென்ன!
கருமருந் தடர்வெடித் திரளென்ன! திறலென்ன!
கடலெனும் படைக ளென்ன!
கண்டதிரள் யாவுமே திரணமா வுட்கொண்டு
கனகமணி மெத்தை வீட்டில்

50. கன்னுவு தாரனு மன்னன்வர அன்னதுரை
கருதி யிருமென் றுரைத்துக்
காரியம் பலகூறி வீரியம் பெறவுளே
கபடமாய் மல்லர் தம்மைக்
கண்சாடை காட்டவே மதகரிகள் போலவர்
கடுத்துமேற் பாய, மன்னன்
கடைகால முடிவிலெழு வடவையன லென்னவே
கர்ச்சித் தெழுந்து சுருள்வாள்
கைக்கொண்டு மண்டியடர் சண்டமா ருதமெனக்
கண்டவிட மெங்கும் வீசக்

55. கண்டலார் மண்டைகள் துண்டமா யுருளவே
கண்டுதுரை அஞ்சி யோடக்

கரவாக நின்றபடை வீரரயல் ஓடவே
கடுவீர சிங்க மென்னக்
காசினி யெலாம்புகழ ரணவேட்டை யாடியே
ககனவாம் புரவி யேறிக்
காதிவரு படைவீரர் மோதியுட னேகியே
கடிதுறச் சடிதி வந்து
கடிமதிற் பாஞ்சைநக ரினிதுவந் தறுமுகக்
கடவுளருள் கருதி வாழ்த்திக்
காணநேர் போனநிலை வீணென நினைந்துதன்
காதலுயர் நண்ப னை
காமர்திரு மந்த்ரநகர் மேவிவாழ் டேவிசன்
காணஒரு கடிதம் உய்த்துக்
காண்டீபன் என்னஇவ் ஆண்டகை யிருந்தனன்
கடிதமது கண்ட வுடனே
கனிவுகொண் டத்துரை பாஞ்சைவந் தரசினைக்
கண்டுளந் தேற்றி அன்பாய்க்
காரியம் இனிதுசெய நேரிலே கும்பினியைக்
கண்டுவர வேண்டு மென்னக், (இ)
கூர்கொண்ட வேல்மன்னன் நன்றென்றந் நண்பனையும்
கூடவர வே பணித்துக்
கோலமிகு திரிசிரா புரியினுக் கேகவே
கோனுளங் கொண்ட பொழுது,
கொற்றமிகு குடைகொடிகள் ராஜகம் பீரமொடு
கூடவர வேண்டி மேலாம்
கோலா கலத்துடன் நாலான பக்கமும்
கூல மெனவே யெழுந்த
குலவீர ரானகம் பளவீரர் ஒருபுறமும்,
கொற்றமிகு மறவ ரோடு
கூடவரு பரிவார வீரர்படை ஒருபுறம்,
குப்பம் திரண்டு வரவே

குறியுடைய வேற்காரர் வாட்காரர் விற்காரர்
கொல்லும் வல்லையக் காரரும்,
கும்பலாய் மண்டிவர அம்பெனப் பாய்ந்துவரு
குதிரைத் திரட் பந்தியும்,
கோகனக மாதுவளர் தாமரைப் பொறியுடைய
கொற்றவெண் குடையி னோடு
குணமுடைய சக்ரவா ளக்குடை எத்திசையும்
குளிர்சந்திர வட்டக் குடை
கொந்தள மிகுந்தபச் சைக்குடை யுச்சமுறு
குடைமேற்கொள் முத்துக் குடை
கொற்றஅனு மக்கொடி மயிற்கொடி புலிக்கொடி
கொட்டமிடு சிங்கக் கொடி
கூவியெழு குக்குடக் கொடிகரு டக்கொடி
குலவியொளிர் மீனக் கொடி
கொண்டலைப் பரவிவரு விற்கொடி கீர்த்தியைக்
கொண்டாடு முரசக்கொடி
குலவுசந் திரகாவி டால்பஞ்ச வர்னடால்
கூறுபல டால்க ளுடனே
கொற்றவன் படைகள்எழ எண்டிசை களும்ஒலி
கொண்ட லெனவே முழங்கக்
கொலுதங்கு சிங்கமுக இலகுதண் டிகைமீது
குலவு சந்திர னென்னவே
கோமகன் எழுந்தருள மாமறையின் வாழ்த்தொலி
குரைகடல்க ளென முழங்கக்
கொடிவிருது முன்செலப் பரிபடைக ளுடன்வரக்
கொற்ற நகராத் தொனிக்க
குமாரசாமிப் பெயர்கொள் தம்பிமுதல் வண்கிளைஞர்
கோலமுட னிரு மருங்கும்
குதிரைகளி லேறிவர மதுரமிகு பாடகர்கள்
கூறு கட்டியங்க ளோதக்

கோசலை குமாரனென மாசனம் புகழுவே
கோலா கலத்தொ டேகிக்
கோமள மிகுந்திலகு திரிசிரா புரமுறக்
குணமுடைய துரைகள் கண்டு
கொற்றவா! வருகவென உபசரித் துவகையுரை
கூறஅவர் இன்ப மூரக்
கோமகன் முகமனுரை யாடினான் அவரன்பு
கூர்ந்தேழு நாள் விருந்து
கோலாக லத்துடன் செய்தரிய விலையுடைய
குளிர்முத்து மாலை ஒன்று
கும்பினிப் பெயர்கொண்ட ரெட்டைவாள் பொற்சிவிகை
குலவுபரி யேழ்க ளுடனே
கொற்றமிகு துரைகள் சூடாமணி எனப்பெயர்
கொடுத் தன்புசெய் தனுப்பக்
குணமுடைய துரைகளே! இன்றுமுதல் உங்களின்
குலநண்ப னுகி யுள்ளேன்
கும்பினிக் கினியனுய் வானறிய மண்ணறியக்
கூடநின் றுதவி செய்வேன்
கோதுபதி யாதஎன் நீதிபதி யானதும்
கோலமுறும் உங்கள் * பதியே
கொண்டநட் புடையனுய் நின்றபின் மேலொன்று
கூறலென்? விடை என்னவே; (ரு)
பார்கொண்ட மன்றுடைய துரைமக்கள் நன்றென்று
பண்புடன் விடை கொடுக்கப்
பரராசர் திறைகொண்ட வரராசன் என்னவே
பதியெலாம் கண்டு மகிழப்
பாஞ்சையம் பதிநோக்கி வாஞ்சையொடு மன்னவன்
பவிசுட னெழுந்து வரவே
பாளையம் வருகின்ற பான்மையைப் புதுவையம்
பதியறிந் துவகை கூரப்

---

* என் பதி உங்கள் பதியே என விழுந்துள்ள அவ் வாக்கின் போக்கை கண்டு நோக்கிக்கொள்க. முடிவு முந்துற முடிந்துள்ளது.

பண்டுறவு கொண்டுள்ள தொண்டைமான் எதிர்வந்து
பாண்டியா! வருக வெனவே
பணிவுடன் உபசரித் தணிநகர்ப் பவனியாய்ப்
பதும மாளிகை யிருத்திப்
பண்புடைய உயர்விருந் தன்பூர ஆற்றியே
பத்திமைப் பால னாகிப்
படைபரிக ளுடன்வந்து விடைநேர முகமனுரை
பாராட்டி யினி தெழுந்து
பாண்டியர்கள் ஆண்டவுயர் மதுரைமா நகர்வந்து
பவிசுட னிறங்கி அன்பாய்ப்
பரமனும் சோமசுந் தரநாத னோடம்மை
பாதம் பணிந்து மகிழ்வாய்ப்
படையுட னெழுந்துவழி யிடையிலுள பாளையப்
பட்டெலாம் வந்து கண்டு
பரிமள மிகுந்தமலர் மாலைபல சூடியே
பணிவுடன் வணங்கி வாழ்த்தப்
பரிவுரைக ளாடியே அவரவர்க் கினியனாய்ப்
பண்புரை பகர்ந்து நீங்கிப்
பாஞ்சையம் பதிவந்து செந்திலம் பதிமேவு
பரமனை நினைந்து வாழ்த்திப்
பரராசர் பதியெனச் சிம்மா சனங்கொண்டு
பண்பு மிகு நண்பனான
பரிவுடைய டேவிசன் துரையினுக் கரியபல
பரிசிலொடு பரியும் நல்கிப்
பண்புரை பகர்ந்தின்ப மீதூர அன்புநிலை
பாராட்டி யுய்த்த பின்பு
பரிசன மெலாமகிழ விருதொடு விருந்துகள்
பரிந்தன் புடன் புரிந்து
பாரெலாம் புகழவே சீரெலாம் கொண்டமரர்
பதியென அமர்ந் திருந்து
பாவலர்கள் நாவலர்கள் ஆவலொடு தேவெனப்
பாடல்கொண் டினிது வாழ்த்தப்
பண்பறிந் தவரவர்க் கின்பமீ தூரவே
பரிசில்பல நாளும் நல்கிப்

பணிமாரி பொழிமேகம் நாணவுயர் பொன்மாரி
பாரில் பொழிந்து மூவேழ்
பதிவான வள்ளல்களொ ருருவாகி வந்தெழில்கொள்
பாஞ்சையம் பதி யிருந்து
பாராளும் நீதிபதி ஈராறு கரமுடைய
பரமபதி பத முளத்தே
பத்தியுடன் வைத்தரிய சித்தியொடு முத்திநிலை
பாரிலுற நின்ற பெரியோன்
பாரமதி மானென வீரகே சரியெனப்
பர ராசரும் புகழவே
பதுமவிக சிதகமல அட்டலட் சுமிகுலவு
பாக்கிய சிலாக்கிய வானாய்ப்
பாரிலுறும் யாருமே நேரெதி ரிலாதுதிகழ்
பதிதீர வுக்ர வீர
பாண்டியன் ரணசூர பாண்டியன் யார்க்குமே
பாரினில் வணங்கா முடிப்
பாண்டியன் திசையெட்டும் இசைகட்டி யாண்டவுயர்
பாண்டியன் யாண்டும் அஞ்சாப்
பாண்டியன் என்றெங்கும் ஆண்டகைமை பூண்டுதென்
பாஞ்சையில் அமர்ந்து நீதி
பரனாகி ஆண்டமரா பதியா யமாநதரசு
பாலித்து வந்தன னரோ." (க)

என வரும் இதனால் பாஞ்சாலங் குறிச்சி மன்னராகிய இவ் வீரபாண்டியருடைய சீரும் சிறப்பும் பேரும் பிரதாபமும் கும்பினியாருடன் உறவு கொண்டு வரிசை கண்டு மகிமை எய்திவந்த காட்சியும் மாட்சியும் பிறவும் நன்கு புலனாம்.

இங்ஙனம் சங்க உறவு அடைந்து வந்த பின் இந் நாட்டில் எங்கும் இவருடைய கீர்த்தி பொங்கி எழுந்தது. வெற்றி வீரர் என எத்திசையோரும் வியந்து புகழ இவர் விளங்கி நின்றார். இவரது ஆட்சியி லிருந்த குடிகள் எல்லாரும் தம் அரசின் மாட்சியை நினைந்து புகழ்ந்து மனம் பூரித்து மகிழ்ந்து வந்தார்.

# பதின்மூன்றாவது அதிகாரம்.

## மல் வலி கண்டது.

அரச திருவும் அருந்திறலாண்மையும் பெருந்தகைமையும் பெருகி வரவே பேரும் கீர்த்தியும் யாரும் போற்ற மருவி வந்தன. தென்னாடு பொன்னாடு எனப் பொலிந்து விளங்க இம் மன்னன் மகிமை மாநிலம் முழுவதும் துலங்கி நின்றது. இவ்வாறு எங்கும் இசைநாட்டிப் பொங்கும் புகழுடன் இச் சிங்கம் இருந்து வருங்கால் வடநாட்டில் இருந்து பீமசிங்கு என்னும் மல்லன் ஒருவன் யாண்டும் சென்று தன் எறுழ்வலி காட்டி இசை மிகப் பெற்றுப் பரிசில் பல கொண்டு அவ் வரிசையில் இப் பாண்டி மண்டலத்தை வந்தடைந்தான். மல்ல யுத்தத்தில் அவன் நல்ல பயிற்சி யுடையவன்; பல ஜோடிகளை அடித்துக் கைகண்டவன் ஆதலால் தன்னை யாரும் வெல்ல முடியாதென்னும் உள்ளுறுதி கொண்டு ஊக்கி நின்ற அவன் இங்குள்ள பாளையகார ரிடமெல்லாம் சென்று தன் மீளிமை தோன்ற ஆள் எதிரி கேட்டான். அவனது உடல் உறுதியையும் திட நிலையையும் நோக்கி எவரும் அடல்கொள்ள அஞ்சி "ஆள் இல்லை" என்று ஆன பரிசிலைத் தந்து மானமுடன் விடுத்தார். இவ்வாறு வெற்றி நிலையில் ஆங்காங்குப் பற்றி வருங்கால் கல்போது ஜமீனை அடைந்தான். அச் சமீன்தார் நல்ல கல்வியறி வுள்ளவர். மல்வலியில் சிறந்து வந்துள்ள அவனை நோக்கி அப்பா! "உன் தோள் தினவு தீர வேண்டுமாயின் பாஞ்சாலங் குறிச்சிக்குப் போ" என்று பக்குவமாக வுரைத்தார். அவரது உரை நுட்பத்தை யுணராமல் விரைவாக அவன் பாஞ்சைக்கு வந்தான். முறையே புகுந்து அரசரைக் கண்டு வரிசையோடு வணங்கி நின்று தன் நிலையினை யுரைத்தான். அவனை இவர் தலை நிமிர்ந்து பார்த்தார்; "இதற்குமுன் எத்தனை ஜோடி அடித்திருக் கிறாய்?" என்றார். அவன் "எழுபது" என்றான். இங்கே விழுவது ஒன்று விழைந்து வந்துள்ளாய்! என நயம்பட மொழிந்து "நாளை மிடலமர் காண்போம்; இன்று போய் உன் உடலைத்

தேற்றியிரு" என்று உயர்படி தந்து ஓரிடத்தில் அவனை உறைய விடுத்துத் தம்மிடத்திலுள்ள மல்லரை அழைத்தார். எல்லாரும் வந்து இறைஞ்சி நின்றார். அவரனைவரையும் இவர் உவந்து நோக்கி "புதிதாய் ஒரு மல்லன் இங்கு வலிகாண வந்துள்ளான்; அவனது உருவ நிலையை நோக்கின் அதி சூரன் என்று தெரி கின்றது; நும்மில் யார் அவனோடு போர் எதிர்கின்றீர்?" எனப் புன்னகையுடன் வினவினார். மன்னன் உரையைக் கேட்ட வுடனே நான் நான் என ஒவ்வொருவரும் முன்னுற மொழிந்து மூண்டு நின்றார். மல்லுக்கு வீங்கி அங்ஙனம் எல்லாரும் சொல்லி நிற்குங்கால் துரைமல்லு, மதாருமல்லு என்னும் துணை வர் இருவரை இணையாகப் பிரித்து வைத்து அம் மல்லனோடு மல்லாட "நும்மில் யார் செல்கின்றீர்? நம்முன் சொல்லுக" என்றார். இங்ஙனம் குறிப்பாக வரைந்து வினவியது தங்களுக்கு ஓர் உயர்ந்த சிறப்பாக எண்ணி உள்ளங் களித்து அவ் இரு வரும் ஒரு நிகராகவே பொருதிறம் விழைந்து உறுதி செய்து நின்றார். உடனே பின்னவன் முன்னவனைத் தடுத்து, மன்னவனை நோக்கி "அரசே! இன்ன போரைச் சின்னவனான என்னிடமே விட்டருளுங்கள்" என்று விரும்பி வேண்டினான். இளையவனா யிருந்தும் யாதும் இளையாது கூறிய அவனது அரிய மன நிலையை வியந்து அனைவரையும் இவர் அகல விடுத்தார். சிறிய மதாருமல்லு அரிய பெரிய மல்லுக்கு உரியவனாய் அன்று நிய மனம் எய்தி நின்றான். வேளையை விழைந்து நோக்கி ஆளையும் அளந்து பார்த்து யாவரும் ஆவதை வியந்து ஆவலோடு நின்றார்.

## மல்லர் நிலை,

மறுநாள் வந்தது. அரண்மனை முன்றிலில் அமர் நிலைக்கு ஆயத்தம் அமைந்திருந்தது. அவ் வீர ஆடலைக் கண்டு மகிழ வெளியிடங்களி லிருந்து பலர் விழைந்து வந்தனர். அயல் எங்கும் தொடர்ந்து ஆவலாய் அடர்ந்து நின்றனர். குறித்த நாழிகை வந்தது. அரசர் வந்து வரிசையுடன் அமர்ந்தார். சொல்லிய மல்வீரர் இருவரும் ஒல்லையில் எழுந்து கச்சை வரிந்து கட்டி உச்ச நிலையில் வந்து அரசை வணங்கி அமரிடம் புகுந்தார்.

மல்லாடும் இடத்துள் மல்லர் புகவும் எல்லாரும் மகிழ்ந்து எதிர் எதிர் நோக்கினர். உருவம் பருவம் இரண்டினும் வந்த வீரனினும் நின்ற வீரன் சிறிது குறையாய்த் தோன்றினன். அத் தோற்றம் கண்டு துரைமல்லு துளங்கி "ஜோடி சரி இல்லை; எதிரியோடு மல்லாட என்னை விட்டருளுங்கள்" என மன்னனிடம் வந்து வணங்கி வேண்டினன். அவர் இணங்காது மறுத்தார். அதற்குள் "நேர்ந்த போரை நான் நெகிழ விடேன்; பங்கு இங்கே இல்லை" என்று அவ் இளையவன் பகர்ந்து "எதிர்க" என விரைந்து எதிரியை நெருங்கினன். முதிர் போர் மூண்டது. எதிர் எதிர் மண்டி அதிர் போராடினர்.

## மல்லர் மூண்டது.

கைகொடு கைகள் கோத்தனர். கால்கொடு கால்கள் ஆத்தனர்; தோள்கொடு தொள்கள் துகைத்தனர்; மார்பொடு மார்பம் மடுத்தனர்; ஒருவரை ஒருவர் வென்றிட விரைந்து அருவரைப் புலிகள் போல் ஆர்த்துக் கடுத்தனர்; அடர்ந்து தொடுத்தனர்; கட்டினர்; ஒட்டினர்; தட்டினர்; முட்டினர்; மதத்த யானைகள் இரண்டு மண்டி மாறுடியது போல் கதத்தொடு நின்று இருவரும் கடுத்துப் போராடினர். வென்றி தோல்விகள் ஒன்றுந் தோன்றுமல் ஒரு சமமாய்க் கன்றி நின்று இவர் கடுஞ் சமர் புரிந்தார். முடிவு தெரியாமல் நெடிது நேரம் போராடி ஒருபுறம் அடி பெயர்த்து வருங்கால் முடிவில் வட திசை மல்லனை மதாருமல்லு வாரி யடித்தான். அவன் மண்ணிடை அண்ணுந்து மறுகி வீழ்ந்தான்; விழவும் மார்பிடைப் பாய்ந்து இவன் மண்டியிட்டு இறுத்தினன். கண்டவர் அனைவரும் கைகொட்டி ஆர்த்தார். கொண்டபிடி விடாமல் இவன் கொதித்து மேல் இருந்தான். மன்னர் விரைந்து வந்து "இன்னுயிர் போய்விடும் எழுக" என விலக்கினர். இவன் தள்ளித் தாவினன். அவன் தயங்கி எழுந்து உள்ளம் நாணி உயங்கி நின்றான். மானம் மீதூர்ந்து ஊனமுற்று நின்ற அவன் முன்பு பல இடங்களிலும் பெற்று வந்துள்ள பரிசில்களையும் விருதுகளையும் இவ் வெற்றி மல்லனுக்கு விரைந்து தந்தான். இவ் ஆண்டகை

வேண்டாது விடுத்தான். அவனும் அதை வேண்டாமல் விலக்கி வெறுத்தெழுந்தான். அரசர் இடைவந்து இதம் புகன்று அவற்றை யெல்லாம் உடையவனுக்கே கொடுத்து உள்ளந் தேற்றி அவனைத் தமது உழை யிருத்தி ஆற்றினர். ஆற்றவும் அவன் உளைந்து சாற்றினன்: "இதுவரை எழுபது ஜோடிகள் அடித்துள்ளேன்; எங்கும் இசைபெற்று வந்தேன்; இங்கே முழுவதும் இழந்தேன்; இழிவு மிக அடைந்தேன்; மீண்டு நான் வடதிசை போவதினும் ஈண்டே மாண்டு போவது நல்லது" என அவன் மனம் உடைந்து சொல்லினன்; அவ்வாறு கூறவே அவனை அன்புடன் ஆதரித்துத் தன்பால் இருந்து வரும்படி அன்பால்அரண் செய்து ஆவன புரிந்து இந்த அரசர் பெருமான் அரிது பேணி வந்தார். அவனும் உரிமையாய் அமர்ந்திருந்தான்.

## தம் வலி காட்டியது.

அங்ஙனம் இருந்து வருங்கால் திங்கள் இரண்டு கழிந்தன. நொந்திருக்கின்ற அவனுடைய நெஞ்சைத் தேற்ற நினைந்து இப் பெருந் தகை ஒருநாள் தம் இடமுள்ள நூறு மல்லர்களையும் சேர அழைத்தார். போர் என விழைந்து அவர் பொங்கி வந்தார்; வந்தவரனைவரையும், அரண்மனை முன்றிலில் ஒருபுறம் நிற்கச் செய்தார்; வடதிசை மல்லனையும் அவருடன் அமர்த்தி னர்; நேர்வது என்? என ஓர்ந்து எல்லாரும் நேர்ந்து நின்றார். உடனே பாரவடம் ஒன்றை நேரே வீழ்த்தி அவரை இம் மன்னர் பற்றச் சொன்னார். அவ்வாறே அனைவரும் அதனைப் பற்றி நின்றார். தாம் மட்டும் தனியே அவ் வடத்தின் மற்றொரு பாகத்தின் நுனியைப் பற்றி இவர் எதிரே நின்றார். நின்றவர் அம் மல்லரனைவரையும் நோக்கி உங்கள் உடல்வலி யெல்லாம் சேர்த்து ஒருங்கே ஊக்கி இழுங்கள் என்று நேரே உரைத்தார்; உரைக்கவே அவர் அடல்கொண்டு இழுத்தார். இவர் யாதும் அடிபெயராமல் நின்ற நிலையிலேயே நேராக நின்றார். "வாரம் ஒன்றும் பாராமல் வீறுடன் விரைந்திழும்" என்று இவ் வீரர் மீளவும் கூறினர். அரசு என்று அஞ்சி வஞ்சஞ் செய்யாமல் வலிந்திழுத்த அவர் யாதும் பலியாமல் நெஞ்சயர்ந்து நின்றார்.

நிற்கவே இவர், "இனி என் முறை; நான் இழுக்கப் போகின்றேன்; நீங்கள் வலியுடன் நிலையாய் நில்லுங்கள்" என்று சொல்லினர்; சொல்லவே அவ்வாறே அவர் நிலைத்து நின்றார். இவர் நெட்டி இழுத்தார். கெட்டியாய் ஒட்டி நின்ற அவ் அனைவரும் அடிபெயர்ந்து அலமந்து படிபடிய விழுந்தார். இவரது மெய்வலியைக் கண்டு அனைவரும் கைவிதிர்த்து நின்றார். வாள் வேல் முதலிய படைவலியில் மட்டும் வல்லவர் என்று முன்னம் அறிந்திருந்தார்; இன்று உடல் வலியிலும் ஒப்புயர்வு இன்றி நின்றதை யுணர்ந்து எல்லாரும் உவந்து புகழ்ந்தார். வடதிசை மல்லனும் வியந்து துதித்தான். தான் அங்கே முன்பு தோல்வியடைந்ததை ஓர் வெற்றியாக மதித்து விழைந்து போற்றி இவரிடம் அவன் விடைபெற்று நின்றான். அவனுக்கு வேண்டிய வெகுமதிகளும் விருதுகளும் தந்து இவ் ஆண்டகையாளர் அன்பு செய்து அனுப்பினர். இவரது அருந்திறல் முதலிய பெருந்தகைமைகளை வியந்து பெரிதும் புகழ்ந்து உரிமையுடன் தொழுது அவன் உவந்து போனான். அசகாய சூரன் என யாவரும் இசையொடு பேசத் திசை மெச்சிய கீர்த்தியுடன் இவ் வீரக் குரிசில் மேலான மேன்மையில் விளங்கி யிருந்தார்.

இவர்பால் விடைபெற்று வட நாடு சென்ற அம் மல்லன் இவருடைய அடலாண்மையையும் அதிசய நிலைகளையும் யாண்டும் துதிசெய்து வந்தான். அவன் பஞ்சாப்பு வீரன் ஆதலால் அந்தப் பாஞ்சால தேசத்தில் இந்தப் பாஞ்சாலங்குறிச்சி மன்னனுடைய மகிமைவென்றிகளை உவகையோடு உரையாடி நின்றான். சென்ற இடமெல்லாம் இவரது வென்றி நிலைகளை விளக்கினான்.

மன்னன்உயர் வலிநிலையை வடதிசையில்
இருந்துவந்த மல்லன் ஓர்ந்தே
இன்னபெருந் திறலுடைய பேரரசை
இதுவரையும் எதிர்ந்தேம் இல்லை;
என்ன திறல்! என்ன எழில்! என்ன திரு!
என்ன கொடை! என்ன இன்ன
பன்னரிய படிபுகழ்ந்து பணிந்துவிடை
கொண்டெழுந்து பதிபோய்ச் சேர்ந்தான். (1)

அந்நாட்டில் உள்ளமன்னர் இடங்கள்எல்லாம்
அவன் வலமா அடையும் தோறும்
இந்நாட்டின் திலகம்என இருக்கின்ற
இவ்வரசை ஏத்தி நின்றன்;
எந்நாட்டும் இனிதாக இசைபரவி
எழுந்தோங்க விசயம் கொண்டு
தென்னாட்டின் சிங்கம்எனத் திசைகள்தொறும்
திறல் நாட்டிச் சிறந்திருந்தான். (2)

பாஞ்சால நாடென்னப் பருவலியில்
பெயர்பெற்றுப் பாரில் ஓங்கித்
தீஞ்சாறு பாயவளர் செஞ்சாலி
வளங்குலவிச் சிறந்த தேனும்
பூஞ்சோலை புடைசூழும் பாஞ்சாலங்
குறிச்சியைப் போல் போர்வீரத்தில்
ஆஞ்சீரை அடைந்திலதுஎன்று அவனிசொல
இந்நகரம் அமர்ந்த தன்றே. (வீர பாண்டியம்)

பாஞ்சைப் பதியின் நிலைமையும், அதனைப் பாதுகாத்து வந்த அதிபதியின் தலைமையும் இதனால் ஓரளவு அறியலாகும். அரிய வளங்களோடு பெரிய சீர்மைகளும் பெருகிவர அரசன் உரிய நீதிகள் புரிந்து உவந்து வாழ்ந்து வந்தான்.

இவரது வாழ்வு எவ்வழியும் செவ்விய நிலையில் சிறந்து விளங்கியது. ஆட்சி முறையில் தகைமையும், காட்சி வகையில் எளிமையும், மாட்சி நிலையில் வலிமையும் மாண்போடு மருவியிருந்தமையால் நாட்டு மக்கள் யாவரும் இவர்பால் அன்புரிமை காட்டி ஆதரவு நீட்டி ஆர்வம் புரிந்து வந்தனர்.

கோன்முறை செய்யினே குடிகள் எங்கணும்
பான்முறை அன்பொடு பண்பின் வாழ்குவார்;
நூன்முறை புரிதரு அரசை நோக்கியே
வான்முறை பெய்யுமால் வையம் உய்யுமால்.

என்றதனால் அரசுக்கும் உலகிற்கும் உள்ள உறவுரிமைகள் உணரலாகும். இந்த நீர்மை இவர்பால் நன்கு அமைந்திருந்தது.

## பதினுன்கரம் அதிகாரம்.

### அரசு நிலை.

தரும நீதிகள் தழைத்து வரும் அளவே அரசு நிலைத்து வரும் என்பதைத் தந்தையாரிடமிருந்து அறிந்திருந்தார் ஆதலால் அந்த முறையிலேயே ஆட்சியை மாட்சிபெற இவர் நடத்தி வந்தார். குடி சனங்களுடைய நிலைகளை நெடிது கவனித்து நீதிகள் புரிந்து வந்தமையால் யாண்டும் தீதுகள் நீங்கிச் சீர்மைகள் ஓங்கி நீர்மைகள் பொங்கிஎவ்வழியும்செவ்வையாய்வந்தன.

இவ்வாறு எவர்க்கும் இதஞ் செய்து எல்லாரும் புகழப் பல வகையிலும் தலைமையுற்று இவர் நிலவி யிருந்தார். முறை வேண்டி வந்தவர்க்கும், குறைவேண்டி நின்றவர்க்கும் இறையும் தாழாமல் நெறிமுறை ஓர்ந்து இவர் நீதிபுரிந்து வந்தார்.

மதம் புரிந்தவரை அதம் புரிந்தார். அடங்கலர்க்கு மடங்கலேறெனை மண்டி மாறுகொண்டு யாண்டும் சீறி வென்று நீறு செய்து வந்தார் ஆதலால் யாரும் இவரது ஆணையை அஞ்சி அடங்கி நின்றார். வீரவேந்து எனப் பாரெங்கும் புகழப் பேரும் சீரும் பெற்றுப் பெரு மகிழ்வோடு இவர் பெருகி யிருந்தார்.

கும்பினி அதிபதிகளோடு நண்பு கொண்டிருந்தமையால் பின்பு இங்கே கலெக்டராய் வந்த லஷிங்ட்டன் துரையும் இவரிடம் மிகவும் அன்புகொண்டு அளவளாவி நின்றார். அவர் அதிகாரம் வகித்து ஈண்டு அடைந்தவுடன் உறவுரிமை பாராட்டிச் சில கடிதங்கள் இவருக்கு உவந்து எழுதினார். இவரும் அவருக்குப் பண்புடன் பதில் எழுதி நண்பு செலுத்தி வந்தார். நட்புரிமைகள் நாளும் பெருகி இருபாலும்இனிமைசுரந்துவந்தன.

பாரபட்சம் கருதாமல், தம்மவன் என்றும் பாராமல் முன்னவனைத் தண்டித்துத் தமக்கு நன்மை புரிந்ததை நினைந்து நன்றியறிவுடன் கும்பினியாரை இவர் நயந்து புகழ்ந்திருந்தார். கும்பினி நண்பர் என எங்கும் புகழ இவர் இன்புற்று வந்தார்.

அரசு முறை எவரும பரசு முறையில சிறந்து நடந்து வந்தது. துட்டர்களைத் துடுக்கு அடக்கிக், கெட்டவர்களைக்கெடுக் கலங்கச் செய்து, சிட்டர்களைப் பேணிப் பட்டிமைகள் யாண்டும் படியாதபடி இவர் பாதுகாத்து வந்தார். தீயராய் மாறு பட்டவர்க்குத் தீய் என மண்டி நோய் மிகச் செய்தார். நேயராய் மருவி நெறிமுறை நின்றவர்க்கு இனிய நீரராய் இவர்இதம் புரிந்து நின்றார். இவரது ஆண்மையும் அன்பும் பான்மைசுரந்தன.

"ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்" (புறம் 55)

என்ற ஒண் பொருள் மொழிகளை எண்கொளச் செய்து திண்மையும் தண்மையும் வண்மையும் புரிந்து படியெங்கும் நன்மையுறும்படி இவர் குடிபுரந்து வந்தார். அருந் திறலும் பெருந் தகவும் பொருந்தித் திருந்திய சீருடன் இருந்து வந்தமையால் இவரது கீர்த்தி திசையெங்கும் பரந்து நின்றது. இவரது ஆணைத்திறம் யாவருக்கும் அச்சத்தை விளைத்து உச்ச நிலையில் ஓங்கி யிருந்தது. ஆதரவுகளும் நீதிமுறை தழுவி நிலவி நின்றன.

இவருடைய திறலையும் விறலையும் வியந்து அக்காலத்தில் புலவர் சிலர் பல பாடல்கள் பாடியிருக்கின்றார். அவற்றுள் பாஞ்சைக் கோவை என்பது ஒன்று. அந்த ஏடு இப்பொழுது கிடைத்திலது. அதிலிருந்து சில பாடல்களைப் பலர் மனப்பாடஞ் செய்திருக்கின்றனர். அயலே வருவன காண்க.

"வடக்கும் கிழக்கும் தென்மேற்கும் திகாந்தமும் மன்னர்குறும்
படக்கும் தென்பாஞ்சைச் செகவீர பாண்டியன் ஆணைஎன்றால்
கடக்கும் அரிதென்று எறும்பானது நின்று கால்பதறிக்
கிடக்கும் நடக்கும்பின் உத்தர வானகிள் ளாக்குகண்டே. (1)

இரும்பால் சரீரமும் மார்க்கண்டன் வாழ்வும் எமனிடத்தே
திரும்பாத நல்வரம் பெற்று வந்தாலும் தென்பாஞ்சையிலே
பொரும்பா டழிந்து புடைசூழ்ந்து வந்த படைகளெல்லாம்
கரும்பா லையிற்படும் காட்சியைக் கண்டு கழியுமன்றே. (2)

சீரார் திருவும் திறலும் சிறந்தொளிர் பாஞ்சையிலே
வீராதி வீரன் செகவீர பாண்டியன் வீற்றிருந்து

பாராளும் நீதி படிமுறை கண்டு பரவசமாய்க்
காராவ லோடு மழைபொழிந் தின்பங்கள் காட்டிடுமே. (3)

நித்தமும் செந்தூர் முருகனை நெஞ்சில் நினைந்துருகி
உத்தம சீலங்கள் பேணி ஒழுகி உயிர்க்கிரங்கிப்
பத்திமை யோடு படியாண்டு வந்த படிமையினல்
எத்திசை யும்புகழ் பாஞ்சையர் கோனுக் கெழுந்ததன்றே. (4)

கண்ஒன்று கட்டபொம் மீவான் கனிவுடன் காணுமென
விண்ணொன்றி வந்த வியன்மொழி கேட்டு வியந்துவந்தார்
பெண்ணொன்று பாகத்தன் பிள்ளையின் பேரருள் பேசரிதென்
றுண்ணின் றுருகி உலகம் அறிய உதவினனே. (5)

செந்தூர் முருகன் திருவருள் பெற்றுத் தெருள்மிகுந்து
வந்தாரும் காரும் தருவும் மணியும் எனவழங்கி
நந்தாரும் நீர்புடை சூழுல கெங்கணும் நல்லிசையை
முந்தார நாட்டிய பாஞ்சைமன் சீர்த்தி முதன்மையதே. (6)

(பாஞ்சைக் கோவை)

இவற்றால் இவரது ஆட்சி நிலையும், நீதி முறையும், தெய்வ பத்தியும், திறலும், தேசும் பிறவும் தெரிய வந்துள்ளன. சிறிய ஒரு நில மண்டலத்தை ஆண்டு வந்தாலும் பெரிய புகழ் மண்டலத்தை இவர் அடைந்திருக்கிறார். புலவர் உவந்து பாடும் சிறந்த புகழோடு நிலவி வந்திருத்தலால் இவருடைய நிலைமை தலைமைகளை உலகம் உவந்து கொண்டாடி உரிமை செய்துள்ளது. அடலாண்மையும் அதிகார ஆற்றலும் விதிநியமங்களை விளைத்து நின்றன.

எறும்பும் கூட இவரது ஆணையை அஞ்சி வரை கடவாமல் மறுகி நிற்கும் என இங்கே குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. விலங்குகளும் பறவைகளும் ஊர்வனவும் இவருடைய அதிகார ஆணைக்கு அடங்கி நடந்தன என்றால் மனிதர் நிலை தனியே சொல்லவேண்டாவாயிற்று. இதனால் பாஞ்சாலங்குறிச்சியாரது ஆஞ்ஞையின் வீறும் வாஞ்சையும் எளிது புலனும்.

இப் பாண்டியர் மீது சிருங்கார சம்பந்தமாய்ப் பண்டு ஒரு நூல் இயற்றப்பட்டுள்ளது. அதற்கு வீரபாண்டியன் அநுராக மாலை என்று பேர். அது அச்சுக்கு வரவில்லை. ஏட்டுப் பிரதியா யிருக்கின்றது. அம்மானைக ளாகவும், கும்மிக ளாகவும்

வேறு சிலவும் இவர் மேல் பாடப்பட்டுள்ளன. பாஞ்சைப் பள்ளு என்று ஒரு நூலும் ஏட்டில் இருந்தது; இறந்து போயது.

இவ்வாறு புலவர் பாடும் புகழுடையராய்த் தலைமை எய்தி நிலவி நின்ற இவர் அறம் பல புரிந்து மறம் பல கடிந்து யாரும் இன்புற நீதி முறையுடன் நெறியே அரசு புரிந்து வந்தார்.

## வசந்தம் வந்தது.

இசை திசை பரவ அசைவில் ஆண்மையுடன் இங்ஙனம் இவர் அமர்ந்து வருங்கால் வசந்த காலம் வந்தது. வரவே இளவேனிலுக்கு வசதியாகச் சாலிகுளம் சாரலில் அழகுற அமைந்திருந்த குளிர்பூஞ் சோலையில் வழக்கம்போல் தமது அருமை மனைவியுடன் எழுந்தருளி இனிய மாளிகையில் அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இவர் அங்கு அமர்ந்திருந்தார். தோழியரும் ஊழியரும் தொழுது பணி செய்ய உழுவலன்புடைய நாயகியுடன் உல்லாசமாயுலாவிச் சல்லாப வுரைகளாடி எல்லியும் பகலும் இணை பிரியாது இனிது மருவி ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்த்துக் கழிபே ருவகையராய் அந்தஅழகிய இளமரக் காவுள் இவர் பொழுதுபோக்கி வந்தார்.

இன்ப நுகர்ச்சியில் இவர் அங்ஙனம் ஆழ்ந்து இருக்க ஜமீனைத் தானுபதிப்பிள்ளை தானாகவே தலைமையாப் பார்த்து வந்தார்.

## தானுபதி நிலைமை.

அவருடைய நிலைமை இதுபொழுது மிகவும் தவறுடையதாயது. திருச்சிராப்பள்ளியி லிருந்து வந்த பின்பு அவர் உள்ளத்தில் களிப்பும் செருக்கும் கலித்தெழுந்தன. தமது அதிகார ஆற்றல்கள் அதிசய நிலையின என்று மதிமருண்டு எவ்வழியும் வெவ்வலியாளராய் வெருண்டு வீறுகொண்டு நின்றார்.

தம் சொல் வன்மையால் வெள்ளைக்காரர் எல்லாரையும் வசமாக்கி, எதிரியைத் தண்டித்து அடக்கி, அரசனுக்கு உயர்ந்த மரியாதைகளையெல்லாம் உளவாக்கித் தாம் சிறந்து வந்திருப்பதாக நினைந்து நினைந்து அவர் செருக்கு மீக்கூர்ந்தார். யாரும் தமக்கு நிகரில்லை என்னும் இறுமாப்பு அவரிடம் எழுந்து

வளர்ந்தது. குடிகளிடம் வரம்பு கடந்து தம் அதிகாரத்தை அவர் நேரே செலுத்தி வந்தார்; வரவே யாரும் அவர் வாய்க்கு அஞ்சி அடங்கி நின்றார். அந் நிலை அவர்க்கு மேலும் தலை மயங்கச் செய்தது. பெரும்பாலும் அவர் சொல்லை யாண்டும் தட்டாமல் ஒட்டியே இசைந்து ஜமீன்தார் ஒழுகி வந்தார்; ஆகவே அவரது ஊக்கமும் கிளர்ச்சியும் ஓங்கி வளர்ந்தன.

பழைய நினைவு.

இடையே தமக்கு ஜாக்சன் செய்திருந்த இடையூறுகளையும் அவமானங்களையும் நினைந்து புழுங்கி இருந்தார் ஆதலால் வெள்ளையர்களை மேலும் மிக இவர் எள்ளி நின்றார். கும்பினி அதிகாரிகள் முன்பு இருபுறமும் விசாரித்து நெறிமுறைகளை யோசித்துத் தம்மையும் தமது ஜமீன்தாரையும் ஆதரித்து மரியாதைகள் செய்து விடுத்தது உள்ளன்போடு கூடிய பட்சத்தால் அன்று; அச்சத்தால் எனக் கொச்சையாகக் குறித்துக் கொண்டார். பச்சையாகவே அவரைப் பழித்து எங்கும் தம் இச்சைப்படியே குழப்பங்களை இவர் இழைத்து வந்தார். இவரது யூகவிவேகங்கள் மூகங்களாய் விரிந்து முனைந்து கெடுநிலைகளில் விரைந்து நின்றன.

புதியராய் வந்துள்ள வெள்ளையர் இங்கு வலியராய் நின்றுள்ள இவ் வீரபாண்டியரை இதமாக வசமாக்கித் தமக்குத் துணைசெய்து கொள்ளவே வரிசை பல தந்து விரகாக அங்ஙனம் உரிமை கொண்டாடினர் என அருமை தெரியாமல் இவர் சிறுமை கொண்டிருந்தனர். தம் அளவில் அவ்வளவோடு நில்லாமல் வெளியிலும் வெம்மை மிக விளைத்தார். புன்மை பல புகன்றார்: "வெள்ளையர் மெலியர்; உள்ளுரம் இல்லாதவர்; நம்மில் மாறுபட்டவர்; வேறு நாட்டினர்; அவரால் இங்கே யாதும் செய்ய இயலாது; இந்நாட்டினர் பயந்து ஒடுங்குவதைக் கண்டே அவர் உயர்ந்து ஏறுகின்றார்; முதலில் அஞ்சி நின்றார்; வரவர மிஞ்சுகின்றார்; எங்களை மட்டும் நயந்து கைக்கொண்டு இங்குள்ளவரிடமெல்லாம் வஞ்சமாக வரிகளை ஈட்டி வருகின்றார்; அவ் வரவை ஒட்டி ஒழிக்காமல் வகை தெரியாது மாட்டி நிற்கின்றீர்!" என இன்னவாறு கோட்டி

கொண்டாடி நாட்டில் யாண்டும் அமைதி குலைய இவர் மூண்டு குலைத்து வந்தார். இவரது சொல்லைக் கேட்டுச் சிலர் உள்ளந் திரிந்தார். வெள்ளையரை வெறுத்தார்; வரி தர மறுத்தார்; இப்பிள்ளையை மதித்துப் பெரிதும் புகழ்ந்தார். கோலார்பட்டி, நாகலாதபுரம், காடல்குடி, குளத்தூர், ஏழாயிரம்பண்ணை முதலிய சில பாளையகாரர்கள் இவருடைய கோளுரைகளைக் கேட்டு வரி செலுத்தாமல் அழிவழக்காடி அகங்கரித்து நின்றார். வரிகள் எங்கும் சரியாக வசூலாகாமல் தடையுற்று நிற்பதையும், அதற்குப் பிரதான காரணமாகப் பிள்ளையுள்ளதையும், பிழை பாடுகளையும் குறித்து முறையீடுகள் அடிக்கடி மேலே போய்க் கொண்டிருந்தன. அயன் கிராமங்களிலுள்ள மணியம் கணக்கு கள் தாசிலுக்கும்; தாசில்தார் கலெக்டருக்கும் முறையே இக் கலக நிலைகளைப் பற்றி நாளும் எழுதி வந்தனர். கோளுரைகளும் கூடி நின்றன; யாண்டும் புகார்கள் நீண்டு மூண்டெழுந்தன.

## கலெக்டர் நிலை.

கலெக்டர் லஷிங்டன் துரை மிகவும் நல்லவர். சிறந்த அறிவாளி. அமைதி யுடையவர். எவ் வகையிலும் குடிகளிடம் இதமாய் நடந்து பதமாக வரிகளைத் தொகுக்கவேண்டும் என்னும் குறியே யுடையவர். புதியராய் வந்திருந்தாலும் இந் நாட்டு நிலைகளை நன்கு தெரிந்துகொண்டவர். யாரையும் எளிதில் நம்பார். கோளர்களையும் பொய்யர்களையும் மிகவும் வெறுப்பார். உறுதியும், பொறுதியும், ஊக்கமும் உள்ளவர். கருமமே கண் ணாய்க் கருதி உழைப்பவர்; அரசுரிமைகளை உணர்ந்து வரிசை புரிபவர்; அருமை தெரிந்து ஆதரவுகள் செய்பவர்.

இத்தகைய குணநலங்களை யுடைய அவர், வருகின்ற நிருபங்கள் மூலம் இங்குள்ள நிலைகளை அறிந்தார்; நெஞ்சந் திகைத்தார்; வஞ்சமும் பொய்யும் மருவி யிருக்குமோ? என முதலில் மயங்கினார். பின்பு பல வகையிலும் ஆராய்ந்து தீர விசாரித்து உண்மை என்று தெளிந்தார். "உரிமையை மறந்து இது புரிய நேர்ந்தனரோ?" என்று உள்ளம் வருந்திப் பிள்ளை நிலையைக் குறித்து இம் மன்னருக்கு ஒரு கடிதம் இன்ன

னுடன் அவர் எழுதி விடுத்தார். அந்த நிருபம் வந்தது; பிள்ளை பார்த்தார். உள்ளத்தை உணர்ந்தார்; உடையவரிடம் அடையாதபடி உடனே அதனைக் கிழித்து எறிந்தார். தம்மைக் குறித்துக் குற்றமாக அதில் குறைத்து எழுதி யிருந்தமையால் கலெக்டரை மிகவும் வெறுத்து இகழ்ந்து கடுத்து நின்று மேலும் குழப்பங்களைப் பலமாக இவர் யாண்டும் விளைத்து வந்தார்.

ஜமீன்தார் ஒன்றையும் கருதாமல் ஐம்புல இன்பங்களும் நன்கு நுகர்ந்து அருமை மனைவியுடன் அன்பாடல்கள் புரிந்து குளிர் பூஞ் சோலையுள் வசந்த விடுதியில் உல்லாச வாழ்வில் உவந்திருந்தார். தானாபதி அதிகாரமே எங்கும் தலை நிமிர்ந்து நின்றது. சீமை அதிபதிகளையும் தம் சொல்லால் வென்று வந்த வல்லாளன் என எல்லாரும் புகழ்ந்து வரும்படி அவர் புரிந்து வந்தார். அவருடைய போக்குகள் புலைநோக்குகளாய் நின்றன.

## கலியாணம் வந்தது.

இந்த நிலையில் அவருடைய மகன் வெள்ளைச்சாமி என்ற வேலாயுதம் பிள்ளைக்குக் கலியாணம் வந்தது. வரவே வழக்கப்படி பழம் வெற்றிலை பாக்கு மஞ்சள் முதலிய மங்கலப் பொருள்களைத் தட்டில் வைத்துத் தகவுடன் கொணர்ந்து அரசைக்கண்டு உவகையுடன் அமர்ந்து மணவினையை உரிமை யுடன் உரைத்தார். இவர் உள்ளம் உவந்து இரண்டாயிரம் பொன்னும், நூற்றைம்பது கோட்டை நெல்லும் உத்தரவு செய்து உதவி யருளினர். பிள்ளை மகிழ்ந்து பெரிதும் புகழ்ந்து விடைபெற்று எழுந்து வீட்டுக்கு வந்தார். மன்னன் கொடையை மனைவியிடம் இனிமையாக உரைத்தார்.

## மனைவி வாய்மொழி.

அவள் பெயர் முத்து வடிவு. நல்ல சித்தம் உடையவள்; இட்டு மகிழும் இயல்பினள்; உற்றவை யாவும் உசாவி அறிந்தாள். மற்றவை எல்லாம் போதும் நெல்லுமட்டும் காணாது என்றாள். "மந்திரியான தங்கள் அருமை மகனுக்குப் பெருமை யாகத் திருமணம் நடப்பதால் நம் இனத்தவர் எல்லாரும் திர ளாய் எழுந்து வருவார்; அத்துடன் நாட்டிலும் நகரிலும் உள்ள

குடிசனங்க ளெல்லாம் கூட்டோடு ஈட்டமுற்று வரும்; வந்தவ ரெல்லாருக்கும் யாதொரு குறைவுமின்றி ஆதரவுடன் விருந்து செய்ய வேண்டும்; ஆதலால் இந்த நெல்லோடு இன்னும் கொஞ்சம் நெல் வேண்டும்" என்று அந்த இல்லாள் சொல்லி நின்றாள். இங்ஙனம் அவள் சொல்லவே, இவர் நல்லது; எல்லாம் வரும்படி செய்கின்றேன் என்று பரும்படியாகப் பகர்ந்து எழுந்தார். அவள் மறுபடியும் இவரை இருத்திப் "பலகா ரத்துக்கு ஆகும்படி பச்சைக்கு இடியாத நெல்லாகப் பதினறு கோட்டை யேனும் குறையாது பார்த்து வாங்குங்கள்" என்றாள். வேண்டியவை எல்லாம் உன் இச்சைப் படியே நான் கொண்டு வருகின்றேன் என்று ஊக்கி நின்று உறுதி சொல்லி இவர் வெளியேறி வந்தார். நெல் வரவைப் பற்றி ஒரு வழியும் தெரியாமல் உயங்கி நின்றார். பழியேறும் வழிகளில் பல பல நினைந்தார். அழிவேறும் என்பதை யாதும் அறியாமல் அவமே விழைந்து இவர் அகங்கரித்து நிமிர்ந்தார். அந்த நெல்லின் விழை வே பின்பு அல்லலெல்லாம் விளைதற்குக் காரணம் ஆகிக் கதித்து நின்றது. ஒரு சிறந்த அரசு அடியோடு அழிந்து போக விளைந்து வந்த அந்த வெய்ய விழைவு கொடிய வினைவாய் விரிந்து நின்றது.

## நினைவு நிலை.

மன நினைவுகளின் இன வுரிமைகளின்படியே மனிதன் உருவாகி வருகிறான். நல்லவன், தீயவன், பெரியவன், சிறியவன் என வெளியே ஒருவன் தெளிவாய் விளங்குவதற்கு உரிய மூல காரணம் அவனது உள்ளத்தின் உள்ளேயே உறைந்துள்ளது. தானுபதிப்பிள்ளை நல்ல கல்விமான்; உயர்ந்த குடியில் பிறந்தவர்; சிறந்த நிலையில் வாழ்ந்து வந்தார்; அந்த வரவில் இடையே சிந்தை திரிய நேர்ந்தது; நேரவே சீரழிவுகள் சேர்ந்தன; பேரிழ வுகள் விளைந்தன. உள்ளம் நிலைதிரிந்து கெட்டால் கேடுகள் வெள்ளமாய் விரிந்து வரும் என்பதை இப் பிள்ளை செயல் பெரிதும்விளக்கி மானச மருமங்களை நன்கு துலக்கி நின்றது.

# பதினைந்தாவது அதிகாரம்

## கும்பினி நெல்லைக் கொள்ளை செய்தது.

நெல்லின் குறையை நிறையச் செய்தற்குப் பிள்ளை பல வகையிலும் ஆராய்ந்தார். பாவம்! உள்ளது போதும் என்று இல்லாளிடம் ஒரே யடியாகச் சொல்லிவிடாமல் நெல்லையே நினைந்து அல்லும் பகலும் அல்லல் மீக்கூர்ந்தார். சாதாரண மான குடியானவர்கள் போல விலை கொடுத்து நெல் வாங்குவது தலைமையான தமது நிலைக்குத் தகாது என எண்ணினர். விலை நெல் இளிவு என்று வெறுத்துநின்று வேறு வகையில் வாரி வர ஊரிடம் எங்கும் இவர் உளவுகள் ஆராய்ந்தார். யாரிடமும் சரியாக அமையாமையால் வேறிடங்களையே விரைந்து நாடினர்.

### நெல் நிலை.

கும்பினியார் நபாவிடமிருந்து நாட்டுரிமை பெற்று வந்த வுடன் இங்கே வரி விதிக்குமுன் சில இடங்களில் விளை பொருள் களை வாரம் பகுந்து வந்தார். அங்ஙனம் வந்த வார நெல்லைப் பாளையங்கோட்டை, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, ஆற்றூர் என்னும் இந்த நான்கு இடங்களிலும் தனித்தனியே பொதி செய்து வைத்திருந்தார். அந்த நெல்லுக்கெல்லாம் தலைமை அதி பதியாய் பிற்கட்டு (Perkette) என்னும் துரை பாதுகாத்து வந்தார். அவர் பாளையங் கோட்டையில் நிலையா யிருந்தார். நெல்லின் நிலைவரங்களை நன்கு தெரிந்து பருவம் பார்த்துப் பக்குவமாக விற்றுத் தக்கபடி பொருள் தொகுத்துக் கும்பி னிக்கு அனுப்பி இங்கே அவர் நம்பிக்கையா யிருந்தார். அந்தக் கும்பினி நெல்லையே இந்தப் பிள்ளை குறி வைத்தார். வெள்ளையர் மீதுள்ள வெறுப்பால் அதனைக் கொள்ளை செய்து கொள்ளவே இவர் குறிக்கொண்டு நின்றார். "என் எல்லையில் உள்ள நெல் வேலி நெல்லுக்கு எங்கேயோ கிடந்த சீமை வெள்ளையர் எப்படி உரியராவர்? இங்கே சொந்தப் பிள்ளையான நானே அதற்கு எந்த வகையிலும் உரியவன்" எனத் தானாகவே நினைந்து இத் தானாபதியார் உவந்துகொண்டார். அங்ஙனம் துணிந்து கொண் டவர் மிகுந்த பாதுகாவலோடு அமைந்திருக்கின்ற அந் நெல்லை எவ்வாறுகவர்ந்துகொள்வதெனக்கபடஆலோசனைகள்செய்தார்.

## கூட்டம் திரட்டியது.

நெல்லில் நாட்டங்கொண்டு நேரே நீண்டு நின்ற பிள்ளை அக் கொள்ளைக்கு வேண்டிய ஆயத்தங்களை உள்ளத்தே ஆய்ந்து முதலில் தானை சேர்க்கத் துணிந்தார். யானை போன வீதியாய்ப் போன விடமெல்லாம் பெரும் போக்காய்ப் பெருகிப் போன தானாபதி தமக்கு ஆன சேனைத்தலைவர் இருவரைத் தேர்ந்தெடுத்தார். சின்ன மாவேரி நாயக்கன் என்பவன் ஒரு சிறந்த படைத் தலைவன். கைத்திற முடைய அவன் *செய்த்தலை என்னும் ஊரில் இருந்தான். அங்கிருந்து அவனை வரவழைத்தார். உற்றதை உரைத்தார். அவன் ஒத்து இசைந்தான். படைகளைத் திரட்டினான். ஐந்நூறு பேர் திரண்டனர். இருநூறு பொதி மாடுகள் சேர்ந்தன. அதி வேகமாய் யாவரும் ஆயத்த மாயினர்.

சூரசங்கு, தும்பிச்சி, சித்தயன், காமயன், பெத்தோவு, முத்தையன், அய்யாவு, அப்பயன், அங்கணன் முதலாக ஐம்பது குறிகாரர்கள் கம்பும் கையுமாய் வந்தனர். எல்லாம் ஆயத்தமானதை அறிந்து பிள்ளை உள்ளங் களித்து அன்று இரவு பிரயாணஞ் செய்யத் துணிந்து வைத்து முற்பகலில் வீட்டுக்கு உணவுகொள்ளப் போனார். போனவர் தமது மனைவியிடம் "நீ விரும்பிய படியே நெல் முழுதும் நாளை நின்று காலையில் இங்கே வந்து சேரும்" என்று அதன் வரவு நிலையைத் தெரிய வுரைத்தார். அதனைக் கேட்டவுடனே அவள் நெஞ்சம் கலங்கினாள்; அஞ்சி நடுங்கினாள். "கொஞ்சமும் நீங்கள் வெளியே போகக் கூடாது" என்று அவள் கெஞ்சி மொழிந்தாள். இவர் அவளை வியந்து நோக்கி "என்ன இப்படிச் சொல்லுகின்றாய்! நமக்கு நெல்லு வேண்டாமா?" என்றார்.

மனைவி:— வேண்டவே வேண்டாம்; ஆண்டவனே! நான் கண்ட கனவு என் குலையைக் கிண்டுகின்றதே!

தானாபதி:— என்ன அது?

மனைவி:— நேற்று இரவு பொல்லாத சொப்பனம் ஒன்று கண்டேன். அதனை இப்போது நினைத்தாலுங்கூட என் நெஞ்சம் கலங்கிநெடுந்திகிலாய்த்துடிக்கின்றதே! எப்படிச்சொல்லுவேன்?

---

* இவ்வூர் கோவில்பட்டித் தாலுகாவில் உள்ளது.

தானாபதி:— என்ன பகடி பண்ணிப் பயங்காட்டுகிறாய்! வீணே வெருட்டி நேரம் கடத்தாதே! விவரமாச் சொல்லு!

மனைவி;— பகடியா? உங்கள் மனசே ஒரு தினுசு; நான் கண்டதைச் சொல்லுகிறேன் கேளுங்கோ! நமது மகாராஜாவின் மனைவி கூந்தல் தீயில் கருகக் கண்டேன்; பஞ்சணையும் பட்டு மெத்தைகளும் பற்றி எரியக் கண்டேன்; பட்டத்து யானையும் குதிரைகளும் பட்டு மாயக் கண்டேன்; கோட்டை எங்கும் கரும்புகை சூழ்ந்து பெரும் பிணங்கள் விழக் கண்டேன். ஐயையோ! இனி நான் என்னத்தைச் சொல்லட்டும்? நமது வீட்டில் கொல்லையிலுள்ள கிணற்றை நான்எட்டிப்பார்த்தேன்; அதில் என் தாலி அற்று விழுந்ததே; தலைவிரி கோலமாயதே; நீங்கள் ஓங்கிய ஒரு மரக்கிளையில் தூங்கவும் கண்டேனே!

ஐயோ! தெய்வமே! எனக் கையை நெரித்துக், கண்ணீர் சிந்தி, மூக்கைச் சீந்தி அயல் எறிந்து துயர் மிகுந்து மேலும் சொல்லலானாள். "செல்ல மகன் கலியாணம் முடியுமுன் என்ன அல்லல் நேருமோ? தெரியவில்லையே! நெல்லு வந்தது போதும்; கலியாணத்தை மெல்லச் செய்யலாம்; இந்த ஆனியில் வேண்டாம்; உங்களைத்தானே! இந்த வீட்டை விட்டு நீங்கள் வெளியே எங்கும் போகவே கூடாது; இத் தீய கனவு நிலையை நம்முடைய மகாராஜாவுக்குத் தெரியப்படுத்தித் தேவதைகளை வணங்கி ஆவதைச் செய்து சிவனே! என்று வீட்டிலேயே தங்கி யிருங்கள்" என்று பொங்கிய கவலையோடு அவள் வேண்டி நின்றாள்.

கேட்ட பிள்ளை சிரித்தார். "அட பைத்தியமே! நனவில் கண்டதே பொய்யென நழுவிப் போமே; இந்தக் கனவில் கண்டதை மெய்யென நம்பி இப்படிக் கலங்கு கின்றாயே! நீ எப்படிக் காரியம் பார்ப்பாய்! வாசியாதவள் ஆதலால் இவ்வாறு யோசியாது பேசினாய்! ஒரு தீர மந்திரிக்குத் தாரமா யிருந்தும் கொஞ்சமும் தைரியம் இல்லையே! இதைப் போய் அரசரிடம் சொன்னால் பெண்டாட்டி வாய் பார்த்த பேயன் என்று அவர் என்னை இகழுவார்; பிரயாண மாகும்போது தடையொன்றும் சொல்லாதே; எல்லாம் எனக்குத் தெரியும்; நீ பேசாதிரு" என்று இவர் பேசிப் போனார். இவருடைய

போக்கை நோக்கி அவள் புலம்பியிருந்தாள். போனவர் ஆன ஆயத்தங்களை ஆய்ந்து அவகேடுகளைச் சூழ்ந்து நின்றார்.

அல் வழி நடந்தது.

இரவு வந்தது. படைகள் எழுந்தன. பொதி மாடுகள் நடந்தன. குறிகாரர்கள் கம்புகள் ஏந்திக் கலித்து உடன் வர இவர் செம்பரி ஒன்றின்மேல் சிறப்புடன் ஏறித் தென்திசை நோக்கி விரைப்பொடுசென்றார். சேருநெல்லை நாடிக் காரிருளில் இவர் கடுகி ஏகுங்கால் வழியிடையில் நின்ற பனைமரத்தி லிருந்து ஒரு ஆந்தை கீச்சு என்று ஒரே ஒரு சத்தமிட்டு நின்றது. அவ் ஒலியைக் கேட்டதும் அக் கூட்டத்தில் சென்ற நெல்லைநாயகம் என்பவன் இப் பிள்ளையிடம் ஒல்லையில் வந்தான். அவன் நிமித்தம் பார்த்துச் சொல்லுவதில் கொஞ்சம் வல்லவன். இவரிடம் நெருங்கி "எஜமான்! பொல்லாத சகுனமா யுள்ளது; எல்லாம் இடையூறுகளாய்த் தோன்றுகின்றன; இப்பொழுது திரும்பிவிடுவது நல்லது; இனி மேலே செல்லலாகாது" என்றான். இவர், அது என்ன? காரணம் யாது? எனஎதிர்த்துக் கேட்டார்.

நெல்லைநாயகம்:— இப்போது இடது பக்கமாய் ஒரு ஆந்தை போட்ட சத்தம் கேட்டதா?

பிள்ளை:— ஆமா; கேட்டது.

நெல்லைநாயகம்:— அதுதான் கெட்டது. "ஓர் உரை உரைக்கும் ஆகில் உற்றதோர் சாவு சொல்லும்" என்பது சகுன சாத்திரம் ஆதலால் ஒற்றையான இந்த ஆந்தைச் சத்தம் குற்றம் ஆகும்; நாம் நேரே போனால் யாரேனும் சாக நேரும்; ஆதலால் போகலாகாது. வேகமாய் மீளவே வேண்டும்.

பிள்ளை:— ஒரு குருட்டுக் கூகையின் வெருட் டொலிக்குப் பயந்து நாம் குறித்த காரியத்தை விட்டு மீளுவதா? கருதியதை முடிக்கவே வேண்டும்; வருவது வரட்டும்; நாம் போவோம்.

என மேல் வேகமாக அனைவரையும் ஏகச் செய்து இவர் போகலானார். பொழுது விடியவும் ஸ்ரீவைகுண்டத்தை அடைந்தார். ஓரிடத்தில் படைகளோடு அமர்ந்திருந்தார். உற்றவர்க் கெல்லாம் உணவாதிகள் ஊக்கமுடன் நடத்தினார்.

பிற்பகலில் சாக்குகளைத் தோளில் போட்டுக்கொண்டு விலைக்கு நெல் வாங்க வந்த பாவனையாகச் சிலரைப் போய் அளவு விசாரித்து வரச் செய்து நெற்பொதியின் உளவு நிலையை உணர்ந்து கொண்டார். பின்பு களவு நிலை கருதிக் காலம் நோக்கி யிருந்தார். அந்நோக்கில் ஊக்கமும் களிப்பும் தேக்கி நின்றன. இருள் வர வெண்ணி மருள் மனம் இருந்தது.

## அம்பார நெல்லை வம்பாக வாரியது.

இரவு வந்தடைந்தது; அடையவும் எருதின் இனங்களைக் கரவுடன் கொணர்ந்து நெல்லின் களத்தை வளைந்தார். படைகளை ஒல்லையில் ஏவிப் பொதிகள் கட்ட வூக்கினர். கொண்டு போன சாக்குகளில் கண்ட படியெல்லாம் வாரி அனைவரும் கவர்ந்து கட்டினர். அங்கிருந்த அளவுகாரரும், காவலாளிகளும் உளவு தெரியாமல் களவு செய்ய வந்துள்ளார் என்று கடுத்துத் தடுத்தார். தடுத்த அவர்களை இவருடைய ஆட்கள் அடித்தார். அடிக்கவே சாத்தன், சடையன், சங்கன், மூக்கன், முத்தன், கருப்பன், காத்தான் என அங்குக் காத்திருந்தவர் அனைவரும் கலங்கி ஓடினர். ஓடிப்போன அவர் தங்களுக் கெல்லாம் தலைவனுயுள்ள பாண்டியத்தேவனிடம்போய் பதறிச் சொன்னர். தலைமைக் காவலனுன அவன் அந் நிலைமையைக் கேட்டதும் விரைந் தெழுந்து கம்பெடுத்துக் கடுத்து வந்தான். கொம்பனை போல் கம்போடு கடுகி ஓடிவந்த அவன் நெல்லின் களங் குறுகிக் கொள்ளை நிலையைக் கண்டான். கொதித்துப் பயந்தான்.

## பாண்டியத் தேவன் மூண்டு போர் செய்தது.

பொதிகளை ஏற்றிப் போக நிற்கின்ற எருதுகளை முன்னம் எற்றி மாட்டினன். மாட்டவே, கூட்டமாய் நின்றவர் கூடி வளைந்தார். கொடுங் கலகம் மூண்டது. சிலம்பத்தில் அவன் மிகவும் கைதேர்ந்தவன் ஆதலால் துள்ளிக் குதித்துக் கொள்ளி வட்டம்போல் கம்பு சுழற்றிக் கொதித்து அடித்தான். எதிரிகளும் தொடர்ந்து எதிர்த் தடித்தார். அடித்திடும் கம்புகள் அனைத்தையும் தட்டி நேரே கடுத்து விரைந்து வலசாரி இடசாரியாகப் பாய்ந்து அவன் கடிது சுற்றிக் கொடிதாய் அடித்தான். அந்த அடிகளினல் சிலர் படியில் சாய்ந்து பதைத்து உருண்டார். சிலர்

மருண்டு நின்று மாறி மூண்டார். பலர் வெருண்டு விலகி வியந்து நின்றார். அவன் மீறி ஏறி வீர ஆடல்கள் புரிந்தான்.

யாரையும் அருகே அணுக ஒட்டாமல் கடு வேகத்துடன் வீசி அவன் கெலித்து வருங்கால் காமய நாயக்கன் என்பவன் கொதித்துப் பாய்ந்து அவனுடன் நேரே கம்பு கோத்தான்.

## இரண்டு வீரரும் முரண்டு பொருதது.

இருவரும் கம்பில் கைகண்ட வீரர்கள் ஆதலால் கால் மண்டி மூண்டார். ஏறியும், இறங்கியும், எதிர்ந்தும், சுற்றியும், மாறியும், வலம் இடமாக வந்து மேற் சீறியும், மீறியும் அவர் சிலம்பம் புரிந்தார். அடியினைக் கட்டுவர்; அணைத்துத் தட்டுவர்; முடி என முட்டுவர்; முறித்து மீளுவர்; கொடி எனச் சுற்றுவர்; கொதித்துக் குத்துவர்; இடியென எற்றுவர்; எதிர்த்து வெட்டுவர்; எடுத்து அடி பெயர்க்கு முன் எற்றிப் பாயுவர்; அடுத்து அடியாற்றி மேல் அடர்த்துக் காயுவர்; கடுத்தயல் ஓட்டுவர்; கறுத்து நீட்டுவர்; மடுத்தடன் மூட்டுவர்; மறித்து மாட்டுவர்; இவ்வகை நெடும்பொழுது இடை விடாமலே வெவ்வலியுடன் அவர் வெகுண்டு போர் செய்தார். அவரது சிலம்பப் போர் வலங்கைப் புலிகள் வாதாடுவது போல் வன்ம மீதோடி வலி மண்டி நின்றது. ஒருவருக்கு ஒருவர் சிறிதும் இளையாமல் கம்பு பூட்டிக் கைத்திறம் காட்டிக் கடுகி வருங்கால் காமயன் முடுகிப் பாய்ந்து எதிரியை மூண்டு அடித்தான். அந்த அடியால் மண்டை சிதைந்தது; தேவன் மயங்கி நின்றான். உதிரம் சோர, உடல் சோர்ந்து, உள நிலை திரிந்து, உறுதி குலைந்து மறுகி நின்றவனை இறுகப் போய்ப் பிடியுங்கள் என்று தம் அருகே நின்ற பரிவாரங்களைத் தானாபதி ஏவினார். அவ்வாறே அவனைப் பாய்ந்து பிடித்துப் பற்றித் தூக்கினர். "ஒல்லையில் அவனை நெல்விடுகின்ற நிலவறையி லிட்டு மேலே நெல்லைக் கொட்டிப் பூட்டுங்கள்" என்று பிள்ளை துள்ளினர். அவர் சொல்லியபடியே பொல்லாதார் சிலர் புகுத்திப் பூட்டினர். பாவம்! அவன் அங்கே பதைத்து உயிர் போயினன். படுபழி ஆயது. அடுகொலை ஆகவே இவர் கருதிய வேலைகள் கடுகி நடந்தன.

ஒல்லையில் நெல்லை வாரினர்; பொதிகள் கட்டினர்; எருது களில் ஏற்றினர்; விரைவாய் ஓட்டினர்; இரவே வந்தார்; ஓட்டப்

பிடாரம் என்னும் ஊரினை யடைந்தார்; அக் கொள்ளை நெல்லை யெல்லாம் பிள்ளை வீட்டில் கொட்டிப் பெருக்கி வைத்தார். அள்ளி வந்ததை நினைந்து இவர் உள்ளங் களித்து உடன் வந்த படைவீரர்கட் கெல்லாம் மறுநாள் உயர் விருந்து செய்து அனைவரையும் உபசரித் தனுப்பினர். உள்ளியதை முடித்தோம் எனத் தம்முடைய வல்லமையை மெச்சி ஊக்கி யிருந்தார்.

இங்ஙனம் இவர் இருக்க அங்கே பாண்டியத் தேவன் இறந்த செய்தியை அவன் மனைவி யாகிய கனகி என்பவள் அறிந்து குலை துடித்துத் தலைவிரி கோலமாய் ஓடிவந்து போர்க்களம் புகுந்து நிலவறையில் கொலையுண்டு நிற்கும் தன் தலைவனைக் கண்டு நிலை குலைந்து 'ஐயையோ!' எனத் தலையில் அடித்துத் தரையில் விழுந்து புழுவெனத் துடித்துப் புரண்டுருண் டாள். களிறு பிடியுண் டழியத் தனியே துனி மிகுந்து பிளிறும் பிடிபோல் ஓவெனக் கூவி ஓலமிட் டலறி ஒப்பாரி வைத்து அவள் உருகி யழுதாள். மறுகி அழுத துயரம் பரிதாபமாயது.

### கனகி புலம்பியது.

"மாலையிட்ட நாள்முதலா மதகரியும்
இளம்பிடியும் மருவி நின்ற
கோலமெனக், கலைமானும் பிணையும்எனக்
கூடிநாம் குலாவி வாழ்ந்தோம்;
மாலைவரை கண்டுமனம் மகிழ்ந்திருந்தேன்;
மடங்கலெனப் போன உன்னைக்
காலையிந்த நிலைகண்டேன்; என் துரையே!
என் கண்ணே! கருமம் என்னே? (1)

தண்டடர்ந்து வந்தாலும் தனிஎதிர்ந்தே
எளிதடிக்கும் தறுகண் வீரா!
கொண்டையங்கோட் டைமறவர் குலமணியே!
விலைமதியாக் கோவா முத்தே!
பண்டைவினைப் பயனிதுவோ? என்தலையில்
இப்படியும் பாவித் தெய்வம்
கொண்டெழுதி இருக்குமெனக் கனவிலும்நான்
குறித்திலனே கோவே! கோவே! (2)

பாலில்அயல் நீர்கலந்து பணத்துக்கு
விற்றறியேன்; பழுது சொல்லிக்
கூலிதனைக் குறைத்தறியேன்; கோட்சொல்லிக்
குலைத்தறியேன்; கோலிவைத்த
வேலிதனை அழித்தறியேன்; மேலோரைப்
பழித்தறியேன்; வினையேன் கொண்ட
தாலிதனை அழித்ததுஎன்ன தெய்வமே!
எனத்தலையில் தாக்கி வீழ்ந்தாள்." (3)

இன்னவாறு கூவி அழுது ஆவி சோர்ந்து அலமந்து எழுந்து இனத்தவர் சிலரை உடன் அழைத்துக்கொண்டு பாளையங் கோட்டைக்குப் போனாள். பிறகட்டு மாளிகையுட் புகுந்தாள். அவரைக் கண்டாள்; "துரைகளே! மோசம் நடந்து போச்சே!" என்று முகத்தில் அறைந்து அழுதாள். அவர் திகைத்து நோக்கி என்ன! அது? ஏன் அழுகின்றாய்? யாது நிகழ்ந்தது? என்றார்.

கனகி:— நம்முடைய கும்பினி நெல்லை யெல்லாம் கொள்ளை கொண்டு போனாரே! பொல்லாத கொலையும் விழுந்துள்ளதே! நான் என்ன சொல்லுவேன்? சாமி!

பிறகட்டு:— கொள்ளையா! யார் அது செய்தது? வீணே அழுதுஉழலாதே; பதறாமல்தைரியமாய்நின்று உள்ளதைச்சொல்.

கனகி:— துரைகளே! பொல்லாத பிள்ளை வந்து கொள்ளை செய்து கொலையும் பண்ணிப் போய் விட்டாரே. நான் தாலி இழந்து தவிக்கின்றேனே; என் குலை துடிக்கின்றதே!

பிறகட்டு:— பிள்ளையா? யார் அவன்? உள்ளம் கலங்கிப் புலம்பாதே; நடந்ததைத் தெளிவாகச் சொல்.

கனகி:— பாஞ்சாலங்குறிச்சித் தானாபதிப் பிள்ளை படைகளோடு வந்து நமது நெல்லைக் கொள்ளையடித்தார்; என் வீட்டுக் காரர் புகுந்து தடுத்தார்; அவரை அடித்துப் பிடித்து நிலவறையில் வைத்துவிட்டு நெல்லை யெல்லாம் அள்ளிக் கொள்ளை கொண்டு போனார்; என் கணவர் துள்ளித் துடித்து அங்கே இறந்து போயினர்; இனிமேல் நான் இருக்க நீதியில்லை; நாயனே! என்று அவள் புலம்பி யழுது கலங்கி நின்றாள்.

---

## பதினாறாவது அதிகாரம்

### நெற்கட் டழியப் பிற்கட் டெழுந்தது.

கனகி சொல்லிய அவ் வுரைகளைக் கேட்டதும் துரை உள்ளங் கனன்று உருகி உளைந்தார். மறுகி நின்ற அவளை உரிமையுடன் நோக்கி, "நீ யாதும் அஞ்சாதே; உன்னை நான் ஆதரிக்கின்றேன் போ" என அவளை ஆற்றி அனுப்பிவிட்டு ஓர் உயர்ந்த வெள்ளைக் குதிரையில் ஏறி ஸ்ரீவைகுண்டத்திற்கு விரைந்து வந்து நெற்களத்தை அடைந்தார். நெல் எல்லாம் நிலை சிதறித் தலை தடுமாறி அமர்க்கள மாயிருப்பதை நோக்கிப் பல்லைக் கடித்து உள்ளங் கொதித்தார். பின்பு நிலவறையை வந்து பார்த்தார்; தலைமைக் காவலன் இறந்து நிற்கும் நிலையைக் கண்டு நெஞ்சம் கலங்கி நெடுந்துயர் கூர்ந்தார்; நெல் எல்லாவற்றையும் நேர் செய்யப் பணித்து, மாண்டு போனவனை மாண்புடன் அடக்கஞ் செய்யும்படி விடுத்து, ஆண்டு நின்ற பணியாளர்கள் யாவர்க்கும் உறுதி கூறி நிறுத்தி, மீண்டு தம் ஊரையடைந்து இங்கே நிகழ்ந்தவற்றை யெல்லாம் கும்பினி அதிபதிகளுக்குக் கொதிப்புண்டாகும்படி நேரே எழுதியனுப்பினர். மன வேதனையோடு அதிவேகமாய் அவர் காரியங்களைக் கருதிச் செய்தார். கலெக்டருக்கு வேண்டியதை விரைந்து தெரிவித்தார்.

அதன் பின் ஜமீன்தாருக்கும் ஒரு கடிதம் எழுதினர். அன்று அவர் உறுதி சூழ்ந்து எழுதிய படியை அடியில் பார்க்க.

### பிற்கட்டின் கடிதம்.

"பாஞ்சாலங்குறிச்சிப் பாளையகாரராகிய கட்ட பொம்மு நாயருக்கு எழுதியது: உம்முடைய தானுபதிப்பிள்ளை நாளது ஜூன் மாதம் நாலாந் தெய்தி (4--6-1799) சில படைகளுடன் வந்து ஸ்ரீவைகுண்டத்தில் இருந்த எங்கள் கும்பினி நெல்லைக் கொள்ளை செய்து போயுள்ளான். கொலைகளும் விழுந்துள்ளன. அப்பொல்லாதவன் நாட்டில் கலகங்கள் மூட்டிக் கும்பினிக்குச் செய்துவரும் அல்லல்கள் அளவில்லன. அவன் என்ன சொன்

ஞலும், யாது செய்தாலும் நீர் தட்டிக் கேட்பதில்லை. பல வகையிலும் உம்மைக் கெட்ட வழியில் ஊக்கிக் கேடுகள் புரிந்து வருகின்ருன். அக் கெடுநிலை தெரியாமல் நீர் மடிகொண்டிருக்கின்றீர்! கலெக்டர் லஷிங்ட்டன் எழுதிய கடிதங்களுக்கும் நீர் யாதும் பதில் சொல்லாமல் அவமதித்திருப்பதாக அவர் என்னிடம் நேரில் கூறி மிகவும் வருந்தி யிருக்கிருர். எங்கள் எல்லாருக்கும் உம்மீது வெறுப்பு ஏற்பட்டுள்ளது. சங்க அதிபதிகள் உம்மைப் பெருந் தன்மையோடு அழைத்து விருந்து புரிந்து தகுந்த மரியாதைகள் செய்து, சிறந்த வெகுமதிகள் தந்து, உறவுரிமை பாராட்டிப் பெருமையுடன் அனுப்பியதற்குப் பதில் உதவியா இது? கும்பினிக்கு என்றும் துணையாய் நின்று இதம் புரிந்து வருவதாக நீர் சத்தியம் செய்து கொடுத்தீர்! இன்று இத்திறம் புரிந்தீர்! ஆனல் பிள்ளை செய்துபோன கொள்ளை நிலை உமக்கு எள்ளளவும் தெரியாது என்பதை யான் உள்ளறிந்துள்ளேன்; ஆயினும் என்? அவன் போன போக்குக்கெல்லாம் யாதும் தடை சொல்லாமல் ஆதரித்து வருகின்றீர்! அதனல் என்னகேடு வரும் என்பதை நீர் எண்ணி நோக்கவில்லை; பல சொல்லி என்? அவனை இனித் தழுவி நிற்பின் உமது பாளையம் பாழாம். உமது நன்மைக்காகவே சொல்லுகின்றேன்; உமக்கு நல்ல காலம் இருந்தால், கெடுகாலனை அவனுடைய தொடர்பை உடனே ஒழித்து விடுக; நெல்விலைக்கு ஈடு பண்ணுக; கொள்ளை செய்த பிழைக்கு உள்ள தண்டம் தந்து கொலைக்குப் பதில் சொல்லுக; கொள்ளையும் கொலையும் புரிந்த அக் கொடியவனை என் கைப் படுத்துக; இவ் எல்லாவற்றிற்கும் முடிவானபதிலை வாரம் ஒன்றுள் விடுக; இன்றேல் உமது அரசு அழிந்து, குடி ஒழிந்து, அடியோடு நீர் முடிவுற நேரும்.''

என்று இவ்வாறு பிறகட்டு கொடிதாக எழுதி அஞ்சல் ஆள் மூலம் பாஞ்சாலங் குறிச்சிக்கு நேரே அனுப்பினர்.

அதன் பின்பு அங்கே கொள்ளையில் கொலையுண்ட பாண்டியத்தேவன் மனைவிக்கு வேண்டிய விளை நிலங்களை வீரமானியமாக உதவி விட்டு, மேல் விளைவை ஆண்டுதோறும் ஈண்டு அவர்

எதிர்பார்த்திருந்தார். அவருடைய கவனமும் கவலையும் கடுமை யாய் வேலை செய்தன. நேர்ந்துள்ளநிலை நெஞ்சைக் கலக்கியது.

### நிருபம் வர நிருபன் தெரிந்தது.

அவர் அனுப்பியிருந்த கடிதம் பாஞ்சைப்பதிக்கு வந்தது. இந்த ஆண்டகையாளர் கண்டார். நேர்ந்துள்ள நிலைகளை யறிந்து நெஞ்சந் துடித்தார். வசந்த மாளிகையை விடுத்து மனைவியுடன் விரைந்து அரண்மனைக்கு வந்தார். அரச காரியங்களைக் கவனி யாமல் பொறியின்பங்களை நுகர்ந்து வறிதே பொழுது போக்கி யிருந்த தமது அறிவின்மையை இகழ்ந்தார். அவலக்கேடு புகுந்துவிட்டதே! என்று கவலைமீக்கொண்டு கடிது கடுத்தார்.

தம்பியர் உறவினர் முதலானவர்களை உரிமையுடன் அழைத் தார். அனைவரும் வந்து அருகே நின்றார். தமது மாமனை நோக்கித் "தானாபதி செய்துள்ள தீமையை ஏன் எனக்கு முன்னமே தெரிவிக்கவில்லை?" என்று இவர் சினந்து கேட்டார். அவர் "யாதொன்றும் தெரியாதே!" என்று அஞ்சி யுரைத்தார். அதன் பின் அங்கு நின்றவர் யாவரையும் பண்புடன் பார்த்து இவர் பரிந்து பேசினார். நண்பாய் நம்பி நின்ற கும்பினி நெல்லை நன்றி யொன்றும் கருதாமல் பிள்ளை போய்க் கொள்ளை செய்து வந்துள்ள கொடுமையைச் சொல்லி இவர் உள்ளங் கொதித் தார். எல்லாரும் திகைத்து அவரை இகழ்ந்து பழித்து எள்ளி வைதார். இயல்பாகவே அவர் மீது சில காலமாகப் பலரும் வெறுத்திருந்தார் ஆதலால் இந்த வினை விளைவு தெரிந்ததும் வெளிப்படையாய்க் கடுத்து இளிப்புரைகளாடினார். கும்பினியா ருடைய கொடும்பகை வம்பாக மூண்டதே என்று அரச குடும் பத்தாரும் வெம்பி வெதும்பி விளைவுகளை நினைந்து வருந்தினார்.

### மன்னர் மறுகி நின்றது.

தன்னுடைய தானாபதியால் நிகழ்ந்த இன்னல் இளிவுகளை நினைந்து மன்னன் மறுகினான். பிள்ளைமேல் பேரன்புடையராயி னும் இந்தப் பிழை நிலையை அறிந்ததும் உள்ளம் கனன்று உருத்து நொந்தார். பொல்லாத கொள்ளையும் புலையான கொலை

யும் தன் ஆட்சியில் புகுந்தனவே என்று அலமந்து கவன்ருர். வெள்ளை அதிபதிகள் உள்ளம் திரிந்து எள்ளி வெறுக்கும்படி பிள்ளை செய்து விட்டாரே! என்று பெருந்துயர் உழந்தார்.

"இனி என்ன செய்வது?" என எண்ணி வருந்திஞர். முன்னம் தமக்குக் கும்பினியார் செய்த உதவி நலங்களை யெல்லாம் நினைந்து நினைந்து நெஞ்சம் இரங்கினுர். "கொஞ்சமும் யோசியாமல், நெஞ்சமும் அஞ்சாமல் பிள்ளை போய் இப்படி பிழை செய்து வந்துள்ளாரே!" என்று பெரிதும் மறுகி இவ் வீர வள்ளல் உருகி உளைந்தது உள்ளே உறைந்து கிடந்த அரிய பண்புகளை உலகம் அறிய உணர்த்தி நின்றது. உரிமையாய் உறவாடி நண்புகொண்டு அருமை பெருமைகளை அன்போடு புரிந்த கும்பினிக்குச் சிறுமையா வம்பு செய்தது கொடிய தீமையே என நெஞ்சம் கொதித்தார். நேர்ந்த நிகழ்ச்சிகள் நெடிய கவலைகளாய் நீண்டு நின்றன. பலவும் பன்னிப் பரிந்து உளைந்தார்.

நண்பை நயந்தது.

சங்கமுதல் தலைவர்நமை உவந்தழைத்துத்
 தகைமைசெய்து நாம்செய்துள்ள
பங்கம்எல்லாம் அறமறந்து பண்புபா
 ராட்டியுயர் பரிகள் ஏழும்
தங்கமணிச் சிவிகைமுதல் பலவும்தந்து
 உறவாடித் தமிழ்த்தென் ஞட்டின்
சிங்கம்எனப் புகழ்ந்துவிட்ட சங்கநெல்லைக்
 கொள்ளையிட்ட தீமை என்னே! (1)

நன்றியை நினைந்தது.

ஒருநன்றி செய்தாரை உள்ளத்தே
 நினைந்தென்றும் உயிர்நட் பாகப்
பெருநன்றி யுடன்பேணிப் பெரியர்நிற்பர்;
 சிறியர்அன்றே மறந்து போவர்;
தருநன்றி தனைமறந்தும் தாமவர்க்குக்
 கேடெண்ணல் சண்டா ளர்க்கே
வருமன்றி மற்றவர்க்கு வருங்கொல்லோ?
 வந்ததிவன் பாலீ தென்னே? (2)

பிழையை இகழ்ந்தது.

*பிறர்எல்லாம் திறைசெலுத்திப் பணிசெய்யப்*
*பெருமையுடன் பேணி நம்மை*
*உறவுகொண்டு வரிஅகற்றி உரிமைசெய்தார்*
*ஓராண்டும் நிறைய வில்லை*
*மறமிகுந்திச் செயல்புரிந்த வகைதெரிந்தால்*
*நம்மைஅவர் மதிப்பார் கொல்லோ?*
*அறமிகுந்த பதியிருந்தும் அரசிருந்தும்*
*அநியாயம் செய்தான் அன்றே.* (3)

பிள்ளையை வெறுத்தது.

*கள்ளர்களைத் தலையடக்கிக் களவெல்லாம்*
*நிலைஒடுக்கிக் கருதார் என்ன*
*உள்ளவரை உளமடக்கி உலகமெலாம்*
*நலமடைய உயர்ந்து நின்றேம்;*
*பிள்ளைமகன் உள்ளிருந்தே கள்ளமக*
*னும்செய்யாப் பிழையைச் செய்தே*
*எள்ளலுடன் அடக்கமா இனியவன்போல்*
*இருக்கின்றான் இருப்பு நன்றே!* (4)

[வீரபாண்டியம்]

உள்ளம் கனன்று இவ்வாறு இவர் உளைந்து வருந்தி இருத்தலால் இவருடைய நல்ல நீர்மைகளை நாம் நன்கு உணர்ந்து கொள்ளுகிறோம். நன்றியறிதலைக் குறித்து இங்கே இவர் உரைத்துள்ள குறிப்புகள் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணரத்தக்கன. தம்பால் அன்பு பாராட்டிக் கும்பினியார் செய்திருக்கும் பண்புரிமைகளை நினைந்து இவர் நெஞ்சம் கனிந்திருத்தலை உரைகள் உணர்த்தி நிற்கின்றன. இனிய உறவாய் நேர்ந்த அந்த வெள்ளை அதிபதிகளுக்கு விரோதமாய்ப் பிள்ளை சதி செய்துள்ளது இவரது உள்ளத்தை மிகவும் கொதிக்கச் செய்தது.

தானாபதி செய்திருக்கும் செயல் எவ்வழியும் இவர்க்கு வெவ்விய துயரமாய் விரிந்து நின்றது. நேர்ந்துள்ள நிலைகளை நேரே கூர்ந்து ஓர்ந்து தெரிய இவர் நெடிது விரைந்தார்.

## பேசாமல் பேசுவது.

பெரும்பாலும் இவர் வாய் திறந்து பேசாமலே தாம் கருதிய கருத்துகளைக் குறிப்பால் உணர்த்திக் காரியங்களைச் சீரிய முறையில் நடத்தி வந்தார். தம்முடைய குறிப்பு நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து வினைகளை விரைந்து செய்யும் சதுரர்கள் நால்வர் எப்பொழுதும் இவர் அயலே இயல்பாய் நின்று வந்தனர்.

தம் பால் பரிசில் கருதி வரும் புலவர்களுடைய நிலைமை தலைமைகளை நுணுகி உணர்ந்து அவர்க்கு இவர் மரியாதைகள் செய்தருளும் முறை அரிய ஒரு சாதுரிய சாகசமாய் மருவியிருந்தது. சிறந்த புலவருக்கு உயர்ந்த சன்மானம் நூறுரூபாயும், ஒரு ஜோடி சால்வையும் கொடுப்பது வழக்கம். இந்தப் பரிசில் பெற நேர்ந்த புலவர் வந்தபோது அவரோடு உவந்து உரையாடிக் கொண்டிருப்பர். அங்ஙனம் சல்லாபமாய்ப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது தமது வலது கையை உல்லாசமா மீசையின் வலதுபுறம் தடவுவர். மேலே குறித்த சன்மானங்கள் சால்போடு வந்து நிற்கும். புலவருக்கு உதவி நலமாய் அனுப்பி யருளுவர்.

வலது மீசையை இடது கையால் தடவினுல் ரூபாய் எழுபத்தைந்து. அந்த வெகுமதியை அதற்கு உரியவர் அடைவர்.

இடது மீசையை வலது கையால் தடவினுல் ரூபாய் ஐம்பது. அதனையே இடது கையால் தடவினுல் ரூபாய் இருபத்தைந்து. இன்ன வாறு சன்மானங்கள் இனிது நடைபெற்று வந்தன. வரிசை அறிந்து யாவும் இவர் வழங்கி வந்தார்.

வந்த அதிகாரிகளுக்கு விருந்து முதலிய உபசாரங்களும் இந்த விதமான இனிய விந்தை முறைகளிலேயே நிகழ்ந்து வந்தன. இங்கிதம் அறிந்து சங்கேத மொழிகளை உணர்ந்து இவர்பால் வினையாண்மை புரிந்து வந்தவர் யாண்டும் விநயம் மிக வுடையராய் இனிய நீர்மைகளோடு விளங்கி நின்றனர்.

வாய்திறந்து பேசாமல் பேசி இவ்வாறு எவ்வழியும் செவ்வையாகக் காரியங்களை நடத்தி வந்தவர் அன்று உள்ளம் கடுத்து உருத்துப் பேசினர். "பொல்லாத அல்லலை விளைத்துள்ள தானு

பதியை ஒல்லையில் அழைத்து வருக" என்று இவர் இரைந்து சொல்லவே அருகே நின்றவர் விரைந்து சென்றார். மன்னன் உரையின் இன்னல் நிலையை உன்னியுணர்ந்த அவர் என்ன நிகழுமோ? என்று மறுகிப்போனார். அவ்வாறு போன சேனுபதிகள் மூவரும் தானுபதியிடம் போய், "மகாராஜா உங்களை அழைத்து வரச் சொன்னார்கள்" என்றார். அவர் உடனே எழுந்து விரைவாக வந்து இவர் முன் வணங்கி நின்றார். நின்றவரை அருகு இருத்தி, நெடுஞ் சினத்தை மனத்திருத்திப், பிற்கட்டின் கடிதத்தை எடுத்து "இதைப் படித்துப் பாரும்" என்று கொடுத்தார். அவர் பார்த்தார். உடனே உடல் வேர்த்து, முகங் கருகி, அகங் கலங்கித், தலை கவிழ்ந்து யாதொன்றும் எதிர் பேசாமல் புலனெடுங்கி யிருந்தார். அவரது நிலையினை யறிந்ததும் தலைவர் நெஞ்சம் குலைந்து நெடுஞ் சினங் கொண்டார்.

அவரை என்றும் யாதும் கடிந்து சொல்லாத இவர் அன்று மிகவும் கனன்று பேசினார். பேச்சில் கோபமும் கொதிப்பும் தாபமும் கலந்து வந்தன. சினந்து கூறியதில் நீதிகள் தெரிந்தன.

### கட்டபொம்மு கடுத்து உரைத்தது.

"உம்முடைய வீட்டில் ஊர் அறிய ஒரு மகனுக்குச் சிறு மணம் செய்வதற்காக அயலார்க்கு உரிய நெல்லை உலகம் அறிய அநியாயமாய் அள்ளி வந்தீர்! அங்கே கொலைகள் விழுந்தன; ஒரு கலியாணம் முடியுமுன் பல இழவுகள் நேர்ந்தனவே; கலியாணம் என்று வெளியே சொல்லி உள்ளே இவ்வளவு இழவு கூட்டி விட்டு ஒன்றும் உரையாமல் ஊமை போல் உறைந்திருக்கின்றீரே! என்னே உமது நிலை? அசைவிலாண்மையுடன் இசை வளர்த்து வந்த இவ் அரசுக்கு ஓர் வசை வளர்த்து விட்டீர்!" என்று உள்ளங் கடுத்து உருத்து உரைத்து மேலும் வெகுண்டு நேரே சில நீதிகளை மொழிந்தார். பிள்ளையை நோக்கி இவர் சொல்லிய உணர்வுரைகள் எல்லாருடைய உள்ளங்களுக்கும் நல்ல தெளிவான ஒளிகளை நன்கு உளவாக்கின.

### பிள்ளையை நோக்கிப் பிழை உணர்த்தியது.

"கொள்ளைசெய் தார்என்று ஒருபழி இந்தக்
கோதிலா அரசினுக்கு என்றும்

எள்ளலாம் வகையில் இயற்றினை! அந்தோ
என்றினி இப்பழி மறையும்?
தெள்ளுமா மதியன் என்றுனை முன்னம்
தேர்ந்துகைக் கொண்டனன் தெளியாப்
பிள்ளைமா மதிய னுயினை பெரிய
பிழையிது பிள்ளைமா மகனே! (1)

ஐயகோ! நல்ல அருளினை வளர்க்கும்
அறிவுடை மரபினில் பிறந்தாய்!
செய்யநூல் படித்தாய்! தெய்வங்கள் துதித்தாய்!
தினம்சிவ பூசையும் செய்தாய்!
வெய்யஇச் செயலும் விளைத்தனை என்றல்
வேறினி விளம்புவ தெவனே?
வையகத் தென்றும் வசையினை வளர்த்து
மரபையும் என்னையும் கெடுத்தாய்! (2)

திரிசிர புரத்தில் எமைவிழைந் தழைத்துச்
சீமைநன் மக்கள்தாம் சிறந்த
உரிமைகள் செய்து வரியினை அகற்றி
உபசரித் துறவுகொண் டாடி
அருமைநற் பரிசு பலகொடுத் தன்போடு
அனுப்பினர் அந்நன்றி மறந்தால்
இருமையும் இழந்து கெடுவதே யன்றி
இன்பம்வே றெய்தலும் உண்டோ? (3)

செல்விலைக் குரிய பொருளெலாம் வாரி
நேரிலே கொண்டுபிற் கட்டை
நல்வகை யாகக் கண்டுமுன் வைத்து
நயந்துநேர் நின்றுநான் செய்த
புல்வினை யனைத்தும் பொறுத்தருள் என்று
போற்றிநீ வருதலே புகழாம்;
இல்லையேல் இழிவும் பழியும்வெம் பகையும்
இடர்களும் தொடர்ந்துமேல் விளையும்." (4)

[வீரபாண்டியம்]

என அவர் விளைத்து வந்துள்ள வினை விளைவுகளை எடுத்துக் காட்டி இவர் இங்ஙனம் இடித்து உரைத்தார். உள்ளம் கடுத்து

உருத்து மொழிந்த இவ் வுரைகளைக் கேட்டதும் பிள்ளை பெருந் திகில் அடைந்து நெடுங் கவலையால் நிலைகுலைந்து அயர்ந்தார்.

அவர் ஒன்றும் பதில் சொல்ல முடியாமல் உளம் மிக மறுகி உளைந்து நின்றார். முன்னம் வெள்ளையர்களோடு இவர் முரணி நின்றமையால் அந் நிலையினை நினைந்து தலைவர் யாதும் தட்டிச் சொல்லார் என்று துணிந்து இப் புலையினை செய்ய நேர்ந்தார். இப்பொழுது உறவுரிமை புரிந்து நன்றி யறிவுடன் உறைந்துள்ளதை யுணர்ந்து உள்ளந் திகைத்து "இனி யாது செய்வது?" என்று அவர் பேதுறலானார். இறுதியில் துணிந்து விரகுடன் சூழ்ந்து பரிவுதோன்ற அவர் பரிந்து உரைத்தார்.

## தானுபதியின் தந்திர மொழி.

"அரசே! கலியாணச் செலவுக்கு மீண்டும் கொஞ்சம் நெல் வேண்டி யிருந்தது. கும்பினியார் நமக்கு வேண்டியவர் ஆதலால் அவரது நெல்லின் நிலையை விசாரித்து அறிந்து விலைக்கு வாங்கி வரவே இங்கிருந்து விரும்பிச் சென்றேன். சென்று நெல் விலை பேசிக் கொள்முதல் செய்தேன். பின்பு அளவு செய்யுங்கால் அங்கிருந்த காவலாளிகள் நம்முடைய கம்பளங் களை வம்புக்கிழுத்து வாய்மதம் பேசினர். நிலைமை தெரியாமல் இகழ்ந்து பேசியதால் கலகம் மூண்டது. நான் தடுத்துப் பார்த் தேன்; யாதும் முடியவில்லை. இரு வகையிலும் கொலைகள் விழுந்தன. விழவே நின்றவர் எல்லாரும் எல்லை மீறி நெல்லை வாரிச் சூறை யாடினர். யான் இடை நின்று விலக்கிவிட்டு, விலைக்கு வாங்கிய நெல்லை மட்டும் எடுத்து வந்தேன்; கள்ளம் யாதும் கருதிச் செய்திலேன்; உள்ளம் அறிந்த உண்மை யிது; பிழை யுளதாயின் பொறுத் தருளுங்கள்" என்று பிள்ளை விநய மாகப் பேசி நின்றார். இவர் வஞ்சமும் சூதும் அறியாதவர் ஆதலால் அவரது வாய் மொழியை நம்பி நெஞ்சறியாமல் நேர்ந்தது என நினைந்து தணிந்தார். சார்ந்திருந்தவர் எல்லாரை யும் அயல் அகல விடுத்து இவர் தனி அமர்ந்திருந்தார். வந்த கடித நிலையை நினைந்து சிந்தை கவன்று தியங்கி நின்றார்.

### மன்னர் மறுகியது.

"இனிப் பிறகட்டுக்கு என்ன சொல்லுவது?" என எண்ணி யுளைந்து யாதொரு பதிலும் துணிந்து எழுத முடியாமை யால் அயர்ந்து இருந்தார். அதனால் மேலே காலதாமத மாயது.

இந்த நிலையில் வாரம் ஒன்று கழிந்தது. தாம் எதிர்பார்த்த படி தம் கடிதத்திற்குப் பாஞ்சைப் பதியிலிருந்து பதில் வரா மையால் பிறகட்டு வருந்தியுளைந்து பெருங்கோபம் கொண்டார்.

### பிறகட்டு வந்தது.

உள்ளம் கனன்று நின்ற வெள்ளைத் துரை எல்லை மீறிய சினத்தில் அல்லல் கூர்ந்திருந்தார். "நல்ல குலவீரன் என்று கொண்டாடி நின்று கட்ட பொம்முக்கு நலம் பல செய்து கும்பினியார் நம்பி யிருந்தும் அந் நன்றியை மறந்து வம்புகள் புரிந்து இங்ஙனம் வன்ம முற்றுள்ளான். என்னே இவன் நிலை!" என்று எண்ணி வருந்தினர். பின்னர் நேரில் போய் நிலைமைமுழு வதும் தெரிந்து வருவோம் எனத் துணிந் தெழுந்து குதிரையில் ஏறி அதி வேகத்தோடு பாஞ்சாலங் குறிச்சிக்கு வந்தார்.

### பாஞ்சைப்பதி பிறகட்டை வாஞ்சையுற்று நின்றது.

அவருடைய வரவினை அறிந்ததும் இவர் விரைவுடன் எழுந்து உவந்தழைத்து உபசரித்துச் சிறந்த ஆதனந் தந்து அரங்க மாலில் உடன் அமர்ந்திருந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் குசலம் விசாரித்துச் சிறிது பொழுது உவகை யுரை யாடிய பின் வந்த துரை இருந்த துரையை நோக்கி, "நான் அனுப்பியுள்ள கடிதத்திற்கு இதுவரை இங்கிருந்து யாதும் பதில் வரவில்லை; இது அவமதிப்பு அல்லவா? காரிய விசாரணை யில் இவ்வாறு மடி கொண்டு மாறுபட் டிருப்பது நும் போன் றவர்க்கு மாண்பன்று. வேறுபட் டிருப்பினும் ஆளுகையில் கூறுகெட்டிருப்பது கூடாது. உமது தானுபதிப் பிள்ளை அநி யாயமாய் வந்து எங்கள் கும்பினி நெல்லைக் கொள்ளை செய்து கொலை விளைத்துள்ளான். உள்ளிருந்து கொண்டே உம்மையும் கெடுத்து, எம்மையும் கெடுக்கின்றான். அக் கெடு நிலையாளன்

இடையிருந்து செய்து வரும் இடையூறுகள் பல. தொல்லைகளையே விளைத்து எல்லை மீறி நிற்கின்ற அவனை நீர் யாதும் தடுத்துச் சொல்வதில்லை. என் எல்லையிலுள்ள நெல்லையே கொள்ளை கொண்டு போனல் மற்றவர்கட்கு அவன் எவ்வளவு அல்லல்கள் செய்திருப்பான்? வெள்ளையான உள்ளமுடைய உம்மைப் பிள்ளை புகுந்து பிழை மிகச் செய்கின்றான்; வெள்ளையர் கோபத்தை மூட்டி வினை விளைத்து நிற்கின்றான். பொல்லாத அவனை ஒரு கணமும் இங்கு நில்லாமல் செய்து நிலையான தண்டனை கொடுக்க வேண்டும். நல்லவர் என்று நம்பியே விரும்பி உம்மிடம் நேரே இதனை நான் சொல்ல வந்தேன். கொள்ளையான நெல்லுக்குள்ள பொருளையும் கொடுத்து, அப் பிள்ளையையும் என் கைப்படுத்த வேண்டும். பதில் என்ன சொல்லுகிறீர்?" என இன்னவாறு எதிரிருந்து கேட்ட பிற்கட்டின் சொற்கட்டையும், நெற்கட்டழிவையும், நேர்ந்துள்ள இக் கட்டுகளையும் இம் மன்னர் எண்ணி யுளைந்து அவ் வெள்ளைத் துரையை விழைந்து நோக்கி, "அருமை நண்பீர்! உரிமையுடன் பொறுமை செய்தருளுக; அங்கிருந்து திரும்பம் வந்தவுடன் தானே பதியை விசாரித்தேன்; மனசாரச் செய்ததன்று; இடையிலுள்ளவர்களால் நேர்ந்த கலகம் என்று தெரிகின்றது; புலன் தெரியாமல் இவ்வாறு புலை நடந்து போயது; பல பல சொல்லி என்? நெல் எவ்வளவு போயுள்ளது? விலைப் பொருள் என்ன? தயவுசெய்து உரைத்தருளுங்கள்" என்று நயமுடன் உரைத்தார்.

பிற்கட்டு:— அம்பாரத்தில் ஆயிரங் கோட்டை நெல்லுக்கு மேல் இருந்தது; இப்பொழுது மூந்நூறு இருக்கும்; எழுநூறு கோட்டை கொள்ளை போயுள்ளது; இதுபொழுது உள்ள நிலையில் விலைத் தொகை ரூபாய் மூவாயிரத்து முந்நூறு ஆகும்.

கட்டபொம்மு:— கேளாமல் அள்ளி வந்ததற்காக அபராதம் ரூபாய் எழுநூறு; ஆக ரூபாய் நாலாயிரம் தருகின்றேன்; இதோ உரிமையோடு பெற்றுக் கொள்ளுங்கள்.

பிற்கட்டு:— நெல்லின் விலையை மட்டும் நான் இங்கே வாங்க வரவில்லை. கொள்ளையில் நேர்ந்த கொலைப் பழிக்குப்

பிள்ளை தலை பிணையாக வுள்ளது; ஆதலால் அவனை இங்கு வைத்திருக்க லாகாது; என் கைப்படுத்துக; அவன் பட்டொழி யின், இந் நாட்டிற்கும் உமக்கும் எமக்கும் நன்மையாம்; ஆகவே அவனை இவ்விடத்தை விட்டு போகச் செய்து சாக அடிக்கவேண்டும். அதுவே அரசுக்கு உரிய சிறந்த விவேகமாம்.

கட்டபொம்மு:— அவர் நல்ல குடும்பத்தில் பிறந்தவர்; பொல்லாதவர்களுடைய சேர்க்கையால் இவ்வாறு பிழைபட நேர்ந்துள்ளார்; பிழைகளைப் பொறுப்பது பெரியோர் கடமை; உள்ளம் இரங்கிப் பிள்ளை செய்துள்ளதைப்பொறுத்துவிடுங்கள்.

பிற்கட்டு:— கொள்ளையும் கொலையும் புரிந்த அக் கொடிய வனுக்கு நீங்கள் இப்படி இடங் கொடுக்க லாகாது; அந்த இளக்காரம் கொடுத்தால் இந்த இடத்திற்கே கேடாம்; இப் பொழுதே அவனை விலக்கி ஒழித்துவெளி ஏற்றி விட வேண்டும்.

கட்டபொம்மு:— இனந் தெரியாமல் நடந்துபோனதை நினைந்து சினந்துகொள்வது நன்றன்று; இனிமேல் அவரால் யாதொரு தவறும் நடவா வண்ணம் யாண்டும் நான் பாது காத்து வருகின்றேன்; இம்முறை மன்னித்து அருளுங்கள்.

என்று இன்னவாறு மன்னர் மொழிந்து மறுகி எழுந்து பிற்கட்டின் கையைப் பிடித்து நயந்துகொண்டு விழைந்து வேண்டி மிகவும் மன்றாடி நின்றார். வெள்ளைத்துரை கையை வீரத்துரை பிடித்து உரிய பிள்ளைக்காகப் பரிவு கூர்ந்து மறுகி வேண்டிய நிலை அறிய விநய விவேகங்களாய் நீண்டு நின்றது.

## தானாபதி இடை மொழிந்த படுமொழி.

இந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் அயலே ஒரு அறையில் அமர்ந்து மறைவாகத் தானாபதி ஒண்டிக் கேட்டு நின்றார் ஆதலால் தன் பொருட்டு ஜமீன்தார் மறுகிக் கெஞ்சி மன்றாடு தலையும், அத் துரை முறுகி மிஞ்சித் தன் உயிர்க்கே உலை வைக்க ஊக்கி நிற்றலையும் கண்டு உள்ளம் பொருதவராய் வாயிலருகே துள்ளி வந்து இவரைப் பார்த்து, "மகாராஜா! இந்த வெள்ளை மூஞ்சிக் குரங்கு நம்மை என்ன செய்துவிடும்; உங்கள் பெருமை என்ன! அவன் சிறுமை என்ன? கையைப் பிடித்தும்

அருமை தெரிய வில்லை; கெஞ்சினால் மிக மிஞ்சுகின்றான்; அவனை விட்டு விடுங்கள்; போய்ச் செய்வதைச் செய்யட்டும்; மேலே நான் பார்த்துக் கொள்கின்றேன்" என்று தமிழில் கூறினால் அவர் கொஞ்சம் தெளிவாகத் தெரிந்துகொள்வார் என நினைந்து தமக்குத் தெரிந்த கொச்சைத் தெலுங்கில் குழறிச் சொல்லினார். அப்பொழுதுதான் அவர் அயலறையில் நின்றிருப் பதைத் துரை அறிந்தார். அந்த வெள்ளைத்துரை இந்தப் பிள்ளை உரையைக் கேட்டதும் உள்ளம் கடுத்து உருத்துக் கொதித்தார்.

## பிற்கட்டு வெகுண்டு மீண்டது.

அவர் சொன்னது இன்னதென்று தெரியாதாயினும் சொல்லும்போதிருந்த முகத்தின் சினக் குறிப்பால் தன்னை மிடுக்கோடு ஏதோ இகழ்ந்து திட்டுகின்றான் எனத் துரை உணர்ந்துகொண்டார். "கள்ளம் கருதாத ஜமீன்தார் உள்ளங் குழைந்து மரியாதையாக உரிமையுடன் வேண்டுகின்றார்; கொள்ளை செய்த பிள்ளை எள்ளளவும் எண்ணாமல் கொழுத்துப் பேசுகின்றான். இவனுடைய மனத் திமிர்தான் என்னே!" என அவர் உள்ளங் கொதித்து ஜமீன்தாரிடமிருந்து தமது கையை உதறி எடுத்துக்கொண்டு "இவ் வெய்யவன் என்னை வையவும் நீர் நேரே பார்த்துக்கொண்டிருக்கின்றீர்! இவனால் இப்பாளையம் பாழாயது; அது சில நாளையில் தெரியலாம்; இவ்வேளையில் இங்கே நான் ஒன்றும் பேச வேண்டியதில்லை" என்று இவரை நோக்கிச் சினந்து பேசிவிட்டு விரைந்து குதிரை யேறிப் பாளையங்கோட்டைக்குப் போய்விட்டார். அவருடைய சினமும் சீற்றமும் போக்கும் நோக்கும் எல்லாருக்கும் அல்லலாய் மன வேதனைகளை விளைத்து யாவரையும் மறுகச் செய்தன.

## மன்னர் மனம் நொந்து போனது.

உரிமையோடு தன்னைக் காண வந்த வெள்ளைத்துரை உள்ளம் கனன்று உருத்துப் போகவே இவர் வெறுப்போடு தானா பதியை வெகுண்டு நோக்கி "உமது செயல் மிகவும் அருவருக் கத் தக்கது; முன்பு தீய காரியங்களைச் செய்து வந்தீர்! இன்று வாயை அடக்காமல் வம்புகளை வளர்த்து விட்டீர்! இனித் தொல்லையும் துயர்களும் எல்லை யில்லாமல் தொடர்ந்து விளையும்; நாசகாலம் வந்துள்ளது ஆதலால் இந்த மாதிரி விபரீதங்களில் நீர்

விரைந்து நிற்கின்றீர்! கேடு வரும் பின்னே; மதி கெட்டுவரும் முன்னே; என்னும் முது மொழியைப் புது மொழியாப் புதுக்கி யுள்ளீர்! உம்மை நொந்து கொள்ளுவதனுல் யாதும் பயனில்லை; இந்த இடத்திற்கு ஏதோ கேடு வந்துள்ளது" என்று மனமுடைந்து சொல்லிச் சினமடங்கல் போல் விரைந்து எழுந்து அரண்மனைக்குள்ளே போயினுர்.

நேர்ந்த பிழைகளின் நிலைகளை நினைந்து நெஞ்சங் கலங்கிப் பிள்ளையும் சோர்ந்து பேசாது போனுர். அவருடைய மன நிலை தவறுடையதாயினும் எவருடைய பகைமையையும் எதிர் பாரா மல் இறுமாந்து நின்றது. உள்ளத்திமிரால் உணர்வு பாழாயது.

## பொது மக்கள் பொங்கி மொழிந்தது.

அங்குள்ளவர்க ளெல்லாரும் உள்ளுற நொந்து பிள்ளையை எள்ளி இகழ்ந்தார். "கொடிய சகுனி போல இந்த முடிவான் வந்து இங்கு மூண்டுள்ளானே! அரசு அடியோடு கெடும்படி அடிகோலி நிற்கின்றுனே! தாயுடன் பிள்ளை தலைக் கூட ஒட்டா மல் வாயடி அடித்துக் கரவறியா அரசைக் கை வச மாக்கி, உறவையும் கிளையையும் ஒட்டாது நீக்கி, இரவும் பகலும் தனக்கு வரவையே நோக்கி, எங்கும் தானே தலைவனுய்த் தருக்கி வந்தவன், இங்கே பறித்தது போதா தென்று, கும்பினி நெல்லையும் வாரி வந்து, வந்த துரையையும் சிந்தை நோகத் திட்டி, வெப்பகை விளைத்து, வினை வளர்த்து விட்டான். உள்ளே இருந்து கொண்டே கொள்ளையும் செய்து நல்லவன் போல் நடித்து, வல்ல மன்னனையும் மயக்கி, நம் மெல்லாரையும் அடக்கி இந்தப் பொல்லாத பிள்ளை செய்து வரும் வல்லாண்மை தான் என்னே! இந்த வஞ்சகனை அஞ்சி ஒழிக்காமல் அணைத்து வைத் திருப்பது நஞ்சை உள்ளே வைத்தது போல நம் அரசுக்கு நாசமே யாகும். நாம் பேசி யாவது என்? பெரிய இடத்துக் காரியம்" என்று ஒவ்வொருவரும் இவ்வாறு உள்ளங் கனன்று உளைந்து பேசிப் பிள்ளையை வைது பெரிதும்நொந்து பிரிந்து போ னுர். குடிசனங்களுடைய துடிப்புகள் நெடிது நீண்டு நின்றன.

## கலெக்டர் கடுப்பு

பிள்ளைநிலையையும் கொள்ளைவினையையும்அறிந்தவுடன் கலெக்டர் லஷிங்டன் கடுங் கோபங் கொண்டார். எங்கும் குழப்பங்களை

விளைத்து வருகிறார் என முன்னமே அவர் மீது கொதிப்புற்றிருந்தார் ஆதலால் இது நெருப்பில் நெய் வார்த்தது போல் சினத்தை வளர்த்து நின்றது. தாம் எழுதிய கடிதங்களுக்கெல்லாம் யாதொரு பதிலும் அனுப்பா திருந்தமையால் ஜமீன்தார் மீதும் அவர் வெறுப்புற் றிருந்தார். காயிதங்கள் இவர் கையில் சேரா வண்ணம் உள்ளே கள்ளம் புரிந்துள்ளமையை அவர் காணாரன்றோ? அப்படி யிருந்தும் நட்புரிமையுடன் நயந்து நின்று இவரை அவர் காண விரும்பினார். நேரில் வந்து கண்டு தானுபதியி னுடைய கலக நிலைகளைக் காட்டி, அரசு முறைகளைக் குறித்து இவரிடம் சில உரைகள் சொல்ல வேண்டும் என்று அத் துரை கருதி யிருந்தார். இருந்தும் இடையே நின்று சிலர் புரிந்த கபட வினைகளால் பாஞ்சாலங்குறிச்சிக்கு அவர் நேரே வந்து போகவும் சந்தேக முடையராய்ப் பயப்பட நேர்ந்தது. அயலே வந்து தம்மைக் கண்டுகொள்ளும்படி மூன்று நிருபங்கள் இவருக்கு அவர் அனுப்பி யிருந்தார். அவை நேரே இவர் கைக்குக் கிடைத்தன. கிடைத்தும் இடையே கிளைத்த இடையூறுகளால் தடையாய் நீண்டு வேலை சரியில்லை என்று இவர் விலக்கி யிருந்தார். இவ்வாறு இவர் இருந்த இருப்பு மேலும் மேலும் அவர்க்கு வெறுப்பை விளைத்துப் பகையை வளர்த்தது.

இவ் வண்ணம் கடுப்பும் குழப்பமும் அடுத்தடுத்துக் கடுத்தெழுந்தன. நெல்லைக் கொள்ளை செய்ததி லிருந்து கும்பினியாருக்கும் கட்ட பொம்முக்கும் கொடும் பகை மூண்டது என்று நாடெங்கும் நெடும் பழி நீண்டது. நீளவே நாளும் பொறாமை கொண்டு உள்ளம் புழுங்கி உட்பகை யுற்று ஒடுங்கி நின்ற பாளையகாரர் சிலர் வேளை வாய்த்தது என்று விரைந் தெழுந்து கும்பினியாருக்கு இனியவர் போன்று இவர் மேல் இன்னாத பழிகளை யெல்லாம் ஏற்றித் தூற்றி இடைவிடாமல் எழுதி வந்தார். அதனால் அதிகாரிகள் மன நிலை மாறி இவர் மேல் சின மீறி நின்றார். பகைமை யுணர்ச்சி பலமாய் வளர்ந்து மிகை மிகச் செய்ய அவர் மேலெழுந்து மூண்டார். வெறுப்பும் வெகுளியும் அவரிடம் மூள மூள, இவரிடம் செருக்கும் திமிரும் மீள மீள நீள லாயின. இகல் நிலை ஏறி வளரவே இடர்கள் தொடர்ந்தன.

# பதினேழாவது அதிகாரம்.

## குறும்புகள் கிளர்ந்தது.



பெரும்பகை மூண்டதென்று தெரிந்தவுடனே குறும்புகள் எழுந்து கொடுமையாய் நின்றன. படிறுகள் புரிந்து பகைத் தீ மூட்டின. காலம் அறிந்து, இடம் கண்டு, வலி தெரிந்து, கருதலர் நிற்கும் நிலை 'யுணர்ந்து தமக்கு உறுதி யானதை ஓர்ந்து செய்து கொள்ளாமல் பராமுகமாய்ப் பழைய படியே எங்கும் அடல் மீக்கொண்டு இவர் திடம் ஊக்கி நின்ருர். வழக்கமாகத் தம்மிடம் வந்து குறை யிரந்து முறையிடுவார் எவர்க்கும் இறையும் தாழாமல் இரங்கி யருளி என்று சென்று எதிரிகளை அடக்கி இடர்கள் தீர்த்து யாண்டும் அடுத்தவரை ஆண்டகைமையுடன் இவர் ஆதரித்து வந்தார். இவரது ஆதரவு தகவுதோய்ந்து வந்தது.

இவ்வாறு நாட்டுக் கலகங்களையும், நகர வழக்குகளையும், கேட்டறிந்து கோட்டமின்றி நாட்டமுடன் ஆராய்ந்து நலம் புரிந்து வருங்கால் ஏழாயிரம்பண்ணை ஜமீன்தாருக்கும், சிவகிரி ஜமீன்தாருக்கும் இடையே மூண்டிருந்த பகை கொடிதாய் நீண்டு நெடிது ஓங்கி இறுதியில் மிகவும் முறுகி நின்றது.

அவ் இருவரும் ஒரு குலத்தவர். வன்னியர் மரபினர். உறவு முறையினர். நெருங்கிய சம்பந்த முடையவர். இருந்தும் அங்ஙனம் இகலி நின்றனர். நிற்கவே ஏழாயிரம்பண்ணைப் பாளையகாரராகிய காளை வன்னியனுர் என்பவர் இக் கட்டபொம்மிடம் வந்து தமது இக்கட்டுகளை யெல்லாம் எடுத்துரைத்து இதம்புரிய வேண்டினர். வேண்டவே தானுபதியின் தம்பியாகிய வீரபத்திர பிள்ளையையும், சிவத்தையா, முத்தையா என்னும் இரண்டு சேனைத் தலைவரையும், இருநூறு படை வீரரையும் உடன் அனுப்பி வழக்கை நேர் விசாரித்து இடர் தீர்த்து வரும்படி இவர் அனுப்பி யிருந்தார். அவரனைவரும் ஏழாயிரம் பண்ணையை அடைந்து இருநாள் இருந்து மறுநாள் எழுந்தார்.

இந்தப்படை வருவதை எதிரறிந்து சிவகிரி ஜமீன்தாராகிய வரகுணபாண்டிய வன்னியனுர் விரைவாக இவரிடம் வந்து உடையதை விளம்பி இகல் ஒழிந்து புகலடைந் திருந்தார். சமாதானமாய் வந்த அவரது இயல்பினை அறிந்ததும் இவர் மனம்இரங்கி முன்பு அனுப்பியிருந்த படையைத் திருப்பிக் கொண்டார். அதன் பின் அப் பாளையகாரர் இருவரும் தத்தம் பதியடைந்து ஒத்திசைந்து உறவு முறையுடன் இனிதமர்ந்திருந்தார்.

அங்ஙனம் இருந்து வந்த சிவகிரியார் பின்பு கும்பினியார் பகை நேர்ந்தது என்றவுடன் வெம்பி யெழுந்து இவர் மேல் வெங்கோள் மூட்டி வெளிப்படையாகக் களிப்பூர்ந்து நின்ருர். "இதுவரை யாண்டும் தனித் தலைவனுய் நின்று இந் நாட்டில் எவரையும் தலையடக்கி வந்தான்; இனிமேல் யாதும் பலியாது" என இவரை இடங்கள் தோறும் இகழ்ந்து வேறு சிலரும் மறைமுகமாக மாறுபட்டு நின்ருர். இவரது அருந்திறலாண்மையிலும், அடக்கு முறையிலும், அதிகார நிலையிலும் கடும் பொருமை கொண்டு உள்ளஞ்சி ஒடுங்கிக் கிடந்தவர்க்கு இக் கும்பினிக் குழப்பம் ஒரு கொழு கொம்பாய்க் கெழுமி நின்றது.

பழம் பகையோடு புழுங்கியிருந்து, இடங்கண்ட போது இவர் மீது அடங்கொண்டு நின்ற ஜமீன்கள் எட்டையாபுரம், சிவகிரி, ஊற்றுமலை என்னும் இம் மூன்றுமே யாம். இம் மூன்றனுள்ளும் முன்னது என்ன வகையிலும் இம் மன்னருக்கு இன்னல் செய்வதில் முன்னணியில் நின்றது. பகையை வளர்த்துப் பதியை யழிக்கப் படு சூழ்ச்சிகள் செய்து கெடுமதியுடன் கொடிதூக்கி நின்றஅதற்கு நெடிய துணைகளும் கடிதுசேர்ந்தன.

இவர் மேல் கடுப்பேறும்படியாக அடாப்பழியான விண்ணப்பங்கள் பல அடுத்தடுத்து அம் மூன்று ஜமீன்தார்களும் கும்பினியாருக்கு வம்புகளை வளர்த்துத் தொகுத்துஅனுப்பலாயினர்.

"எங்கள் நாடு நகரங்களையும், ஆடு மாடுகளையும், அநியாயமாய்த் தம் படைகளை ஏவிப் பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்தார் கொள்ளை செய்கின்ருர்; வெள்ளையர்களை எங்கும் எள்ளி வரு

கின்றார்; அவருடைய தானுபதிப் பிள்ளை செய்துவருங் கொடுமைகளோ சகிக்க முடியாது; எங்கும் வம்புகளையே விளைத்து வன்கேடு புரிகின்றார். கும்பினியின் குடைக்கீழ் வாழ்கின்ற நாங்கள் கட்டபொம்மிடம் கொடிதாகக் கட்டப்பட்டுப் பாம்பு வாய்த் தேரை போல் பதைத் திருக்கின்றோம். அவரைத் தட்டி ஒடுக்காவிட்டால் எங்களுக்கு இங்கே குடியிருப்பில்லை. அடிவயிற்றில் நெருப்பைக் கட்டியிருத்தல் போல் அல்லும் பகலும் அவரது தொல்லையில் அழுந்திக் கிடக்கின்றோம் ஆதலால் எங்களை விரைந்து ஆதரித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கின்றோம்" என இவ்வாறு அக் கும்பலிலிருந்து கும்பினி அதிபதிகளுக்கு இவரைக் குறித்து வம்பாக எழுத்துக்கள் போய்க்கொண்டிருந்தன. கோளர் வாய்த் தீ வாள்வாயினும் கொடியதாய் நின்றது.

## சிவகிரி தீட்டியது.

அந் நிலையில் சிவகிரி ஜமீன்தார் ஆகஸ்டு மாதம் ஐந்தாம் தெய்தி (5—8—1799) கலெக்டருக்கு நேரே குறைபாடு கூறி ஒரு முறையீடு அனுப்பினர். அதன்படியை அடியில் காண்க.

"பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்தார் என் மேல் கடும்பகை கொண்டு கொடுந்துயர் செய்து வருகின்றார். அவருடைய படைகள் இடை யிடையே வந்து என் நாட்டில் இடர் செய்து போகின்றன. இப்பொழுது சிவத்தையா, வீரபாண்டிய நாயக்கர், மாப்பிள்ளை வன்னியனார், வீரபத்திரபிள்ளை என்னும் இந்நால்வர் தலைமையில் 2000 போர் வீரர்கள் சேர்ந்து என் பாளையத்தைக் கொள்ளை செய்யத் துணிந்து, நேற்று இளவரசனேந்தல் என்னும் கிராமத்தில் வந்து தங்கியிருக்கின்றார்கள். நாளை என்னுடைய ஊரும் உயிரும் நாசமாகும் என்று அவர் ஓசை செய்துள்ளனர். அளகாபுரி, ஏழாயிரம்பண்ணை, ஆற்றங்கரை, கோலார்பட்டி, நாகலாபுரம், காடல் குடி, குளத்தூர், மேல்மாந்தை, கடம்பூர், மணியாச்சி முதலிய ஜமீன்களெல்லாம் பாஞ்சாலங்குறிச்சிக்கு உரிமையாய் உதவி செய்து நிற்கின்றன. நான் யாதொரு ஆதரவுமின்றிக் கும்பினியாரே தஞ்சமென்று நம்பி யிருக்கின்றேன்.

என்னுடைய பாளையத்துக்கும், என் உயிருக்கும் ஆபத்து இன்ன வேளை என்று இல்லை. இந்த அபாயமான வேளையில் கருணை செய்து என்னைக் காப்பாற்றி ஆதரிக்கவேண்டும் என்று கை கூப்பித் தங்களிடம் அடைக்கலம் புகுந்துள்ளேன். தங்களைத் தாயாகத், தந்தையாகக், குருவாகத், தெய்வமாக நான் கருதியிருக்கிறேன். இச்சமையத்தில் விரைந்து அருள்புரிந்து தாங்கள் என்னைப் பாதுகாக்க வில்லையானால் என் பாளையம் யாவும் இழந்து, நானும் தப்பாமல் இறந்து போகவே நேரும்."

என இங்ஙனம் அவர் இரந்து வேண்டி எழுதி யனுப்பிப் பலனை எதிர் பார்த்திருந்தார். 'நாளை நாசம்' என வேளை குறித்து விரைவு படுத்தி அஞ்சல் மூலம் அஞ்சில் விடுத்த அவ் ஓலை அங்கே பத்தாந் தெய்தி கிடைத்தது. அப்பொழுது ஆக்ட்டிங் கலெக்டராய் க்ரேம் (H. Greame) என்னும் துரை வேலை பார்த்திருந்தார். அவர் வருகின்ற பழியோலைகளை ஒழியாமல் மொழி பெயர்த்து ஒரு வழியும் செய்ய முடியாமல் உளம் உளைந்து நின்றார். அவரது நிலை கவலை மீதூர்ந்து கலங்கி யிருந்தது.

சிவகிரியார் எழுதிய அவ் ஓலையை உடன் இருந்து அனுப்பிய ஊற்றுமலை ஜமீன்தாரும் தம் ஊரை அடைந்தவுடன் ஊறுபாடாக மாறுபாடுகளை மருவி ஒரு கடிதம் தொடர்ந்தெழுதினார்.

### ஊற்றுமலை ஊற்றியது.

ஊற்றுமலை ஜமீன்தாராகிய நவநீத மருதப்பத்தேவர் என்பவர் இவர்மீது நவை தூற்றத்துணிந்து, ரௌத்திரி வருடம், ஆடி மாதம், 25ந் தெய்தி அதாவது (7—8—1799)ல் ஒரு முடங்கல் எழுதிக் கும்பினிக்கு நம்பகமாக நயந்தனுப்பினார். பகைமைகளை வகைமையா மூட்டி எழுதிய அவரது கடிதநிலை அடியில் காண்க.

" கனம் பொருந்திய கும்பினியார் இட்ட கட்டளைப்படி நான் தவறாமல் கிஸ்தி செலுத்தி வருகிறேன். பாஞ்சாலங் குறிச்சி ஜமீன்தாராகிய கட்டபொம்மு நாயக்கர் மட்டும் யாதும் கட்டுப்படாமல், கப்பமும் கட்டாமல் கும்பினியை அவமதித்து என்றும் எங்களுக்குக் கொடிய இடையூறுகள் செய்து வரு

கின்றார். அவருடைய தானுபதியின் தம்பியாகிய வீரபத்திர பிள்ளை சில படைகளோ டெழுந்து மேற் றிசையிலுள்ள எனது பாளையத்தையும், சிவகிரி ஜமீனையும் அடியோடு தொலைத்து விட வேண்டும் என்று முடிவு செய்து நெடிய படைகளுடன் கடிது வருவதாகத் தெரிகிறது. பல்லக்கு 9, குதிரைகள் 33, படை வீரர்கள் 2000 பேர், ஈட்டி, வாள், வேல், வல்லயங்களுடன் கூட்டமாகத் திரண்டு எங்களை வேட்டையாட வருகின்றார் என இந்நாட்டில் எங்கும் வதந்தியாக வுள்ளது. குடிகளும் நாங்களும் அபாய நிலையில் உள்ளோம். இங்கு எனக்கு வேறு துணை யாரும் இல்லை. கும்பினியே கதி என்று நம்பி யிருக்கின்றேன். யார்க்கும் அடங்காத கண்டனாய் அடல் மீறி நிற்கின்ற அப் பாளையகாரனை அடக்கி என்னை இந்த வேளையில் பாதுகாத்தருளும்படி எந்த வேளையும் உரிமையாய்ப்பணிந்து நிற்கின்றேன்."

என்று புனைந்து விடுத்தார். பின்பு தலைவன் கோட்டை ஜமீன்தாரையும் ஒன்று எழுதி யனுப்பும்படி தூண்டி இவருக்கு வேண்டிய இடையூறுகளை யாண்டும் இசைவாக அவர் இழைத்து நின்றார். இழைப்புகள் எங்கும் தழைத்து வந்தன.

இவ்வாறு பாஞ்சாலங்குறிச்சிக்கும் கும்பினிக்கும் கொடும் பகை மூளும்படி கடுஞ் சூழ்ச்சிகள் பல செய்து மூலைகளி லிருந்து ஓலைகள் போக்கித் தங்கள் வேலைகளையும் நீக்கி, இதே வேலையாய் ஓயாமல் ஊக்கிச் சிலர் ஊன்றி உழைத்து வந்தார்.

தானுபதிப் பிள்ளை போய் நெல்லைக் கொள்ளை செய்து வந்த பின்னர் அக் கோளர் கூட்டம் மிகவும் கவித் தெழுந்து கதித்து நின்றது. அக் கோளின் கொடுமையையும், நாளின் கடுமையையும் இவ் வாள் வீரர் எண்ணி வருந்தி யிருந்தார்.

நேராக ஒரு பதிலும் சொல்லாமல் வீறுக மீறி நின்றமையால் முன்னம் உறவாயிருந்த கலெக்டர் லஷிங்டன் துரை முதல் மற்றுள்ள அதிகாரிகள் எல்லாரும் இவர் மேல் மாறு கொண்டு சீறி நின்றார். இவர் யாதொன்றும் சூழாமல் எதையும் மதியாமல் அமைதியாகவே அரசாற்றி ஆண்டு வந்தார்.

காட்டுத்தீபோல் உள்நாட்டில் கொடியகோட்கூட்டம் கிளர்ந்து கோட்டமாயுள்ள கும்பினி அதிபதிகளிடம் மேலும் மேலும் வெம்பகையை மூட்டி வினை விளைத்து வருவதை யறிந்தும் பிள்ளை செய்த பிழையால் நேரே சென்று ஒன்றும் குணப்படுத்த முடியாமல் மனக் கடுப்புடன் இவ் வீர மன்னர் மறுகியிருந்தார்.

"*வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு." (குறள், 878)

என்னும் தெய்வ வாக்கின் மெய்ம்மையை யுணர்ந்து செய்வன செய்து பருவ காலத்தில் உய்தி நாடிக் கொள்ளாமல் ஊக்கமே கண்ணாய் உள் ளொடுங்கி யிருந்தது வெளியில் நின்று இகல் விளைப்பவர்க்கு ஓர் ஏற்றமான ஊற்றமா யிசைந்தமைந்தது.

இங்ஙனம் இவர் இருக்க முன்பு பாஞ்சைப் பதிக்கு நேரில் வந்து சமாதான நிலையில் சாருஞ் சமையம் பிள்ளை இடையே மூண்டு சொல்லியசொல்லால் உள்ளங்கொதித்துக் கடுங்கோபம் கொண்டு விரைந்து சென்ற பிற்கட்டு வெகுண்டு வேலை செய்தார். அவருடைய கருமங்கள் மருமங்களாய் மருவி நின்றன.

இப் பாளையத்தை விட்டு அவர் பாளையங்கோட்டையை அடைந்ததும் காரிய நிர்வாகிகளாய் அங்கமர்ந்திருந்த தமது துணைவர்களுடன் ஆராய்ந்து வினை விளைவை ஓர்ந்து விரைந்து தொழில் செய்ய நேர்ந்து உடனே தூத்துக்குடிக்கு வந்தார்.

அங்கே பரதவர் பதியாய் நின்ற சாதித் தலைவனைக் கண்டு, வேண்டிய உதவிகளை விழைந்துகொண்டு, பாய்க் கப்பலி லேறிக் கடல் வழியாக அவர் சென்னபட்டணத்தை யடைந்

---

* வகை அறிதலாவது பகைவருடைய வன்மை மென்மை, இடம், காலம், வினை முதலிய நிலைகளை ஆராய்ந்து அறிதல். தற் செய்தலாவது இகல் நிலைமைக் கேற்பப் பொருள் படைகளால் தன்னை உயர்த்திக் கொள்ளுதல். தற்காத்தல் ஆவது என்ன வகை யிலும் தனக்குப் பின்னம் நேரா வண்ணம் யாண்டும் கண் விழிப் புடன் எச்சரிக்கையா யிருத்தல். அங்ஙனம் அறிந்து காத்துச் செறிந்து நிற்பின் எதிரிகள் யாதும் செய்ய முடியாமல் எண்ணம் இழந்து இழிந்து படுவர் ஆதலால் "பகைவர் செருக்கு மாயும்" என்றார். ஓர் அரசன் பகை வகை ஓர்ந்து தகைமையோடு தன்னைப் பாதுகாத்து ஒழுக வேண்டிய விழுமிய நிலையைத் தெளிவாக இது விளக்கியுள்ளது.

தார். அடைந்தவர் கும்பினி அதிகாரிகள் முன் போய்க் கும்பிட்டு நின்றார். அவரது கடித நிலையை முன்னரே கண்டிருந்தமையால் அவரைக் கண்டவுடனே கரும நிலைகளைக் கருதி விசாரித்தார். விசாரிக்கவே தாம் வெம்பி வந்துள்ள நிலையை அவர் விளக்கி நின்றார். இங்குள்ள நிலவரங்களை யறிந்ததும் அங்குக் கலவரமடைந்து தலைவர்கள் அனைவரும் ஒருங்கு கூடினர். ஆட்சியின் தலைமை அதிபதியாய் நிலவியிருந்த எட்வர்டு சாண்டேர்ஸ் (Edward Saunders) முதலிய துரைகள் முன்னிலையில் குறையிரந்து நின்று இத் தென்னாட்டு நிலையை முன் னாட்டி விளக்கி முறையிடுகளை விரித்துக் குறைபாடுகளை அவர் குறித்துஉரைத்தார்.

பிறகட்டு மூட்டியது.

"தென்னாட்டிலுள்ள பாஞ்சாலங்குறிச்சிப் பாளையகாரனாகிய கட்டபொம்மு நாயக்கன் மிகவும் கெட்டவனாய் நின்று துட்டத்தனங்கள் பல துடுக்கோடு செய்து வருகின்றான். மாட்சிமை தங்கிய நம் கும்பினியை அவன் சிறிதும் மதிக்கவில்லை. நமது ஆட்சிக்கு உட்பட்டுள்ள குடிகளிடத்தெல்லாம் அவன் அடமாகப் படைகளை ஏவி வரிகளை வசூலித்துக் கொள்ளுகின்றான். நாம் முன்பு அவனை இங்கு வரவழைத்து உவந்து உபசரித்துச் சிறந்த வெகுமானங்கள் தந்து மிகுந்த மரியாதைகள் செய்து உறவுரிமையுடன் அனுப்பிவைத்த அந்த அருமையை அவன் அறவே மறந்துவிட்டான். அன்று அவனுக்குச் செய்த பெருமை இன்று நமக்குச் சிறுமையாய் விளைந்தது. வீரம் இல்லாதவர், போர் நிலை தெரியாதவர், வாரி கடந்து இங்கே பொருள் வார வந்தவர், வஞ்ச நெஞ்சினர் என நம்மைப் புன்மையாக இகழ்ந்து யாரையும் மதியாமல் யாண்டும் அஞ்சா நெஞ்சனாய் அடல் மீக்கொண்டு தன் மூப்பாகவே அவன் தருக்கி யிருக்கின்றான். அந்தோ! அம் மட்டோ! அவனுடைய தானாபதியாகிய அப் பிள்ளை* செய்யும் கொடுமைகள் சொல்ல முடியுமா? அப் பாளைய காரனையாவது ஒருவேளை நல்ல

* அப் பிள்ளை என்று சுட்டிச் சொன்னது முன்பு கும்பினியார் நேரே அவரைக் கண்டு பேசி நிலைமைகளைத் தெரிந்துள்ளமை கருதி.

வன் என்று சேர்த்துக்கொள்ளலாம்; அக் கோளன் எல்லா வகையிலும் மிகவும் கொடியவன். அப் பொல்லாதவன் உள்ளந் துணிந்து வந்து நம்முடைய நெல்லையும் கொள்ளை செய்து போயுள்ளான் என்றால் இனி வேறே சொல்லுவது ஏன்? எழு நூறு கோட்டைக்கு மேல் அள்ளிப் போயினன். அங்கு நமது ஏவலை மேற்கொண்டு காவல் செய்து நின்றவரையும் கொன்று சென்றுள்ளான். கொடிய வஞ்சகன். ஜமீன்தாரைப் பல வகையிலும் கெடுத்து மனமாறுதல்களை யுண்டாக்கி நம்மேல் சினமேற்றிப் பகை மூட்டி வைத்துள்ளான். வெள்ளை மூஞ்சியர் என்று நம்மை மிகவும் எள்ளி வருகின்றான். நாம் இங்கே கொள்ளை செய்ய வந்த கூட்டம் என்று நாட்டிலும் நகர்களிலும் நொடி சொல்லிக் குடிகளைக் குலைத்து வரி செலுத்த வொட்டாதபடி வம்புகள் புரிகின்றான். வாணிகம் செய்ய வந்தவர்; இந் நாட்டைக் காணியாகக் கைக்கொண்டு காலூன்றப் பார்க்கின்றார் என எங்குந் தூற்றி நம்மைக் கண்ணோடாது தொலைத்துவிட வேண்டுமென்று அவன் காலூன்றி நிற்கின்றான். கொடுந் தீயுடன் கடுங் காற்றுங் கலந்தது போல் அவ் வாளனுடன் அக் கோளனும் கூடிக் கொடுந் தீமைகளை நீளச் செய்கின்றான். அவன் என்ன செய்யினும், யாது சொல்லினும் அம் மன்னனும் தட்டிக் கேளாமல் மதத்து நிற்கின்றான். அப் பிள்ளை யுள்ள அளவும் அவன் நல்லவனா யிருக்கமுடியாது. நாம் எல்லோரும் அல்லலடையவே நேரும். விரித்துச் சொல்லுவானேன்? தென்னாட்டில் கட்டபொம்மு இருக்கும் வரையும் இந் நாட்டில் இருந்து நாம் அரசு செய்ய முடியாது. "வெள்ளையர்களை வேரறுப்பேன்" என்று அவன் உள்ளுறுதி கொண்டுள்ளான். அவனை அடியோடு தொலைத் தொழிப்பது, அல்லது நாம் குடி வாங்கிப் போவது ஆகிய இவ் இரண்டனுள் ஏதாவது ஒன்று முடிந்தால் ஒழிய முடிவாக யாதும் விடியாது. நெல்லை எல்லையில் நெல்லைச் சேர்த்து வைக்க இனிமேல் நான் செல்லவு முடியாது. அங்கு உள்ள நிலைமையை உள்ளறிந்து உண்மையாக இங்கே சொல்லினேன்; மதிநலம் வாய்ந்த அதிபதிகள் கரும நிலை தெரிந்து பருவங் கடவாமல் உரியதை விரைந்து செய்து அரசு முறை

யைக் கருதிக் கொள்ள வேண்டுகிறேன்.'' என இங்ஙனம் மறுகி நின்று பிற்கட்டு உறுதி பெற நேரே உரை யாடினர்.

## கும்பினியார் கொதித்தது.

எரிகின்ற நெருப்பில் எண்ணெயை வார்த்தது போல் முன்னைய நிருபங்களைக் கண்டு மனங் கனன்று நின்ற கும்பினி யாருக்கு இவ் வுரைகள் மிகவும் கோபத்தை மூட்டின. கொள்ளையும் கொலையும் விளைத்த பின்னை செயல்களை எண்ணி உள்ளம் மிகக் கொதித்தார். ஜமீன்தாருக்குத் தெரியாமல் தானுபதி தனியாக அது செய்திருக்க முடியுமா? என்று ஐயம் மீக்கொண்டார். ஆனதை நினைந்து மானம் மீக்கூர்ந்து மறுகி உளைந்தார்.

"பாஞ்சாலங்குறிச்சிப் பாளையகாரன் வாஞ்சை கெட்டு இப்படியா வன்மமுற்று நின்றான்!'' என முன்னம் நேரில் கண்டவ ரனைவரும் நெஞ்சம் திகைத்தார். "செய்த உதவிகளை யெல்லாம் சேர மறந்தானே!'' என்று வெய்துயிர்த்து நொந்தார். "வானறிய மண்ணறியக் கும்பினிக்கு நானுதவி செய்வேன் என்று நேரே ஆணை செய்து போனவன், ஆண்டு ஒன்று கழியு முன் இவ்வாறு அபகாரம் செய்ய மூண்டானே! என்னே! இந் நாட்டு நிலை!'' என இன்னவாறு பல எண்ணி வருந்தி இனிச் செய்யவேண்டியது யாது? என்று அனைவரும் சேர்ந்து நினைவுடன் ஆராய்ந்தார். ஆலோசனைகள் யேலோங்கி நின்றன.

ஆட்சி முறையில் இச் சமையம் அடக்குமுறையை அயர்ந்திருந்தால் அரசிழந்து போக நேரும் என்று பயந்து ஒரு முகமாய்க் கூடி முடிவு செய்து பெரும் படை ஒன்றைத் தென்னுட்டுக்கு அனுப்பத் தீர்மானித்தார். அத் தீர்மானத்தைத் திருச்சிராப்பள்ளியி லுள்ள கிளைச் சங்கத்திற்கு அறிவித்தார். அவ் அமையம் அங்கே சேனுதிபதியா யிருந்தவர் மேஜர் ஜெனரல் பிளாயட் (Major General Floyd) என்பவர். அவர் போர் முறையில் மிகவும் கைதேர்ந்தவர். ஈரிடங்களிலுமிருந்து படைகள் திரண்டன. ஓர் முகமாயின. அப் பெரும் படைக்குத் தலைமை அதிபதியாய் ஜான் பானர்மேன் (John Bannerman) என்னும்

தளபதி நிலவினுர். அவருக்குத் துணையாக உப தளகர்த்தர்கள் பலர் அமர்ந்து வந்தார். அமர் நிலை உயர் நிலையில் ஓங்கி வந்தது.

## தானைத் தலைவனிடம் சமர் நிலை குறித்தது.

சேனுதிபதியாகிய பானர்மேனைக் கும்பினி அதிபதிகள் தனியே அழைத்து வைத்து உறுதி நலங்கள் சில உரைக்க லானுர்: "போன வுடனே போர் தொடங்கி விடாமல் ஆன வரையும் பார்த்து இறுதியில் ஆவதை ஆராய்ந்து செய்க. அந் நாட்டு நிலைமைகளை நன்கு தெரிந்து துணை யாவரை அமைவாகக் கூட்டிக் கொள்க. உள் நாட்டுக் குடிகளுக்கு உதவி நலங்கள் தோன்ற உறுதி காட்டுக. நெல்லின் கொள்ளை முதலாக நேர்ந் துள்ள பிழைகளுக் கெல்லாம் பிணை தந்து, பிள்ளையையும் பிடித்துக் கொடுத்து, உரிமையுடன் பணிந்து கட்டபொம்மு உறவாடி நின்ருல் போர் ஒழித்து நேர் செய்து வருக; போர் முறைக் குரிய கொல்லும் கொலையாதி எல்லா அதிகாரங்களை யும் உமக்கு கும்பினி ஆணைமேல் கொடுத்திருக்கின்ருேம்; எடுத்த காரியத்தை இனிது முடித்து வருக" என்று உறுதி கூறி விடுத்தருளினுர். பிற்கட்டையும் உடன் பேணி அனுப்பினுர். நெற்கோட்டை அழிவுடன் பிள்ளையின் சொற் கேட்டையும் நினைந்து நெஞ்சுடைந்து வந்த அவர் தமது சொற்கோட்டை யால் எதிரியின் கற்கோட்டையை அழித்துக் கும்பினிக்குப் பொற்கோட்டை கட்டுவதாக மனக்கோட்டை கட்டி மகிழ்ச்சி யுடன் எழுந்தார். அவருடைய கரும சாதனையும் காரிய விவேக மும் பாஞ்சைப் படை எழுச்சிக்கு ஆன்ற காரணமாய் அமைந்து நின்றன. ஊன்றி முயன்று உளவு கூறி ஊக்கி வந்தார்.

## உள்ளம் கலங்கியது.

வெள்ளையர் யாரும் இந்நாட்டில் இல்லாதபடி வேரோடு ஓட்டி விட வேண்டும் என்று வீறு கொண்டுள்ளான்; பெரிய தீரன்; அரிய போர் வீரன் என இவ் வீர மன்னனைக் குறித்துச் சேனுதிபதியிடம் மானம் மீதூர அவர் உரைத்தார். சேனையில் சேர்ந்திருந்த வெள்ளையரும் சேனைத் தலைவனும் அவ் வுரைகளைக் கேட்டு உள்ளம் கலங்கினுர். கலங்கினும் ஊக்கி எழுந்தார்.

# பதினெட்டாவது அதிகாரம்

## படை எழுந்தது.

படைகள் தென் திசை நோக்கி நேரே அடைவுடன் எழுந்தன. குதிரைப் படை, காலாட் படை, பீரங்கிப் படை, சுதேசப் படை, ஐரோப்பியப் படை, என்னும் ஐவகைப் படைகளும் ஆர்த்து நடந்தன. மேஜர் சுமார்ட், (Major Smart) காலின்ஸ், (Collins) கேப்ட்டன், ராபேர்ட் (Captain, Robert) முதலிய உப தளபதிகள் பரிகளில் இவர்ந்து படைகளை நடத்தி வந்தார். திரிசிரபுரம், மணப்பாறை, திண்டுக்கல், மதுரை, திருமங்கலம், சாத்தூர், கோவில்பட்டி, கயத்தார் என்னும் இவ் இடங்களிலெல்லாம் இடையிடையே தங்கி மிடலுடன் எழுந்து அடலுடன் நடந்து படைகள் வந்து பாளையங்கோட்டையை அடைந்தன. அடைய வேண்டிய ஆதரவுகள் விரைந்து நடந்தன.

படைத்தலைவர்களெல்லாருக்கும் தகுதியான வசதிகளைப் பிற்கட்டு பெரிதும் விழைந்து உரிமையுடன் செய்தார். கலெக்டர் லஷிங்ட்டன் முதலான பெரிய அதிகாரிகள் அனைவரும் புதிதாய் வந்துள்ள சேனாதிபதியைக் கண்டு அளவளாவி அதிக ஆவலோடு காரியங்களை உசாவிப் போரியல்புகளை ஆராய்ந்து வீரியமாய் விரைந்து யாவும் விரகுடன் புரிந்தார்.

காலம் கருதிக், கருமம் சூழ்ந்து, கருத்துடனின்ற அவர் பாஞ்சாலங்குறிச்சிக்கு நேரே படையெழுச்சி செய்யாமல் வேறொரு வகையில் விரகு சூழ்ந்தார் ஜமீன்தாரைப் பாளையங்கோட்டைக்கு வரவழைத்துப் படைகளுடன் தாம் நேர்ந்து வந்துள்ள நிலைகளை நேரே சொன்னால் உடனே வணங்கி இணங்கவும் கூடும்; அங்ஙனம் சமாதானமாய் இணங்கினால் இருவழியும் நலமாய் எளிதாகவும் இதமாகவும் காரியம் முடிந்துவிடும் என்று கருதித் துணிந்தார். அவ்வாறு துணிந்த பின்பு ஆகஸ்டு மாதம் 20ந் தெய்தி (20—8—1799) சேனாதிபதியாகிய பானர்மேன், கும்பினியார் உத்தரவு பெற்றுத் தாம் இங்கு

வந்திருக்கும் நிலையையும், வரப்போகும் வினையையும் தெளிவாக விளக்கித் தம்மை வந்து முந்துற நேரே கண்டு கொள்ளும்படி உறுதி பெறக் குறித்துப் பாஞ்சைப்பதிக்கு ஒரு நிருபம் அனுப்பினார். பெரிய தளபதி நிலையில் அது கருதி எழுந்தது.

அனுப்பிய அக் கடிதம் அஞ்சல் ஆள் மூலம் பாஞ்சைக்கு வந்தது. இம் மன்னர் வாங்கிப் பார்த்தார். விவரந் தெரிந்தார். அச்சமோ, திகைப்போ யாதுங் கொள்ளாமல் உச்ச நிலையில் ஊக்கி நின்றார். நேரே வந்தவனிடம் வேறொன்றும் கூறாமல் "வசதி ஏற்பட்டால் வாரம் ஒன்றில் வருவதாகச் சொல்லு போ" என உல்லங்கனமாகச் சொல்லி விடுத்தார். வந்தவன் திரும்பி அச் சேனாபதியிடம் போய் இவர் உரைத்தபடியே உரைத்து நின்றான். அவன் சினந்து திகைத்தான். "மரியாதையாக நாம் எழுதிவிட்ட கடிதத்தைக் கண்டு உடனே வராமலும், பதிலேனும் எழுத்து மூலம் வணக்கமாய் அறிவியாமலும், வாய்மொழியால் அவமதிப்போடு இப்படிச் சொல்லிவிட்டானே!" என்று உள்ளங் கனன்று அவன் உருத்து உளைந்தான். உரைத்தபடியே ஒரு வாரம் வரையும் இவருடைய வரவை அவன் எதிர்பார்த்திருந்தான். அந்த இருப்பு போர் விருப்பில் பொங்கி நின்றது.

அங்ஙனம் அவர் இருக்க இவர் குறித்தவாறு அங்கு நேரே செல்லாமலும், யாதொரு பதிலும் சொல்லாமலும் வெறுத்த நோக்கோடு வீறு கொண்டிருந்தார். எப்பொழுதும் முன்னெச்சரிக்கையா யுள்ளவர் இப்பொழுது அதற்கு மாறாய் மடிமண்டி நின்றார். கும்பினியார் முன்பு நண்புடன் அழைத்த போதும் நம்பிக்கை யில்லாமல் உள்ளாயுதம் ஒன்று உடை வரிந்து சென்றனர் என்றால் இவரது உறுதி நிலையும், பொருதிற லமைதியும், மருவல ரிடம் மருவி வரும் எச்சரிக்கையும் எவ்வா றிருந்திருக்கும் என்பது யாவர்க்கும் எளிது புலனாம். "ஒரு வீரன் எவ்வளவு உள்ளூக்கம் உடைய னாயினும் கையில் ஆயுதம் இல்லையானால் பல்லும் நகமும் இழந்த புலிபோல் ஆபத்தில் அவன் அல்லல் அடைய நேரும்" என யாரிடமும் இவர் சொல்லி வருவர். அத்தகைய இவர் பகை நிலையில் படைகள் வந்துள்

ளதை எதிரறிந்தும் ஒரு வகையும் செய்து கொள்ளாமல் வறிதே யிருந்தார். அச்சம் என்பதை அறியாமல் ஆண்மையோடு உச்ச வீரனாய் நின்றாலும் பருவம் அறிந்து உறுவதை ஓர்ந்து உறுதி ஒன்றுஞ் செய்து கொள்ளாமல் உளம் மடிந்திருந்தது மிகவும் இரங்கத்தக்கதே. வருமுன் காவாமலும், வந்தபின்னும் நரி முன் நின்ற மதயானை போல் ஒரு பயமு மின்றிப் பெருமிதத்துடன் இவர் இறுமாந்திருந்தது எதிரிகளுக்கு ஓர் இதமாய் அமைந்தது.

இதுவரையும் யாரும் நேரிலாப் போர் வீரராய் யாண்டும் வெற்றியே கண்டு விளங்கி யிருந்தார் ஆதலால் "எதிரிகள் எவ ராயினும் தன்னை வந்து என்ன செய்ய முடியும்?" என்னும் இறு மாப்பே இம் மன்னரிடம் என்றும் இயல்பாக மன்னியிருந்தது. கோட்டைக்கு யாரும் துணிந்து வர மாட்டார் என்னும் துணிவி னால் துணையாகப் படைகள் ஒன்றும் சேர்க்காமல், பகை தணி யும் வகை யாதும் பார்க்காமல் பராமுகமாகவே இருந்தார். தாமதம் தாழ்வுக்கு ஏது என்பதை இவர் உணராதிருந்தது ஊழ் வினையின்கொடுமையே. விதிநுழையவேமதிநுழையாதுநின்றது.

## பிள்ளை இருப்பு.

அச்சமையம் அங்குத் தானாபதிப் பிள்ளையும் இல்லை. நெல்லைக் கொள்ளை செய்தது முதல் தொல்லைகளும் பழிகளும் எங்கும் தொடர்ந்து நின்றமையாலும், மன்னர் மனம் மாறி யிருந்தமை யாலும் அவர் குடும்பத்துடன் ஆற்றூரில் போய்த் தங்கி யிருந் தார். ஆற்றூர் என்பது பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து தெற்கே மூன்று காவத தூரத்தில் உள்ளது. தாமிர பரணி நதிக்கரையில் இருப்பது ஆதலால் அவ்வூர்க்கு இப் பெயர் வந்தது. திருச்செந் தூர் சுவாமி தரிசனத்துக்குப் போய் வருங்கால் இடைவழியில் அங்கே இவ் ஆதீனத்தார் தங்குவதற்காகச் சிறந்த அரண்மனை ஒன்று கட்டப்பெற்றிருந்தது. பக்கமெங்கும் சோலைகள் சூழத் தக்க நீர் நிலைகளுடன் மிக்க வசதி யுடையதாய் அது மேவியிருந் தது. அந்த இனிய மாளிகையில் அவர் இனிது வாழ நேர்ந்தார்,

கொள்ளை செய்து வெள்ளையரது கொடும் பகையை மூட்டி விட்டுப் பிள்ளை அங்கே முன் எச்சரிக்கையுடன் சாதுரியமாகப் போயிருந்தார். ஜமீன் வரவு செலவு கணக்குகளை அவ்வூரில் வைத்துச் சரி பார்ப்பதாகவும், தென் வட்டத்தின் காரிய விசாரணைகளை ஊர்தோறும் போய்க் கவனிப்பதாகவும் பாவனை செய்துகொண்டு ஆவன தெரியாமல் அமர்ந்து வந்தார். பாளையத்தில் இருந்தால் எந்த வேளையில் தமக்கு ஆபத்து வருமோ என்ற பயம் அவருடைய உள்ளத்தில் அது பொழுது குடிபுகுந்திருந்தது ஆதலால் இப்படிப் பதி பெயர்ந்து போய் மதி அயர்ந்து அங்கு அவர் விதிபுரிவதுபோல் பதிவாக வதிந்திருந்தார்.

அந்தக் காலத்தில் தந்தி இல்லை; தபால்கள் இல்லை; இந்த விதமான ரயில் வசதிகளும் இல்லை; ஆதலால் "எந்த விதமாக வந்து யார் நம்மை என்ன செய்ய முடியும்?" என்னும் இன்னதோர் துணிவு அவர் மனத்திலும் மன்னியிருந்தது. அத்துடன் "வெளியிலிருந்து வாணிகம் புரிய வந்தவர்க்கு இங்கு என்ன காணி யாட்சி" என்னும் கடுப்பு அடுப்புத் தீப்போல் அவருடைய அகத்தில் அவியாது நின்றது. அதனால் எந்த இடத்திலும் ஆங்கில அதிகாரிகளை அவர் சிறிதும் மதியாமல் யாண்டும் இகழ்ந்தே வந்தார். பிள்ளை பேச்சு வெள்ளையர்க்கு ஏச்சாயது.

## பிள்ளையின் உள்ளக்கிடை.

"வெள்ளைக்காரர் அயல் நாட்டினர்; அங்கே புகலற்றுப் போய் இங்கே பிழைக்க வந்தவர்; வந்த இடத்தில் உழைத்து நின்று சிறிது உரங் கொண்ட பின் நபாபிடமிருந்து வஞ்சமாகத் தேச வுரிமையைக் கவர்ந்து கொண்டார். கொண்டவர் மண்டல மெங்கும் மண்டி உரிமை கொண்டாடி வரிகள் தண்ட நேர்ந்தார். வந்த வெள்ளம் இருந்த வெள்ளத்தை இடந்தெரியாமல் அடர்ந்து மறைத்தது போல் இவ் வெள்ளையர் வரவு, தள்ளருந் திறலோடு தழைத்திருந்த எம் தனி அரசை நிலை குலைக்க நினைந்து புலையெடுத்துக் குலை துடித் தலைகின்றது. அவரை இங்கே அடியூன்ற ஒட்டாமல் குடியெழுப்பிக் கடல் கடத்தின

லன்றி உடலெடுத்த பயனை நான் உற்றவனுகேன்" என்று அவர் ஊக்கி நின்றார். ஆகவே கால நிலை கருதாமல், இட நிலை தெரியாமல், வலிநிலை யுணராமல், தம் மனம் போன படியே போய் நெல்லைக் கொள்ளை செய்தல் முதலிய கொடு வினைகளைச் செய்து வெள்ளையர் பகையை இங்ஙனம் விளைக்கலானார். பின்பு வினைவிளைவில் நேர்ந்த பகை நிலையையும், தமது அதிபதி தம்முடன் இணங்காமல் உள்ளம் வெறுத்திருத்தலையும் நினைந்து பின்னை உளம் மிக வருந்தி உளைந்து நொந்தார். வெள்ளையரை இகழ்ந்ததுடன் வேறு சிலரையும் வீறு கொண்டு எள்ளி நின்றமையால் பிறரும் அவரை இகழ நேர்ந்தார். பிறர் பிழை பேசல் தன் பழி வீசல் என்னும் உண்மையை உணராமல் திண்மை மிகுந்து செருக்கி வந்த அவர் பின்பு சிறுமையுற நின்றார். இடையிடையே தமது நிலையை நினைந்து இரங்கவும் செய்தார். கழிந்ததற்கு இரங்கிச் சில சமையம் பச்சாத்தாபப் படினும் அச்சம் இன்றிஎப்பொழுதும் உற்சாகமாகவே அவர் உறைந்து வந்தார்.

* "எற்றென் றிரங்குவ செய்யற்க; செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று" (குறள், 655)

என்னும் பொய்யா மொழியை அடிக்கடி சிந்தித்து ஆறுதல் அடைந்தார். காரிய விசாரணைகளில் மாறி விழுந்தாலும் வீரியமாய் அங்கு அவர் தேறியிருந்து சீறிய வினைகளை ஓர்ந்து வந்தார்.

## சேனாபதி செயிர்த்தது.

அங்ஙனம் அவர் இருக்க, இங்கே வாரம் ஒன்று கழிந்ததும் தான் எதிர்பார்த்தபடி பாஞ்சை அதிபதி தன்னை வந்து பாராமையால் சேனாபதியாகிய பானர்மேன் சினம் மீக்கூர்ந்து செயிர்த்து நின்றான். "நாம் இதமாக அழைத்தும் வரவில்லையே! மதமேறி நிற்கும் இவன் மனத்திமிர் தான் என்னே! கும்பினி

* இரங்குவ செய்யற்க என்றது, என்ன காரியம் செய்து விட்டோம் என்று பின்பு எண்ணி ஏங்கும்படியான செயல்களைச் செய்யலாகாதென்றவாறு. ஒருவேளை தெரியாமல் செய்துவிட்டால் அதனையே நினைந்து மனமுடைந்து மறுகி நையாதே; உறுதியுடன் ஊக்கமாய் நின்று வேறு நல்ல வினைகளை உருற்றி வருக என்பதாம்.

ஆணை யென்று தெரிந்தும் மதியாமல் மதி கெட் டுள்ளான். எவ்வளவு அடம்! எவ்வளவு திடம்! எவ்வளவு அலட்சியம்! தெவ்வளவு தெரியாமல் இவ்வளவு ஏமாப்போடு இவன் இறு மாந் திருக்கின்றான்!" என இவர் மேல் கடுங் கோபங்கொண்டு கடுத்து நின்ற அவன் அடுத் திருந்த துணைவர்களுடன் ஆராய்ந்து படை யெழுச்சிக்கு விரைந்தான். எதிரியினுடைய பூராயம் முழு வதும் தெளிவாக ஆராயாமல் நேரே போகலாகாது என்று பிற் கட்டு புகன்றார். புகலவே அவன் சிறிது திகிலடைந்து, "அள விட லரிய படைகளை யுடையனாய் அடல் கொண்டிருப்பனோ?" என்று ஐயம் மீக்கூர்ந்து உள்ளூறு துணைகளை நன்றாக உசாவி ஓர்ந்து தனக்கு என்றும் இதமாக உதவி கொள்ள நேர்ந்தான்.

## ஒற்றி அறிந்தது.

இந் நாட்டிலுள்ள பாளையகாரருள் இவருக்குச் சன்ம விரோதியா யிருப்பவர் யார்? என ஆராய்ந்து எட்டப்ப நாயக்கர் என்று தேர்ந்து அவரை வரவழைத்தான். அழைப்பைக் கண்ட வுடனே அவர் களிப்பு மீக்கொண்டு விரைந்து வந்து வணங்கி நின்று ஒட்டி யுறைந்து உளவுகள் உரைத்தார்: "உரிய படை களும் இல்லாமல், பொருதிறம் ஒன்றும் கருதாமல், கட்ட பொம்மு வறிதே யிருக்கின்றான்; இச்சமையம் படையெடுத்துச் சென்றால் கட்டாயம் விரைந்து வென்று கோட்டையை எளிதில் பிடித்துக் கொள்ளலாம்" என்று காரணம் பல காட்டி மொழிந் தார். உள்ளூக்கந் தோன்ற இவ்வாறு அவர் உறுதி கூறியும் தானைத் தலைவன் மனந் துணியாமல் ஒற்றன் ஒருவனைத் தனியே அழைத்துப் பற்றலன் நிலையைப் பதமாகப் பார்த்து வரும்படி பணித்து விடுத்தான். உளவு கண்டு அளவு காண அனுப்பினான்.

அவன் துணிந்து சென்றான். சென்றவன் பாஞ்சாலங் குறிச்சியைக் கண்டதும் பயம் மீக்கொண்டான். எமபுரம் புகு பவன் போல் எண்ணி நடுங்கினான். நடுங்கினும் ஒற்றி யறிவதில் அவன் கைகண்டவன் ஆதலால் உற்ற வேடங் கொண்டு உள்ளே புகுந்தான். மாட மாளிகைகளோடு மருவி விளங்கும் அந் நகரின் அழகமைதிகளை நோக்கி அவன் உளமிக வியந்தான்.

ஒருவரும் அறியா வகை உரியவன் போல் உலாவி உளவுகள் ஆராய்ந்தான். அரச வீதிகளைக் கடந்து முடிவில் அரண்மனையை அடைந்தான். அந்தப்புரத்துள் மட்டும் புகாமல் வேறு எந்தப் புரத்தும் எளிது உலாவினன். அரங்கமால், இலட்சுமி விலாசம், செச்சை முதலிய சிறந்த நிலையங்கள் எல்லாம் சார்ந்து அய லெங்கும் ஓர்ந்தான். இயல்பாக அமைந்துள்ள பாதுகாப்பையும், வீரர்களையும் தவிர வேறு பொரும்படிக் குரிய பெரும்படைகள் ஒன்றும் அங்கு ஆயத்தமா யில்லாமையை அவன் அறிந்து கொண்டான். தானுபதிப்பிள்ளை தானம் பெயர்ந்து போயுள்ள தன்மையையும் தெரிந்தான். ஏனைய விவரங்களையும் ஆங்காங்கு அமர்ந்து வினயமாக வினவி ஓர்ந்து அவன் விரைந்து மீண்டான்.

## ஒற்றன் உரைத்தது.

பாளையங்கோட்டையை அடைந்து சேனுபதியைக் கண்டு சென்று அறிந்தனவெல்லாம் நன்ருகத்தெரியவுரைத்தான். "செரு விளைத்தற் குரிய சிறந்த சேனைகள் இல்லை; தானுபதிப் பிள்ளை மனைவி மக்களுடன் ஆற்றூரில் போயமர்ந்திருக்கிருர். ஊமை யன் முதலிய தம்பிமாரும் அங்கு இல்லை; ஜமீன்தார் மட்டும் தனியே வருவது ஒன்றையும் கருதாமல் உல்லாசமாக உவந் திருக்கின்ருர். ஏவல் புரியும் பரிவாரங்களும் காவலாக வுள்ள சில படை வீரர்களுமே கடை காத்துள்ளனர். இதுபொழுது சென்ருல் எளிதில் வென்று கொள்ளலாம்" என்று உற்ற நிலை யாவும் முற்ற எடுத்து ஒற்றன் உரைக்கவும் அவன் உவகை மீக் கொண்டு வெற்றி கிடைத்ததெனஉடனேவிரைந்து துணிந்தான்.

படை எழுச்சிக்கு ஆயத்தம் செய்தான். பிள்ளையைக் கையோடு பிடித்து வரும்படி ஆற்றூருக்கு இரண்டு பட்டாளங் களை அனுப்பினன். பின்பு துணைத் தலைவர்களைத் தூண்டிப் படை களைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அடைவோடு நடத்தும்படி பணித்தான். உப தளகர்த்தர்க ளெல்லாரும் ஊக்கி எழுந்தார்.

அவ்வமையம் பிற்கட்டு சேனைத்தலைவனை அணுகிப் "படை கள் பகலில் செல்லின் பகைவன் எதிரறிந்து வகை செய்து

கொண்டு மிகை மிகச் செய்வன்; சரியான சேனையில்லை என்று அவனை எளிதாக எண்ணலாகாது; அவன் அஞ்சாத நெஞ்சினன்; அருந்திற லுடையவன்; வாள் வலியில் எவரும் தனக்கு நிகரில்லாதவன்; நம் வரவு தெரியா வண்ணம் இரவிற் செல்லுதலே நல்லது" என மெல்லச் சொல்லி இம் மான வீரனது மன நிலைகளை அச் சேனை வீரன் மனங் கொள்ளும்படி தெளிய வுணர்த்தினன். உணர்த்தவே அவ் வெள்ளைத் தலைவன் உள்ளம் தெளிந்து நின்றான். இரவு நேரம் கரவாகப் போவதே கருமம் என்று கருதிப் பரிதி மறைவதை எதிர்நோக்கி யிருந்தான். ஆதவன் அடைந்தான்; அடையவே படைகள் எழும்படி அடைவே தூண்டி அடலாண்மைகளோடு ஆயத்தமாயினன்.

நிசியில் எழுந்தது.

எதிரியின் நிலையை எதிர் அறிந்து உரிய நேரத்தை உறவாக் கொண்டு கருமமே கண்ணாய் ஊக்கி எழுந்தான். காலம் கண்டு இடம்நோக்கி நிலைமை தெரிந்து தலைமையாய் இவ்வாறு கருதி எழுந்த துணைத்தலைவர்கள் இணைத்திருந்தபடைகளை இனம் பிரித்து அணி வகுத்துப் படைக் கலன்களுடன் படர்ந்து நின்றார். செப்டம்பர் மாதம் 4ந் தெய்தி (4—9—1799) பொழுதடைய வும் படைகள் பாளையங்கோட்டையி லிருந்து பாஞ்சாலங் குறிச்சிக்குப் புறப்பட்டன. பீரங்கிகளும், கருமருந்துகளும், வெடிகள் முதலிய கொடிய கருவிகள் யாவும் பொதி மாடுகளி லும் சிறு பண்டிகளிலும் உடன் போயின. உப தளபதிகள் பரிகளி லிவர்ந்து படைகளை நடத்திச் சென்றார். சேனுபதியாகிய பானர்மேனும், பிற்கட்டும் சிறந்த குதிரைகளில் ஏறித் தொடர்ந்து போனார். சீவலப்பேரி மார்க்கமாகச் சேனைகள் விரைந்து நடந்து பூலுடையார் மலை கடந்து மேலேறி வந்தன. நிசி வேளையில் அவை மருமமாய் மருவி வந்தது கரும வீரமாய்க் கதித்து நின்றது. வெள்ளையர் விரகு வெளி மறைந்து விரைந்தது.

நள் இரவில் நபாவு வந்து உள் உரைத்தது.

இப் படைவரும் நிலையை முன்னதாகவே உசாவி யறிந்து

* ஒட்டநத்தம் நபாவு நாயக்கர் என்பவர் கோம்பாடி என்னும் ஊர் அயல் வந்து வழியிடையே மாறு வேடம் தரித்து யாரும் அறியா வகை உடைவாளுடன் அயலமர்ந்து வேவு பார்த்து நின்றார். நேரே படை வருவதைக் கண்டார். உடனே குறுக்கு வழியே பாய்ந்து விரைந்து ஓடிவந்து பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையுட் புகுந்து அரண்மனைக் கதவை ஆர்த்துத் தட்டினார். அங்ஙனம் தட்டும் பொழுது இரவு பதினெட்டு நாழிகையாயிருந்தது. இடை யாமத்தில் தடை யாது மின்றி விடை போல் புகுந்து அக் கடை வாசலைத் தட்டியும் அயர்ந்து உறங்கியதால் யாரும் எழுந்து வரவில்லை. மேலே படை யடர்ந்து வருவதையும் அங்கே கிடை யமர்ந்துள்ளதையும் கெடு நிலையையும் கண்டு அவர் உளம் மிக வருந்தினார். உரிமையோடு ஊக்கி மீண்டும் மீண்டும் கதவை ஆர்த்துத் தட்டினார்.

"கழுதும் * கண் அயர்ந்து உறங்குமிக் காரிரு ளிடையே
பழுது வந்ததே பாண்டியா! தூக்கமா! உடனே
எழுதல் நன்றெனை அடுத்தடுத்து இடித்தனன் எவரும்
தொழுது நிற்கும் அத் தொன்முறை வாயிலைத் தொடர்ந்தே"

இவ்வாறு பரிந்து விரைந்து தொடர்ந்து தட்டவே படுத்திருந்த மன்னர் கடுத்து எழுந்தார். காவலர் விரைந்து கதவைத் திறந்தார். வந்த நபாவு உள்ளே புகுந்து வருகிற நிலையை யுரைத்தார். படை வரவு கேட்டதும் ஜமீன்தார் மிகவும் திகைத்தார். "பகையை வளர்த்துவிட்டு ஒரு வகையும் செய்யாமல் இப்படி உறங்கி யிருப்பது முறையா?" என உறவுரிமையுடன் நபாவு அவரைக் கடிந்து உரைத்து மேல் ஆகவேண்டியதை விரைந்து செய்யும்படி ஊக்கி நின்றார். உடனே அவரைக் கையுடன் அழைத்துக்கொண்டு இவர் அரங்கமாலுக்கு வந்தார். அரசர் வந்த அரவம் கேட்டதும் அங்கே படுத்திருந்தவர் எல்லாரும்

* இவ்வூர் மணியாச்சியின் வடகிழக்கு 2 மைல் தூரத்தில் உள்ளது.

* கழுது—பேய். நடுச்சாமத்தில் தான் அது சிறிது கண்ணயரும். பேயும் விழுந்து கிடக்கும் பேரிருளில் ஓர் கேடு எழுந்து வருகின்றதே! அதனை அறியாமல் இப்படி அயர்ந்து கிடக்கலாமா? விரைந்தெழுந்து வேண்டியதைச் செய்க என்று பரிவுடன் தூண்டி உரைத்தபடி யிது.

கடுத்து எழுந்தார். எழுந்தவர்களை விரைந்து விடுத்து நகரில் ஆங்காங்கு அமர்ந்திருந்த வீரர்க ளனைவரையும் துரிதமாக வரச் செய்தார். நள்ளிருளில் ஏதோ அபாயம் என்று ஊரில் உள்ள வர்க ளெல்லாரும் ஊக்கி ஓடிவந்தார். துயிலிடை எழினும் சிலர் அயில் வாள்களுடன் ஆர்த்தடைந்தார். அவ்வாறு திரண்ட சிறு படையைக் கண்டு உறுதி மீக்கொண்டு இவர் உவந்து நிற் குங்கால் கும்பினிப்படை குதிகொண்டு மண்டி இரவு இரண் டரை மணிக்கு அங்கு வந்து சேர்ந்தது. இடை எவரும் அறியா வகை அடைவாக வந்து நகரின் தென்பால் ஒரு மைல் தூரத்தில் படை யடைந்து நிற்கும் நிலையை அறிந்ததும் இவர் நெடுஞ் சினங் கொண்டார். தமது அருகே சுற்றி நின்ற வீரர்களைச் சுளித்து நோக்கிக் கொத்தளங்கள் தோறும் ரண பேரிகைகளை ஏற்றி விரைவாக இவர் முழக்கச் சொன்னார். அவ்வாறே அவை முழக்கப்பட்டன. இடிகள் முழங்கியது போல் நெடிய ஓசை யாய் முரசங்கள் கடிது முழங்கவும் கருதலர் படை கதிகலங்கி நின்றது. சேனபதி பெரிதும் திகைத்துப் பின்பு உறுதி யடைந்து தென் மேல் திசையில் ஆன வோரிடத்தில் சேனையை யமர்த்திக் கூடாரங்கள் அமைத்து நாலா பக்கங்களிலும் காவலரை நிறுத் திச் சிறந்த பாதுகாப்புடன் விடிவு நோக்கி உறைந் திருந்தான்.

## வீர முரசின் விளைவு.

இங்கே பேரிகைகள் முழக்கியதற்குக் காரணம் அந்த ஒலிகளைக் கேட்டு அயலிடங்களி லுள்ள படை வீரர்கள் தம் அரசுக்கு நேர்ந்துள்ள அமர் நிலையை யறிந்து விரைந்து வந்து உதவ வேண்டி என்க. அந் நகரா ஒலியால் அமர் விளைவும் ஆபத்து நிலையும் அறிவிக்கப்படும் ஆதலால் அது ரண பேரிகை என்று கூறப்படும். அப் பேரிகை முழக்கம் போரியலை விளக்கி வீரர்களை எழுப்பி வரும். தம் குல வீரர்கள் பல ஊர்களிலும் நிலையாய் வாழ்ந்து வருதலால் அபாய காலங்களில் அவர்களை ஒருங்கே அழைப்பதற்கு இவ் வுபாயம் அரசரால் உபயோகிக் கப்பட்டு வந்தது. அவ் வழக்கப்படியே இப் போர் அழைப்பு அன்று ஆரவாரமாய்க் கிளைத்து மூண்டுஆண்டு நீண்டு எழுந்தது.

---

# பத்தொன்பதாவது அதிகாரம்.

## பதி இருந்த நிலை.



இவ்வாறு வீர முரசங்களை வீறுடன் முழக்கி அங்கு மேவி யிருந்த வீரர்களைத் திரட்டித் தீரமுடன் ஊக்கி வாள் வேல் வல்லயம் முதலிய ஆயுதங்களை யெல்லாம் ஆயத்தம் செய்து வைத்துஅமர்மேல் மூண்டு தமர்கள் சூழ இவர்அமர்ந்திருந்தார்.

அவ் வமையம் தானாபதியின் தம்பியாகிய வீரபத்திர பிள்ளை இவரிடம் வந்து வணங்கி வாய் பொத்தி, "மகாராஜா! வெள்ளை யர் படை வெள்ளமாய் வந்துள்ளதே! நள் ளிரவாயிற்றே! இப்பொழுது அண்ணாவும் இங்கு இல்லையே! ஆன படைகளும் இல்லையே! இனி என்ன செய்வது? மன்னா!" என மனங் கலங்கி மறுகி நொந்து உறுதிகுன்றிப் பெரிதும்அஞ்சிஉரைத்து நின்றார்.

அஞ்சி மொழிந்து அலமந்து நின்ற அவரது அவல நிலை யைக் கண்டு இம் மன்னர் புன்னகை புரிந்து அவரை நன் னயமுடன் நோக்கி, "பிள்ளை மகனே! உள்ளம் கலங்கல்; ஒரு துணையும் வேண்டாம்; நான் ஒருவனே சென்று, எதிரிகள் அனைவரையும் ஒருங்கே கொன்று, பருந்துகளும் கழுகுகளும் பிணங்களை அருந்தி மகிழ, எமனுக்கு ஒரு புதிய விருந்தை இன்று அதிசய நிலையில் ஆற்றி, எனது குல வீரத்தின் நிலையை உலகம் தெரிய ஏற்றி, உயர்ந்த வெற்றியுடன் விரைந்து மீளுவன்; யாதொரு பயமுமின்றி உள்ளே நீர் சும்மா அமர்ந்திரும்" என்று தம் வீறு தோன்ற உரைத்து அப் பிள்ளையின் உள்ளம் தேறச் செய்தார். செய்தும் எய்தியுள்ள படை நிலையை நினைந்து நினைந்து அவர் இனைந்து நின்றார். அவ்வமையம் அவரை உவந்து நோக்கி ஊக்கமுடனின்று ஆண்டு இவர் உரைத்த வீர மொழி கள் அருந்திறலாண்மைகளை விளக்கிவந்தன. யாவரும் விழைந்து உளங் கொள்ளத் தக்கன. சில அடியில் வருவன காண்க.

## மன்னரது வீர மொழி.

"ஒன்றும் அஞ்சலே! உறுசமர் முன்புபோய் நானே
நின்று வந்துள படைகளை நிலைகுலைத் தொழித்து
வென்று வல்லையில் மீளுவன்; வெள்ளையர் வஞ்சம்
இன்று கண்டனன்; என்னையும் இனிஅவர் காண்பார். (1)

படையி லாததோர் சமையம்பார்த் திரவிடைப் பதுங்கி
அடைய வந்திவர் வளைந்தனர்; அயலறி யாமல்,
தடையி லாதுகைப் பற்றலாம் எனநினைந் தன்றே?
கடைய தாமிவர் கருத்தெனச் சிரித்துளங் கறுத்தான். (2)

எனது சேனையும் என்குல வீரரும் இலாத
அனைய செவ்வியை அறிந்துளம் செருக்கிவந் தடைந்த
இனைய தானையை என்னொரு வாளினல் இன்னே
நினையு மாத்திரை நீறுசெய் வேனென நிமிர்ந்தான். (3)

கருமருந் தொடும் கலங்கிய நெஞ்சொடுங் கலந்தே
ஒருவ ரும்மறி யாவகை ஒளித்துவந் திங்கு
மருவி யுள்ளஇவ் வன்படை முழுவதும் மறலிக்
கொருவி ருந்தென உதவுவன் உரிமையி னுவந்தே. (4)

இன்று வந்தெனை வளைந்துள படைகளை யானே
சென்று தாக்குவன் திரிபுரம் நீறெழச் சிரித்த
குன்ற வில்லியின் குமரவேள் அருளினல் என்றன்
வென்றி யல்லது வேறென்று தெரிகிலா விறலோன். (5)

வெற்றி வேற்பரன் அருளினல் என்குல வீரக்
கொற்ற மாட்சியைக் குவலயம் அறிந்திடக், குடியாய்
முற்ற வந்தவர் முன்னுறத் தெரிந்துபின் வாங்க,
எற்றை நாளும்என் பெயருற இன்றுநான் செய்வேன்."

(வீரபாண்டியம்)

என்று வென்றி வீரரான இவர் அன்று கூறிய இத் தீர மொழிகளைக் கேட்டவுடன் அங்கிருந்தவர் யாவரும் வீறுடன் விரைந்து போரில் ஏறத் துணிந்து பொங்கி நின்றார். அப்பொழுது இரவு இருபத்தைந்து நாழிகை யாயது. ஆகவே இவர் தேவியை வழிபட விழைந்து வாளும் கையுமா யெழுந்து தனியே கோவிலை யடைந்தார். உரிமையான சிலரும் உடன் தொடர்ந்து சென்றார்.

## தேவியை வழி பட்டது.

தேவி என்றது சகதேவியை. அந்த அம்மன் இந்த மன்னன் மரபின ரெல்லாருக்கும் குல தெய்வம் என்க. வீரதேவதையான அச் சத்தியை வீர மரபினராய இவர் பண்டு தொட்டுப் பேரார் வத்துடன் கொண்டாடி வணங்கி வழிபட்டு வந்துள்ளார். அச் சத்தியின் கோவில் ஓங்கார வடிவமாய் வட்டமாக உருவமைந் துள்ளது. சுற்றியும் பெரிய கோட்டை மதில்களால் சூழப் பெற்றது. கோவி லுள்ளே யாதொரு விக்கிரகமும் கிடையாது. கூரிய ஒரு வாள் மட்டும் சீரிய நிலையில் சேமஞ் செய்து மறை வாக ஒரு மூலையில் மேலே தொங்கலாக வைக்கப்பட்டிருக்கும். ஆண்டுக்கு ஒரு முறையே அவ் வுருவை இம் மரபினர் காண முடியும். அதனைப் பூசிக்கும் முறை மிகவும் புனித மானது. மாசி மாதம் சிவ நிசி தோறும் இனிய முறையில் பூசனை புரிவர். பல ஊர்களிலுமுள்ள உறவின ரனைவரும் ஒரு முகமாய்க் கூடி உரிமை மீக்கூர்ந்து பயபத்தியோடு இரவில் நிரை நிரையாய் நின்று முறையே தொழுது வலம் வந்து பணிந்து வணங்கி நிற்பர். அவரது தொழுகை நிலை மிகவும் கெழுதகைமை யுடைய தாய்க் கெழுமி நிற்கும். ஆவேச ஆடல்கள் அங்கு யாதொன் றும் இராது. பூசனைகளும் நிவேதனங்களும் மிகவும் புனித மானவை. இனிய அருள் நீர்மைகள் தனி மருவி நிகழ்வன.

## பூ ச னை நி லை.

நிராகாரமா யுள்ள கோவி லுள்ளே பசுவின் நெய்யால் பல தீபங்கள் நலமுற ஏற்றி ஒளிபெற வைத்து, வாழைப்பழம் முதலிய சிறந்த கனி வகைகள் எல்லாம் வகையே பரப்பி, வெளி முழுவதும் கரும்புகளால் பந்தல் கவினுற நாட்டி, அயலவர் எவரும் காணுவகை ஆணை செய்து, ஆர்வத்துட னின்று பூசனை புரிந்து இவர் போற்றி யமர்வர். பூசாரி மூன்று நாளும் பட்டினியிருந்து, சிறிது தீர்த்தம் மட்டும் உச்சிப்போதில் பருகி, மற்றைப்பொழுதும் பட்டுத் துணியால் வாயைக் கட்டி யிருப்பன். யாதொரு ஊறுபாடும் யாரிடமும் அங்கே நிகழ லாகாது. கூட தீபம் ஒன்றே வாடாது ஒளிரும். வாசனை தூபங்

கள் வகையாய் வீசும்; பூசையில் தேங்காயும் கூட உடையார். புலையும் கொலையும் சிறிதும் கிடையா. மதுவை மறந்தும் தொடார். கள், சாராயம் முதலிய தீய பொருள்களின் பெயர் களைக் கூட இம் மரபினர் வாயினாலும் கூறார். அவை "தேவிக்கு ஆகா" எனக் கூவி அஞ்சுவர். பேர் சொல்லவேண்டிய அவ சியம் நேரின் அவற்றை வேறு வகையாச் சுட்டிக் கூறுவர். கள்ளைத் தெல நீடு என்பர்; சாராயத்தை நல நீடு என்பர். தெல்ல நீளு, நல்ல நீளு என்னும் தெலுங்குப் பதங்கட்கு வெள்ளைத் தண்ணீர், கருந் தண்ணீர், என்று முறையே பொருள். இழி வான பழி நீர்களை வழி வழி வெறுத்து வந்துள்ளமையால் இவ் வழியின ருடைய பழைமையின் விழுமிய நிலைமை வெளியாம். மது பானத்தை இன்றும் இம் மரபினர் அதி பாதகமாக எண்ணி வருகின்றார் என்றால் அன்று எவ்வாறு இருந்திருப்பர் என்பது நன்கு யூகிக்கத் தக்கது. இக் குலத்தில் எவனாவது ஒருவன் குடிப்பவன் என்று தெரிந்தால் உடனே உறவு முறையார் ஒன்று கூடிப் புலன் விசாரித்துப் பரிகாரம் விதிக்கின்றார்; மீறி னால் அவனைச் சாதியை விட்டு விலக்கி வைக்கின்றார். இவ் வழக்கம் இப்பொழுதும் சில இடங்களில் இருந்து வருகின்றது. அசுத்த உணவுகளும் அசுத்த எண்ணங்களும் சித்தத்தைப் பாழ் படுத்தும் ஆதலால் சுத்த வீரத்திற்கு அவை விரோதமாம் என் னும் உத்தம தத்துவம் இயல்பாக இம் மரபினரிடம் சித்தித் திருந்தமையால் தங்கள் சத்தியின் வழி பாட்டில் அத்துணை உத்தமமான புனித நிலையில் ஒத்து நின்று இவர் ஒழுகி வந்துள் ளனர். ஒருவன் தனது குல தெய்வத்தை வழி படுகின்ற நிலையி லிருந்தே அவனுடையநிலையானகுலமுறையையும் வரன்முறையே யுணர்ந்து கொள்ளலாம். ஆதியில் இச் சாதியினர் பசுக்களைப் பரிபாலித்துப் பால் கறந் துண்டு, அடுத்தவரை ஆதரித்து, யாண் டும் தோல்வி யறியாமல் அஞ்சா நெஞ்சராய் வீர நிலையில் விழுமிய வாழ்வை நடத்தி மானமும் மரபும் பேணி வானமும் வையமும் புகழ வாழ்ந்து வந்தனர். இஞ்ஞான்று இவர் நிலை மிகவும் மாறுபட் டுள்ளது. அதனால் இவரது குல தெய்வ நிலையும் உலக நோக்கில் குன்ற நேர்ந்தது. முன்பு உலக மாதா

என்னும் பொருளில் ஜக தேவி எனச் சிறந்து உத்தம நிலையில் சித்தி யுதவி வீர சத்தியாய் விளங்கி நின்ற அத் தெய்வம் இன்று சிறு தேவதையாய் எண்ணப்பட் டுள்ளது. ஒரு குலம் அதில் தோன்றிய மக்களது நிலைமையால் தலைமை எய்தி விளங்கு தல்போல் வழிபடுகின்றவர்களுடைய நிலைமையைப் பொறுத்தே தெய்வமும் ஒளி பெறும் என்க. உயர்வும் தாழ்வும் மனிதனது செயல்களில் நேருகின்றன. அயலிருந்து வருவன அல்ல.

* "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்" (குறள், 505)

என்னும் அருமை வாசகம் ஈண்டு உரிமையாக உளங்கொள்ளத் தக்கது. அறிவுடைய மனிதன் புனிதமான செயல்களிலும் இயல்களிலும் சிறந்து உயர்வடைய வேண்டும். உள்ளத்தளவே மனிதன் உயர்ந்து விளங்குகின்றான். வெள்ளம் போன்ற படைகளைக் கண்டும் எள்ளளவும் கலங்காமல் உள்ளுரங் கொண்டு, நள்ளிருளில் உறுதி பெற நின்று அவ் ஒள்ளிய சத்தியைச் சத்தி உபாசகர் ஆகிய இவ் வீர மன்னர் அன்று நேரும் போரில் வெற்றி யுண்டாகும்படி வேண்டிப் பணிந்து மீண்டு வந்தார். வந்தவர் ஆயுத சாலையி லிருந்த ஆயுதங்களை யெல்லாம் ஆயத்தஞ் செய்து, ஆண்டமர்ந்து நின்ற படை வீரர்களுக்கு இடமறிந்து பொரவேண்டிய நிலைகளையெல்லாம் உணர்த்தினார். அதன் பின்பு அரண்மனை புகுந்து செந்திற் பிரானையும் தேவியையும் சிந்தையுள் தியானித்துத் தமது அரிய வடி வாளை யுருவி எடுத்து, இலட்சுமி விலாசம் என்னும் இனிய மாளிகை யடைந்து முடிவு தெரிய விடிவு நோக்கி யிருந்தார். நெடிய வடி வாளைப் புடை யமைய வைத்து இவ் ஆண்டகை அன்றமர்ந் திருந்த மாட்சி காண் டகைய ஓர் வீரக் காட்சியாய்க் கவினுற்று நின்றது. போர் முரசம் கேட்டபின் ஊரெங்கும் விழிப்பாய் உறங்கா திருந்தது.

* கட்டளைக் கல்—உரை கல். பொன்னை உரை கல்லால் மாற்று அறிவது போல் ஒருவனுடைய பெருமையும், சிறுமையும் அவனது செயல் இயல்களால் அறிந்து கொள்ளலாம் என்பதாம். செயல் இனியது ஆயின் அவன் உயர் மகன்; கொடியது எனின் இழி மகன். புரியும் கருமங்கள் மக்களை மருமமாக் காட்டிக்கொண்டிருக் கின்றன. மன நலத்தின் அளவே மனிதன் உயர்ந்து வருகிறான்.

வைகறை வந்தது. வரவும் கோழி கூவியது. அச்சமையம் இம் மன்னர் அருகே பொன்னப்ப பிள்ளை என்பவர் நின்று கொண்டிருந்தார். ஜமீனில் அவர் சம்பிரதி உத்தியோகம் பார்ப் பவர். நல்ல வாய்ச் சாலகர். சமயோசிதம்போல் சாதுரியமாகப் பேசுவதில் வல்லவர். சேவல் சத்தம் கேட்டதும் அவர் இவரை ஆவலுடன் நோக்கி, "மகாராஜா! இன்று சண்டையில் தப்பா மல் நமக்கு வெற்றி கிடைக்கும்; சந்தேகமே கிடையாது." என்று சந்தோடமாய்ச் சிந்தை துணிந்து சொன்னார்.

மன்னர்:—அதனை எப்படி அறிந்தீர்! இவ்வளவு உறுதியாக எதை நம்பிச் சொல்லுகின்றீர்!

பொன்னப்ப பிள்ளை:—இப்பொழுது கோழி கூவியதல்லவா? அந்தக் குறிப்பால் அறிந்தேன்.

மன்னர்:—அது என்ன குறிப்பு?

பொன்னப்ப பிள்ளை:—கும்பினிப் படை அதிகமாக வந் துள்ளதே! இங்கே நல்ல படை வீரர்கள் இல்லையே! என்ன நேருமோ? என்று எண்ணி இப்பொழுது தான் நான் கவலை யுற்றேன்; உடனே சிறகடித்துச் சேவல் கொக்கரித்தது; சேவல் ஆனது நமது சண்முகக் கடவுளுக்குக் கொடியா யமைந்துள்ளது; அதனால் சேவல் கோடியோன் என்று ஒரு பேரும் அப் பெருமானுக்கு உண்டு. வேலாயுதம் போல் இக் காலாயுதமும் * மிகவும் மேலாயுத மாகும். அது இப்பொழுது கூவியது, "அன்பனே! உனக்கு வெற்றி யுண்டாகும்; யாதும் அஞ்சாதே; சௌரியவா னாகிய நீ தைரியமா யிரு!" என்று அறு

* காலாயுதம்—சேவல். காலில் உள்ள முள்ளே ஆயுதமாக் கொண்டு எதிரியை வெல்லும் இயல்பினது ஆதலால் அது, காலாயுதம் என நின்றது. மேலான வீரச் சிறப்பு வாய்ந்தது.

"கறுப்புறு மனமும் கண்ணில் சிவப்புறு சூட்டுங் காட்டி
உறுப்புறு படையில் தாக்கி உறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட ஆவி பேணு வாரணம்" (இராமா, நாடு- 16)

கோழிச் சேவலின் வீர நிலையைக் குறித்துக் கம்பர் இங்ஙனம் உரைத் திருக்கிறார். இதன் அழகு அருமைகள் ஊன்றி உணர வுரியன.

முகப் பரமன் தனது வெற்றிக் கொடியால் சமூகத்திற்கு விளக்கி யருளியது போல் எனக்கு விளங்குகின்றது. உரிய சமையத்தில் அரிய சோபனமாய் வந்த இது உறுதியான வரமே.

மன்னர்:— அப்படியா! சண்முகநாதன் திருவருளாலே தான் இந்த இடம் எப்பொழுதும் வெற்றியுடன் இருந்து வருகின்றது. இன்று எப்படி ஆகுமோ?

இப்படிப் பேசி யிருந்தார். பின்பு சிறிது பொழுது கழிந்தது. காக்கைகள் எழுந்து கத்தின. கத்தவே பிள்ளையை நோக்கி, "பொன்னப்பா! முன்னம் கோழி கூவியதற்குக் குறி சொன்னாய்! இக் காக்கை ஒலிக்கு என்ன சொல்லுகின்றாய்?" என்று புன்னகையுடன் இம் மன்னர் கேட்டார். கேட்கவே அவர், "இன்று நல்ல விருந்து கிடைக்கும்; கொள்ளை கொள்ளையாய்ப் பிணங்கள் விழும்; நம் வள்ளல் அருளால் வெள்ளை பிணங்களை அள்ளி யுண்ணலாம்" என உள்ளம் மகிழ்ந்து ஊர்க் காக்கைகளெல்லாம் இப்படித் துள்ளி யெழுந்து சூழ்ந்து கத்துகின்றன" என்று அவர் சொல்லி நின்றார். அவரது சொல்லைக் கேட்டதும் இவர் மெல்லச் சிரித்துச் "சம்பிரதிப் பிள்ளை சம்பிரதாயமாய்ப் பேசுகின்றார்" என அருகே நின்றவர்களிடம் உவந்து சொல்லி உறுவதை எதிர் நோக்கிப் பொருதிறல்களை ஓர்ந்து உறுதியுடன் உறைந்திருந்தார். பரிதிவானவன் எழும் பருவம் வந்தது.

சூரியன் உதித்தது.

பொழுது விடிந்தது. அருணன் ஒளிவீசப் பாஞ்சைப் போர் நிலையை வாஞ்சையுடன் நேரில் அறிய வருபவன் போல் தேரில் ஏறிச் சூரியன் உதயமாயினன். ஆகவே கொத்தளங்களிலும், மேல் மாடங்களிலும், நிலா முற்றங்களிலும், வீரர்கள் ஏறி நின்று போராட வந்துள்ள எதிரிகளுடைய படைகளின் நிலையை நேரே பார்த்தார்கள். குதிரைகளும், கூடாரங்களும், கோணத் தொப்பிகளும், வெடிகளும், பீரங்கிகளுமாய் நெடுந் தூரம் வளைந்து பெருந் திரளா யடைந்திருப்பதைக் கண்டார். மிகவும் கவலையுட் கொண்டார். கோட்டையுள்ளே தக்க படைகள் இல்லையே! என்று வாட்டம் மீக்கூர்ந்து வருந்தி இரங்கி

அரசிடம் வந்து அடைந்துள்ள படை நிலையைப் பரிந் துரைத்தார். இவ் அருந் திற லாளர் யாதும் கலங்காமல் "ஆண்டவன் துணை யுண்டு; இந்த நீண்ட படையை நான் ஒருவனே புகுந்து மாண் டொழியச் செய்வேன்; நீங்கள் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்" என்று உறுதி யுரை புகன்று ஊக்கி நின்ருர். இவ் ஆண்டகை அப்பொழுது உரைத்த தீர வாசகங்களை உடனிருந்து கேட்டு நின்றவர்களுள் மலே யேறு சின்னு நாயக்கர் என்பவர் ஒருவர். அவர் முடிமன் * என்னும் ஊரிலுள்ளவர். நன்ருகப் படியாதவர். ஆனுல் கவி பாடும் தன்மை இயல்பாக வுடையவர். இவ் வீரரது போர் வரலாற்றைத் தமக்குத் தெரிந்த அளவில் கும்மியாகப் பாடி யுள்ளார். அது கட்டபொம்மு சண்டைக் கும்மி என வழங்கி வருகின்றது. அச்சிட வில்லை. ஏட்டிலுள்ளது. இச்சமையத்தில் இவ் வீர மன்னர் அன்று தீரமுடன் சொன்ன படியை அக் கும்மியி லிருந்து சில காட்டுகின்றேன். அடியில் வருவன காண்க.

கும்மி.

1. "ஆரும் அறியாம லேயிருக்க அத்த
சாமத்தில் பிறகட்டு காலன் துரை,
வீர நகரெனும் பாஞ்சைப் பதிதனை
வெல்லலாம் என்று விரைந் தடைந்தார்.

2. மூளை பிடுங்கி உயிர்குடிப்பான் கட்ட
பொம்மு முரசம் முழக்கு வித்தான்;
வேளை விடியட்டும் பீரங்கி குண்டிட்டு
வேரறுப் போமென்று காலன் எண்ணி,

3. நேரும் குதிரை அணியணி யாய்வைத்து
நீளிட்ட செண்டாக் கொடியும் நட்டிக்
காரும் கடல்போல் நிறைந்த பட்டாளங்கள்
கம்மென் றிருந்த விடியு மட்டும்.

4. மாமன் கெடிவெட்டூர் நாய்க்க ருடன்வடி

* இந்த ஊர் பாஞ்சாலங் குறிச்சிக்கு வட மேற்கில் 3 மைல் தூரத்தில் உள்ளது. அந்தக் கவிராயர் மரபு இன்றும் அங்கிருக்கிறது.

வாளுடை வீரர் சிலர் திரண்டு
சோமன் செகவீர ராமக் கட்டபொம்மைச்
சூழ்ந்து படைநிலை சோர்ந்து சொன்னார்.

5. அப்படி அன்னவர் சொன்னவுடன் ஆண்ட
கட்ட பொம்முதுரை திட்ட மதாய்,
முப்புரம் எரித்த ஈசுரன் ஈன்ற
முருகன் நமக்குத் துணையுண் டென்றார்.

6. கற்பித்த வன்நம்மைக் காப்பா னென்றேகதை
சொல்லுவார் நல்லோர் பெரி யோர்கள்;
சுப்ரமண்யத் தெய்வம் உண்டு நமக்குத்
துணைசெய்யும் சக்கம்மா தேவியுமே.

7. ஏகச் சமுத்திரம் என்படை என்சனம்
இல்லையென் றேவந்தான் காலன் துரை?
சாகத் துணிந்த வனுக்குச் சமுத்திரம்
தன்முழங் காலள வென்று ரைப்பார்.

8. நூறுக் கெழுதி முடித்த பிரமன்பின்
ஆறுக் கெழுது வானோ அழித்து?
போருக்கு வந்தவர் பாருக் கிரையாகப்
பொன்றிட வென்று புகழ் கொள்ளுவேன்.

9. தோடாய மாக இருக்கிறேன் என்றல்லோ
தொங்கலில் பிற்கட்டு காலன் வந்தான்
நாடாமல் பட்டாளம் ஓட அடித்துமே
நாட்டில் திசைகம்பம் நாட்டு கின்றேன்;

10. காலனைக் கொல்லுவேன் பிற்கட்டை வெல்லுவேன்
கண்டதுண் டப்படை பட்டு விழ
மூல பலச்சண்டை வாய்த்தது போல்சக
தேவிமுன் னிற்க அடித்தொ ழிப்பேன்."

என்று இவ்வாறு அடுத்து நின்றவர்க்கு எடுத்துரைத்து அமராற்றற் குரிய ஆயுதத்துடன் இவர் அமர்ந்திருந்தார். யாரும் பயப்படும் வகையில் நேரே பகைப்படை வந்துள்ளது என உறவினர் வந்து மறுகி யுரைத்த பொழுது இவர் யாதும்

மறுகாது, "முருகன் துணையுண்டு, கற்பித்தவன் நம்மைக் காப் பான், நூறுக்கு எழுதினவன் ஆறுக்கு எழுதான், தேவி அருளை முன்னிட்டு நான் ஒருவனே நேரில் நின்று போரில் வென்று புகழ் நாட்டுவேன்" என்று உறுதியுடன் உரைத் துள்ளமையால், இவ் வீரரது தெய்வ நம்பிக்கையும், தீர நிலையும், சீரிய தலைமையும் போராமைதியும் பேராண்மையும், பிறவும் இனிது புலனும்.

தள்ளருந் திறலுடன் உள்ளுறுதி கொண்டு இவ்வாறு இவர் உறைந் திருந்தார் ஆயினும் ஊமைத்தம்பி அன்று அங்கு இல்லா திருந்ததை நினைந்து உளம்மிக வருந்தி உளைந்து நொந்து முருகனே துணை என்று கருதி மூண்டு உறுதி பூண்டு நின்றார்.

ஊமைத்துரையும், இளைய தம்பி துரைச்சிங்கமும் அச் சமையம் நகரில் இல்லை. ஆவணிமூலத் திருவிழாவை உத்தே சித்துத் திருச்செந்தூர் சுவாமி தரிசனத்திற்குப் போயிருந்தார். உற்சவ நாள் முழுவதும் உடனிருந்து நடத்தி முடிவில் கரு வூலங்களைச் சரிபார்த்துக் காரியங்களை ஆராய்ந்து தலத்தார் தானத்தார்களிடம் நிலைத்த திட்டங்களை நியமித்து இந்த இடத் தார் வருவது வழக்கம் ஆதலால் அந்த முறையில் அவ் இரு வரும் அங்கே இருக்கலானார். இங்கே நேர்ந்துள்ள அபாயமான அமர் நிலை யாதொன்றும் அவர்களுக்குத் தெரியாது.

இங்ஙனம் உரிய துணை வலியும், பெரிய படை வலியும் ஒருங்கே யின்றித் தன் தோள் வலியே துணையாய் ஊழ் வலியை நினைந்து உள்ளுறுதியுடன் ஆளரி போல் இவர் அடல் கொண் டிருந்தார். தம் பாடு தெரியாமல் இரவிடை ஓடி வந்து அங்குக் கூடியுள்ள படைகளை ஓட வென்று நாடறிய நின்று நீடிய வாகை சூடுவேன் எனப் போரில் ஓகையுடன் பூரித் திருந்த இவர் காலைக்கடனை முடித்து வேலைப் பூசித்து நேர்வதை எதிர்நோக்கி நிலையாக வீறு கொண்டு நின்றார். யாதொரு ஆத ரவுமில்லாமல் தமது அருந்திற லாண்மையோடு பொருந் திறலில் இவர் பொருந்தி யிருந்தது திருந்திய வீரமாய்ச் சிறந்து விளங் கியது. உள்ளமே துணை; ஊக்கமே தெய்வம் என்னும் ஆக்க மான அரிய வாக்கியங்கள் இவரை நோக்கி வந்துள்ளன.

## படைத் தலைவன் பாசறை நின்று பாஞ்சையைக் கண்டது.

சூரியன் உதயமான வுடனே சேனாதிபதியாகிய பானர் மேன் பாசறையில் நின்று பாஞ்சாலங்குறிச்சி நகரை ஆவலோடு கவனமாகப் பார்த்தான். உள்ளே பல அழகிய மாளிகைகள் காணப்படினும் வெளியே சூழ்ந்திருக்கின்ற மண் கோட்டையைக் கண்டு மிகவும் எளிதாக எண்ணினான். "இந்தப் பொட்டல் காட்டில், இந்த ஒட்டுமண் கோட்டையில் இருந்து கொண்டா இந்தக் கட்டபொம்மு இப்படிக் காட்டாண்மை செலுத்தி ஒட்டாரம் செய்து நிற்கின்றான்? நன்று! நன்று! இவன் நிலை! இன்று எல்லாவற்றையும் தட்டி நொறுக்கிக் குட்டிச் சுவராக்கி வெட்டவெளி செய்து கட்டபொம்மைக் கட்டிப் பிடித்துக் கொட்ட மடக்கி இந் நாட்டில் கும்பினிக் கொடியைக் குலையாமல் நாட்டி என் பெயரை எந்நாட்டிலும் நிலை நாட்டுகின்றேன்" என்று அத் தலைவன் தலை தெரியாமல் தருக்கி யுரைத்தான். தான் மூண்டு வந்த காரியத்தை இலகுவாக முடித்துக் காரியசித்தியடைந்து வீரியமாய் மீளலாமென்று களிமீக் கொண்டான். கால தாமதம் செய்யலாகாதென்று *காலனைத் தூண்டி அடுத்து நின்ற பிறகட்டிடம் ஆவனவெல்லாம் ஆராய்ந்து அமர் நிலைக்கு வேண்டிய ஆயத்தங்களைத் துரிதமாகஅவன்ஆற்றி நின்றான். போருக்கு யாவும்நேரே அமைந்தன.

அதன் பின்பு எல்லாரும் காலை உண்டி கொண்டார். அப் படையில் ஐரோப்பியர்களும், இத் தேசப் படை வீரர்களும் செறிந்து நிறைந்திருந்தனர். ஒரீலி (O'reily), புரூஸ் (Bruce), டல்லாசு (Dollas), காலன் (Collins), டங்களாஸ் (Douglas), டார்மீக்ஸ் (Dormieux), பிளாக்கி (Blake), பிரௌண் (Lieut Brown) முதலிய ஆங்கிலத் தளகர்த்தர்கள் பாங்கெங்கும் ஓங்கி யாண்டும் மூண்டு வீறுடன் நிமிர்ந்து வேகித்து நின்றனர்.

---

* இங்கே காலன் என்றது காலின்ஸை (Lieut. Collins). வந்துள்ள தளகர்த்தர்களுள் இவன் மிகவும் உள்ளத்துணிவும் உறுதியுமுடையவன். இப் போரில் நேரே எதிர்ஏறி உயிர் கொடுத்தவன். இனி வருமிடந்தோறும் காலன் என்றே இவன் பெயர் வழங்கப்படும்.

சூரியன் உதயமாகி ஆறு நாழிகை யாகியும் நேரே போரிலேறத் துணியாமல் கூடாரங்களி லிருந்து தளபதிகள் மாறி மாறி ஆலோசித்தார். "இரவே வந்துள்ளோம்; இதுவரை யாரும் வந்து ஏதும் கேட்கவில்லை. கும்பினிப்படை என்பது தெரிந்தும் கொஞ்சமும் மதித்திலன். தான் வந்து பாராமலும், வேறு ஆளை விடுத்து விசாரிக்காமலும் வெளியே தலை நீட்டாமலும், ஜமீன் தாரன், உள்ளேயே உறைந்திருக்கிறான். அவனுடைய மன நிலைமை இன்னதென்று யாதுந் தெரியவில்லை. பொரும்படிக் கான பெரும்படைகள் ஒன்றும் உள்ளே இல்லை என்பதை ஒற்றன் மூலம் உறுதியாக உணர்ந்திருக்கின்றோம். தக்க துணை இல்லா திருந்தும் இவ்வாறு மிக்க துணிவுடன் இவன் வீறு கொண் டிருப்பது வியப்பிற் கிடமா யுள்ளது. கும்பினியார் ஆணையையும், நாம் வந்துள்ள நிலைமையையும், நயமாக உணர்த்தி இவனுடைய உள்ளக் கருத்தைத் தெளிவாக உணர்ந்து கொண்ட பின்னரே மேல் உற்றதைச் செய்யவேண்டும்" என்று பிற்கட்டு முதலான துணைவர்களுடன் ஆராய்ந்து முடிவில் அச் சேனாதிபதி இப் பாஞ்சைப் பதிக்கு ஒரு தூதனுப்ப விரும்பி னான். தனக்குத் துபாஷியாயுள்ள இராமலிங்க முதலியாரைத் தனியே அழைத்து உரிய நிலைகளை யுரைத்து உள்ளே போய் வரும்படி விடுத்தான். அவர் அறிவுந் துணிவும் அமைதியு முடையவர். சமையம் அறிந்து பேசும் சாதுரியம் வாய்ந்தவர். தமிழும் ஆங்கிலமும் சமமாய்த் தெரிந்தவர். சமர் மூண்டுள்ள மையால் நகருள் தனியே வர அஞ்சி அவர் தயங்கி நின்றார். அவரது நிலையினை யறிந்து இபுராகிம், சவுகர் என்னும் அவுல்தார் இருவரையும் உடன் சேர்த்து உறுதி கூறி அனுப்பினான். மூவ ரும் வந்தார். "எமன் காலன் தூதன் போல நாம் மூவரும் போகின்றோம்; மீண்டு வருபவர் யாரோ?" என்று அவர் பரிவுரை பகர்ந்து பதியுள் புகுந்தார். இராச வீதியை யடைந் தார். ஆங்காங்குச் சில வீரர்கள் ஆயுத பாணிகளாய் நிற்றலைக் கண்டு அச்ச முட்கொண்டு அரண்மனை யுட் புகுந்து அரசரைக் கண்டார். குகைக்குள் இருக்கும் கோளரி போல ஆளருகு நிற்க வாள் அயல் கிடக்க வேலையை எதிர் நோக்கி வீறுடன்

இருந்த இவ் வீராது தீர நிலையைக் கண்டு முதலில் திகிலடைந்து பின் திடமா யணுகித் தலை வணங்கி நின்றார். நின்றவரை நேர் நோக்கி இவர் ஒன்றும் அறியாதவர் போல், "நீவிர் யார்? எங்கிருந்து வருகிறீர்? இங்கு யாது காரியம்? வந்தது என்ன?" என முந்துற வினவினார். வினவவே முதலியார் இதமாக நின்று வினை நிலைகளையெல்லாம் விநயமுடன் தொகுத்து இனிது கூறினார்.

## தூது வந்தவர் ஓதி நின்றது.

"கும்பினியார் இங்கே மிகவும் கோபம் கொண்டுள்ளார். பல வகையிலும் இங்கிருந்து அவர்கட்கு இடர்கள் மூண்டுள்ளன. முன்பு எவ்வளவோ உரிமை பாராட்டி நண்புகொண்டு அவர் நன்மை செய்திருந்தும் அவ் வெல்லாவற்றையும் மறந்து நீங்கள் பொல்லாங்கை விளைத்திருக்கின்றீர்கள்; அவர் இட்ட கட்டளைகள் யாவும் தட்டப்பட்டன. அவமதிப்புகள் அளவிடலரியன. முடிவில் தானுபதிப் பிள்ளை போய் கும்பினி நெல்லையும் கொள்ளை செய்து வந்துள்ளார். அதனால் கும்பினியார் கொடுஞ் சினங் கொண்டு ஒரு பெரிய படையை அனுப்பி யிருக்கின்றார். படைகள் வந்துள்ளன. இடையே ஏதேனும் சமாதானமாக முடியுமா? என்று கருதிச் சேனுபதியாகிய பானர்மேன் தங்களைக் காண விரும்புகின்றார். இவ்வமயம் நேரில் வந்து கண்டு நடந்து போன காரியங்களை நலமாக மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டால் மிகவும் நன்று யிருக்கும்; நேரே வராவிடில் கோரமான போர் மூண்டுவிடும் என்று தெரிகின்றது. தேசம் முழுவதையும் உரிமை கொண்டுள்ள பெரிய கும்பினியோடு வம்பாக எதிர்த்து நிற்பது தங்களுக்கு நலமாகாது. இதமாக இணங்கிப் போவதே நல்லது; முன்பு தள்ளி யிருந்த வரியை இக் கொள்ளையும் குழப்பங்களும் நேர்ந்த பின்னர்ப் பாக்கியாகக் குறித்து வைத்திருக்கின்றார். அதுவும் மற்றை ஜமீன்களுக்குப் போலல்லாமல் மிகவும் குறைவாக ஒப்புக்கு நிலுவை செய்து கணக்கில் நிறுத்தி வைத்துள்ளார். அத்தொகை ரூபாய் பன்னீராயிரத்து இருபதாகும். தாங்கள் இச்சமையம் நேரில் வந்து கண்டு பேசிக் கொண்டால் எல்லாவற்றையும் ஒரு வகை

யாகத் தீர்த்து இனிமேல் நல்ல சமாதானத்தோடு இருந்து வாழலாம். பிள்ளை மேல் வெள்ளைய ரெல்லாருக்கும் பெருஞ் சினம் இருத்தலால் இவ் வேளையிலேயே இந்தப் பாளையத்தி லிருந்து அவரைத் தள்ளிவிட வேண்டும். உங்களைக் காண விரும்பிப் பாதுகாப்புக்கான சேனையுடன் இங்கே வந்திருக்கி ரூர்கள்; இனிக் கொஞ்சமும் தாமதிக்க வேண்டாம். அவர்க ளுடைய உள்ளக் கருத்தை நடுவு நிலையில் நின்று இதுவரை நான் இங்கே உறுதியாகச் சொல்லி யுள்ளேன். பொறுதி செய்து உடனே வந்தருளுங்கள்'' என்று இவ்வாறு அவர் உரிமையுடன் வணக்கமா யுரைத்து நின்றார்.

அவருடைய விநயமான நய மொழிகளைக் கேட்டும் இவர் மனம் திரும்ப வில்லை; சினந் திருகியே நின்றார். அச் சமையம் இவர் இசைந் திருந்தால் காரியம் வேறு விதமாய் நடந்துபோ யிருக்கும்; போர் நேர்ந்திராது. அதற்கு இம் மன்னர் இணங்க வில்லை. "என்னைக் காண வந்தவர் பந்திபந்தியாய்க் குதிரைகளை யும் படைகளையும் வெடிகளையும் அணி வகுத்து வைத்துக் கொண்டு அங்கே பதுங்கி யிருப்பானேன்? பிறகட்டு முதலிய அதிபதிகள் இங்கே அரண்மனைக்கு வந்தால் நேர்ந்துபோன காரியங்களைக் குறித்து எல்லாரும் ஒரு முகமாயிருந்து ஓர்ந்து ஆராய்ந்து ஏதாவது ஓர் முடிவு செய்து கொள்ளலாம். நான் அங்கே வர முடியாது. இம் முடிவை முடிவாக அவரிடம் போய் நீர் சொல்லும்'' என்று முதலியாரிடம் இவர் சொல்லி விடுத்தார்.

இவரது மன நிலையை யறிந்து அவர் மாறென்றும் சொல் லாமல் மறுகி யெழுந்தார். "சரி வருகின்றேன்'' என்று இவ ரிடம் விடை பெற்று வெளியே வந்தார். உடன் வந்த இருவ ரிடம் இவருடைய உறுதி ஊக்கம் பெருமிதங்களைக் குறித்து வியந்து கூறி முடிவு யாதாமோ? என்று கடிது மீண்டார். மீண்டவர் சேனாதிபதியிடம் போய் இவ் ஆண்டகை உள்ள நிலையையும் சொல்லிய படியையும் உரைத்து நின்றார். அவ் வுரை யைக் கேட்டதும் அவ் வெள்ளைத்துரை உள்ளங்கொதித்து உருத் தெழுந்தான். காரியம் புரிய வீரியமாய்க் கடுத்த மூண்டான்,

## இருபதாவது அதிகாரம்

### நகர் வளைந்தது.

உடனே படைகளை அணி வகுக்கும்படி உப தளபதிகளுக்கு உத்தரவு கொடுத்தான். படைத் தலைவர்கள் போருடைகள் அணிந்து கவசங்கள் புனைந்து ஆயுதங்களுடன் கடுத்தெழுந்தார். கை வினையாளர்கள் செய் வினையில் மூண்டனர். கோட்டையின் தென் மேற்கு மூலையில் பீரங்கிகள் நாட்டப்பட்டன. குதிரைப் படைக ளெல்லாம் விரைந்து சென்று நகரை நான்கு புறமும் வளைந்து கொண்டன. அச் சேனைக்குத் தலைமை அதிபதியாய் டல்லாசு துரை (Lieut. Dollas) உயர்ந்த குதிரையி லமர்ந்து எம் மருங்கும் பறந்து ஊக்கி நின்றார். பிடித்த வெடித் திரள்களுடன் படைத் திரள்கள் எங்கும் தொடுத்து நின்றன. நோக்கிய இடமெல்லாம் காக்கிச் சட்டைகளும் தொப்பிகளும் கை வெடிகளுமாய்க் காணப்பட்டன. குகைக்குள் இருக்கும் ஓர் சிங்க ஏற்றை வேட்டை யாளர்கள் வளைந்து கொண்டது போல் கோட்டையைச் சூழ்ந்து படை வீரர் கூட்ட முற்று நின்றார். வெளியில் இவ்வாறு பேராரவாரத்துடன் போர் ஊன்றி நின்றும் உள்ளே யிருந்து ஒருவரும் புறத்தே வரவில்லை. அச் சமையம் பிறகட்டின் உள்ளத்தே ஓர் ஐயம் துள்ளி எழுந்தது. "என்ன நிலையில் மன்னன் உள்ளே இருக்கின்றான்?" என்று தெளிவாகத் தெரிய விரும்பித் தூது போய் வந்த முதலியாரைத் தனியே அழைத்து வைத்து உள்ளே உள்ள நிலையை மெல்ல விசாரித்தார். விசாரிக்கவே அவர், "உள்ளே உள்ள படை கொஞ்சந்தான். ஆனால் எல்லாரும் ஊக்கத்தோடு உருத்து நிற்கின்றார். அரசர் ஒருவரே இங்கு வந்துள்ள நம் படைக ளனைத்தையும் ஒருங்கே கொன்றொழிப்பதாகக் கொதித் திருக்கின்றார். ஆயுத பாணிகளாகவே யாவரும் ஆயத்தமா யுள்ளனர். முடிவு இன்னதாம் என ஒன்றும் முடிவாகத் தெரியவில்லை. இரு புறமும் படு கொலைகள் பல விழும் என்று தெரிகின்றது. பகை நிலை மிகவும் பயங்கரமாகவே

உள்ளது" என்று இங்கு உள்ள நிலையை அவ் வெள்ளையருடைய உளமறிய உணர்த்தி நின்றார். உணர்த்தவே அடுத்து ஆய்ந்தார்.

## மறுபடியும் பதம் பார்த்தது.

உடனே பிறகட்டு, "கும்பினியார் குறித்தபடி பொறுத்தே பார்ப்போம்" என்று மறுத்தும் ஓர் உபாயம் எண்ணினார். ஜமீன்தாருடைய மாமனாரை அழைத்துப் போர் மூண்டிருக்கும் நிலையைக் காட்டி நேர்வதை நேரே உணர்த்தினால் அவர் இவ் வணங்கா முடியரை இணங்கி வரச் செய்வர் என்று துணிந்து துணிவுடைய இருவரை விரைவுடன் அனுப்பினார். ஆயுதம் ஒன்று மின்றி வெறுங் கையராய் வந்தமையால் அவ் விருவரையும் ஒருவரும் தடுக்காமல் உள்ளே விடுத்தார். அவர் போய்த் துரை உத்தாவை மாமனாரிடம் உரைத்தார். அவர் தாமதம் யாதும் செய்யாமல் விரைந் தெழுந்தார். கட்டாப்புச் செய்துள்ள பட்டாளங்களிடையே பதறாமல் வந்து துரைகளை அணுகினார். அவர் ஜமீன்தாருடைய தாயுடன் கூடப் பிறந்தவர். பருவம் முதிர்ந்தவர். அப்பொழுது அவருக்கு வயது ஐம்பத்தெட்டு. அவருடைய பேர் கெடிவெட்டூர் நாயக்கர் என்பது. தாய் மாமன் என்னும் உரிமையால் அவரை இவர் மரியாதையாக நடத்தி வந்தார். அதனால் ஜமீனில் அவருக்குச் சிறந்த செல்வாக்கு இருந்து வந்தது. தானாபதிப் பிள்ளை செயல் பிடியாதாயினும் அவரைத் தட்டிச் சொல்ல முடியாது தயங்கி நின்றார். வினை விளைந்த பின் மனம் மிகநொந்து மறுகியிருந்தார். சண்டை மூண்டதே என்று சஞ்சலங் கொண்டிருந்த அவர் பிறகட்டு கூப்பிட்டார் என்றவுடன் ஏதோ நல்ல காலமுள்ளதென்று விரைந்து வந்து அவரைக் கையுறையுடன் கனிந்து கண்டார். அவர் இவரை ஆதரவுடன் இருத்திச் சேனாபதிக்கும் அறிமுகப் படுத்திச் சேனை நிலையைத் தெரியக்காட்டிச், சேர்ந்துள்ள கேட்டையும் தெளிய உரைத்தார்: "உம்முடைய மருமகனார் அநியாயமாய் அழிந்து போகத் துணிந்து நிற்கின்றார்; இந்த இடத்துக்கு நாங்கள் எவ்வளவோ இதஞ் செய்திருக்கின்றோம். மற்றைப் பாளையங்களுக்கெல்லாம் தலைமையான நிலையில் இதனை முதன்மையாக நினைந்து உற

வுரிமையுடன் உதவி புரிந்து வந்துள்ளோம். அந்த நன்றியை அறவே மறந்து அடாதன செய்து மேலும் அடங்கொண்டு நிற்கிறார். கும்பினியார் வலிமையைக் கொஞ்சமும் தெரிந்திலர். சமையம் அறிந்து நடந்துகொள்வது நலம்; அமர் தொடங்கினால் எமர் இனி அடங்கார். உங்கள் பாளையம் பாழாய் விடும். பழைமையை நினைந்து உம்மிடம் கிழமையுடன் இது கூறுகின்றேன்: எல்லாப் பிழையும் பொறுத்துக் கொள்ளுகின்றோம்; பிள்ளையை மட்டும் தள்ளி விடுங்கள். எங்கள் நெல்லைக் கொள்ளை செய்ததும், கொலை விளைத்ததும், கோள் வளர்த்து வருவதும் நான் எடுத்து சொல்லவேண்டாம்; உமக்கு எல்லாம் தெரியும்; அந்தப் பொல்லாப் பதகனை இங்கு ஒரு நிமிடமும் வைத்திருக்க லாகாது; அவன் இருப்பு நெருப்பாம். பொறுப்பான உம்மிடம் உள்ளதைக் குறிப்பாக உணர்த்தினேன். உம்முடைய ஜமீன்தாரிடம் போய்ச் சொல்லி உடனே வந்து சமாதானம் செய்துகொள்ளும்படி செய்யும். இனி மேலும் பேசல் மிகை. உமக்காக இன்னும் ஒரு மணி நேரம் எதிர்பார்த் திருக்கிறேன். விரைவில் வரவேண்டும்; இன்றேல் குண்டுகள் கோட்டைக்குள் வந்து விடும்" என்று இவ்வாறு அவர் உறுதியா உரைசெய்து விடுத்தார்.

## மாமன் வந்து சொன்னது.

மாமனார் விரைவாக வந்து மனம் மிக உருகி இம் மன்னர் அருகே வணக்கமாய் நின்று, "சமூகம் இது சமையம் இரங்கி யருள வேண்டும். கும்பினியார் இன்னமும் நம்மேல் நல்ல எண்ணமே கொண்டுள்ளார். தானாபதிப் பிள்ளை ஒருவனைத் தள்ளிவிடின் நமக்குச் சனி தொலைந்தது; அதன் பின்பு எல்லாம் நல்லதாம். மகாராஜாவினுடைய வரவை அங்கே துரைகள் எல்லாரும் ஆவலோடு எதிர்பார்த் திருக்கிறார்கள். விரைவில் போய்க் கண்டு பேசி அவர் சொல்லுகிறபடி சமாதானமாய் முடிவு செய்து கொள்வதே நல்லது; கொஞ்சமும் தாமதிக்க லாகாது; படைகள் மிஞ்சி வந்துள்ளன; விரைந்து எழுந்தருளுங்கள்" என்று உரிமையோடு பெரிதும் கெஞ்சி வேண்டினார்.

### மன்னன் மறுத்து உரைத்தது

பகை நிலை தெரிந்து பரிதாபத்துடன் அங்ஙனம் வேண்டி நின்ற அவரை இவர் வெகுண்டு நோக்கி, "தானுபதியைத் தள்ளி விடு என்று சொல்லுவது மிகவும் ஈனமானது; பிள்ளை செய்த பிழைக்கு என்ன தண்டனை விதித்தாலும் அதனைக் கொடுத்து விடுகிறேன்; நெல் விலைக்கு முன்னமே ஈடு செய்துள்ளேன்; அவருடைய எடைக்கு எடை தங்கம் வேண்டுமானாலும் இன்று தருகின்றேன்; அவரைப் பிடித்துக் கொடு என்பது முடியாத காரியம். இவ் வெள்ளைகள் கிடக்கட்டும். நேரே கடுத்து வந்து எமனே கேட்டாலும் என் உயிருள்ள அளவும் பிள்ளையைக் கைவிடேன்; ஆருயிரை விடுத்தாலும் அடுத்தவரைக் கைவிடுதல் இந்த இடத்தவர் பால் இல்லை. நேர் எதிர்த்துப் போராடத்தக்க படை யில்லையே என்று நீர் பயந்து பிதற்றுகிறீர்! இங்குள்ளவர்கள் போதும்; இவர்களைக் கொண்டே வெள்ளையர்களை நான் வேரறுத்து வெல்வேன்; நள் இருளில் கரவாக வந்து என்னை எளிதாகக் கைப்பற்றலா மென்று விரகோடு அடைந்துள்ள அவரைப் புறமுதுகு கண்டு வெருவி யோட வென்று என் குலப்புகழை விண்ணும் மண்ணும் பரவி யோடச் செய்வேன்; வயது முதிர்ந்த நீர் ஒரு பயமும் கொள்ளாது அரண்மனையுள்ளே பேசாது போய்ப் படுத்திரும்" என்று கடுத் துரைத்தார். அவர் அடுத்து ஒன்றும் பேசாமல் அஞ்சி மறுகி அயல் அகன்றார்.

இவருடைய நெஞ்சு நிலையும் நிலைமையும் தலைமையும் அதிசய நிலைகளில் அமைந்திருத்தலை உலகம் பல முறையும் பார்த்து வந்துள்ளது. அருந்திறலாண்மையும் பெருந் தகைமையும் உறுதியும் ஊக்கமும் இங்கே உயர் நிலையில் ஓங்கி நிற்கின்றன. பீரங்கி வெடிகள் முதலிய கொடிய கொலைக் கருவிகளோடு பெரும் படைகள் திரண்டு வந்து ஊரை வளைந்து கொண்டு போரை விழைந்து பொங்கி நிற்றலை ஒரு பொருளாக மதியாமல் மிக எளிதாக எண்ணி இவர் இயல்பாய் அமர்ந்திருப்பது அதிசய வியப்பாயுள்ளது. வணங்கா முடி மன்னனாய் யாதும் இணங்காமல் இவர் இறுமார்ந்திருப்பதை அறிந்ததும் வெள்ளை

யர்களுடைய உள்ளங்களில் நெடியதிகில்கள் கடிது தோன்றின. சாதுரிய சாகசங்களால் காரியங்களைச் சாதித்துக்கொள்ளும் சதுரர் ஆதலால் அந்த வெள்ளைத் துரைகள் இந்த வீரத் துரையை எப்படியாவது சமாதானமா வசப்படுத்திக்கொள்ள வேண்டும் என்று உள்ளம் துணிந்தனர். நேரே பேட்டிக்கு இவர் வருவ தில்லை என்று உறுதியாக மறுத்தும் அவர் பொறுதியாகப் பொறுத்து மாமனுரை அழைத்து இதமொழிகள் பல புகன்று உடன் பாடாய் உறவு பெற முயன்றுர். அந்தப் பெரியவர் மீண்டு வந்து இந்த ஆண்டகையைக் கண்டு உள்ளம் இரங்கி உறவு கொள்ளும்படி உரிமையோடு உரைத்தார். உரிய மாமன் கூறிய அரிய அறிவுரைகளையும் ஒதுக்கித் தள்ளித் தானுபதிப் பிள்ளையை எவ் வழியும் கைவிடேன் என்று இவர் செவ்வை யாகத் தெளித்து மொழிந்த மொழிகள் உலக உள்ளங்களை விழித்து நோக்கச் செய்து வியப்பை மூட்டியுள்ளன. சேனைத் தலைவன் சொல்லி விட்டதை இவர் எள்ளி இகழ்ந்து தள்ளி விட்டுத் தம் உள்ள நிலையை உரைத்தது உள்ளி உணரத் தக்கது.

### மாமன் சொன்னது.

மாமன்வந்து மன்னவன்முன் அவன்சொன்ன
வாறெல்லாம் வகுத்துச் சொன்ஞன்;
காமன்என நின்றஇவன் கண்ணுன
பிள்ளைதனைக் கடுத்து நேரே
ஏமன்வந்து கேட்டாலும் இசைந்துநான்
கொடுத்திடேன்; இன்றி வர்க்குத்
தாமமிகு பொருள்வேண்டின் இப்பொழுதே
வேணமட்டும் தருவேன் என்முன். (1)

### மன்னன் மறுத்தது.

பிள்ளைஎடைக்கு எடைநிகராப் பேரொளிசெய்
தங்கமே வேண்டும் என்ன
உள்ளமுற விழைந்தவர்தாம் உரைத்தாலும்
உவந்தின்றே கொடுக்கின்றேன் நான்
எள்ளளவும் அவனைநான் கைவிடேன்
இப்படையே அல்ல வேறே

வெள்ளம்என வந்தாலும் வெள்ளையரை
வேரறுத்து வெல்வேன் என்றான். (2)

உறுதி குறித்தது.

ஆருயிரை விடுத்தாலும் அடுத்தவரைக்
கைவிடுதல் அழகோ? நேரே
ஓருயிரும் இல்லாமல் ஒழிந்தாலும்
உடம்பிலுயிர் உள்ள மட்டும்
சீரழிந்து வந்தவர்க்குத் திறைசெலுத்தி
நின்றிடேன் என்றான் சேர்ந்த
ஊரழிய நேர்ந்தாலும் உலகழியாப்
புகழ்கொண்ட உரவுத் தோளான். (3)

உள்ளம் துணிந்தது.

கொள்ளைசெய்த நிலைதெரிந்து கொடுந்தண்டப்
பொருளைமுன்னம் கொடுத்து விட்டேன்;
பிள்ளைதனை யும்கொடுக்க வேண்டுமென
இன்றுவந்து பிதற்று கின்றார்;
வெள்ளைமதி யுடையஇவர் வீணுரையை
இனியிங்கே விளம்ப வேண்டா;
உள்ளபடை போதும்மேல் உருத்துவந்த
படைகளைநேர் ஒழிக்க என்றான். (4)

போர் புரிய மூண்டது.

நெடியபடை யுடையம்என நீண்டசெருக்
கோடெழுந்து நிமிர்ந்து நேரே
விடியுமுனே வந்தெனது வீரமா
நகரயலே விரகு சூழ்ந்து
கொடியவெடித் திரள்களுடன் கூடியுள்ள
மாற்றலரைக் கூட்டோ டின்று
படிமடிந்து படவெல்வேன் படைஎழுந்து
பொருகஎன்று பணித்து நின்றான். (5)

(வீரபாண்டியம்)

இந்த வீர மன்னனுடைய தீரமும் சீர்மையும் நீர்மையும் ஓரளவு இவற்றால் அறியலாகும். தம்முடைய தானபதிப் பிள்ளை மேல்

இவர் வைத்திருக்கிற அன்பும் ஆதரவும் அதிசய நிலையன. தவருன வழிகளில் சென்றமையால் அவர்மேல் இவர் உள்ளம் வெறுத்திருந்தாலும் எதிரியிடம் ஒப்பிக்க இவர் யாதும் இசையவே இல்லை. உரிமையோடு அவரைப் பேணியே நின்ருர்.

வெள்ளையர் யாவரும் பிள்ளை மீதே பெருஞ்சினங்கொண்டு நின்ருர். கும்பினி ஆட்சி இந் நாட்டில் இல்லாமல் அடியோடு குடிவாங்கிப் போகும்படி முடிவாக யாண்டும் மூண்டு அவர் வேலை செய்து வருகிருர் என்பதை எவ் வழியும் செவ்வையாகத் தெரிந்து வந்தார் ஆதலால் அவரைக் கடிந்து ஒழிக்க வேண்டும் என்று பலவழிகளிலும் விரைந்து முனைந்து அவர் துணிந்துநின்ருர்.

பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்தி லிருந்து அவரை விலக்கி ஒழித்து விட்டால் தமக்கு நேர்ந்துள்ள இடையூறுகள் யாவும் எளிதே விலகிப் போய்விடும் என்று கும்பினியார் தெளிவு கொண்டு நின்றனர். மூண்டிருக்கும் துயரங்களுக் கெல்லாம் மூலகாரணம் பிள்ளையே என்று உள்ளம் துணிந்திருந்தமையால் அவரையே முதலில் தொலைக்க வெள்ளையர் யாவரும் மூண்டார்.

சதி வஞ்சமான துர்ப் போதனைகளைப் போதித்து ஜமீன் தாரைக் கெட்ட வழிகளில் தூண்டி முடிவில் கும்பினியாரோடு நேரே எதிர்த்துப் போராடும்படி மூட்டி விட்டு வெள்ளையர்க ளுக்குக் கொடிய ஒரு வினைப்பூடாய்ப் பிள்ளை நெடிது நீண்டு நிற்கிருன் என அவர் கருதி வந்துள்ளதைக் கடிதங்கள் பலகாட்டி நிற்கின்றன. அவற்றுள் ஒரு கடிதக் குறிப்பு அயலே வருவது.

"Subramonya Pilly, the head manager of Cotaboma Naig who is known to have instigated and advised his master in his unwarrantable proceedings." [R. G.)

"சுப்பிரமணிய பிள்ளை என்பவர் கட்டபொம்மு நாயக்க ருடைய தானபதி. தகாத காரியங்களைத் துணிந்து செய்யும்படி துராலோசனைகள் கூறித் தனது ஜமீன்தாரைக் கெட்ட வழியில் மூட்டி விடுவதில் கீர்த்தி மிகப் பெற்றவர்" எனப் பிள்ளையைக் குறித்து இவ்வாறு வெள்ளையர் குறிப்புகள் பல வந்துள்ளன.

ஜமீன்தார் கெட்டது எல்லாம் தானாபதிப் பிள்ளையாலேயே என்று அவர் திட்டமாய்த் தெளிந்திருக்கின்றார். முடிவில் போர் மூண்ட பின் பாஞ்சைப் பதிமேல் வந்த பட்டாளங்களின் படை எழுச்சி நிலையும் அளவும் தெளிவா விளக்கப்பட்டன.

"To accomplish what has been suggested, it will be necessary to assemble a force to consist of:-

Four field pieces with artillery men,
Five hundred Europeans,
Three complete battalions of sepoys and
Two troops of cavalry.

This detachment should immediately proceed to take possession of the Fort of Panjalam Courchy." (R. G.)

"பூரணமான பெரிய காலாள் பட்டாளங்கள் மூன்று, குதிரைப் படைகள் இரண்டு, ஐந்நூறு ஐரோப்பியர்கள், நான்கு பீரங்கி நிறைகள் ஆகிய இந்தச் சேனைத் திரள்கள் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையைப் பிடிக்க உடனே செல்ல வேண்டும்" என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

போர் மேல் மூண்டு வந்து பாஞ்சைப் பதியை வளைந்துள்ள படைகளின் நிலைகளை ஓரளவு இதனால் அறிந்து கொள்ளலாம்.

இவ்வாறு சேனைகள் வந்து சூழ வளைந்து சுடு வெடிகளோடு நின்று கொண்ட பின்புதான் சேனைத் தலைவன் இவரைப் பேட்டிக்கு அழைத்தான். இம் மான வீரர் மறுத்து விட்டார். அதன் பின் மாமனை அழைத்து அவன் ஆம் வகை உரைத்தான். அந்த முதியவர் வந்து அதி வேகமாய் இணங்கியருள்வது மதியூகமாம் என்று இவரை வணங்கி வேண்டினார். என் உயிர் போனாலும் தானாபதியை நான் கை விடேன் என இவர் உறுதியாய் மொழிந்தார். ஆர் உயிரை விடுத்தாலும் அடுத்தவரைக் கை விடுதல் அழகோ? என்று கெழுதகைமையோடு இவர் உரைத்திருப்பது விழுமிய நிலைமையை நன்கு விளக்கி நிற்கிறது.

பெருங் கேடு வந்து ஒருங்கே மூண்டுள்ள இடத்தும் நட்பாளரை யாதும் நழுவ விடாது திடமாய் இவர் தழுவி நிற்கும் நிலைமையை நினைந்து அங்குள்ளவர் யாவரும் இழவு வந்து நேர்ந்ததே! என்று பிள்ளையை வைது பேதுற்று நின்றார்.

*"எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு." (806)

என்னும் வள்ளுவர் வாய்மொழியின் உள்ளுறை பொருளை உலகம் அறிய இவ் வீர வள்ளல் அன்று உணர்த்தி நின்றது உயர்ந்த உள்ளங்களுக்கு உவகையை விளைத்து உணர்ச்சியை யூட்டியுள்ளது. உற்றநண்பனைக்காத்தது வெற்றிநிலையாப்பூத்தது.

அடுத்தவரைக் காப்பாற்றி அடைந்தவரை ஆதரித்து யாண்டும் பழமை பாராட்டிக் கிழமை புரிந்து எந் நிலையிலும் தந் நிலை தளராது நின்ற இவ் ஆண்டகையின் அருந் திறலும் பெருந் தகவும் நேர்மையின் நீர்மையும் ஈண்டு நினைந்து மகிழத்தக்கன.

எதிரிகட்கு அஞ்சாமல் யாதும் இடங்கொடாமல் தீரமோடு உரைத்த இம் மன்னரது மன நிலையை நோக்கி மாமன் முதலிய உறவினர் அனைவரும் ஒன்றும் மறுத்துச் சொல்ல மாட்டாமல் உற்ற துயரை நினைந்து வருந்தி அயலே போய் மறுகி யிருந்தார்.

## வெளியூர்களிலிருந்து வீரர்கள் ஓடிவந்தது.

அச்சமையம் காலை ஒன்பதரை நாழிகை யாயது. இரவு அடித்த பேரிகை முழக்கத்தைக் கேட்டு அயலூர்களிலிருந்து வீரர்கள் பலர் ஆயுத பாணிகளாய் நாலா திசைகளினும் நின்று தலைவிரி கோலமாய்த் தாயை நாடி ஓடிவரும் புலிக் குருளைகள் போல் ஒலித்து ஓடிவந்தார். படை வருகிற நிலையைக் கண்டதும் சேனாதிபதி பெரிதும் விரைந்து, "இடைவெளி யாது மின்றிக் கோட்டை முழுவதையும் நாட்டமுடன் நன்றாகச் சுற்றி முற்றுகை யிட்டு ஒருவரையும் உள்ளே புக விடாதீர்!" என்று உருத்து உத்தரவு கொடுத்தான். ப்ரேய்த் வெய்ட் (Major General Braithwaite) என்னும் தலைமைத் தளகர்த்தன் அந் நிலையில் நெடும் பரி யூர்ந்து இடங்கள் தோறும் எச்சரிக்கை செய்து

---

* எல்லை—நட்பின் எல்லை. அதாவது உறவொழுக்கத்தின் உயர் வரம்பு. தொல்லை—பழைமை. தொலைவிடத்தும் துறவார் என்றது பொருள் அழிவு, உயிர் அழிவு முதலாகப் பல இழவுகள் நேர்ந்தாலும் நட்பாய்த் தம்மைத் தழுவி நின்றவரை விழுமியோர் கைவிடார் என்பதாம். தொலைவு—கேடு, முடிவு. தொலைவு நேரினும் உள்ளம் உலைவு நேராமல் பிள்ளையை இவ் வீர வள்ளல் பேணி நின்றது பெருந்தகைமையாய் விளங்கி அருந்திறலாய்த் துலங்கியுள்ளது.

யாண்டும் உள்ளுற இடங் கொடாமல் படைகளை நூக்கி ஊன்றி நின்றான். நிற்கவே பிடித்த வெடிகளோடு அணி அணியாய்த் தொடுத்து நின்ற பட்டாளங்கள் வெளியி லிருந்து விரைந்து ஓடி வந்தவர்களை இடையே வெகுண்டு தடுத்தன. தடுக்கவே உருத்து வந்த வீரர்கள் எல்லாரும் உள்ளே புக முடியாமல் உள்ளந் துடித்து வெளியே மறுகி நின்றார். தங்கள் அரசுக்கு நேர்ந்துள்ள அபாய நிலையை நினைந்து அலமந்து நொந்தார். அயலிருந்த வயல் வெளிகளில் செயலழிந்து அவர் திகைத்து நிற்குங்கால் கோல்லம்பரும்புச் சிவத்தய்யா என்னும் வீர மகன் குதிரையி லேறி விரைந்து வாவி வந்தான். அவன் இம் மன்னருடைய தந்தைக்கு மற்றொரு தாய் வயிற்றில் பிறந்தவன். தமக்குத் தம்பி முறையினன். பெரிய போர் வீரன். பேரழகன். கோல்லம்பரும்பு என்னும் ஊரில் அரண்மனை அமைத்து அங்கு அமர்ந்திருந்தான். இரவு முழங்கிய முரசொலி கேட்டு அரசுக்கு ஏதோ ஆபத்தென்று ஆர்வத்தோடு ஆர்த்து வந்தான். அவனோடு முப்பத்தேழு போர் வீரர்கள் வேல் வாள் கம்பு வல்லயங்களுடன் தொடர்ந்து ஓடி வந்தார். கோட்டையின் வடகிழக்கு மூலையில் அக் குதிரை வீரன் வந்து முட்டினன். பிடித்த வெடித்திரளோடு தொடுத்து நின்ற படை வீரர்கள் கடுத்துத் தடுத்தார். தடை செய்யவே உடனே "விடு வழியை" என்று அடுதிறலோடு ஆர்த்துத் தன் கை வேலால் படைகளைத் துணித்துக் கடு வேகத்துடன் குதிரையைத் தட்டி உள்ளே பாய்ந்தான். கோட்டை வாசலுள் பாயுங்கால் பகைவர் சுட்ட குண்டு பட்டுக் குதிரை மண்டியிட்டு மாய்ந்தது. அது சாய்ந்து விழு முன்னே அவ் வீரன் அந்தரத்தில் துள்ளி அரச வீதியுட் பாய்ந்து அரண்மனைக்குள் வேலுங் கையுமாய் விரசி ஓடி வந்தான். அந்த வீர வேகம் வெற்றிக் களிப்போடு விரிந்து வந்தது. அக் குல மகனைக் கண்டதும் இத் தலை மகனார் பேருவகை கொண்டு விரைந்து எதிர் பாய்ந்து ஆரத் தழுவி, "அருமைத் தம்பியே! இந்த அபாய வேளையில் சமைய சஞ்சீவி போல் வந்தாயே! இது செந்திலாதிபன் திருவருளே! நீ துணை வந்துள்ளமையால் இந்தப் படையல்ல, இனி எத்தனை படைகள் வந்தாலும் எளிதாக வென்று விடுவேன்" என்று விழி நீர் மல்கிக் களி மிகுத்து நின்றார். அந் நிலையில் இளையரிமையும் கெழுதகைமையும் கெழுமி நிற்ப இவர்

தழுவி நின்றது யாவருக்கும் அன்பு நலம் சுரந்த ஓர் இன்பக் காட்சி இலங்கியிருந்தது. அதுபொழுது இவர் மொழிந்த வீர மொழி அயலே வரும் சிந்தில் வந்துள்ளது; சிந்திக்க வுரியது.

"தம்பி தருணத்தில் நீவந்தாய் இப்போது
சஞ்சீவி கோட்டைக்குள் வந்தது போல்
வெம்பி அடைந்துள்ள இப்படை யோடின்னும்
வேறு வந்தாலுமே நீறு செய்வேன்." (கட்டபொம்மு கும்மி)

தம்பியைக் கண்ட பின்பு "கும்பினிப் படை இனி எனக்கு எம்மாத்திரம்?" என்று இவர் உறுதி பூண்டு உரிமை மீதூர்ந்து கொண்டாடி நின்றமையால் இவரது அருந் திறலாண்மையும் பொருந்திறனும் திருந்திய வீரமும் ஒருங்கறிய நின்றன.

உரிமைத் துணைவன் உரிய பருவத்தில் துணை அமையப் பெற்றால் எவருக்கும் ஒரு புதிய ஊக்கம் அதிசய நிலையில் பொங்கி எழுவது இயல்பு ஆதலால் இவர் உயர் வுறுதியுடைய ராய்த் தம்பியை * உவந்து தழுவி அங்ஙனம் வியந்து நின்றார்.

அவ் வீரமகன் வேல்கொண்டு வீசி உள்ளே ஊக்கி வந்த பொழுது வடக்கு கொட்டில் அடைய வளைந்து நின்ற படைகள் உடைந்தன. உடையவே வெளியில் நின்றவ ரெல்லாரும் விரைந்து உட் புகுந்தார். வெம்போர் மூண்டது. மூண்ட போரும் மாண்ட பேரும் நீண்ட பேரா நிலவ நேர்ந்தன.

---

* "திண்பொருள் எய்த லாகும்; தெவ்வரைச் செருக்க லாகும்;
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையும் நண்ண லாகும்;
ஒண்பொருள் ஆவதையா! உடன் பிறப்பு; ஆக்க லாகா;
எம்பியை யீங்குப் பெறறேன் என்னெனக்கு அரிய தென்றான்."
(சீவக சிந்தாமணி)

என நந்தட்டனைக் கண்டபொழுது சீவகன் புகழ்ந்து கொண்டதும்,

"கம்ப மதத்துக் களியானைக் காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனிவந்து குறுகி னுள்என் றகம்குளிர்ந்தேன்;
வம்பு செறிந்த மலர்க்கோயில் மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பி யுடையான் பகைஅஞ்சான் என்னும் மாற்றம் தந்தனையால்."
(இராமாயணம்)

என இந்திரசித்தை வென்று வந்த பொழுது இலக்குவனைத் தழுவி நின்று இராமன் சொன்னதும், இம் மன்னன் தம்பியைக் கண்டவுடன் தழுவிச் சொன்ன விழுமிய மொழிகள் நினைவுறச் செய்கின்றன.

# இருபத்தோராவது அதிகாரம்.

## அமர் விளைந்தது.

இருதிறப் படைகளும் ஏகமாய்க் கைகலந்து வேகமாய்ப் பொருதன. எங்கும் போரின் அமலைகள் பொங்கி எழுந்தன. பீரங்கிகளி னின்று குண்டுகள் எழுந்து இடிகளென வந்து மதில்களில் விழுந்தன. வெடி முழக்கங்கள் இடங்கள் தோறும் கொடிதாய்க் கேட்டன. டல்லாசு, ஒரீலி, புரூஸ், ப்ரௌண் காலன் முதலிய தளகர்த்தர்கள் எல்லாரும் குதிரைகளைத், தட்டித் தாவிப் படைகளை ஊக்கிக் கொடிதமர் புரிந்தார். காலாட் படைகள் கைவெடித் திரள்களால் கடுத்துச் சுட்டன. இருப்புலக்கைகள் குந்தம் முதலியன கொண்டு திண்டோள் மல்லர்கள் மண்டி அடர்ந்து கோட்டையை மடித்து இடித்தனர். மேற்கு நெட்டு உடைந்தது. தெற்கும் சிறிது சிதைந்துவிழுந்தது.

இன்னவாறு எதிரிகள் சீறி ஏறிச் சின்ன பின்னங்கள் செய்யவே, இம் மன்னவன் படைகள் மனங் கொதித்து எழுந் தன. கோட்டை மதில்கள் தோறும் குதித்து நெருங்கி எதிர்த்து நின்று ஏறிவருகின்ற எதிரிகளைச் சிறி எறிந்தார். கூரிய படைக் கலங்கள் யாண்டும் கொந்து கொந்தாக நீண்டன. வேல்கள் விரைந்தன; வாள்கள் நிரைந்தன; வில்லுகள் எழுந்தன; வெடி கள் முந்தின; கல்லுகள் துள்ளின; கவண்கள் வந்தன; வல்லே யம், தோமரம், மழுக்கள், பாலங்கள், எல்லுறும் ஈட்டிகள் எங்கும் தோன்றின. கண்டகோடாலிகள் கையில் கொண்டனர். பிண்டி பாலங்களும் தண்டுகளும் தாங்கினர். சக்கரப் பூண்கள் கட்டிய உக்கிரவீரக் கம்புகள், மூளை பிடுங்கிகள், முள் வயிரங் கள், உள்ளாயுதம் முதலிய வல்லாயுதங்கள் எல்லாம் எடுத்து ஒல்லையில் பாய்ந்து உருத்தமர் மூண்டார். கொடிய அமளிகள் யாண்டும் பெருகி நீண்டன. குத்து, வெட்டு, கொல்லு, அடி, பிடி, எறி, கடி, என்னும் இன்னவகையான கோர ஒலிகளே எங்கும் மீறி எழுந்தன. வெடி யோசைகளும், பீரங்கி முழக்கங் களும், கொடிதாய் ஓங்கி யாண்டும் நெடிதாய் நீண்டன.

இருவகைப் படைகளும் நேரேஎதிர்ந்து ஒருதிறத்தும் குன்றுமல் பொரு திறத்தில் மூண்டு பொங்கி ஓங்கின. வாள்கள் வேல்கள் வல்லையங்கள் கண்டகோடாலிகள் பிண்டி பாலங்கள் தண்டுகள் கழுமுள் செறிந்த கம்புகள் முதலியன கொண்டு நெருப்பெனக் கொதித்து நெடிது பாய்ந்து நெட்டு நெட்டேறித் தட்டழிய வெட்டிப் பட்டொழியக் குத்தி எட்டி வீசி எற்றி எறிந்து இப்படைவீரர்கள் எங்கும்சாரி திரிந்து தாவிஅடர்ந்தார்.

அப் பட்டாளங்கள் நெட்டுகள் தோறும் கருமருந்து செலுத்தி வெடி யினங்கள் ஏந்தி நிரை நிரை நின்று குறி தவரு மல் சுட்டுக் கொன்று வீழ்த்தினர். ஒருமுறை வேட்டெழுப்பி மறுமுறை வெடிகளில் மருந்து புகுத்தி அவர் ஆயத்தமாகு முன் இவர் விரைந்து பாய்ந்து வெட்டி வீழ்த்திக் குத்திச் சாய்த்துத் தலைகளைத் துமித்துக் குலவைக ளிட்டுக் குதித்துத் திரிந்தார். அவர் ஏறிவரும்போதெல்லாம் இவர் எதிர்த்து நின்று வேல் வாள்களால் வெகுண்டு வீசி விரைந்து கொன்றனர். மதில் மேலும் கொத்தளங்களிலும் குறிசெய்து நின்று வில்வீரர்கள் வல்விரைந்து கல்லுருண்டைகளைக் கடுத்து எய்து தொடுத்து விடுத்தார். கொல்லும் கொலைகளில் வில்லுகள் அன்று கொடிய வேலைகளை நெடிது செய்தன. அடு தொழில்கள் கடு வேகமாய் நடந்தன. படு பிணங்கள் யாண்டும் கடிது குவிந்தன.

## வில்லாளர் வேலை.

அவ் வில்லுகளில் நின்று விரைந்து துள்ளி வீறிட்டு வருகின்ற கல்லுகள் எதிரிக ளுடைய பல்லுகள் மூக்குகள் கண்கள் காதுகள் நெற்றிகள் முதலிய இடங்களி லெல்லாம் கடுகி வந்து சுடு தீயென நெடிது பாய்ந்து கொடிது செல்ல அவர் துள்ளி வீழ்ந்து துடித்து மாய்ந்தார். கொள்ளிவட்டங்கள் போல் கொதித்து வந்து கொலை புரிகின்ற அக் கல்லுருண்டைகள் இன்ன இடத்தில் நின்று இன்னவாறு வருகின்றன என்று யாதும் தெரியாமல் எதிரிகள் திகில்கொண்டு அருகெங்கும் நெருங்காமல் அயலகன்று ஒதுங்கி அயர்ந்து நின்றார். அக் கல்லுகளின் வேலையைச் சேனபதி கருதி நோக்கினன். "வெடியிடு

குண்டுகளினும் கடிது பாய்ந்து கொடிது கொல்லுகின்றனவே! இது என்னே!" என்று குலைந்து திகைத்தான். "காயமும் கண்டிலம்; கையும் காண்கிலம்; தீய கல்லுண்டைகள் சீறி வருகின்றன; வாயிலும் கண்ணிலும் வந்து பாய்கின்றன; படைகள் பாழாய் மாய்கின்றன; மாயவெம்போர்!" என மயங்கி நின்றனன்.

வேல் வாள் வல்லயம் முதலிய பல்வகை ஆயுதங்களினும் ஒவ்வொன்றில் தனியே கைதேர்ந்த வீரர்கள் பலர் இப் பாஞ்சாலங்குறிச்சி ஆதீனத்தில் பதிவா யிருந்தனர். அவருள் வில் வீரர் இருநூறு பேர் இசை பெற்று நின்றனர். மயிரிழையும் பிசகாமல் எத் துணைச் சிறிய இலக்கையும் குறி தவறாமல் ஒரே தொடையில் அடிக்கவல்ல நல்ல வில்லாளிகளான அந்த இருநூறு பேர்களையும் இவ் வல்லாளர் இனிது பேணி வந்தார். அக் குறிகாரர் 200 பேர்களுள் அன்று அங்கு ஐம்பத்தைந்து பேர்களே அடைந்து நின்றார். விற்கள் பிடித்துக், கற்கள் கொண்டு மதிள் மறைவில் நின்று வெய்தாக எய்து ஆங்கு அவர் செய்த வேலையே எதிர் ஏறி வந்த சேனைகளைச் சிதைத்து வீழ்த்திச் சேனை நாதனையும் அங்ஙனம் திகைக்கச் செய்தது.

அதனால் மானமும் சினமும் மண்டி மறுகி நின்ற அவன் அதன் பின்பு தெவ்வின் வெவ்வினைகளைச் செவ்விதின் ஓர்ந்து அவ்வழி ஒதுக்கி ஆன பாதுகாப்புடன் தெற்கிலும் மேற்கிலும் காலாட் படைகளையும், வடதிசையில் குதிரைப் படைகளையும் முதிர் வேகத்துடன் முறையே செலுத்தி உப தளபதிகளை நிரை நிரை யூக்கி நெட்டு நெட்டாக நெடுஞ் சமர் புரிந்தான்.

கண்ணோடாது புரிந்த அக் கடும் போரில் கருந் தலைகளும் வெண் தலைகளும் கலந்து துள்ளின. வாள் வேல் முதலிய வன் படைகளால் இம் மன்னன் படை வீரர்கள் மண்டி யேறிக் கண்ட கண்ட இடங்களி லெல்லாம் கொதித்துப் பாய்ந்து கைத்திறங்கொண்டு கடுத்து வெட்டினர். தோள்களும் தாள்களும் தலைகளும் எங்கணும் துண்டங்க ளாகி முண்டங்கள் உருண்டன. அவரது சுடு வெடிகள் இடை யறாது குண்டுகள்

பொழிந்தமையால் இவர்கள் படுகளம் பட்டுப் பதைத்து மாண்டனர். இரு திறத்திலும் அடு கொலைகள் யாண்டும் அடர்ந்து நீண்டன. கரு மருந்தின் நாற்றமும் கரும்புகை வீக்கமும் எங்கும் கலந்து மண்டின. கவந்தங்கள் மூண்டின. நிணங்கள் நிவந்தன. பிணங்கள் குவிந்தன. இடங்கள் தோறும் இரத்த வெள்ளங்கள் பெருகின. குடல்களும் தசைகளும் உதிர நீரோடு கலந்து குழை சேறுயின. வேல் இழந்தும், வாள் இழந்தும், கால் இழந்தும், கை இழந்தும், மெய்யெல்லாம் சுட்ட குண்டுகள் பட்டு ஊடுருவிப் போகக் குருதி நீர் சோரப் பொருதிறம் குன்றிப் போர் வேட்கையோடு நீர் வேட்கை நீடப் பாஞ்சை வீரர் பலர் பரிந்து மாண்டார்.

தோள்கள் ஒழிந்தும், தாள்கள் அழிந்தும், மார்பு துணிந்தும், கண்கள் கழிந்தும், காதுகள் அறுந்தும், மூளைகள் சிதறியும், முகங்கள் சிதைந்தும், தொப்பிகள் தொலைந்தும், சட்டைகள் கிழிந்தும், வெடிகள் இழந்தும், குடல்கள் சரிந்தும் படியில் உருண்டு பகைப் படைஞர் பலர் பதைத்து மாய்ந்தார்.

மூண்டு முன்னேறி முனைந்து பொருது இருதிறப் படைகளும் இங்ஙனம் மாண்டு விழவும், மீண்டும் வீரர்கள் மிடைந்து மேலேறினர். அவுல்தார், சுபேதார், ஜமேதார் முதலாக ஆண்டுப் படைத் தலைவர்களாய் நின்றவ ரெல்லாரும் படைகளைச் செலுத்தித் தொடுத்து மேல் வரவும் ஈண்டு நின்ற குறி காரர்கள் எல்லாரும் கொதித்து முன் னேறினர். அங்ஙனம் போரில் மூண்டு நேரில் ஏறிய வீரர்களுள் சிலருடைய ஊரும் பேரும் சீரும் இங்குக் கூற நேர்கின்றன.

ஆதனூர் இரசின்னு நாயக்கர், ஆவுடையாபுரம் சென்னவ நாயக்கர், எல்லை நாயக்கன்பட்டி மல்லைய நாயக்கர், கட்டாலங்குளம் காமய நாயக்கர், புதூர் வெள்ளைய நாயக்கர், முள்ளுப் பட்டி முத்தைய நாயக்கர், மங்கலம் ரணசிங்கு நாயக்கர், முடிமன் வீரண நாயக்கர், குதிரைக்குளம் பொம்மு நாயக்கர், சில்லாங்குளம் செல்லைய நாயக்கர், கொல்லங்கிணறு நாகண

நாயக்கர், பரிவில்லிகோட்டைக் கருத்தமுத்து நாயக்கர், சிங்கிலிபட்டிச் சின்னைய நாயக்கர்; சாமிநத்தம் சாத்தாவு நாயக்கர், மீனாட்சிபட்டி வீரமல்லுநாயக்கர், கோட்டூர்க் கூளைய நாயக்கர், ஒட்டநத்தம் நபாவு நாயக்கர், மதாருமல்லு நாயக்கர், குலையநல்லூர் சின்னவீரலக்க நாயக்கர் என்னும் இன்ன போர் வீரர்கள் எல்லாரும் முன்னேறி முனைந்து யாண்டும் நெருங்கி வந்த அப் படைகளுடன் நேர்ந்து பொருதார். கடும்போர் மூண்டது.

குதிரைகளைக் கடாவி வேல்களை ஓச்சி அவர் வெகுண்டு வாவி வருங்கால் இவர் புலி ஏறுகள் போல் பதுங்கித் தாவிப் பாய்ந்து வெட்டினார். பரிகளில் வந்தவர் தலைகள் பல படியி லுருண்டன. புரவிகளும் சில நிலைகுலைந்து புரண்டன. குடல் சரிந்தும், உடல் சிதைந்தும், கால் இழந்தும், வால் இழந்தும், காதொழிந்தும் கண் அழிந்தும் குதிரைகள் கலங்கி வீழ்ந்தன.

கடு வேகத்துடன் அப் படை வீரர் காய்ந்து செய்த போரி னால் இப் படையுள்ளும் பலர் மாய்ந்து போயினார். மேலும் மேலும் குதிரைப் படைகள் அங்கிருந்து கொதித்து வந்தன. வரவே இம் மன்னன் படையுள் மதிப்புற் றிருந்த குதிரை வீரர் கள் கதித் தெழுந்தார். சிவத்தய்யா, ஆதிராமு, நபாவு என்னும் இம் மூவரும் யாவரும் வியப்பப் பரிகளி லேறி அரியேறுகள் போல் அமரில் ஏறினார். வலசாரி இடசாரியாகச் சமர்க்கள மெங்கும் தாவி வெட்டி முதிர் வேகத்துடன் மூண்டு பொருதார். அன்று புரிந்த குதிரைப் போரில் சிவத்தய்யா ஆற்றிய அட லாண்மை மிகவும் மிடலுற்று நின்றது. அவர் ஏறியிருந்த குதிரைக்குப் பாலராமு என்று பெயர். கடுவேக முடையது. அதன்மேல் அடுதிறலுடைய அக் குலவீரன் அமர்ந்து கடிது வாவி வடிவாள் ஓச்சி வந்தமையால் படு கொலைகள் பல விழுந் தன. கால் இடுக்கிலும் கைக்குசை அசைப்பிலும் கை வாள் எடுப்பிலும் தன்மேல் இருந்தவனுடைய மன நிலை முழுவதையும் தெரிந்து வினை நிலையில் வெற்றி யுறும்படி சூறைக் காற்றென அது சுற்றித் திரிந்தது. "காற்றினை மருங்கிற் கட்டிக் கால் வகுத்து உயிருங் கூட்டிக், கூற்றினை ஏற்றி யன்ன குலப்பரி"

என்ன அக் குதிரையும் வீரனும் அன்று தோற்றி நின்றார். அதன் வேக நிலையையும், மேலுள்ளவன் வாள் வீசி வரும் சாகசத்தை யும், அதனால் தன் படைவீரர் பலர் சாக நேர்ந்ததையும் கண்டு சேனைத் தலைவன் சினந்து சீறிக் குதிரைப் பட்டாளங்களை ஒருங்கே திரட்டி ஊக்கி விடுத்தான். அப் படை வந்து வளையவே இப் படையுள்ளும் வீரர் பலர் கடுத்து அடர்ந்து தொடுத்து அமர் புரிந்தார். இரு பெரும் படைகளும் படு கொலைகள் கண்டன.

## காலன் மாண்டது

கண்ணோடாது இவ்வாறு கடும் போர் புரிந்து நிற்குங்கால் மண்ணோடு மாறுடிய மல்லர்களால் வடக்குக் கோட்டை மதிள் ஒரு நெட்டு உடைக்கப் பட்டது. படவே தளகர்த்தர்க ளெல் லாரும் பரிகளைச் செலுத்தி விரைந்து உள்ளே வந்தார். பதி புகுந்தார் என்றவுடன் இவ் அதிபதி வடி வாளுடன் அதி வேக மாக அடர்ந்து எதிர் நடந்தார். இவரைப் புடை சூழ்ந்து இருபத் தாறு வல்லையக் காரர்கள் தொடர்ந்து ஓடிவந்தார். அவர் வருமுன் கோட்டை வாசலுள் நிலையாக நின்றிருந்த வெள்ளையத் தேவன் என்பவன் தன் கை வேலால் காலன் துரையைக் கடுத் துக் குத்தினன். அக் குத்து அவனுடைய மார்பில் கடிது பாய்ந்து மறுபுறம் போந்தது. நெடும் பரிமேல் கடுங் கோபத் தோடு வந்த அக் காலன் தன் மார்பில் குத்து விழவும் எதிரியைக் கொதித்து வெட்டினன். அத்துடன் ஒரு குண்டும் வந்து கொடிதாய்ப் பட்டது. படவே வெள்ளையத் தேவன் அந்த இடத்திலேயே பட்டு விழுந்தான். அந்த வெள்ளை வீரனும் புரவியி லிருந்து உருண்டு உடனே இறந்தான். அவனோடு உடன் வந்த உப தளகர்த்தர்கள் ஏழு பேர் மீதும் இருபத்து நான்கு வல்லையங்கள் ஏகமாய்ப் பாய்ந்தன. பாயவே அனைவரும் ஒருங்கே கோட்டை வாசலில் மாண்டு விழுந்தார். குத்தித் தடாரித்த வேல்களைக் குலுக்கி யெடுத்து மேல் தொடுத்து நீட்டி இம் மன்னன் படை வீரர்கள் கொக்கரித்துக் குலவை யிட்டுக் கெக்கலி கொட்டிக் கெலித்து ஆர்த்தார். உள்ளேறி வந்த வெள்ளைத் துரைகள் துள்ளி விழுந்து துடித்து இறந்த வுடனே மற்றுள்ள படைக ளெல்லாம் உடைந்து மறுகி ஓடின. சேனா

பதியும் பிற்கட்டும் பரிகளி லேறி ஒருவரும் அறியா வகை பறிய லானார். பாசறையில் பண்டங்கள் பல படிந்து கிடந்தன. போராட மூண்டு வந்தவர் மாறுகி மீண்டு ஓடியது இகழ்ந்து சிரிக்கும் வகையில் நீண்ட வசையாய் நிலவி நின்றது. ஈண்டு எதிர்ந்து பொருத வீரர் பலர் மாண்டு படினும் இறுதியில் கிடைத்த வெற்றி எல்லார்க்கும் உறுதி தந்து உவகை புரிந்தது.

வெள்ளையத் தேவன் விளிந்தது.

இவன் உள்ளத் துணிவும் ஊக்கமும் உடையவன். நல்ல போர் வீரன். மறவர் மரபினன்; கொண்டையங் கோட்டையார் என்னும் பிரிவைச் சேர்ந்தவன். ஜமீன்தாரிடம் பேரன்புடைய வன். அவருடைய குறிப்பறிந்து காரியங்களை எவ்வழியும் செவ் வையாச் செய்து வந்தான் ஆதலால் இவன் மேல் அவர் மிகுந்த பிரியமும் மதிப்பும் வைத்திருந்தார். தகுந்த ஆதரவோடு நிலமும் பொருளும் உதவி இவனை நன்கு பேணி வந்தார். வெள்ளை என்றே செல்லமா இவனை அவர் அழைத்து வருவது வழக்கம். கும்பினியாருடைய பகை மூண்ட பின்பு மன்னன் ஒருநாள் மனம் கவன்றிருந்ததை இவன் அறிந்தான்; எதிரே வந்தான்; வணங்கி நின்றான்: "மகாராஜா! இந்த வெள்ளையன் ஒருவன் இங்கே இருக்கும்போது அந்த வெள்ளையர் வந்து என்ன செய்ய முடியும்? சமுகம் யாதும் கவலை கொள்ள வேண்டாம்; பிள்ளை யவர்கள் செய்த பிழையால் பெரும்பகை மூண்டுள்ளது; வரு வது வரட்டும்; உள்ளம் கவலாமல் உவந்திருங்கள்" என்று உறுதியோடு ஊக்கி மொழிந்தான். இவனுடைய உரைகளைக் கேட்டதும் துரை பெரு மகிழ்ச்சி அடைந்தார். இன்னவாறு பல வகையிலும் உரிமையோடு இவன் உதவி புரிந்து வந்தான். பாஞ்சைப் பதியும் இவன் மேல் வாஞ்சை மீதூர்ந்திருந்தார்.

அன்று மூண்ட போரில் இவன் புரிந்த ஆண்டகைமை அதிசயம் உடையது; கும்பினிப் படைகள் கோட்டையை வளைந்து கொண்டவுடனே இவன் உள்ளந் துணிந்து ஊக்கி எழுந் தான். கச்சை வரிந்து கட்டி உடைவாள் பூட்டிக் கையில் கூரிய

வேல் ஒன்று தாங்கி வடக்குக் கோட்டை வாசலில் வந்து வீரிய மாய் நின்ருன். நான்கு புறங்களிலும் போராட்டங்கள் பொங்கி நடந்தன. பீரங்கிக் குண்டுகளும் வெடிகளின் சூடுகளும் கோட்டை மதிலை வந்து தாக்கின. இவன் யாதும் அஞ்சாமல் வடதிசை வாசலின் வலது புறமாய் உள்ளே ஒதுங்கி நின்ருன். எதிரிகள் யாரும் உள்ளே ஏறி வராதபடி அதிக எச்சரிக்கை யாய்ப் பாதுகாத்து இவன் ஊக்கி நின்றது உக்கிர வீரமாய் ஓங்கி விளங்கியது. பிற்பகல் ௩ மணிக்குக் கோட்டையின் ஒரு நெட்டு உடையவே படைத் தலைவர்கள் பரிகளைக் கடாவி விரைந்து புகுந்தார். காலன் துரை முன்னும் அவனைப் பின் தொடர்ந்து டக்ளஸ் (Douglas முதலிய வெள்ளைத் துரைகளும் வீறு கொண்டு சீறி உள்ளே ஏறி வந்தனர்.

முன்னே மூண்டு மூர்க்கமாய்ப் புகுந்த அந்தக் காலனைக் காலத்தை எதிர்நோக்கிக் கடுமையாய் நின்ற இந்த வெள்ளையத் தேவன் வீறுேடு பாய்ந்து வேலால் குத்தினன். உயர்ந்த குதிரை மேல் ஊக்கி வந்த அவனது மார்பில் இவனது வேல் வேகமாய்ப் பாய்ந்தது; பாயவே அவன் கூர்மையான நெடிய வாளால் இவனை ஓங்கி வெட்டினன். இவன் தலை துள்ளி விழுந்தது; அந்த வெள்ளைத் தலைவனும் குதிரையிலிருந்து புரண்டு கீழே வீழ்ந்து செத்தான். இரு வீரரும் ஒருங்கே மாண்டு மருங்கே மடிந்தனர்.

"காலன் துரையவன் அங்கே பட்டான்;
காவல்காரன் மகன் இங்கே பட்டான்."

என இந் நாட்டில் வழங்கி வருகிற நாட்டுப் பாட்டு இந்த வீரர் இருவரும் அன்று பட்டு மாண்ட பாடுகளை நன்கு காட்டி யுள்ளது. அடுத்து வந்த வெள்ளைப் படைத் தலைவர்களை மன் னனைப் புடை சூழ்ந்து நின்ற வீரர்கள் பாய்ந்து குத்திக் கொன்று தொலைத்தார். வென்றிநிலை இவர்பால் விளங்கிநின்றது.

மன்னன்உடை வாள்ஏந்தி வருமுன்னே
அருகுநின்ற வயவேல் வீரர்
துன்னியிரு பதுபேர்முன் துள்ளினர்
வெள்ளையனும் காவல் வீரன்

முன்னோடி நீள்வேலால் குத்தினான்
அக்குத்தைக் காலன் வாங்கித்
தன்னொளிர்வாள் கடிதோங்கி வெட்டினான்
தலைதுள்ளிப் பறந்த தன்றே. (1)

வேல்குத்தை வாங்கியிந்த வெள்ளையனை
அந்தவெள்ளை வீரன் வெட்டி
மேல்கத்தி எடுக்குமுன்னே இருபதுவேல்
வல்லயங்கள் விரைந்து பாய்ந்து
கால்தத்திப் பரியோடு காலன்வீழ்ந்து
உயிர்துறந்தான் களித்து வீரர்
கோல்குத்திக் குலவையிட்டுக் குறித்ததுணைத்
தலைவரையும் கொன்று தீர்த்தார். (2)

வெள்ளையத்தே வன்எனும்பேர் வீரனுயர்
தலைவெளியே விரைந்து வீழ்ந்து
துள்ளுமுன்னே வெள்ளையர்தம் தலைவர்எழு
பேருயிர்கள் துடித்து வீழ்ந்தார்;
பிள்ளைமகன் நெல்லெடுத்த பிழையால்இப்
பெருங்கொலைகள் பிறந்த அந்தோ
எள்ளியதீ வினைஅணுவா யிருந்தாலும்
இடர்மலையாய் எழுமே அம்மா! (3)

கருங்காலன் முன்னாளில் செங்கால
னால்வீழ்ந்த கதைபோல் இன்று
பொருங்காலம் கருதியுயர் பரியேறிப்
படையுடனே பொங்கி வந்த
அருங்காலன் எனும்பெயர்கொள் வெண்காலன்
அழிந்தான்என்று ஆர்த்த ஓசை
இருங்கால எழுகடலின் பேரொலியாய்
எங்கணுமே எழுந்த தன்றே. (வீரபாண்டியம்)

எதிரிகள் அழிந்து பட்டுள்ள நிலைகளை இங்கே தெளிவா அறிந்து கொள்ளுகிறோம். மூண்டு முனைந்து முன் ஏறிய சேனைத் தலைவர்கள் இங்ஙனம் மாண்டு மடியவே உயிரோடு நின்ற படைகள் யாவும் மீண்டு ஓடநேர்ந்தன. ஈண்டு இசைகள் நீண்டு நின்றன.

வீறோடு திரண்டு வந்த வெள்ளையர்களை வென்று தொலைத்தோம் என்று இம் மன்னன் உள்ளம் உவந்திருந்தாலும் வெள்ளையத்தேவன் இறந்து போனதை நினைந்து நினைந்து வருந்தினன்.

எதிரிகள் இடை முறிந்து ஓடவே இப் படை வீரர்கள் எல்லாரும் "ஜெயம் ஜெயம்" என்று ஆரவாரஞ் செய்து வெற்றிக் களிப்புடன் வந்து ஆயுதங்களை யெல்லாம் தேவி கோவில் முன் வைத்துத் தெலுங்கு மொழியில் பதங்கள் பாடிப் பணிந்தெடுத்து மன்னர் மருங்கு மேவி ஒருங்கு சூழ்ந்து மகிழ்ந்து நின்றார். அவரது நிலை அதுபொழுது வீரச் செருக்கில் வீறுற்று நின்றது.

## போர் முடிந்தது.

காலை பத்து நாழிகைக்குப் போர் தொடங்கியது; மாலை 28 நாழிகையில் முடிவடைந்தது. செப்டம்பர்மாதம் ரு-ந் தெய்தி (5—9—1799) மாலை ருஇ-மணிக்குப் போர் மாறிப் புறங் காட்டிப் பேரல ருடன் நேரலர் பெயர்ந் தோடிப் பாளையங் கோட்டையை அடைந்து தாம் பாடழிந்ததையும், பட்ட பாட்டையும், பகை நிலையையும் நினைந்து நினைந்து பரிபவம் மீதூர்ந்து ஒரு வகையும் தெரியாமல் உளம் மிக மறுகி ஒடுங்கி யிருந்தார்.

## பொழு தடைந்தது.

எதிலார் ஏதும் இலராய் இடைந்து போகவே ஆதவனும் பாஞ்சையின் அடுபோ ராண்மையை வியந்து அகன்று போனன். பொழுதடையவும் கழுதடையும்படி கோட்டையின் அருகெங்கும் குவிந்து கிடந்த பிணங்களை யெல்லாம் நிணங்களோடு அள்ளி அகற்றி அயலே புதைத்து விடும்படி தோட்டிகளைக் கூட்டி இம் மன்னர் ஏவினர். அன்னவாறே பகடைகள் மூண்டு சென்று மாண்ட பிணங்களை மண்ணில் புதைத்து மீண்டு போயினர். இரவிடை நரிகளும் நாய்களும் படுகளம் எங்கும் நெடுக வுலாவின. வெள்ளையர் குருதிவீர மண்ணுக்குவிருந்தாயது.

பகல் முழுவதும் அடலோடு எதிர்ந்து கடும்போர் புரிந்த படைவீரர்க ளெல்லாரையும் ஆற்றிப் போற்றி இவ் அரசர் ஆதரித் தருளினர். அமரில் இறந்து பட்டவரை எண்ணி வருந்தினும் எய்திய வெற்றியை நினைந்து இவர் இன்புற் றிருந்தார்.

## இருபத்திரண்டாவது அதிகாரம்.

### தானுபதி தப்பி வந்தது.

தெவ்வர் அழிந்தனர் என்று எவ்வழியும் மகிழ்வாய் இங்கு இவ்வாறு இருக்கத் தானுபதியைப் பிடிப்பதற்காக அன்று பாளையங்கோட்டையி லிருந்து ஆற்றூருக்கு ஏவிய படைகள் சென்று அவ் வூரை அடைந்தன. அடையவே அவ் வூரவர் அஞ்சினர். அவர் யாரையும் யாதும் செய்யாமல் நேரே போய்த் தானுபதிப் பிள்ளை மாளிகையை நன்கு வளைந்து கொண்டனர்.

### குடும்பம் குலைந்தது.

படை வந்துள்ள நிலையை அறிந்ததும் உள்ளே யிருந்த பிள்ளை உள்ளங் கலங்கினர். வெடி வேல்க ளோடு கொடிதாய் வந்து படைகள் நிற்கின்ற நிலையைக் கண்டு அங்கிருந்த பெண்டு பிள்ளைக ளெல்லாரும் உடல் நடுங்கிக் குடல் கலங்கி ஒன்றும் பேசாமல் ஒடுங்கி நின்றனர். பிள்ளை மனைவி பெரிதும் பதறி வறிதே புலம்பினள்: "நெல்லு வேண்டாம் என்று சொன்னேனே! என் சொல்லைக் கேளாமல் போய் அள்ளி வந்தார்களே! இப்பொழுது கொல்லும்படி படை துள்ளி வந்துள்ளதே! கோட்டையில் இருந்தாலும் குணமா யிருக்குமே! இங்கே யார் துணையுள்ளார்? இணை யாரும் இல்லை என்று இருந்த என் குடி கெட்டதே! கொடிய கனவின் பயன் முடிய வந்ததே! விடியுமுன் என்ன முடியுமோ? நான் இனி என்ன செய்வேன்? அம்மா!" என்று விம்மிப் பிதற்றிக் கையைப் பிசைந்து கண்ணீர் சிந்திச் செய்வது ஒன்றும் தெரியாமல் சித்தம் பதைத்து முத்துவடிவு திகைத்து நின்றாள். செப்டம்பர் மாதம் ரு-ந்தெய்தி மாலை புகவும் வன்படை புகுந்தது ஆதலால் அங்கிருந்தவ ரெல்லாரும் துன் படைந்து துடித்துளைந்து என் படுமோ என ஏங்கி நின்றனர். அந்த நிலையில் வெளியே நின்ற படைவீரர்கள் வெடிகளை மேல் நீட்டி வெற்று வேட் டெழுப்பிப் புறத்தே நன்றாய் முற்றுகை

யிட்டு உள்ளே சிலர் ஊக்கிப் புகுந்தார். புகவே தானுபதிப் பிள்ளை மெள்ள நழுவிக் கள்ளமாகக் கொல்லை வாசல் வழியே குதித்து விழுந்து அடுத்திருந்த தோட்டத்துள் புகுந்து வைக் கோல் குவையுள் அயலறியாமல் ஒளிந்திருந்தார். சொற் போரில் வல்ல அவர் மல்லர் வரவும் ஒல்லை அகன்று நெற் போரில் மறைந்து அன்று நிலை குலைந் திருந்தது நெடிதும் இரங்கத் தக்கது. அவர் நிலை இங்ஙனமாக, அங்கு உள்ளே புகுந்த படைத்தலைவர், தானுபதிப் பிள்ளையை எதிரே காணமையால் இடங்கள் தோறும் குடைந்து தேடினர். யாண்டும் அகப்படா ததனால் அவர் அயர்ந்து வருந்தினர். பின்பு அவருடைய மனைவி மக்கள் ஒக்கல் முதலிய அனைவரையும் சிறைப்படுத்திக் கன்று காலிகள் முதலாக உள்ள பொருள்களை யெல்லாம் ஒருங்கே வாரிக்கொண்டு பெருங் களிப்புடன் வெற்றி முழக்கஞ் செய்து பாளையங்கோட்டையை நோக்கி அவர் விரைந்து போயினர்.

## தானுபதி தலை தப்பி எழுந்தது.

இரவு பத்து மணிக்குப் பிள்ளை மெல்ல எழுந்து பாஞ்சாலங் குறிச்சியை நோக்கி ஒல்லை வந்தார். ஓட்டமும் நடையுமாகப் பாட்டையை விட்டுக் குறுக்கு வழியே கூடிக் கடிது வந்த அவர் விடிய ஒரு நாழிகை யளவில் கோட்டையை அடைந்தார். விடிந்ததும் வந்து அரசைக் கண்டு நடந்ததை யுரைத்தார். பிள்ளை நிலையை நோக்கி இவர் உள்ளம் இரங்கினர். வெற்றி கிடைத்த தென்று வியந்து மகிழ்ந்திருந்த இவர் உற்றவருடைய துயரறிந்தவுடன் முற்றும் தோல்வி என உளம் மிக வருந்தி உளைந்து நொந்தார். கொண்ட மனைவியைக் கைவிட்டுக் கால் எழுந்து ஓடிவந்த அவரது கோலத்தை நோக்கி இவர் சிறிது நாணவும் செய்தார். "சொல்லில் வல்லவராய் நெல்லை அள்ளி நெடும்பகை விளைத்துத் தொல்லையை வளர்த்து நின்ற பிள்ளை இப்பொழுது எதிரிகளிடம் இல்லை யிழந்து விட்டு யாதும் இல் லாமல் இங்கே இழிந்து வந்துள்ளார்" என்று அங்குள்ளவர் சிலர் ஒருவரோடொருவர் எள்ளலாக மெல்ல மொழிந்து உள்ளூற அவரை இகழ்ந்து நின்றார். இக லொழிந்து வந்துள்ள

அவர் பகல் முழுதும் பரிந்திருந்தார். மாலை வந்த வுடன் அரசிடம் வந்து அலமந்து நின்றார். ஒரு வகையும் புரியாமல் பரிதாப நிலையில் மறுகியுள்ள அவரை இவர் உருகி நோக்கி உறுதி பல வுரைத்தார். "பகைவர் பற்றிப் போய்ப் பாளையங்கோட்டையில் சிறையில் வைத்திருக்கும் உமது மனைவி மக்கள் முதலிய உறவினரனைவரையும் நான் விரைவில் மீட்டித் தருகின்றேன்; நீர் யாதும் கவலாமல் அமர்ந்திரும்" என்று இவர் ஆறுதல் கூறினார். என்ன கூறினும் அவர் யாதும் ஆறாமல் இன்னல் மீக்கூர்ந்து மன்னரிடம் பல பல பன்னலானார். "எனது அருமை மனைவியைக் கொடியவர் கையில் கொடுத்து விட்டுத் தனியே நிற்பது எனக்குப் பெரிய அவமானமா யுள்ளது. உலகம் சிரிக்குமே! ஊரும் நாடும் கூடி நகைக்க நான் உயிர் வைத்திருப்பதை விட இறப்பது நல்லது. இந்த வீர அரசின் பார மந்திரியான எனது தாரத்தைப் பகைவரிடம் பறி கொடுத்திருந்தால் இந்த இடத்திற்குத்தான் என்ன மரியாதை யுண்டு? இப்படிச் சிறுமைப் பட நேர்ந்ததே! இப் பழியை இனி நான் எப்படி ஒழிப்பேன்?" என வெப்பமும் துக்கமும் உடையராய் அவர் வெய் துயிர்த்து நின்றார். யாதொரு அமைதியு மின்றி அவலம் மிக வுடையராய்க் கவலையுற்றுக் கடுந்துயரோடு நிற்கின்ற அவரை இவர் கனிந்து பார்த்தார்; பிள்ளையின் உள்ளம் தேற உறுதிகள் பல கூறினார். பன்னி உளைந்த அவரை நன்னயமா நோக்கி மன்னன் மொழிந்தது மதி நலம் தோய்ந்து வந்தது. "என்ன நீர் எல்லாம் படித்திருந்தும் இப்படி உள்ளங் கலங்கி உளைந்து படுகின்றீர்! மகா வீரனான இராமனுடைய அருமை மனைவியும் பகைவன் கையில் படவில்லையா? அதனால் அவர் புகழ் குன்றுவிட்டதா? பகை நிலையில் எல்லாத் துயர்களும் விளையும்; விளைவில் உளையாமல் ஆன வகையில் அடல் கொண்டு வெல்வதே மானமாகும்; வேளை வரட்டும்; பாளையங்கோட்டைக்குப் படைகளுடன் நேரே போய் நாம் மீட்டி வந்துவிடலாம்:

"கற்புடைச் சீதையைக் கௌவிச் சென்றஅப்
பொற்புய அரக்கனைப் பொன்ற மாட்டிஅவ்

விற்பனத் திருவினை விரைந்து மீட்டிய
அற்புதன் என்னநான் ஆக்கி ஈகின்றேன்"

என இங்ஙனம் ஆற்றித் தேற்றி அனுப்பி யருளினார். அவர் அலமந்து போய் அயலே அமர்ந் திருந்தார். அவருடைய மனக் கவலைகள் கொடிய அவலத் துயரங்களாய்ப் பெருகி நெடிது ஓங்கி நின்றன. நேர்ந்து நிற்கும் பகைநிலை நெஞ்சைக்கலக்கியது.

வெள்ளையர் எல்லாரும் தன் மீது குறிப்பாய்க் கோபம் கொண்டு மூண்டு நிற்றலை இப் பிள்ளை நன்கு உணர்ந்து கொண் டார் ஆதலால் உள்ளம் கலங்கி உபாயங்களை நாடி உளைந்து மறுகினார். வேற்றூரான ஆற்றூரில் தான் ஒதுங்கி யிருத்தலால் தன்னைத் தேடி மாற்றார் வரமாட்டார் என்று மனம் துணிந்திருந் தவர் நிகழ்ந்த நிலைகளை நினைந்து நினைந்து நெடுந் திகில் அடைந் தார். தன்னுடைய மனைவி மக்கள் பிடிபட்டு எதிரிகள் கையில் சிக்கியிருப்பது பெரிய மானக் கேடாய் அவர் உயிரை வாட்டி நின்றது. தன்னை அடியோடு தொலைக்க வேண்டுமென்றே மூண்டு வந்த கும்பினியார் குடிகேடு செய்ய நேர்ந்தார் என்று நெடிது வருந்தி நெஞ்சம் பதைத்து நெடுந்திகில் அடைந்தார்.

பாஞ்சை மேல் படை எடுத்து வந்த அந்தச் சேனைத் தலைவன் இந்தத் தானபதியைக் குறித்துச் செப்டம்பர் மாதம் எழாந் தேதி (7—9—1799) கும்பினி அதிபதிகளுக்கு எழுதி யுள்ள கடிதத்தில் அவனுடைய கோப தாபங்கள் தெளிவாய் வெளியாகியுள்ளன. அந்த நிருபத்தின் ஒருபகுதிஅயலேகாண்க.

"Soobramonea Pilly, the principal manager of the polegar a man of a very bad and intriguing character, at that time in Ahtoor. The guard however failed in getting possession of Soobramonea Pilly; but seized his son, wife, and several of his family, who have been sent to Pallamcottah."

(Signed) John Bannarman,

Camp At
Panjalamcourchy.

7th Sept. 1799.

" சுப்பிரமணிய பிள்ளை பாளையத்தின் தலைமையான தானாபதி; மிகவும் கெட்டவன்; கபட வஞ்சகமான சதியாலோசனைகளை யுடையவன்; அது பொழுது ஆற்றூரில் இருந்தான்; அவனைப் பிடித்து வரும்படி நான் அனுப்பியிருந்த படைகளுக்கு அகப்படாமல் தந்திரமாய் அவன் தப்பிவிட்டான்; ஆயினும் அவனுடைய மனைவி மகன் உறவினர் பலர் அகப்பட்டனர்; பிடிபட்டவர் அனைவரும் பாளையங்கோட்டைக்கு அனுப்பப் பட்டுள்ளனர்"

என மேலே கவர்னர் ஜெனரலுக்கு இங்ஙனம் அவன் எழுதி யிருக்கிறான். வெரி (Very) என்று கேட்டுக்கு அடை கொடுத்திருப்பது தானாபதியின் காட்டுக்கும் சேனாபதியின் பாட்டுக்கும் பயனாய் வந்தது. இப் பிள்ளைமேல் அவ் வெள்ளையன் கொண்டுள்ள வெறுப்பையும் சினப்பையும் இந்த எழுத்து வெளிப்படையா விளக்கி நிற்கிறது. அத்தோடு இவருடைய செயல்களையும் இயல்புகளையும் இதனால் ஓரளவு நாம் உணர்ந்து கொள்கிறோம். கபடயுத்திகளில் புத்தி கடுத்து வேலைசெய்துளது.

தங்களுடைய ஆட்சிக்கு இந் நாட்டில் நெடிய இடையூறாய்க் கொடிய கேடாய்ப் பிள்ளை நேர்ந்துள்ளான் என வெள்ளையர் ஓர்ந்து உள்ளம் கனன்று காலம் நோக்கியிருந்து இவ் வீர மன்னனோடு மூண்ட போர் மூலம்அவரை வேரறுக்க நீண்டார்.

எதிரிகளுடைய மன நிலைகளையும் வினை வலிகளையும் நேரே நன்கு தெரிய நேர்ந்தமையால் அபாய நிலையிலிருந்து தப்ப வேண்டும் என்று பிள்ளை உபாயங்களை நாடி விரைந்தார். இனிமேல் தாமதித்திருந்தால் கும்பினிப் படைகள் மேலும் மேலும் கொதித்து வந்து கொடிய் கொலைகளை விளைத்து விடும் என்று வெருவி நின்றமையால் இவ் வீரரை வெளியேற்றிக் கொண்டு போய் நேரே தலைமை அதிபதிகளைக் கண்டு நிலைமைகளைச் சமாதானம் செய்து விடலாம் என்று அவர் துணிந்து துடித்தார். அவருடைய வேண்டுகோளுக்கு இசையாமல் விவேகங்களைப் போதித்து அவரை இவர் விலக்கி விடுத்தார். விலகிப் போனாலும் ஒரு நிலையில் நில்லாமல் மருண்டு வெருண்டு மயங்கி யுளைந்தார்.

பதவி முறுக்காலும் செல்வச் செருக்காலும் யாண்டும் எப்பொழுதும் திமிராய் நீண்டு நிமிர்ந்து நின்றவர் ஈண்டு இப்பொழுது இரங்கி இனைந்து நொந்தது வினையின் விளைவாய் விரிந்து நின்றது. கரும நியமங்கள் மருமங்களா நிகழுகின்றன.

## தம்பியர் வந்தது.

முன்பு செந்திலம்பதிக்குச் சென்றிருந்த தம்பியர் இருவரும் அவ்வமையம் அங்கு வந்து சேர்ந்தார். முந்துற நடந்த அமர் நிலையைக் கேள்வியுற்று அவர் மூண்டு வந்தார் ஆதலால் இவ் ஆண்டகையைக் கண்டவுடன் ஆர்வ மீக்கூர்ந்து அழுது நின்றார். "உடன் பிறந்த துணைவராயிருந்தும் உற்ற சண்டையில் உடனிருந்து துணை செய்ய முடியாமல் ஊழ் வினை எங்களை இப்படி ஒதுக்கிக் கொண்டுபோய் விட்டதே! முனை முகத்தில் துணை புரியாமல் இன்று மனை முகத்தைக் கண்டு மகிழ வந்துள்ளோம்; நன்று! நன்று! எங்கள் உரிமையும் வீரமும்" என்று தங்க ஒண் பதுமைகள் போன்ற அத் தம்பியர் இருவரும் சிங்கக் குருளைகள் சேர்ந்து உறுமியது போல் சோர்ந்து புலம்பினர். அவருடைய உரைகளைக் கேட்டு அருகு நின்ற அனைவரும் மனம் மிக வருகினர். இவ் வீர மன்னர் அவ் இருவரையும் ஆரத் தழுவி அருகிருத்தி, "முருகநாதன் அருளால் எல்லாம் நமக்கு நலமாய் முடிந்தது; அப் பெருமானை நீங்கள் போய்த் தரிசித்து நின்ற பலன் முந்துற வந்து இங்கு வென்றியாய் விளைந்தது. யாதும் நீவிர் சிந்தை வருந்த வேண்டாம். செந்திலாண்டவன் திருவருளுள்ள வரையும் எந்த இடரும் இந்த இடத்தை அடையாது" என இனிது மொழிந்து கனியும் அன்புடன் தேற்றி இன்புற விடுத்தார். அவர் அந்தப்புரம் போய் அமைதியாயமர்ந்திருந்தார். இருந்தாலும் மூண்டு புகுந்த துயரங்கள் நெஞ்சில் நீண்டு நின்றன. வீர நிலையில் வீறுகொண்டிருந்த குடும்பம் வெய்ய கவலையில் ஆழ்ந்து வெய்துயிர்த்து நின்றது.

## மன்னன் மனந் துணிந்திருந்தது.

எதிரிகள் இயல்பையும் மேல் எதிர்வதையும் எதிர்நோக்கிப்



ஊமைத்துரை.

(1772—1801)

பல ஊர்களிலும் உள்ள தம் குலவீரர்கள் எல்லாரும் ஒரு வாரத்துள் ஒருங்கே வந்து சேரவேண்டும் என்று யாண்டும் ஓலைகள் போக்கி வேண்டிய காரியங்களை விரைந்து புரிந்து நீண்ட ஆலோசனைகளுடன் இவ் ஆண்டகை அமர்ந்திருந்தார்.

## பிள்ளை பிதற்றியது.

மறுநாள் விடியவும் தானாபதி மறுபடியும் வந்து இவரிடம் மறுகி நின்றார். பகைவருடைய படைகளை ஆற்றாரில் அவர் நேரே கண்டதிலிருந்து தம்முளத்தில் மிகவும் அச்சம் கொண்டிருந்தார் ஆதலால் இனி எந்த வகையிலும் சண்டைக்கு இடம் கொடுக்கலாகாதென்று திடமாக எண்ணி இத் திட வீரரது மன நிலையைக் குலைக்க விநயமாக விரகு சூழ்ந்து விரிவுரை பகர்ந்தார்: "முந்தா நாள் வந்து இங்கே மூண்ட சண்டையில் எதிரிகள் தோல்வியடைந்து மீண்டதை நினைந்து கும்பினியார் கடுங்கோபங் கொண்டு பெரும்படை திரட்டிக் கொடும்போர் புரிய வருவதாக எங்கும் நெடும் பேராகவுள்ளது. இனி ஒரு நிமிட நேரமும் நாம் இங்கே தாமதித்து இருக்கலாகாது. படைகள் மேலும் மேலும் வந்துகொண்டிருக்கின்றன. வெள்ளையர் சேனைகள் வெள்ளமாய் வருதலால் சிறு படைகளையுடைய நாம் அவற்றோடு எதிர்த்து வெல்ல முடியாது. படை வருமுன் இடை தெரிந்து வகையோடு வழிசெய்து கொள்ளாவிடின் அழிவு வந்துவிடும். கும்பினி அதிபதிகளிடம் நாம் விரைந்து சென்று, இங்கு நடந்த போர் நிலையையும், எனது மனைவி முதலானவர்களைக் கவர்ந்து கொண்டு போய் எனக்குச் செய்துள்ள அவமானத்தையும், இடையிலுள்ள அதிகாரிகள் இங்குள்ள பொறாமையாளர்களுடைய கோளுரைகளைக் கேட்டுக் கொடுமையாய் நின்று நம் இடத்துக்கு இடர் செய்து வருவதையும், எய்திய துயர்களையும் எடுத்துச் சொல்லிக் கும்பினியாருக்கு நம்பகமாய் நின்று இதஞ் செய்துகொண்டு நாம் இனிதாக மீண்டுவரலாம். அங்குப் போய்வந்தால் இங்குஇருக்கின்றசின்ன அதிகாரிகளெல்லாரும் பேசாது அடங்கிவிடுவார். மேலுள்ள தலைமை அதிகாரிகள் நம்மிடத்தில் மிகவும் அன்பாகவுள்ளனர்.

முன்னம் இராமநாதபுரத்தில் நடந்த சண்டை வழக்கில் ஜாக்சனைத் தண்டித்து அவர்களிடம் சிறந்த வெகுமதிகளையும் மரியாதைகளையும் அடைந்து ஜெயம் பெற்று வந்திருக்கிறோம். என் பேச்சைக் கேட்டால் அவர்கள் பெரிதும் மகிழ்ந்து பிழையெல்லாம் பொறுத்து உரிமை பாராட்டி உடனே உதவி செய்து விடுவர். முன் அனுபவத்தை நேரில் கண்டிருக்கின்றீர்கள்! இன்னமும் அவ்வாறே எய்தி மீளலாம். சமூகம் யாதொரு தடையும் சொல்லாமல் இப்பொழுதே என் சொற்படி எழுந்தருளவேண்டும்'' என்று இப்படி நயபயங்களை நன்ருக இணைத்துக்காட்டி இவ் வென்றி வீரரிடம் அவர் மன்ருடி வேண்டினர்.

நகைத்து நவின்றது.

பகைத்துயர் பெருகி விடும் என்று பரிந்து வருந்திப் பயங் காட்டி மொழிந்த அவருடைய சொற்களைக் கேட்டு இவர் பற்கள் வெளியே தெரியும்படி மிகவும் சிரித்தார். "என்ன சுப்பிரமணிய பிள்ளை! உமக்குப் பைத்தியமா? முன்னம் போனது வேறே; இதுபொழுது மூண்டிருக்கும் நிலை வேறு. படைகள் அங்கிருந்து திரண்டு வந்து கொடும்போர் புரிந்துள்ளன. இருவகையிலும் கொலைகள் பல விழுந்துள்ளன. கொடும் பகை மூண்டு கொதித்து நிற்கின்றது. இன்ன வகையில் முடிவாகும் என்று என்ன வகையும் யாதும் தெரிந்திலது. இந்த நிலையில் எதிரிகளிடம் போய் நேரே சேரவேண்டும் என்று நீர் கூறுவது மிகவும் மடமை யாகும். மனைவியைப் பிரிந்ததால் மதிமயங்கி மனம் பதறி இப்படிக் கொச்சை வார்த்தைகளைக் கூசாது பேசத் துணிந்தீர்! இனி ஒன்றும் பேசாதிரும்'' என்று இவர் பேச்சை அடக்கினர். இவ்வாறு அடக்கியும் அவர் அடங்காமல், "மகாராஜா! காலம் தெரிந்து, இடம் கண்டு, பருவம் தவருமல் காரியத்தை முடித்துக் கொள்வது நல்லது; எப்பொழுதும் ஒரே படியாய் நிமிர்ந்து நிற்பது நன்றன்று. இடமறிந்து இதமாக நடந்துகொள்ள வேண்டும். பகைவர் படை வலியால் மிகவும் மிஞ்சி நிற்பராயின் அவ்வமையம் கெஞ்சி நின்று அடங்கிக் கொள்வதும், அயர்ந்து நின்றபொழுது மேலேறி ஆர்த்து வெல்

வதும் அரச தருமமே. அதனுல் யாதும் குறைவு நேராது. பகைவரையும் தனக்கு இனியராக அணைத்து ஒழுகும் பண்புடைய அரசன் மிகவும் உயர்ந்தவனுவான்; உலக முழுவதும் அவனுக்கு ஒருங்கே வசமாம் என்பது பெரியோர்கள் கருத்து.

"பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற் றுலகு." (குறள் 874)

என்றது பொய்யா மொழி யன்ருே? ஐயனே! நான் மெய்யாகச் சொல்லுகிறேன்; பகைவரிடம் வலியப்போய்ப் பணிவு காட்டிக் கொள்வது மிகை யாகாது; தகையே யாம். காலம் தாழ்க்காமல் கருதிய கருமங்களை உறுதி பெறச் செய்து கொள்வது உய்தி யாளர்க்கு உரிமை யானது. வீரியம் பாராமல் காரியம் காணுங்கள். "மெய் வருத்தம் பாரார்; பசி நோக்கார்; கண் துஞ்சார்; எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்; செவ்வி, அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்; கருமமே கண்ணுயினுர்" என்னும் உறுதி யுரையின்படி சமூகம் இப்பொழுது அருமை பெருமைகளைப் பாராட்டாமல் விரைந்து எழுந்தருளிப் பகையை உறவாக்கி வந்து பதி ஆள வேண்டும்; பாராளும் மன்னர் நீதி இது" என்று இவ்வாறு அவர் பாரித்துரைத்துப் பரிந்து நின்ருர்.

மன்னன் மறுத்து மதியுறுத்தியது.

அவரை இவர் எள்ளி நோக்கி, திருவள்ளுவருடைய அரிய குறளின் உள்ளுரையை நீர் உள்ளுற வுணராது இங்கே உரையாட நேர்ந்தீர்! பகைத்திறந் தெரியாமல் நீர் வெளிப்படச் சொன்னது நகைக் கிடமாயது. தனது நீதி முறையால் பகைவரும் சாதுவாய் அடங்கித் தன்பால் அன்பு கொண்டு நண்பாய் அமைதியுறும்படி ஒரு அரசன் ஒழுகி வரவேண்டும் என்பது அக்குறளின் உட்கிடை யாதலால் அவ் அருமைத் திருக்குறளை இச் சமையம் இங்கே உரிமைப் படுத்திச் சிறுமைப் படுத்தலாகாது. ஒழுகும் பண்பு என்னும் அப் பத நயங்களை மதி நலங் கொண்டு பார்த்தால் அதி நயங்கள் தோன்றும். சொல்லின் பொருள் எல்லையை நிலை தெரிந்து சொல்ல வேண்டும். நெல்லைக் கொள்ளை செய்து கொடும்பகை மூட்டி வெள்ளையர் கோபத்தை

ஒள் எரியாக வளர்த்து ஊர் எரிய ஓங்கவிட்டு இப்பொழுது உள்ளே போய் உறவு கொள்ளச் சொல்வது நல்ல மதியா? பிள்ளை மதியா? வெள்ளை மதியா? இது என்ன மதி? நீரே எண்ணிப்பாரும். பழம்பகை தணிந்து கிழமை அமைந்து உதவி புரிந்து உறவாய் நின்றவரைப் பெரும் பகையாக்கிப் பிணக்களப் படுத்தி இன்னும் போய் இணக்கி வர எண்ணுவது எனக்கே ஆச்சரியமாக வுள்ளது. இகலிடம் ஒழுகும் இயல்பு தெரிந்திலீர்! எதிரிகளுக்கு எளிமை காட்டலாமா? காட்டின் கதி என்னும்?

* "நோவற்க நொந்தது அறியார்க்கு; மேவற்க
மென்மை பகைவர் அகத்து." (877)

என்னும் உண்மையை யுணராமல் உறுதி உரைக்கின்றீரே! இப்பொழுது வெளியேறிப் போனால் உலகம் என்ன சொல்லும்? கும்பினியாரின் குண்டுகளுக்கு ஆற்றமாட்டாமல் கட்ட பொம்மு கோட்டையை விட்டு ஓடி விட்டான் என்று யாரும் தூற்ற மாட்டாரா? வலிய புலியே ஆயினும் தான் இருந்த குகையை விட்டு அயல் அகன்று விடின் மெலிய எலிகளும் அதில் எளிதாக வந்து குடி புகுந்து கும்மாளங் கொண்டு குலாவி உலாவுமே! படைகளோடு இடை தெரிந்து நிற்கும் பகைவர் நாம் இடம் பெயர்ந்தால் உடனே ஊக்கி வந்து பதியை உரிமையாக்கிக் கொள்ளுவரே! நீர் ஒன்றையும் ஊன்றி யோசியாமல் உளறுகின்றீர்! பகையை வணங்க எண்ணுவது பழி நிலையாகும். வானம் வருவதாயினும் மானம் அழிந்து நாம் வாழ மாட்டோம். ஆனவரையும் போராற்றி அமர்க்களத்தில் மாண்டாலும் மாள்வனே அன்றி ஈனமாகப் போய் எவரிடத்தும் இச்சகம் பேசி இழிந்து நில்லேன். பிறந்த அன்றே இறந்து படுதலையும் உடனடைந்து வந்துள்ளோம். அவ் இறப்பைச் சிறப்பான நிலையில் பயன் படுத்திக் கொள்ளுவோரே உலகம்

* உனக்கு எய்தியுள்ள துயர் நிலையை அறிந்து இரங்கி உதவி செய்யாதவரிடத்தே உன் நொம்பலத்தைச் சொல்லாதே; பகைவரிடம் மெலிவு தோன்ற எளிமை காட்டி நில்லாதே என்பதாம். எதிரிக்கு ஏற்றம் கொடாமல் யாண்டும் ஆற்றலோடு நடந்து கொள்ளவேண்டும்; அவ்வாறு நடப்பதே எவ்வழியும் இனிய வாழ்வாம் என்பது குறிப்பு.

உள்ளவரையும் இறவாதவராய் உயர்ந்து நிற்கின்றார். நோய்க்கும் பேய்க்கும் நாய்க்கும் நரிக்கும் இரையாய் நிற்கின்ற இவ்வுடம்பைக் காலம் வருமுன்னே ஒருவன் புகழுக்கு இரையாக்கின் அவன் என்றும் பொன்றாதவனாய் நின்று திகழ்கின்றான். எண்ணில் காலம் இருந்தாலும் இம் மண்ணில் இறவாது நின்றவர் யார்? விண்ணி லுள்ளவரும் விளிந்து படுகின்றாரே! இன்றைக்கு இறந்தால் நாளைக்கு இரண்டு நாள். இந்த நிலையற்ற உடம்பால் நிலைபெற்ற கீர்த்தியைப் பெறுகின்றவனே இவ்வுலகத்தில் பிறந்த பயனைப் பெற்ற பெரும் பாக்கியவா னாகின்றான். போரில் இறந்தவர்கள் வீர சுவர்க்கம் அடைவர் என்பதை நீர் * நூல்களில் அறிந்திருப்பீர்! பல காலமாக அருந்தவம் புரிந்தும் அடைதற்கு அரிய பெரும்பதத்தை ஒருநாள் நேரலருடன் நேரெதிர்ந்து பொருந்தகவால் அடைந்து கொள்ளலாம் என்றால் அருந்திறலாளர் அப் பெருந்திருவை மறந்தும் கைவிடுவரா? வீரர்க்குப் போரினும் சீரிய இனிய பேரின்பம் யாது உளது?

கட்டபொம்மு என்று அட்ட திசைகளும் புகழோங்க நின்ற நான் இன்று போர் வந்ததென்று ஊர் விட்டுப் போனால் என் பேர் கெட்டுப் போகும். ஒன்னலர் இன்னம் என்ன படைகளோடு வந்தாலும் சின்னபின்னங்கள் செய்து நான் ஜெயம் கொண்டு விடுவேன். நீர் பயங்கொள்ளா திரும்" என்று இவர் நயம்பட வுரைத்தார். அவர் நாவடங்கி நின்றார்.

### பின்னும் வந்து பேதித்தது.

இவர் யாதும் இடம் கொடாமல் மோதிவிடவே அவர் தனியே போய்த் தவித்திருந்தார். அவரது மனம் ஒரு நிலையில் இல்லை. பாவம்! மனைவியைப் பிரிந்ததாலும் மானத்தாலும் புழுங்கி மத்தேறி உடைதயிர் போல் அவர் மறுகி யுழன்றார். பின்பு உறுதியோடு துணிந்து மாலை நாலு மணிக்கு மீண்டும் இவ் ஆண்டகை யிடம் வந்து, "அபாயம்" என்று அபயமிட்டுத் தனியாக அழைத்து வைத்து, "மகாராஜா! இப்பொழுது நான் சொல்வதைக் கருணை செய்து கவனிக்க வேண்டும். தோல்வி

* அநுபவத்தில் அறியமாட்டீர் என்பது கருத்து.

யடைந்து போன சேனைத் தலைவர் சாலவும் கொதித்துப் பெரிய படைகளுடன் வந்து நாளையே இங்குக் கொடிய போர் புரிந்து அடியோடு தொலைக்க முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது. நிலைமையை இனி மீற விடலாகாது. இந்த ஆதீனத்திற்கு ஏதேனும் இடையூறு நேர்ந்தால் உலகம் என்னையே பழிக்கும்; மந்திரி சொல்வது சில சமையங்களில் முந்துற இனிதா யிராதாயினும் முடிவிலுறும் பயனை ஓர்ந்து அரசர் அதனை அங்கீகரிக்க வேண்டும். நான் சொல்வதைச் சிந்தையுட் கொண்டு இந்த முறை எழுந்தருளுங்கள்; நிந்தை அகன்று போம். மாற்றுரிடம் மனைவியை இழந்துவிட்டுப் பழியுடன் பட்டுப் பதைத்து நிற்கின்ற என்னோடு வழியுடன் பட்டுச் சிறிது வந்தருளுங்கள். நானே கும்பினியாருடன் நேரே பேசி இங்கு விளைந்துள்ள புகைகளையும் கலகங்களையும் உடனே ஒழித்து விடுகின்றேன். இடரொழிந்து எல்லாரும் இனிது வாழலாம்; இல்லையேல் நாளையே போர் மூண்டு விடும்; யாவரும் நாசமுற நேரும். அதனை நான் கண்டு நில்லேன்; இன்றே பொன்றி விடுவேன்" என்றார்.

அவர் மறுகி மன்றாடும் நிலையை நோக்கி இவர் உளம் மிக வுருகி உளையலானார். "அவர் சொல்லிய படியே சென்றால் மேலுள்ள அதிகாரிகள் ஒருவேளை இதமாய் நின்று பகை களைந்து உதவி செய்யவும் கூடும்; அதனால் போராடும் தொல்லை ஒழிந்து ஊரை யடைந்து சுகமா யிருக்கலாம்" என்று எளிதாக எண்ணினார். முன்னம் கும்பினியாரிடம் போய், பரிசு முதலியன பெற்று மேன்மையாய் வந்த சுவையும் உள்ளே ஊக்கி நின்றது. அந் நிலையில் வினை விளைவு மூண்டதால் இவருடைய மனநிலை திரிந்தது. பிள்ளையுடன் பிரயாணம் போக உள்ளம் துணிந்து இவர் உறுதிகொண்டு நின்றார். கலைப்பார் கலைத்தால் கல்லும் கரையும் என்ற பழமொழி இவர் நிலையில் அன்று தெளிவாய் நின்றது. அன்று இரவே பிரயாணத்திற்கு ஆயத்தமாயினர். வெளியே போகவேண்டிய யாவும் விரைந்து நிறைந்தன.

### தாய் தடுத்தது.

தம் செலவு நிலையைத் தமது அருமைத் தாயிடம் போய்

விநயமா யுரைத்து இவர் விழைந்து விடை கேட்டார். அவ்வுரையைக் கேட்டதும் அக் குலவரசி உளம்மிக மறுகி இக் குலமகனைக் குளிர நோக்கி, "என் அருமைத் திருமகனே! இது பொழுது அயல் அகலுதல் மிகவும் தவறு. பொல்லாத பகை மூண்டு போர் நடந்துள்ள இச் சமையம் நீ ஊரைவிட்டுப் போனால் இடையே எதிரிகள் வளைந்து இடர் செய்ய நேர்வர். உறவாயிருந்த வெள்ளைத் துரைக ளெல்லாரும் பிள்ளை போய் நெல்லை எடுத்ததி லிருந்து கல்லெடுத்த பகையாய்க் கடுத்து நிற்கின்றார். இந்த நிலையில் அவரிடம் போவது எந்த வகையிலும் அவமே யாகும். என் செல்ல மகனே! அந்தப் பிள்ளைமகன் சொல்லைக் கேட்டு நீ வெளியே போகாதே! போனால் இளிவே யாகும். இங்குள்ள படை வீரரும் ஒளிந்தே போவர்; படை கடல்போலிருந்தாலும் தலைவன் இல்லையானால் அது தலை இழந்த உடல் போல் நிலை குலைந்தே போகும். பகைவரை நம்பிப் போதல் நகையினுக்கு ஏதுவாய் நவையாய் முடியுமாதலால் எவ்வகையிலும் இடம் பெயரலாகாது. இடமே எல்லா வலிகளுக்கும் திடமான நிலையமாகும். நீரில் நெடிது பாய்கின்ற மீன் வெளியில் வந்தால் ஒரு அடியும் நகர முடியாமல் நொடியில் மாய்கின்றது. "தன் நிலந் தனில் குறுமுயல் தந்தியை வெல்லும்" என முந்தையோர் சொல்லி யுள்ளதைச் சிந்தை செய்ய வேண்டும். முதலை நீருள் இருந்தால் மதயானையையும் வென்றுவிடும்; நிலத்திலானால் நாயும் அதைப் பிடித்துக் கடித்துப் பிய்த்துவிடும். கூடுவிட்ட குளவி கொட்டாது என்னும் பழமொழியும் கேட்ட தில்லையா? அதனால் இடநிலை தெளிந்து இடம் பெயராது இருந்தருளுக. வருவன வரட்டும்; உறுதியுடன் உறைந்திரு; நம் முருகன் அருளால் இங்கே எல்லாம் நயக்கு நன்மையாகும்" என அவ் அம்மை இங்ஙனம் ஆர்வமுடன் சொல்லியருளினாள்.

## புத்தி போதித்தது.

தனது அருமை மகனை நோக்கி மிகவும் உரிமையுடன் அந்த வீரத்தாய் மொழிந்த உறுதி மொழிகள் யாரும் கருதி யுணர வுரியன. உள்ளம் கரைந்து பரிதாப நிலைகள் புடைந்து

உணர்வு நலங்கள் சுரந்து வந்துள்ள உரைகளில் சில அயலே வரும் சிந்துப் பாடலில் சிறந்து திகழ்கின்றன. சந்தச் சுவை தோய்ந்து தாள கதியோடு வந்திருத்தலால் அந்த முறையில் அயலே வரும் கவிகளைப் படிக்கவேண்டும். பண்ணோடு படிந்து பாடிவரின் எண்ணோடு கூடி அவை இனிமை சுரந்து வரும்.

### வீரத்தாய் விளம்பியது.

என்மக னேஉனக் கென்ன குறையிங்கே
ஈசன் முருகன் அருளிருக்க
பின்முகம் நோக்கிப் பெயர்ந்துநீ போகாதே
பெற்றதாய் நான்சொல்லும் புத்தியிதே. (1)

வில்விச யன்பெற்ற என்மகனே! இந்த
வெள்ளாளன் சொல்லைநீ நம்பலாமா?
பல்வகை யாகப் பகையை வளர்த்துநம
பாளையம் பாழாகச் செய்துவிட்டான். (2)

வெள்ளைக்கா ரன்நெல்லைக் கொள்ளைசெய்தே இந்தப்
பிள்ளை பெரும்பகை மூட்டிநின்றான்;
உள்ளம் கரவாக உள்ளே இருந்துமே
எள்ளல் இளிவுகள் செய்துவாரான். (3)

ஏழு லிங்கம்வைத்துப் பூசைகள் செய்கிறான்
எள்ளள வாகிலும் புத்தியில்லை;
வாழும் மனைவியை மாற்றா ரிடம்விட்டு
மானம் அழிந்திங்கே ஓடிவந்தான். (4)

வெள்ளைக் காரன்படை வந்ததைக் கண்டதும்
உள்ளம் கலங்கி நடுங்கியுள்ளான்;
பிள்ளை மகன்சொல்லைக் கேட்டு நடந்தாயேல்
பேதைமைக் கேடுகள் வந்து விடும். (5)

கோட்டையை விட்டு வெளியேறி நீபோனால்
கோடி துயரங்கள் கூடி விடும்;
நாட்டையும் ஊரையும் கும்பினி யார்வந்து
நாசங்கள் செய்குவர் நீசமதாய். (6)

கொல்லும் எமன்கள்போல் கும்பினியார் எங்கும்
கோபங்கள் மூண்டு கொதித்திருக்க
வெல்லும் வகையை விரைந்துநீ செய்யாமல்
வேறே அகல்வது வீணாகும். (7)

நீரில் விரைந்தோடும் மீன்வெளி யேவந்தால்
பாரில் பரிந்து மடிந்தொழியும்;
யாரும் தமக்கித மான இடத்திலே
அஞ்சாமல் வெல்லுவர் ஆண்மையுடன். (8)

யானையை நீரிடை வெல்லும் முதலை
அயலாயின் நாயால் அழிந்துபடும்;
தானமே யார்க்கும் வலியாம் எனும்உரை
ஞான ஒளியாக நாடுகவே. (9)

தானத்தை விட்டு வெளிஏறி நீபோனல்
மானத்தை விட்டு மடிய நேரும்;
வானத்தை வெல்லும் வலியின ரேனும்
வழுவி இழிவர் இடம்பெயர்ந்தால். (10)

தாய்மொழி கேட்டுத் தனையன் உருகியது.

பெற்றதாய் சொன்ன உரைகளைக் கேட்டிந்தக்
கொற்றவன் உள்ளம் உருகிநின்றான்;
உற்ற நிலைகளை ஓர்ந்து வருந்தியே
யூகமுடன்சில சொல்ல நேர்ந்தான். (11)

இவ் வீரத்தாய் ஆர்வத்தோடு கூறியிருக்கும் நீதி போதனைகள் யாவரும் ஓதி உணரும்படி இவ்வாறு ஒளி புரிந்து வந்துள்ளன. அன்புப் பாசம் துன்பத் துடிப்பு அபாய அறிவிப்பு முதலியன உணர்ச்சிகள் தோய்ந்து உரைகள் தோறும் ஒலித்து நிற்கின்றன. கோட்டையை விட்டு வெளியேறக் கூடாது; இடம் பெயர்ந்தால் இழிவுகள் நேர்ந்துவிடும்; இங்கேயே யிருந்தால் முருகேசன் நம்மைக் காத்தருளுவார்; தன் சொந்த இடமே யாருக்கும் எந்தச் சீவனுக்கும் அதிசய ஆற்றலை அருளும்; பிள்ளை பேச்சைக் கேட்டு வெளியே நீ போகவே கூடாது எனத் தெளிவு தோன்ற உரைத்திருப்பதில் அளியும் அன்பும் தழைத்து நிற்கின்றன. தாயின் பாசம் தனியே ஒளி வீசுகிறது.

வயது முதிர்ந்தவள் ஆதலால் உலக அனுபவங்கள் பலவும் தெரிந்திருக்கிறாள். குறித்துள்ள உவமைகள் கூர்ந்து சிந்திக்க வுரியன. தன் தாய் மொழியில் பழகியிருந்தன இத் தாயின் வாய் மொழிகளில் வந்துள்ளன. உரைகளால்உள்ளநிலைஉணரநின்றது.

"நீள்ளலோந சேப நிகிடி தூரமு பாரு
பைட்ட மூரடேநு பார லேது. (1)

நீள்ளலோந மொஸலி நிகிடி யேநுகும் பட்டு
பைட்ட குக்க சேத பங்க படுநு
ஸ்தாந பலமு காநி தநபலமு காதய்யா!" (வேமநம்) (2)

"மீன் நீரில் நெடிய தூரம் கடிது ஓடும்; பாரில் வந்தால் ஒரு முழமும் ஓடாது; பதைத்துச் சாம். முதலை நீரில் யானையைப் பிடித்து வெல்லும்; வெளியே வந்தால் நாயும் அதனைக் கடித்துக் கொல்லும்" என்னும் இத் தெலுங்குப் பத்தியங்களின் கருத்துகள் இங்கே இத் தாய் மொழிகளில் வெளி வந்திருக்கின்றன.

நெடும்புனலுள் வெல்லும் முதலை; அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. (குறள், 495)

இந்த அருமைத் திருக்குறளும் இங்கே கருதியுணர வுரியது. உரிய தானமே யாருக்கும் பெரிய துணையாய் நின்று அரிய வெற்றிகளை அருளும்; ஆதலால் கோட்டையை விட்டு வெளியே போகவே கூடாது என்று தெளிவு கூறி உறுதியாத் தடுத்தாள்.

இவ் வெற்றி வீரன் சித்தம் கலங்காமல் வீறுகொண்டு நின்றாலும் பெற்றமனம் பித்து என்றபடி அத் தாய் உள்ளம் உருகி உரிய நீதிகளை உரிமையோடு உரைத்தாள். ஆன்ற உறுதி நலங்கள் ஈன்றவள் வாய்மொழிகளில் ஈங்குத்தோன்றியுள்ளன.

அந்த அருமைத் தாயின் திருமொழிகளைக் கேட்டு இவர் உள்ளம் உருகினு ராயினும் பிள்ளை வற்புறுத்தலை நினைந்து பெரிதும் தியங்கி மறுபடியும் வணங்கி, "அம்மா! திருச்சிராப்பள்ளி வரையும் போய்த் துரைகளைக் கண்டு பேசி விரைவில் வந்து விடுகின்றேன்; குறை ஒன்றும் வராது; தடை யுரையாமல் விடையருளுக" என விழைந்து வேண்டி விரைந்து நின்றார். இவரது நிலையினை யறிந்து நெஞ்சம் கலங்கினுள் ஆதலால் நேரே அதன்பின் வேறு ஒன்றும் கூறாமல் வேண்டா வெறுப்போடு தலையினை யசைத்து அவள் மௌனமாய் மறுகி இருந்தாள்.

### மனைவி மறுகியது.

வாய் வார்த்தை ஒன்றுமின்றி மௌனமாய் விடைதந்த அந்தத் தாய் வார்த்தைகளை நினைந்து நோய் வார்த்த புலிபோல் நுடங்கி நின்ற இவர் முடிவில் "அம்மா! போய் வருகின்றேன்" என்று போற்றி எழுந்து அடுத்த மாளிகை வந்தார். தனது அருமை மனைவியைக் கண்டார். அக் குலமகள் விரைந்தெழுந்து தன் தலைவனைக் குழைந்து நோக்கி வந்துள்ள நிலையை முந்துற அறிந்து சிந்தை கலங்கிக் கண்ணீர் சிந்திக் கவன்று நின்றாள். அப் பதிவிரதையை இவர் அருகணைத்து ஆரத்தழுவிக் குடங் கையில் வளைத்து அமளிமிசை யமர்ந்து, "கும்பினியாரைக் கண்டு இங்கு நடந்த வம்புகளை யுரைத்துக் கருதிய கருமம் முடித்து உறுதிகொண்டு விரைவில் வருவேன்; நீ யாதும் மறுகி அயராதே!" என்று உரிமையுடன் உரைத்தார். உழுவல் அன்பு டைய அவள் எதிர் ஒன்றும் பேசாமல் விம்மி அழுது விழிநீர் சொரிந்து வெய்துயிர்த்து மெய் குழைந் திருந்தாள். மறுபடியும் அவளை மதிமுகம் நீவி, "தானாபதிப்பிள்ளை மனைவியைப் பிரிந்து மறுகுகின்றார்; அவருடன் சென்று வெள்ளையதிபதிகளிடம் சில சொல்லாடி ஒல்லையில் மீளுவல்; அல்லலுறாதே; செல்ல விடை தா!" என்றார். அது சொல்லவே அம் மெல்லியல் மிகவும் ஏங்கி அழுது, "ஆருயிர்த் துணையே! இச் சமையம் ஊரைவிட்டு அயல் போவது நன்றன்று; என்னை அறியாமலே என் உள்ளம் கலங்கு கின்றது. உயிர் துடிக்கின்றது; அடிக்கடி திகில் உண்டாகிறது; ஒன்றும் நல்லதாகத் தோன்றவில்லை; எல்லாம் அல்லலாகவே யுள்ளன; பொல்லாத கனவுகளும், புரையான கெடுகுறிகளும் சில நாளாக நிலையாய் நிகழுகின்றன. சமுகத்தில் ஒன்றும் சொல்லாமல் உள்ளமுடைந்து இருக்கின்றேன். முத்து மாலை அற்றுவிழ, முன்கை வளையல் உடையக், கொத்துச் சரப்பளி குலையச், சண்டாளர் தொடர்ந்து ஒரு திண்டோள் வீரனைக் கொல்ல நேற்றிரவு கனவு ஒன்று கண்டேன்; நமது தேவி கோவிலில் இருந்து ஒரு வால மங்கை பழஞ்சேலை கட்டிக் கொண்டு பரிதாபமான கோலத்தோடு வெளியேறி நம் திரு நகரைப் பார்த்துப் பார்த்துத் தேம்பி அழுது இறுதியில் ஒரு

முகமாய்த் துணிந்து வடதிசை நோக்கிப் போகவும் கண்டேன். என்னுடைய வலக்கண்ணும் வலத்தோளும் இரண்டு வாரமாக இடையிடையே கொடிதாகத் துடித்து வருகின்றன. அதற்கேதுவாக இடையூறுகளும் நேர்ந்தன. இன்னம் என்ன வருமோ? எப்படி முடியுமோ? என்று என் நெஞ்சம் மறுகி ஓயாது நெடுந்திகில் கொண்டுள்ளது. இந்த நிலையில் தாங்கள் வெளியே போகத் துணிந்து நிற்பதை அறிந்தவுடன் பெருங்கவலையாய்ப் பேதுறுகின்றது. சமுகத்திலிருந்து வெளியூர்களுக்கு ஓலைகள் போயிருத்தலால் நம் குல வீரரெல்லாரும் ஒருங்கே வந்து உதவி செய்து நிற்பர். எவ்வளவு பெரும் படைகள் வந்தாலும் இங்கிருந்து கொண்டே நாம் எதிரிகளை வென்று விடலாம். செந்திலாதிபன் முன்னின்று நமக்குத் துணைசெய்து அருளும். நேரில் நின்று போரில் வென்று மாறுகளைந்து நம் ஆறுமுகன் அருளால் நாம் வீறுகொண்டு வாழலாம்; என் அருமைத் துரையே! இப்பொழுது வேறு எங்கும் போகாமல் இங்கேயே அமர்ந்து இருந்து அருள் புரிய வேண்டும்" என்று பொருள் பொதிந்த மொழிகள் கூறி உழுவலன்போடு இவரை நேரே தொழுது வேண்டினாள்.

அக் குலமங்கை மறுகி யுரைத்த இனிய உரைகளைக் கேட்டு இக் குலமகனார் உளம் மிக உருகினார்; ஆயினும் பிள்ளை சொல்லைத் தட்டமாட்டாமல் பின்செல்லவே துணிந்தார். அப்பதிவிரதையை அதிக ஆர்வமாய் மருவி நின்று முதுகு தடவிப் பருகு காதலோடு உருகி நோக்கி, "வீரசக்கு! நீ கனவு நிலையை நினைந்து மன நிலை கலங்காதே! முருகனும் தேவியும் நமக்குக் குலதெய்வங்களாய் நின்று குடிபுரந்துள்ளனர்; ஆதலால் யாதொரு அல்லலும் நேராது; அஞ்சாதே! நில்;" என்று நிறுத்தி இவர் வல்விரைந்து வந்தார். அவ் அரசி நெஞ்சம் பதைத்துக் கண்ணீர் ததும்பிக் கால்வழிந்தோடத் தலைவாசல் திரும்பும் வரையும் நிலையாக இவரை நீள நோக்கி ஆளன் போகின்றாரே! என்று ஆவலாய் அலமந்தேங்கி வேள் பிரிந்த இரதி போல் பரிதாப நிலையில் பரிந்து நின்றாள். உழுவலன்புடைய உரியவனை நீங்கி விதி முன் நடந்து செல்ல இப்பதி பின் படர்ந்து சென்றார்.

# இருபத்து மூன்றாவது அதிகாரம்

## பதி பெயர்ந்தது.

பிரிய மனமில்லாமல் மறுகி மயங்கி உருகியழுத தனது அருமை மனைவியை அந்தப்புரத்தில் ஆதரவு கூறி நிறுத்திவிட்டு இவர் விரைந்து வெளிவந்து அரங்கமாலை அடைந்தார். அங்கே நின்ற தம்பியரும் தடுத்தார். ஒருவர் சொல்லையும் கேளாமல் உறுதி பூண்டு பிரயாணத்திற்கு இவர் ஊக்கி நின்றார். வருநிலை தெரியாமல் ஒரு நிலையா இங்ஙனம் ஒருமித்து நிற்கவே இவரைத் தனியே விட மனமில்லாமல் தம்பியரும் மைத்துனரும் உடன் தொடர்ந்தார். ஒரு தண்டிகை, ஏழு குதிரைகள், ஐம்பது வீரர்கள், தம்பியர், தானாபதிகளோடு இம் மன்னர் எழுந்தார். இப் பிரயாணத்தை எதிரிகள் தெரிந்தால் மிகவும் இடராம் என்று எண்ணி ஒருவரும் அறியாவகை இரவு பதினொரு நாழிகையில் கோட்டையை விட்டுப் புறப்பட்டார். சித்தார்த்தி வருடம் ஆவணி மாதம் இருபத்திரண்டாம் தெய்தி—அதாவது செப்டம்பர் மாதம் ஏழாந் தேதி (7—9—1799) இரவு $10\frac{1}{2}$ மணிக்கு வெளியேறி வடதிசை வழியே நிசியிடை விரைந்து நடந்தார். மானவீரன் போன போக்கு மறுக்கமாய் நின்றது.

அரசர் இரவில் அகலும் நிலையையும், பிரிவையும் நினைந்து நகரிலுள்ள அனைவரும் பரிபவம் மிகுந்து பரிந்து புலம்பினர். இராமனைப் பிரிந்த அயோத்தி போலப் பாஞ்சாலங்குறிச்சி அன்று படுதுயர் உழந்தது. ஆண் பெண் அடங்க எல்லாரும் தானாபதிப் பிள்ளையை இகழ்ந்து வைதார். "பொல்லாதவன் சொல்லை நம்பி நம் வல்லரசும் புறப்பட்டதே! அப் போக்காளனை மட்டும் அயலே போக்கிவிட்டு இவர் பேசாமல் இங்கே ஊக்கி யிருக்கலாகாதா? மன்னர் மாட்டேன் என்று சொல்லியும் கழுவன் சாதனையாய் மன்றாடி நின்று இங்ஙனம் கூட்டிப்போகின்றானே!

"கடுவாய்க்கு *ஓரி கால சனியன்" என்பது போல் இக் கெடுவான் இங்கே முடிவாக வந்து மூண்டு நின்முனே! தன் பெண்டாட்டியைப் பகைவர் பிடித்துக்கொண்டு போய்விட்டார் என்றல்லவா இப்படித் திண்டாடித் தியங்கிச் சண்டை மூளாமல் சமாதானம் செய்யப் போவதாகச் சாக்குச் சொல்லி இழுத்துப் போகின்முன். யாதொரு கபடமும் தெரியாமல் அஞ்சா நெஞ்சராய் ஆண்மையுற்றிருக்கும் நம் வீர அரசை இவ் வஞ்சன் இவ்வாறு சீரழிக்கின்முனே! முன்னம் நெல்லைப் போய்க் கொள்ளையிட்டு அல்லலை வளர்த்து அடும்பகை மூட்டினன்; அதனுல் எல்லையில்லாத கொலைகள் இங்கு விழுந்தன. இப்பொழுது பகைவர் கொடிதாய்க் குறி பார்த்திருக்கும் இச் சமையத்தில் பதியைப் பதி பெயர்த்துப் போயினனே! இவன் மதிதான் என்னே! இதனுல் என்ன விளையுமோ? இந் நகருள் யாது நேருமோ? இந் நாசகாலன் யோசனையால் நம் குடியும் அரசும் அடியோடு அழிவுற நேர்ந்தன. இக் குடிகேடனை அன்றே தொலைத்து விடாமல் ஆதரித்து வைத்திருந்ததே இன்று நமக்குத் தீதாய் முடிந்தது" என இன்னவாறு பேசாத பேச்செல்லாம் பேசி நகரமாந்தர் அனைவரும் தானுபதிப் பிள்ளையை ஓயாமல் ஏசி நின்முர். ஒருவனுல் துயரங்களை அநுபவித்தவர் அமையம் நேர்ந்தபோது வயிறெரிந்து பலவாறு இகழ்ந்து அவனை வைவர் என்பது அவ்வூரார் வாயால் அன்று அறிய நின்றது.

---

* ஓரி என்பது முதுநரி. மிகு விரகுடையது. மலைச்சாரலில் மாடுகளைத் தனியே கண்டால் சன்னையாய் ஊளையிடும். அதைக் கேட்டவுடன் புதருள் மறைந்து கிடக்கும் கடுவாய் இரை கிடைத்ததென்று விரைவாக வெளிவரும். இது முன்னும் அது பின்னுமாக இரைமேல் செல்லும். இவ் வழக்கத்தைப் பழக்கமா யறிந்துள்ள மேய்ப்பாளர் ஓரி ஒலித்தவுடன் கடுவாய் வரும் என்று ஆயுதங்களோடு ஆயத்தமாய் ஒளிசெய்து நிற்பர். அருகே வரவும் கரவாய்க் கொன்று தொலைப்பர். அங்ஙனம் கடுவாய் நாசம் அடைதற்கு ஓரி காரணமா யுள்ளமையால் "கடுவாய்க்கு ஓரி கால சனியன்" என்னும் பழமொழி உண்டாயது. கால சனியன் எனப் பிள்ளையைச் சுட்டி இங்கே ஊரவர் திட்டியது அவரால் அடைந்துள்ள அல்லல்களால் நொந்து என்க. உள்ளங்கள் கொதித்துள்ளதை உரைகள் உணர்த்தின.

## போனவர் நிலை.

இரவு நடந்து போனவர் விடியுமுன் நாகலாபுரத்தை அடைந்தார். அவ்வூர் ஜமீன்தாராகிய இரவப்ப நாயக்கர் என்பவர் இவ் அரசைக் கண்டவுடனே உவந்து உபசரித்துச் சிறந்த விருந்து செய்து ஆர்வத்தோடு போற்றி நின்றார். அவரிடம் விடை பெற்று அங்கு நின்றெழுந்து கோசுகுண்டு வந்து *கோலார்பட்டியைச் சேர்ந்தார். அவ்வூர் ஜமீன்தார் இராஜ கோபால நாயக்கர் என்பவர் இவர் வர வறிந்ததும் உளம் மிக மகிழ்ந்து எதிர்கொண்டு அழைத்து அரிய உபசாரங்கள் புரிந்து பெரிய விருந்தாற்றி இரண்டு தினங்கள் இருந்து போம்படி பரிந்து வேண்டினார். அவருடைய அன்பினுக்கு அமைந்து தமருடன் அங்கு அமர்நிலை யாதும் கருதாமல் இவர் அமர்ந்திருந்தார்.

ஐம்பதுபேர் குறிகாரர் ஏழுபரி
    ஒருசிவிகை அமைச்ச ரோடு
தம்பியர்கள் நெருங்கிவர இடையிடையே
    இடங்கண்டு தங்கித் தங்கி
வம்புமலர்ப் பொழில்புடைசூழ் கோலாரு
    பட்டியுற்றான் அவ்வூர் மன்னன்
நம்பிதனை எதிரழைத்து நல்விருந்து
    செய்யஅங்கு நயந்திருந்தான்.

இம்மான வீரனோடு தொடர்ந்து அன்று போனவர் நிலைகளை இதனால் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். இவ்வாறு சென்ற இம் மன்னன் கோலார்பட்டி அரண்மனையில் உல்லாசமாய்த் தங்கியிருந்த பொழுது பொல்லாத கேடுகள் பொங்கி விளைய நேர்ந்தன. அல்லல்கள் ஒல்லையில் விரைந்து ஆண்டு அடர்ந்தன. மூண்டு விளைந்த அந்தக் கேடுகளை அயலே காண வருகின்றோம்.

## பகைவர் வந்து பதி புகுந்தது.

எவரும் அறியாவகை அன்று இரவு இக் கட்டபொம்மு புறப்பட்டதை எட்டப்ப நாயக்கர் எப்படியோ தெரிந்து

*இவ்வூர் சாத்தூருக்குக் கீழ்பால் உள்ளது.

உடனே விரைந்து ஓடி வந்து பானர்மேனைக் கண்டு "ஆள் வெளியேறி விட்டது" என்று துப்பு உரைத்து இப்பொழுதே தொடர்ந்து பிடித்துவிட வேண்டும் என்று துடித்து நின்றார்.

இந்த விபரம் அறிந்தவுடனே சேனாபதி மிகுந்த மகிழ்ச்சியடைந்து பெரும் படைகளோடு முடுகி வந்து பாஞ்சாலங் குறிச்சியை முற்றுகை செய்து கைப்பற்றிக் கொண்டான். அந்தப்புரம் முதலிய எந்தப் புறத்தும் யாதொரு தொந்தரவும் செய்யாமல் ஆணையை மட்டும் செலுத்திக் கும்பினிக்கு உரிமையாய தெனக் கொடியினை உள்ளே நாட்டி வெற்றி கிடைத்த தென்று உளம் மிக மகிழ்ந்து களி கூர்ந்து நின்றான். குடிசனங்க ளெல்லாரும் நெடிது கலங்கி "முடிவு வந்ததே!" என்று முகம் வாடி நின்றார். அரண்மனையிலுள்ள குல மகளிரும் உறவினரும் அரசுக்கு நேர்ந்த அவல நிலையை நினைந்து கவலை கொண்டார்; ஆயினும் கும்பினி அதிபதிகளிடம் தங்கள் அதிபதி போயுள்ளமையால் சமாதானமாய் நலம் கிடைத்துவிடும்; அதன்பின் வம்பின்றி அமைதியாய் வாழலாம் என்னும் நம்பிக்கையுடன் சிறிது ஆறி இருந்தார். அந்த இருப்பு அவலமாயது.

## பாஞ்சையைப் பற்றியது.

யாரும் அணுக முடியாதபடி போரெல்லாம் பொருந்திப் புகழெல்லாம் நிறைந்து வீரமாநகரம் எனப் பாரெல்லாம் பேராய்ச் சீரெல்லாம் செறிந்து சிறந்த மேன்மையோடு விளங்கியிருந்த பாஞ்சையம் பதியைப் பதி இல்லாத சமையம் பார்த்துப் பகைவன் வந்து கைப்பற்றியது சித்தார்த்தி வருடம் ஆவணி மாதம் உசு-ந் தேதி (9—9—1799) காலை 10 நாழிகையில் என்க. என்றும் வென்றி நிலையில் வீறு கொண்டு நின்ற அப்பதி அன்று முதல் மாறு கண்டது. அரிய கோட்டை அகப்பட்டது என்றதும் எதிரிக்குப் பெரிய மகிழ்ச்சி பெருக்கெடுத்து நின்றது. தன் காரியம் யாவும் வெற்றிபெறும் என விரைந்தான்.

இங்ஙனம் பற்றியதோடு நில்லாமல் கும்பினி அதிபதிகளைக் கண்டு ஆறுதலாக ஆவன செய்து வர ஆவல் கொண்டு சென்னையை நோக்கி இன்னலோடு சென்ற இம் மன்னனையும் பற்றி

வரும்படி பெரும் படைகளைத் திரட்டிப் பேருக்கத்துடன் சேனு பதி நேரே விரைந்து ஏவிநெடிதுகளித்துக்கடிது விழித்து நின்றான்.

மன்னனைப் பற்ற மண்டி எழுந்தது.

இரண்டு குதிரைப் பட்டாளங்களும் எண்ணூறு போர் வீரர்களும் எழுந்தார். அத்துடன் எட்டப்ப நாயக்கரும் தம் முடைய சேனையுள் தறுகண்ணரான மூந்நூறு பேருடன் வந்து மூண்டு சேர்ந்தார். அந் நாயக்கரைப் பல வகையிலும் உபசரித்துப் பானர்மேன் அன்று மிகவும் ஊக்க மூட்டினன்: "உம் முடைய உதவியையும் ஒத்துழைப்பையும் கும்பினியார் தெரிந்து பெரிதும் உவந்திருக்கின்றார். உம்மைப்பற்றி அடிக்கடி உசாவி அன்புடன் கடிதம் எழுதிவருகின்றார்; கும்பினிக்கு உற்ற பிள்ளை யாகவே உம்மை அவர் நம்பிக்கையுடன் உட்கொண்டு நிற்கின் றார். சாதி உரிமையையும் தேச நலத்தையும் யாதும் பாராமல் எங்கள் பக்கமே சார்ந்து ஆதிமுதல் நீர் உழைத்து வருவதை யாம் என்றும் மறவோம். எம்மால் உயர்ந்த இலாபங்களை விரைந் தடைந்து நீர் இங்கே இனிமேல் சிறந்து நிற்பீர்! எவ்வகையி லும் உள்ளந் தளராமல் ஊக்கமா யுழைத்து ஆக்கம் பெறுவீர்! என்று நாம் ஆவலோடு எதிர் பார்த்திருக்கிறோம்" என இன்ன வாறு பன்னிப் புகழ்ந்து உடனே உன்னதமான ஒரு குதிரை யையும் உதவி இதில் ஏறிச்சென்று எதிரியைத் தொடர்ந்து பிடியும் என்று அவரை ஏவி நின்றான். அப் படைத்தலைவன் உரைத்த மொழிகளைக் கேட்டுக் கொடுத்த புரவியைக் கண்ட வுடன் அன்று அவர் கொண்ட உவகைக்கு அளவே யில்லை. உள்ளக் களிப்புடன் அவ் வெள்ளைத் துரையை உவந்து நோக்கி, "கட்டபொம்மை எட்டிப் பிடித்து எட்டப்பன் என்னும் பெயரை இன்றுமுதல் பட்டப்பெயர் ஆக்குகிறேன்; பாருங்கள் துரைகளே!" என்று தம் பாடும் பீடும் தோன்ற அங்கு அவர் பாடி நின்றார். அவருடைய ஆவலும் துடிப்பும் கும்பினியா ருக்கு ஏவல் புரிந்து அரிய பெரிய ஊதியங்களை அடையலாம் என்னும் பேராசையில் பெருகி நின்றன. சரியான துணை கிடைத் தது என்று அவரும் குறியோடு குலாவி வெறியாய் மூண்டனர்.

———

## இருபத்துநான்காவது அதிகாரம்.

### எதிரிகள் தொடர்ந்தது.

அதிசய வீரனைப் பிடிக்க விரும்பி உறுதியான படைகள் உடனே திரண்டன. அதன்பின் படைவீர ரெல்லாரும் கூடி எழுந்து வட திசையை நோக்கி விரைந்து நடந்து எவ்வழியும் உசாவி நாடெங்கும் நாடி ஓடி யலைந்தார். பாட்ரிக் ஜாய்ஸ் (Patrick Joyce), ஜோஸஃவ் நால்ஸ் (Joseph Knowles), ட்யூரிங் (Turing), ஓரீலி (O'reily) முதலிய சேனைத்தலைவர்கள் சேனையை ஆனவரையும் வேகமாக நடத்திப் பரிகளில் வாவிப் பறந்து வந்தார். இரவும் பகலும் கண்ணுறக்க மின்றிக் கடுகி ஆராய்ந்தார். நாலா பக்கங்களிலும் விசாரித்து முடிவில் கோலார்பட்டியில் இருப்பதாகத் தெரிந்து கும்மாளங்கொண்டு குதித்தோடி வந்து ஊரை யடைந்து பொழுது விடிய ஒரு நாழிகை யிருக்கும் பொழுது முழுதும் வளைந்து முற்றுகை யிட்டு மூண்டு நின்றார். இருநூறு குதிரை வீரர்கள், ஆயிரத்து நூறு படை வீரர்கள் அடையவளைந்து விடிவுநோக்கிக் கடிதூக்கி வீறுடன் நின்றனர்.

சூரியன் உதயமாகவும் வெடி வேல்களோடு அரண்மனையைச் சுற்றி வீரியமாய் வேகித்து நிற்கும் படைகளை அங்கு உள்ளே யிருந்த காரியக்காரர்கள் கண்டார். கலக்க மீக்கொண்டார். கதி கலங்கி நின்ற அவர் பின்பு கடிது சென்று தம் பாளையகாரனிடம் வந்து படை நிலையை உரைத்தார். அச் சமீன்தார் மிகவும் இளைஞர். அச் சமையம் அவருக்கு வயது இருபத்திரண்டு. திரண்டு வந்துள்ள அப் படைகளைக் கண்டதும் அவர் உள்ளங்கலங்கி உறுதிகுலைந்து மருண்டுமறுகிவெருண்டுநின்றார்.

### மன்னன் அறிந்து மறுகியது.

அன்றிரவில் இம் மன்னர் மேல் மாளிகையில் துயின்றிருந்தார் ஆதலால் விடியவும் கீழே நிகழ்கின்ற படை அரவங்களைக் கேட்டு விரைந்தெழுந்து அங்கிருந்தபடியே நிலா முற்றத்திற்கு வந்து வெளியே எட்டிப் பார்த்தார். சேனைகள் மூண்டு நிற்கும்

நிலையைக் கண்டார். "தீவினை வந்து மூண்டதே!" என்று திகைத்து மீண்டார். உடனே தமது தானுபதிப் பிள்ளையை மேலே அழைப்பித்தார். பிழைப்பித்த அவர் பேதுற்று வந்தார். அவரை யாதும் சொல்லாமல் அருகே நிறுத்தி அயலே சுட்டிக் காட்டி "பிள்ளை மகனே! படை வந்துள்ள நிலையைப் பார்த்தீரா? உம்முடைய சொல்லை நம்பி வந்தேன்; அல்லலும் பழியும் இங்கே அடைய நேர்ந்தன. நான் கோட்டையில் இருந்தால் இந்த எட்டப்பன் தலை நீட்டுவானு? எட்டித்தான் பார்ப்பானு? வலிய துணை கிடைத்ததென்று இங்கே ஓட்டி வந்து உள்ளஞ் செருக்கி அவன் ஊக்கி நிற்கும் நிலையை நீர் கொஞ்சம் மறைந்து நின்று நோக்கிப் பாரும்! நான் சொன்ன வார்த்தைகளை எல்லாம் தட்டிப் பிடிவாதம் கொண்டு குடியெழுப்பி வந்தீர்! இடையே இப்படிக் குடிகேடு வந்தது; இதில் எப்படித் தப்புவீர்! இனி உம்மை நோவதில் யாது பயன்? என் ஊழ்வினை இப்படியாயது! ஆயினும் இங்கு அடங்கி நில்லேன். இப் படைகளை அடியோடு வென்று வெளியேறி விடுவேன்; போர்மேல் மூண்டு நான் மேலேறிச் செல்லுங்கால் நீர் பயப்படாமல் உடன் தொடர்ந்து வந்துவிடும். முன்பு இராமநாதபுரத்தில் நின்றது போல் ஏமாந்து அகப்பட்டுக்கொள்ளாதீர்! பகைவர் கடுத்து நிற்கின்றார்! கையில் சிக்கினுல் உயிரை எடுத்து விடுவர். எச்சரிக்கையாய் அச்சமுறுமல் அடுத்து வருக" என்று தம் உடைவாளை உருத்தெடுத்து ஊக்கி எழுந்தார். பிள்ளை ஒன்றும் பேசாமல் உள்ளங் கலங்கி உடல் வேர்த்து ஒடுங்கி நின்றார். தம்பியரும் மைத்துனமாரும் உடை வரிந்து கட்டி யுத்த சன்னத்தராய் வடிவாளேந்தி மன்னர் பின்னர் மாருத வீறுேடு மண்டி வந்தார்.

### பிள்ளையைப் பாதுகாக்க மொழிந்தது.

இவ் வீர மடங்கல் கீழிறங்கி அப் பாளையகாரனை அணுகி "இவ் வேளையில் இவ்வாறு விளைந்தது; நீ யாதும் அஞ்சாதே! பகைவர் உன்னை ஒன்றும் செய்யார்; உறுதியாய் உள்ளே நில்; நான் பொருது போங்கால் தானுபதிப் பிள்ளை என்னோடு பின் தொடர்ந்து வராமல் பின்னடைந்து நின்றால், எதிரிகள் கையில்

அகப்படாதபடி எவ்வகையிலாவது அவரை வெளியேற்றி விடுக. வேளை வாய்த்தால் மீண்டும் உன்னைக் காண்பேன்" என்று விரைந்து கூறி வெகுண் டெழுந்து தம் பட்டத்துக் குதிரைமேல் பாய்ந்து தாவினர். தம் தம்பியர் முதலாக ஆறு பேரும் தத்தம் பரிகளில் தத்தி ஏறினர். வெற்றிவீரன் அயலே ஒத்துஅடர்ந்தார்.

## வென்றி வீரரேடு வெளியே போனது.

இவரைக் கொன்று தின்றுவிட வேண்டும் என்று கொதித்து நிற்கின்ற படைமேல் இடை தெரிந்து புரவியைத் தட்டி இவர் வடவைத் தீ போல் பாய்ந்தார். பாயவே படைவீரர்கள் வெடி வேல்களுடன் கொடிதாக அடர்ந்து கடிது மோதினர். இவர் ஆளரி போல் சீறி வாள் கொண்டு வீசினர். தலைகள் பல தரையில் உருண்டன. இன்ன நிலையில் உள்ளார் என யாரும் தெரியா வகை மின்னல் ஒளிபோல் வாள் மின்ன ஏறிப்பொருது எதிரிகளை யுருட்டிச் சூறுவளி என ஆறு வேகத்தோடு அடல் புரிந்து ஆர்த்து மண்டி மிடலுடன் இம் மன்னர் வெளியேற லானர். பொரு முகத்தில் முனைந்து நின்றவர் புலிப்போத்தைக் கண்ட எரு தினங்கள் போல் இடை இரிந்தொழிய எதிரே விழுந்தவர் இறந்து கழிய இத் திட வீரர் விரைந்து வெளியேறி வடதிசை நோக்கி வாவிப் போனர். தம்பியர் முதல் அறுவரும் இவர் கால்வழியே ஓட்டிக் கடுத்து வெட்டி அடுத்துத் தாவிப் பின் தொடர்ந்து கடு வேகமாய்த் தொடுத்து அடுதிறலோடு ஆர்த்துப் போனர்.

கூடி நின்ற படை வீரர்கள் எல்லாரும் குலைந்து நடுங்கி "இவன் என்ன ஊழித் தீயா!" என உள்ளங் கலங்கி உளைந்து நின்றார். எப்படியும் இதில் தப்ப முடியாது என்று உறுதி செய்து எப்புறத்தும் வெப்பமோடு வெடிகளுடன் இடைவிடாது கொடிது சூழ்ந்து பகைவர் கொதித்து நின்ற அவ் அபாய நிலையில் யாதொரு உபாயமும் செய்யாமல் நேரே பாய்ந்து வீர வெறியுடன் வெட்டி வெம்பரி தட்டிச் சீறிப் போன இத் தீரனை மெச்சிச் சேனைத் தலைவரும் வியந்தார். வியந்தாலும் தமக்கு நேர்ந்த தோல்வியை நினைந்து நினைந்து நாணிப் புழுங்கி நைந்து நின்றார்.

பின்பு உள்ளே இருந்த தானுபதிப் பிள்ளையையும் உடனின்ற படைவீரரையும் ஒருங்கே வளைத்துக்கொண்டார். இவ் வீரர் சீறி ஏறிய பொழுது எதிரிகள் நேரே மூண்டு பொருதமையால் ஆண்டு முப்பத்தேழு பேர் முன்னணியில் இறந்து பட்டனர். இப் படை வீரருள் பதினறு பேர் மாண்டு போயினர். போனவர் போக நின்றவர் அனைவரையும் எளிதாகப் பிடித்துக் கொண்டார். அங்கே கைதியாகக் கையில் அகப்பட்டவர் தானுபதி சிவசுப்பிரமணிய பிள்ளை, அவருடைய தம்பி வீரபத்திர பிள்ளை, ஆதனூர் வெள்ளைச்சாமி நாயக்கர், அல்லிக்குளம் சுப்பா நாயக்கர், முள்ளுப்பட்டி முத்தைய நாயக்கர், கொல்லம்பரும்புக் குமாரசாமி நாயக்கர் முதலிய முப்பத்திரண்டு வீரர்கள்; ஆக மொத்தம் ௩௪ பேர்கள் ஒத்த சிறையாளராய் உறைந்துநின்றனர்.

செப்டம்பர் மாதம் பத்தாம் தேதி (10—9 1799) காலை 7 மணிக்கு வாளமர் புரிந்து வென்று ஆறு பேர்களுடன் இம் மன்னர் வடதிசை நோக்கி வாசியில் வாவி வல்விரைந்து போக 9 மணிக்கு அந்த முப்பத்து நான்கு பேர்களையும் சிறை செய்து சேனைகளுடன் தலைவர்கள் தென் திசைக்குக் கொண்டு வந்தார்.

அங்ஙனம் கொண்டு வருங்கால் உடன் பிடிபட்டு வந்த படைவீர ரெல்லாரும் உள்ளங் கொதித்துப் பிள்ளையை உள்ளுற வைதார். "நெல்லைப் போய்க் கொள்ளை செய்து வெள்ளையர் பகையை மூட்டி வெளியே கொடிய வினை விளைத்ததோடு அல்லாமல் உள்ளே புகுந்து வல்லமையுற்றிருந்த அரசையும் வெளியேற்றி இந்த அல்லலை விளைத்தான். இந்தப் பொல்லாதவன் நம்மைக் கொல்லவே கொண்டு போகின்றார்; நமக்கும் என்ன வருமோ தெரியவில்லை; நம் மன்னர் அயலே பிரிந்து இன்னலுற நேர்ந்ததே! இவன் செய்துள்ள தீவினைதான் என்னே! நம் அரசுக்கு வினைப்பூடாய் மூண்டானே! இவன் மாண்டு தொலைந்தாலொழிய நமக்கு நீண்ட சுகம் உண்டாகாது; அம்மையும் அரசியும் நன்மை பல கூறி நயந்து தடுத்தும் யாதும் கேளாமல் இப் பழிகாரன் பேச்சைக் கேட்டு வெளியேறியதே நம் குல அரசுக்கு இளிவாய் வந்தது; இனி என்ன விளையுமோ?" என இன்

னவாறு இன்னலோடு தம்முள் வெம்மை மீறித் தானுபதியை ஆனமல் இகழ்ந்து வழி முழுதும் நொந்து அவர் வைது வந்தார்.

சேனுபதி நிலை.

அவ் அமையம் பானர்மேன் ஒன்பதாந் தெய்தி உரிமை யாகக் கைப்பற்றிக் கொண்ட பாஞ்சாலங் குறிச்சியைப் பாது காத்து நிற்கும்படி மில்லர் (Miller) என்னும் துரையை நிய மித்துச், சில படைகளை அவருக்கு உதவியாக நிறுத்தி விட்டு, நாகலாபுரத்திற்கு வந்திருந்தான். அவ்வூர்ப் பாளையகாரன் முன்பு கும்பினிக்குச் சிறிது அடங்காமல் இருந்தான்; அத்துடன் இம் மன்னனுக்கும் பின்பு உதவி புரிந்தான் என்பது தெரிந்து விரைந்து வந்து சேனைகளுடன் நகரை வளைந்துகொண்டான். வளையவே ஜமீன்தாராகிய இம்மிடி இரவப்ப நாயக்கர் யாதொரு எதிர்ப்பும் செய்யாமல் எளிதாய் இணங்கி வந்து சேனுதிபதி யைக் கண்டு கும்பினி ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக வணங்கி நின்ருர். அவரை ஒரு துயரும் செய்யாமல் சிறையில் வைத்து, ஜமீனைக் கும்பினிக்கு உரிமை செய்துகொண்டு அரண் மனை யருகே கூடாரம் அமைத்து ஆடம்பரமான அதிகாரத் துடன் அவன் அமர்ந்திருந்தான். அவனுடைய மனம் அது பொழுது பெருக்கத்தில் பெருகி நின்றது. தனது காரியங்கள் வீரியமாய் விரைந்து முடிந்து வருகின்றன என்று அவன் உவந்து வேளித்து உறுதி பூண்டு யாவும் ஆவலோடு கவனித்து வந்தான்.

"யாரும் அருகே செல்ல முடியாது என வீர மாட்சியுடன் இவர் எங்கும் சீர் ஓங்கி நின்ற பாஞ்சாலங் குறிச்சியையே வென்று கைக்கொண்டோம்; இனி யார் எம்மோடு எதிர்ப்பார்? இந் நாட்டி லுள்ளவர் எவரும் எளிதாக அடங்கி விடுவர்; வழி வழியாக நம் ஆட்சி இங்கே இனிதாக நடைபெறும்" என்று இன்ன வகையான எண்ணங்களுடன் களி மீக்கொண்டு அவன் களித்திருந்தான். கருமக் களிப்புகள் எவ்வழியும் பெருகிநின்றன.

அங்ஙனம் இருக்குங்கால் கோலார்பட்டியில் பிடிபட்ட தானுபதி முதலானவரை விரைந்து கொண்டுவந்து அச் சேனுபதி

முன் நிறுத்தினர். பிள்ளையைக் கண்டவுடனே அவ் வெள்ளைத் துரை கொண்ட மகிழ்ச்சியை யார் சொல்ல வல்லார்? "கும்பினி ஆட்சியை அடியோடு கவிழ்த்துவிடக் கங்கணம் கட்டியிருக்கிறான்" என அவரைக் குறித்துக் கடுப்புற்று மிகவும் கொதித்திருந்தான் ஆதலால் இப்பொழுது கைப்பட்டுள்ளதை நோக்கி அவன் களிப்பு மீக்கொண்டான். தான் கருதியன யாவும் இனிமேல் எளிதாய் உறுதி பெற முடியும் என்று உளம்மிக மகிழ்ந்து ஊக்கி நின்றான். கொடிய நோக்கங்கள் கடுமையாய் நின்றன.

### தானுபதியை நோக்கிச் சேனுபதி சினந்தது.

நேரே கொண்டுவந்து தன் முன் நிறுத்திய பிள்ளையைச் சுளித்து நோக்கி அவன் உருத்து உரை யாடினன்: "கும்பினி நெல்லைக் கொள்ளையடித்து, எங்கும் வம்புகள் விளைத்து, வரிகளை மறுத்துப், பிறகட்டை வெள்ளை மூஞ்சிக் குரங்கு என்று திட்டி, எங்களை எள்ளலாக வைது, அல்ல லெல்லாம் செய்து, தொல்லையாக நீண்டு எல்லை மீறி நின்றுள்ள உம்மை இன்றுதான் கண்டேன்; உம்முடைய மூஞ்சி நன்று யிருக்கிறது. அன்று ஆற்றாரில் கள்ளமாய்த் தப்பி ஓடினாய்! இனி எங்கே துள்ளி ஓடுவாய்? இன்று போ யிரு; நாளை நீ போகின்ற இடத்தைச் சொல்லுவேன்; அங்கே போகலாம்" என்று வேகமாக வெகுண்டு கூறி அருகே நின்ற படை வீரரைப் பார்த்தான். அவர் விரைந்து பாய்ந்து அனைவரையும் பிடர் பிடித்துத் தள்ளி உடன் இழுத்துச் சென்று ஓர் அறையில் அடைத்து வைத்தார். மானமும் சினமும் மண்டி ஏறத் தானுபதிப் பிள்ளை தவித்திருந்தார். உடன் பிறந்த தம்பி தவிர உடனிருந்தவர் எல்லாரும் அவரை உள்ளுற வெறுத்து எள்ளி நின்றார் ஆதலால் அவர் நிலை அங்கே பரிதாபமாயிருந்தது. பலபல நினைந்து உளநிலை குலைந்து உளைந்து கிடந்தார்.

### எட்டப்ப நாயக்கரைப் புகழ்ந்தது.

தன் படைகளோடு உடன் போய்ப் பிள்ளையைப் பிடித்து வந்த உதவிக்காக எட்டப்ப நாயக்கரை மிகவும் புகழ்ந்து பல வகையான வெகுமதிகளைப் பானர்மேன் அவருக்கு உவந்து

தந்தான். உள் நாட்டில் அவருடைய உதவி தனக்குப் பெரிதும் உறுதியாம் என உணர்ந்து உவகை கூர முகமன் கூறினன். "எட்டப்ப நாயக்கரே! நீர் செய்த உதவி யாரும் செய்யார். இத் தென்னாட்டில் உம்மைப்போல் ஒரு பாளையகாரனாவது எங்களுக்கு இவ் வேளையில் இவ்வளவு உபகாரம் செய்ததில்லை. இந் நாட்டி லுள்ள எவரினும் நீர் ஒருவரே எங் நாட்டவர்க்கு இனியராய் நின்றீர்! உம்முடைய தலைமையையும் நிலைமையையும் மேலே எழுதி மேலும் உபகரிப்பேன்; பிள்ளையைப் பிடித்ததோடு நின்றுவிட லாகாது; கட்டபொம்மையும் கைப்பிடித்துத் தரவேண்டும்; அவனுடைய அரசு முழுவதும் நீரே ஆளும்படி நேரும்; உள்ளன்போடு ஊக்கமாய் உழைத்து வாரும்" என்று இங்ஙனம் அவன் உரைத்து நின்றான். அத் துரையின் உரைகளைக் கேட்டு அவர் உள்ளங் களித்தார். ஊக்கி எழுந்தார். அச் சேனாபதியை உவந்து நோக்கி, "துரைகளே! என்னோடு சில குதிரைப் படைகளை அனுப்புங்கள். நான் இப்பொழுதே போய் அந்தக் கட்டபொம்மைக் கைப் பிடியாகக் கொண்டு வருகிறேன். காலம் கடக்க விட்டால் அவன் ஆலம் என நீண்டு நம்மை அடியோடு அழித்து விடுவான். அவன் இடம் பெயர்ந்ததே நமக்குத் திடம் பயந்தது. கோட்டையை விட்டு வெளியேறிய அவன் இப்பொழுது வேட்டையில் தப்பிய மிருகம்போல் காட்டு வழியில் கதி கலங்கித் திரிவான் ஆதலால் இச்சமையம் முடுக்கிப் பிடியாவிட்டால் பின்பு எச்சமையமும் குப்பினிக்கு இடுக்கணே உண்டாகும். மீண்டும் அவன் இருப்பிடம் வந்து புகுந்து கொண்டால் நமக்கு இருப்பிடம் இல்லை. நெருப்பிடமாவது சிறிது நின்று சமாளிக்கலாம். அக் கொடியவனுக்கு இடவலி அமையின் பிறகு யாரும் அடியிட முடியாது. இடமும் பொழுதும் வலியும் துணையும் நமக்கு அநுகூலமாய் அமைந்துள்ள இப்பொழுதே அவனை எப்படியும் தொலைத்துவிட வேண்டும்; ஒரு நிமிடமும் தாமதிக்க லாகாது; விடை கொடுங்கள்" என்று அவர் விரைந்து நின்றார். உடனே சிறந்த குதிரைப் படைகளையும், கைதேர்ந்த போர்வீரர்களையும் அனுப்பிவைத்தான். போயன் (Bowen), டல்லாசு (Dollas) முதலிய படைத் தலைவர்

கள் எட்டப்ப நாயக்கரை நல்ல வழிகாட்டியாகவும், உள்ளாளாகவும் உள்ளங்கொண்டு ஊக்கிஎழுந்தார். படைகள் அடர்ந்து வடதிசை நோக்கித் தொடர்ந்து போயின. அந்தப் போக்கில் அவருடைய ஊக்கம் பொங்கி எந்த நோக்கிலும் முந்தி நின்றது.

### கடிது சூழ்ந்து நெடிது விரைந்தது.

சேனாபதியாகிய பானர்மேன் சேனைகளை அனுப்பி விட்டு அங்கு ஆகவேண்டிய காரியங்களை அதி விரைவாக ஆராய்ந்திருந்தான். ஒரு பிடி கண்டு உறு சுவை கொண்டுள்ளமையால் கட்டபொம்மையும் கட்டாயம் கைதியாக் கண்டுகொள்ளலாம் என்று வழிமேல் விழி வைத்து அவன் களி மிகுத்து நின்றான். நிற்பினும் இவ் வீரரது அடலாண்மையை நினைந்து அச்சமும் ஐயமும் கொண்டு மறுநாள் மாலையில் மீளவும் சில படைகளை வினை விளைவுகளோடு வடதிசைக்கே மிடலுடன் ஏவினான்.

அவ்வளவோடு அமையாமல் கலெக்டர் லஷிங்டனைக் கொண்டு இந் நாட்டிலுள்ள எல்லாப் பாளையகாரர்களுக்கும் கடிதங்கள் எழுதுவித்து யாண்டும் கடுமைகளை விளைவித்தான்.

### கடிதக் குறிப்புகள்.

"பாஞ்சாலங் குறிச்சிப் பாளையகாரனாகிய கட்டபொம்மு இப்பொழுது வெளியேறி யுள்ளமையால் அவனுக்கு யாரும் சிறிதும் இடம் கொடுக்க லாகாது. கொடுத்தால் குடிகேடு நேரும். அவனைக் கையோடு பிடித்துக் கொடுப்பவர்க்கு உயர்ந்த வெகுமதிகள் உவந்து கொடுக்கப்படும். மேலும் கும்பினியாருடைய தயவுக்கு அவர் பாத்திரராய் இந்நாட்டில் தலைமையுடன் நிலைபெற்று வாழலாகும். இக் கட்டளையைக் கவனத்தில் வைத்துக், காலத்தை வீண் போக்காமல் விரைந்து முயன்றவர் சிறந்த பயன் பெறுவர்; ஊக்கி உழைப்பவரைக் கும்பினி நோக்கி நிற்கின்றது" என இங்ஙனம் வரைந்து விடுத்த கலெக்டருடைய உத்தரவுகள் இடங்கள் தோறும் பறந்து சென்றன.

இன்ன விதமான சன்மானங்களும் மரியாதைகளும் எய்துவனவா யிருந்தும் இம் மன்னருக்கு விரோதமாய் வெளிவர யாரும் விரைந்து துணிந்திலர். ஊதியம் கருதித் தீது செய்திலரேனும் இவருக்கு இடம் கொடுக்கவோ, வேறு வகையான

உதவிகள் செய்யவோ உள்ளஞ்சி ஒதுங்கி நின்றார். சிலர் கும்பினிக்கு நம்பிக்கையாக உதவி செய்வார் போன்று கபடமாய் நின்று கரவுடன் நடித்தார். கூடிப் போன படைகள் நாடும் காடும் தொடர்ந்து இடங்கள் தோறும் ஓடி ஓர்ந்து தேடலாயின.

ஓட்டமும் தேட்டமும் நாட்டமும் கூட்டமும் கும்பினியின் ஈட்டங்களாய்க் குலாவி நிலாவின. வேட்டையில் தப்பிய ஒரு புலி ஏற்றைக் காட்டில் கடிது தேடும் வேடர்கள் போல் நாட்டில் அவர் தேடி அலைந்தார். கோலார்பட்டியில் எப்படியும் தப்பாது பிடித்து விடலாம் என்று உறுதி பூண்டு மிக்க எச்சரிக்கையோடு சுற்றி வளைந்து நின்ற பட்டாளங்களை இவ் வெற்றி வீரன் வெட்டி யுடைத்து வெளியேறிப் போனது தேசம் எங்கும் பெரிய அதிசயமாய்ப் பெருகி நின்றது. வெள்ளையரும் வியப்பில் ஆழ்ந்து உள்ளம் கலங்கி உளைந்திருந்தார். அன்று இவர் வென்று சென்ற நிலை சேனைத் தலைவன் குறிப்பிலும் சிறப்பாய் வெளிப்பட்டு வந்தது. அடியில் வருவது அறியவுரியது.

"Skirmishing ensued, in which both parties sustained considerable loss. Cataboma Naig's followers were however dispersed; but he effected his escape, attended by only six persons, who with himself were mounted on horses." (R.G.)

"மூண்ட சண்டையில் இரு பகுதியிலும் பலர் இறந்தனர்; தன்னைச் சேர்ந்து வந்தவர் சிதறி நிற்கக் கட்ட பொம்மு நாயக்கர் மாத்திரம் ஆறு பேர்களோடு குதிரைகளில் ஏறி விரைந்து தப்பி வெளியேறிப் போய்விட்டார்" என்று வாய்விட்டு இவ்வாறு அவன் உரைத்திருத்தலால் அன்று வளைந்து நின்ற சேனையைக் கடந்து இம் மானவீரன் போயுள்ள நிலையையும் போக்கின் வேகத்தையும் ஊன்றி நோக்கி உள்ளம் வியந்து நிற்கின்றோம்.

அரிய பல அதிசய நிலைகள் இவரது சரிதையில் பெருகி வந்துள்ளன. வீரத்திறலும் தீர தைரியமும் யாண்டும் வீறு கொண்டு விரிந்து நிற்கின்றன. பரியில் இவர்ந்து அரியேறுபோல் பாய்ந்து ஒருவரும் தொடராவகை அறுவரோடு இவர் அடர்ந்து போனது அதிசயக் காட்சியாய்த் தோன்றியது. யாதும் தோன்றாமல் மதிமருண்டு நின்ற தானைபதி ஆண்டு விதிவசமாய்ச் சிக்கிப் பதிபெயர்ந்த துயரைப் பார்த்துப் பரிதாபமாய் நொந்தார்.

---

## இருபத்தைந்தாவது அதிகாரம்.

## மந்திரி மடிந்தது.

மந்திரிப் பிள்ளை பிடிபட்டு வந்திருப்பதைக் குறித்துக் கும்பினியாருக்குப் பானர்மேன் நீண்ட கடிதம் ஒன்று எழுதினன். அதில் அவர்மீது அவன் கொண்டிருந்த கடுப்பும், கொதிப்பும் கருத்தும் குறிக்கப்பட்டுள்ளன. அவரை எப்படியும் வெளியே தப்பவிடாமல் அடியோடு சாக அடிக்க வேண்டும் என்றே கொடிய கொலை நோக்கமாய்க் குறிக்கொண்டு நின்றான். தன்னுடைய கருத்தை நிறைவேற்றக் கருமச் சூழ்ச்சியோடு மேலே உள்ள ஆட்சியாளருக்கு அவன் கடிதம் எழுதினன். அந்த வெள்ளையன் எழுத்து பிள்ளையின் கழுத்துக்குப் பெருங் கேடாய் மூண்டு வந்தது. கொடுமையாக் கொல்லக் கருதிக் கடுமையா அவன் எழுதியபடியை அயலே காண வருகிறோம்.

### படைத்தலைவன் எழுதியது.

“மாட்சிமை தங்கிய கும்பினிக்கு வணக்கமாய் எழுதிக் கொண்டது. இங்கே கொடும் பகையாய் நீண்டிருந்த கட்ட பொம்மு நாயக்கர் சில கூட்டத்துடன் கோட்டையை விட்டு வெளியேறி விட்டார்; நாளது 9-ந் தெய்தி பகல் 10 மணிக்குக் கோட்டை பிடிபட்டது. ஓடிப்போன கட்ட பொம்மை இடையே கோலார்பட்டியில் போய் நம் படைகள் வளைந்து கொண்டன. அதில் அகப்படாமல் எப்படியோ குதிரை யேறி அவர் தப்பிப் போய் விட்டார். அவருடன் ஆறு பேர் குதிரைகளில் பின் தொடர்ந்து போயிருக்கிறார். தானாபதி சுப்பிரமணியபிள்ளை யுள்பட 34 பேர் பிடிபட்டு வந்துள்ளனர். பிள்ளை கைதியாய் என் கைவசம் வந்துள்ளதை நினைந்து நான் பெரு மகிழ்ச்சி அடைந்திருக்கின்றேன். அவன் ஒருவன் அகப்பட்டதே நம் வெற்றிக்கெல்லாம் அறிகுறியாகும். ஜமீன்தார் இன்று பிடிபட்டு வந்திருந்தாலும், இப் பிள்ளை வரவில் கொண்டது போல் என் உள்ளம் களித்திராது. வெள்ளையர் ஆட்சிக்கு இவன் ஓர்

வேர்ப் புழுவாய் உள்ளவன். அஞ்சா நெஞ்சனாகிய அக் கட்ட பொம்மைப் பலவகையிலும் நெஞ்சம் திரித்துக் கெட்டவனாக்கி நம்மேல் மிகவும் வன்சினம் மூளும்படிசெய்தவன் இவ் வஞ்சகனே யாவன். வெளி நாட்டினர், இங்கே வியாபாரம் செய்து பிழைக்க வந்தவர், பிழைகள் புரிபவர், மெலியர், கொடியர், சூதர் என எங்கும் நம்மை இளிவாகத் தூற்றி நம் நெல்லைக் கொள்ளை செய்து அல்லல் பல ஆற்றிச் சுதந்திரத்தை என்றும் நிரந்தரமாக நிலை நிறுத்தி வரி தரா வகை மறுத்துக் கட்டபொம்மை ஒட்டாரம் செய்து வரும்படி ஊக்கி நம் பட்டாளங்கள் பல பாழடையுமாறு மூட்டி விட்ட இப் படு கோளனைத் தூக்கில் இட்டால் அன்றி நமக்கு ஆக்கம் உண்டாகாது. இவன் ஒருவன் மட்டும் தொலைந்தால் நாம் என்றும் தொலையா வெற்றியுடையராய் இங்கே நிலையா யிருக்கலாம். இக் கொடியவனது நிலைமையைப் பல வகையிலும் தெளிவாக நேர றிந்து கும்பினிக்கு நலமாக முடிவு செய்துள்ளமையால் எனது காரிய நிலைமையைத் தலைமை அதிபதிகள் தவறாகக் கருத மாட்டார்கள் என்று நான் உறுதியாக நம்பியிருக்கிறேன்" என இங்ஙனம் கொலை நோக்கோடு எழுதி விடுத்து அங்கே புலைநோக்கங்கள் புரிந்திருந்தான்.

கும்பினிப் படைகளுக்குத் தலைமைத் தளபதியாய் அமைந்துள்ள பானர்மேன் (Bannerman) பாஞ்சாலங்குறிச்சி மன்னனின் மந்திரி ஆகிய சிவசுப்பிரமணிய பிள்ளை மேல் கொடுஞ் சினங்கொண்டு கடுங் கேடு சூழ்ந்திருப்பது பல வழிகளிலும் வெளியாயுள்ளது. கும்பினி ஆட்சிக்குக் கொடிய விரோதி இப் பிள்ளையே என்று அவ் வெள்ளையன் முடிவு செய்து கொண்டமையால் யாண்டும் இவர்மேல் கறுவு கொண்டு மூண்டு நின்றான். சினமும் சீற்றமும் நீண்டு வந்தன. கோலார்பட்டி அரண்மனையில் அன்று பிடிபட்டவர்களுள் பிள்ளையும் ஒருவராய் அகப்பட்டதை அறிந்ததும் அவன் உள்ளம் களித்து உவந்து துள்ளினான். தன் காரியம் இனி வீரியமாய் வெற்றி பெறும் என்று விழைந்து விரைந்தான். கும்பினி அதிபதிகளுடைய உள்ளங்கள் இப் பிள்ளைமீது வெறுப்படைந்து வீறு கொள்ளும்படி குறிப்பு

களைக் கூர்ந்து வரைந்து தன் கருத்தை விரைந்து முடிக்கத் துணிந்தான். அவனுடைய உரைகளுள் சில இங்கு அறிய வருகிறோம்.

"Thirty four of Cataboma Naig's principal dependents were secured; among whom are Subramanea pilly, his principal manager, and Subramanea's brother.

I conceive the seizure of these two men, particularly the former, of more importance to the future success of my operations, and the consequent re-establishment of order and tranquillity in these countries, than if Cataboma Naig was my prisoner:

They are men of good ability, and of the most intriguing dispositions; and the former has acquired considerable wealth, which I have every reason to believe he would willingly expend in making resistance to the authority of Government.

This Subramanea had acquired such influence over Cataboma, as entirely to regulate every public act in which he engaged; and that the latter's conduct, in resisting the Company's authority, and in the exercise of independent power, contrary to his allegiance, was the effect of Subramonea's advice."

Camp at
Nagalapuram

(John Bannerman)
11—9—1799.

"கட்டபொம்மைச் சேர்ந்த தலைமையானவர் முப்பத்து நான்குபேர் பிடிபட்டுள்ளனர்; மந்திரி சுப்பிரமணிய பிள்ளையும் அவருடைய தம்பியும் இதில் அடங்கியிருக்கின்றனர்; முன்னவன் இதில் மிகவும் முக்கியமானவன்; கட்டபொம்மைப் பிடிப்பதைக் காட்டிலும் இவன் பிடிபட்டது நம் அதிட்டமே; இவன் ஒருவனை ஒழித்துவிடின் நமது காரியங்கள் யாவும் வெற்றி பெற்றனவாம்; கும்பினி ஆட்சியை இந் நாட்டில் அமைதியாய் நன்கு தாபித்தபடியாம். அண்ணனோடு தம்பியும் அகப்பட்டான். இந்த இருவரும் நல்ல அறிவாற்றலும் கபட யுத்திகளும் கரும தந்திரங்களும் வாய்ந்தவர். இவருள் மூத்தவன் நிறைந்த செல்வம் உடையவன்; நமது கும்பினி ஆட்சியை ஒழிப்பதற்குத்

தன் பொருள் முழுவதையும் செலவழிக்க அவன் துணிந்திருக்கிருன்; சிறந்த செல்வாக்கு அவனிடம் அமைந்திருக்கிறது. ஜமீன்தாராகிய கட்டபொம்மைக் கெட்ட வழிகளில் தூண்டிக் கேடுகள் பல அவன் செய்துள்ளான்; சமீபத்தில் நடந்த போருக்கெல்லாம் அவனே மூலகாரணம்; கும்பினியாரை அடியோடு ஓட்டி ஒழித்து இந் நாட்டில் தலைமையான தனி அரசா யிருக்கலாம் என்று ஜமீன்தாரை மூட்டி விட்டு எவ் வழியும் நமக்கு அவன் இடர்களே செய்திருக்கிருன். கும்பினியாரிடம் கட்டபொம்மு கொண்டிருந்த உறவுரிமையும், இயல்பான அரசு முறைமையும் பிள்ளையினுடைய துர்ப்போதனைகளாலேயே மாறிப் போயின" என்று இன்னவாறு அந்த வெள்ளைத் துரை எழுதியிருத்தலால் இந்தப் பிள்ளை மீது அவன் கொண்டுள்ள உள்ளக் கொதிப்பும் பகைமைக் கடுப்பும் வஞ்சம் தீர்க்க நெஞ்சம் துணிந்துள்ளதும் வகையாய் உணர்ந்து கொள்ளலாம்.

கட்டபொம்மு நல்ல ஆட்சிப் பொறுப்பு உடையவன்; ஒரு அரசன் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமையை நன்கு அறிந்தவன்; கும்பினியார்பால் அன்புரிமை கொண்டவன்; அந்த நல்ல தன்மைகள் எல்லாம் பிள்ளையின் கெட்ட போதனைகளால் பிழைபட்டுப் பேதமாயின என்று சேனுதிபதி கூர்மையோடு ஓர்ந்து இங்கே குறித்திருக்கிருன். பல நிலைகளையும் ஆராய்ந்து எழுதிய இந்தக் குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

His Allegiance என்று கட்டபொம்மைக் குறித்து ஈண்டு அவன் தெளிவாக எழுதியிருப்பதை விழியூன்றி உணர வேண்டும். அலீஜியன்ஸ் என்னும் ஆங்கில வார்த்தைக்குத் துரைத்தன நீர்மை, அரசு முறைமை என்பது பொருள். நெறியான நல்ல அரசு அமைச்சின் அவல மதியால் நெறிகெட்டு அல்லல் அடைந்துள்ளது. அந்த உண்மையைப் பகைவன் மொழியே தகைமையாய்த் துலக்கி விளைவுகளை யெல்லாம் நேரே விளக்கியருளியது.

மந்திரி பிழையா யிருந்தால் எந்த அரசும் நிலையாது அழிந்து போம் என்பதை இந்த அரசின் சரிதம் விழிதெரிய விளக்கி நின்றது. சேர்ந்த அமைச்சு நிலையால் அரசு சீரழிய நேர்ந்தது.

பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி யுறும். (குறள், 639)

பிழையான எண்ணங்களை யுடையனாய் மந்திரி பழுது பட்டிருப்பின் எழுபது கோடி பகைவர் திரண்டு செய்ய முடியாத அழிவு அவனால் விளைந்துவிடும் எனத் தேவர் இங்ஙனம் மொழிந்திருக்கிறார். அமைச்சு பழுதானால் அரசு அடியோடு பாழாம்.

நாடாளும் வேந்தர் கேடானவர்களோடு தொடர்பு கொள்ளலாகாது; கொண்டால் கொடிய துயரங்கள் மூண்டுகுடிகேடு நேரும் என்பதை இக் கோமகன் நிலை படியறியச் செய்தது.

நல்ல கல்வியறிவுள்ள பிள்ளையும் பொல்லாத பழக்கத்தாலும் செல்வச் செருக்காலும் ஆட்சித்திமிராலும் அவகேடராய் நேர்ந்தார். இந்தப் பிள்ளை யிருந்தால் வெள்ளையர் ஆட்சி ஈண்டு எள்ளளவும் நில்லாது என்று அவ் வெள்ளையன் நன்கு தெரிந்து கொண்டான் ஆதலால் உள்ளம் கடுத்து மேலே உருத்து எழுதினான். கொடிய கொலைகருதி நிலையைக்கடுமையாக் காட்டினான்.

இதனால் அச் சேனாபதியின் மன நிலையும், இத் தானாபதியின் வினை நிலையும் இனிது புலனாம். இவ்வாறு மேலேயுள்ள அதிகாரிகளுக்கு எழுதி யனுப்பி விட்டு, இரண்டு நாள் வரையும் இடை யாறிப் படைகளுடன் அங்கு அவன் கொடிதாய் இருந்தான். கருமச் சூழ்ச்சிகள் யாவும் மருமமாய் நடந்தன.

## தானாபதி தவித்து நொந்தது.

பிடியுண்ட பிள்ளை சிறைக்குள்ளே பெருங் கலக்கத்துடன் வருந்தி யிருந்தார். பதி விட்டுப் பெயர்ந்தது மதி கெட்ட செயல் என மறுகி நொந்தார். மன்னன் சொல்லைக் கேளாமல் மடத்தனம் செய்து இடையே இப்படிக் கேடு அடைய நேர்ந்ததே! என் சொல்லை நம்பி வெளியேறிய அவர் அல்லல் அடையும் தோறும் "பிள்ளை கெடுத்தானே!" என்று என்னை எள்ளி இகழ்வரே! இனி என்ன செய்வது? என இன்னவாறு எண்ணி யுளைந்து இன்னல் மீக்கூர்ந்து இடருள் ஆழ்ந்து படருழந் திருந்தார். அவரது நிலையினைக் கண்டு தம்பியும் கலங்கித் தளர்ந்து நைந்தார்.

" அண்ணு! துரை உங்கள் மீது கொடுங் கோபங்கொண்டு கொத்திருக்கின்ருரே! என்ன செய்து விடுவாரோ தெரியவில்லையே! பெரிய துயரமா யுள்ளதே!" என்று அவர் ஏங்கி மொழிந்தார்.

சுப்பிரமணிய பிள்ளை:— சண்டை நடந்த பொழுது நான் கோட்டையில் இல்லை ஆதலால் என் மேல் அவனுல் என்ன குற்றம் சொல்ல முடியும்? அந்த எட்டையாபுரத்தான் உள் துப்பாயிருந்து உளவு சொல்லித் தூண்டி யிராவிட்டால் நமக்கு இப்படி இழவு வந்திராது; இருக்கட்டும்; எப்படியும் தப்பி நான் வெளியேறிய பிற்பாடு அவன் பாளையம் பாழாகும் படிக்கான வேலையைச் செய்கிறேன். வேளையை எதிர்பார்த்திருக்கிறேன்.

வீரபத்திர பிள்ளை:— அண்ணு! என்ன நீங்கள் இப்படி எண்ணுகிறீர்கள்! துரை இருக்கிற நோக்கத்தைப் பார்த்தால் நம்மை வெளியே விடுவார் என்று தோன்ற வில்லையே; பட்டாளங்கள் கட்டாகக் காத்திருக்கின்றனவே; இந்தக் கட்டாப்பில் நாம் என்ன செய்ய முடியும்? யாது நேருமோ தெரியவில்லையே!

சுப்பிரமணிய பிள்ளை:—பட்டாளங்கள் இருந்தால் என்ன? முட்டாள்தனமாகவா காரியம் செய்வான்? ஒழுங்கா விசாரணை செய்துதானே தீர்ப்புக்கு வருவான். அப்பொழுது பார்த்துக் கொள்கிறேன். முன்னம் கும்பினி அதிபதிகளிடமே நான் நேர் நின்று பேசிக் காரியத்தை முடித்து வந்திருக்கிறேன்; இடையில் வந்த இவன் தலைவர்களிடம் கலந்து ஆலோசியாமல் தானுக நம்மை என்ன செய்துவிடுவான்?

வீரபத்திர பிள்ளை:— ஐயோ! அண்ணு! படைத் தலைவனுக்குக் கொல்லும் கொலையாதி எல்லா அதிகாரங்களையும் கொடுத்திருப்பார்களே! இவர் வைத்ததுதானே சட்டம். இவருடைய மனம் போல இங்கே என்னமும் செய்யலாமே!

சுப்பிரமணிய பிள்ளை:— இவன் வரம்பு மீறி ஒன்றும் செய்ய முடியாது. நாம் நேரே திருச்சிராப்பள்ளிக்காவது சென்னபட்டணத்துக்காவது சென்றிருந்தால் இந்த இன்னல் வந்திராது; தலைவர்களைக் கண்டு பேசியிருப்பேன்! எல்லாம் நல

மாய் முடிந்திருக்கும். நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் வேறு நினைத்ததே! இனி அதை நினைந்து என்ன செய்ய? வருவது வரட்டும். உறுதியோடு நாம் பொறுதியா யிருப்போம்.

இவ்வாறு இருவரும் இரவு பரிவாய் உரையாடி யிருந்தார்.

மறுநாள் விடிந்தது. தான் கருதியுள்ளதை உறுதியுடன் முடிக்கச் சேனபதி ஊக்கி எழுந்தான். பட்டாளங்களைக் கட்டாக நிறுத்தினன். தக்க துணைவர்களைப் பாதுகாப்போடு பக்க முறச் செய்தான். அயலிலுள்ள ஜமீன்களிலிருந்து சில தானபதிகளைத் தந்திரமாக அங்கு வரவழைத்திருந்தான். அரண்மனை அருகே அமைத்திருந்த தன் கூடாரத்தின் முன் அனைவரும் வந்து கூடி யிருந்தார். சூரியன் உதயமாகி ஏழரை நாழிகை அளவில் அதாவது செப்டம்பர் மாதம் பதின்மூன்றாந் தேதி (13—9—1799) முற்பகல் 9 மணிக்குச் சிறையிலிருந்த தானபதியையும் அவர் தம்பியையும் கொண்டு வரும்படி சேனபதி பணித்தான். சேவகர்கள் கொண்டு வந்து நிறுத்தினர். பாவம்! பிள்ளை நிலை அன்று பரிதாபமாயிருந்தது. நாளும் சிவ பூசை செய்கின்ற அவர் நாலு நாளாகக் குளிப்பு ஒன்று மின்றி அழுக்குஉடையுடன் அங்கு அவலமாய் வந்து அலமந்து நின்றார். நகரிலுள்ளவர் யாவரும் என்ன நிகழுமோ? என்று இன்னல் நிலையில் மறுகி ஆவலோடு கூடி அயலெங்கும் நிறைந்து நின்றார். நாகலாபுரம் அன்று ஏகக் கலக்கமாய் இனைந்து நின்றது.

## கொலை புரிந்தது.

நீதி விசாரிக்கும் பாவனையாகச் சிலரை முன்னுற நியமனம் செய்து கொண்டு தானபதியை நிமிர்ந்து நோக்கி, "பிள்ளையே! கும்பினி நெல்லைக் கொள்ளை செய்தாய்! கொலைகள் விளைத்தாய்; எல்லை மீறி எம் குடிகளுக்கு இடர்மிக இழைத்தாய்; எங்களுக்கு வரி தர ஒட்டாமல் உன் ஜமீன்தாரைத் தடுத்து இடையூறுகள் பல இடையறாது செய்துள்ளாய்; உன்னுடைய கொடுஞ் செயல்கள் நெடுந் துயரங்களாய் நீண்டு கும்பினியாருக்குக் கொதிப்பை விளைத்துள்ளன; ஆதலால் சட்டப்படி இன்று

உனக்குத் தூக்குத் தண்டனை விதித்திருக்கின்றேன்" என்று அவன் உருத்துச் சொன்னான். அச் சொல்லைக் கேட்டவுடனே பிள்ளை உள்ளங் கலங்கி உறுதி குன்றித் தம் பெருமித நிலைக்குப் பிழை யுண்டாகும்படி சில பிதற்றலானார்: "துரைகளே! இனி மேல் ஒரு தவறும் செய்யேன்; என் பதவியை விட்டு இன்றே விலகிக் கொள்ளுகிறேன்; இம்முறை என்னை * மன்னித்தருளுங்கள்" என்று மறுகி நின்று உருகி வேண்டினார். அவன் யாதும் இரங்காமல் அருகே நின்ற படைவீரரை ஆர்த்து நோக்கினான். உடனே கொலையாளிகள் பாய்ந்து பிள்ளையைத் துடிக்கப் பிடித்தார். அருகே நின்ற தம்பி "ஐயையோ! அண்ணா!" என்று அலறிக் கூவினார். அயலே நின்ற நகர மக்களெல்லாரும் அஞ்சி மறுகினர். பிடித்த அப் பாதகர் யாதும் தாழாமல்கடுத்துக் கொண்டு போய் எல்லாருக்கும் தெரியும்படியாக வெளியே நின்ற ஓர் பெரிய வேப்ப மரத்தில் பிள்ளையைக் கொடியதாய்த் தூக்கி விட்டார். பாவம்! தானாபதி மானங் குலைந்து துள்ளித் துடித்துத் துயரமாய்த் தூங்கி உயிர் நீங்கினார்.

## தலை அரிந்தது.

இறந்து போன பின்னரும் என்றும் மறந்து போகாதபடி அச் சேனாபதி ஈனமானதோர் வன் கொடுமையை இரக்கமின்றிச் செய்தான். அச் செயலை இன்று நினைப்பினும் நெஞ்சை வருத்தும். பிணமாய்க் கிடந்த இப் பிள்ளை தலையை அறுத்து எடுத்துக் கொண்டுபோய்ப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை முன்னே நெடிய கழு ஒன்று நாட்டி அக் கொடிய ஈட்டி முனையில் அதனை மாட்டி வைக்கும்படி பணித்தான். முண்டம் நாகலாபுரத்தில் நரி நாய்களுக்கு இரையாய் நாறிக் கிடக்க, மண்டை பாஞ்சைப் பதி முன் கண்டவரெல்லாரும் கலங்கி அஞ்சக் கழிந்து நின்றது.

இதனால் அவனது கொலையஞ்சாத நெஞ்சு நிலையும் கொடுமையும் வன்மமும் நெடிய படு பாதகமும் நேரே அறியலாகும்.

---

* இங்ஙனம் இழிந்து மொழிந்தது அவன் மனம் இரங்கி விட்டு விடுவான் என்று கருதி. அபாயத்தில் தப்ப உபாயம் நாடியபடி இது. எதுவாயினும்மரண பயம் அவரைமறுகச்செய்ததென்றுதெரிகின்றது.

பிள்ளையைத் துள்ளத் துடிக்கக் கொல்லவும், கொலை யுண்ட பின் தலையைக் கொய்து இப் புலை நிலையில் வைக்கவும், அவரைப் பிடித்துக் கொடுத்த எட்டப்ப நாயக்கருக்குப் பெரும் பரிசில் தரவும், அவன் குற்ற விசாரணை செய்வதற்கு முன்னதாகவே தன் நெஞ்சுள் குறிக் கொண்டிருந்தான். அவ்வுண்மை கவர்னர் ஜெனரலின் காரியதரிசியாகிய வெபு துரைக்குச் செப்டம்பர் மாதம் பதினோராந் தேதி அவன் எழுதியுள்ள கடிதத்தால் தெளிவுறுகின்றது. கருமம் சூழ்ந்திருந்தது மருமமாய் வெளிவந்துளது. அந்த அசல் கடிதத்திலிருந்து சிறிது அடியில் வருவது காண்க.

"Subramaniya Pillai is this instant brought a prisoner to my tent. I have given directions, that the Etteapuram—man's party, which came in charge of him, may be handsomely rewarded, and that Subramaniya Pillai shall be hanged in the most conspicuous part of the village of Nagalapuram, and his head afterwards carried and fixed on a pike at Panjalam kurichy."

(Signed) JOHN BANNERMAN,

Camp at Nagalapuram, 11th Sept. 1799.

" சுப்பிரமணிய பிள்ளை கைதியாய் இப்பொழுது என் கூடாரத்துக்குக் கொண்டு வரப் பட்டுள்ளான். அவனைப் பிடித்துக் கொண்டு வந்துள்ள எட்டையாபுரம் ஜமீன்தாருக்குச் சிறந்த வெகுமதிகள் கொடுக்கவும், பிள்ளையை நாகலாபுரத்தில் எல்லாருக்கும் தெரியும்படி பகிரங்கமான வெளி யிடத்தில் தூக்கிக் கொல்லவும், கொன்றபின் அவனுடைய தலையை அறுத்துக் கொண்டு போய்ப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை எதிரே நெடிய கழுமுள் ஈட்டியில் நட்டி வைக்கவும் கருதி நான் உறுதிகள் செய்திருக்கிறேன்"

என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

கொடிய கொலைபாதகத்தைக் கடுமையாய்ச் செய்ய அவன் முடிவு செய்துள்ளதை இதனால் தெளிவா அறிந்து கொள்கிறோம். இது எவ்வளவு கொடுமை! எத்துணைப் பாவம்! எத்தனை பழிப் புலைகள்! இதனை ஈண்டு உய்த்துணரவேண்டும்.

இந்தத் தானுபதிப் பிள்ளைமேல் அந்தச் சேனுபதி வெள்ளையன் கொண்டுள்ள கோபக் கொதிப்புகளும் கொடுமைக் கடுப்புகளும் சரித்திரத்தில் இடங்கள்தோறும் வெளிப்பட்டுள்ளன.

வெள்ளை மூஞ்சிக் குரங்கு என்று பிறகட்டை இவர் எள்ளி வைததும், வெள்ளையரை யாண்டும் இகழ்ந்து வந்துள்ளதும் அவன் செவியில் புகுந்து உள்ளத்தை எரித்து வந்துள்ளமையால் இவ்வாறு உருத்து நின்று உயிரை வதைக்க நேர்ந்தான். இரக்கம் என்பது சிறிதும் இல்லாத அரக்கத்தனம் பிறப்பிலேயே அவனிடம் பெருகியிருத்தலால் பிள்ளையின் பரிதாபநிலையை ஒரு சிறிதும் கருதாமல் அடு புலியாய்க் கொடிய படுகொலை புரிந்தான்.

மரண பயத்தால் மறுகி மன்றுடி இவர் மன்னிப்புகள் கேட்டிருக்கிருர்; கேட்டும் அவன் யாதும் இரங்காமல் கொன்றே தொலைத்தான். பிள்ளை பரிந்து வேண்டியது எள்ளலாயது.

"Subramonea Pilly did not attempt to deny any of these charges; all that he offered in excuse of his conduct was that he had long wished to withdraw himself from the service of his master." (R. G.)

"தன் மேல் குறித்த குற்றச் சாட்டுகள் எதையும் சுப்பிரமணிய பிள்ளை மறுக்கவில்லை; தனது ஜமீன்தாரின் உத்தியோகத்திலிருந்து தான் முன்னமே விரும்பியுள்ளபடி அப்பொழுதே விலகிக் கொள்வதாகவும், தன்னை மன்னித்து விட வேண்டும் என்றே வேண்டினன்" என இங்ஙனம் குறித்திருத்தலால் பிள்ளை உள்ளம் கலங்கி அங்கே உரைத்திருப்பதை இங்கே கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். மூண்ட அழிவு நிலையிலிருந்து தப்பி மீண்டு வாழலாம் என்று முயன்றும் முடியாமல் மாண்டே முடிந்தார். செத்துப் போவோம் என்ற பயம் எவரையும் சித்தம் கலங்கச் செய்யும் ஆதலால் அந்த நிலையில் குலை கலங்கி இவர் நிலைகுலைந்திருக்கிருர். பல வழிகளிலும் தைரியமாய் நின்று கும்பினியை எதிர்த்து இந் நாட்டின் பெருமையை நாட்டி வந்தவர் இறுதியில் உறுதிகுலைந்து மறுகியிருப்பது பரிதாபமாயுள்ளது.

உயர்ந்த குடியில் பிறந்தவர்; நிறைந்த செல்வம் உடையவர்; சிறந்த அறிவாளி; நல்ல சொல்வன்மை யாளர்; தேச காரியங்களை நன்கு நடத்தி வந்தவர்; அயல் நாட்டார் ஈண்டு வந்து ஆட்சி செய்ய மூண்டார் என்றதும் யாண்டும் வெறுத்து அவரை இகழ்ந்து நின்றார்; அந்த நிலையில் பெருகிய உள்ளச் செருக்காலும் பொல்லாச் செயலாலும் அல்லலுழந்து பிள்ளை அலமந்து அழிந்தார். கொலை புரியும்படி அந்த வெள்ளையன் குறித்தவுடனே இந்தப் பிள்ளையை ஒல்லையில் கொல்ல மூண்டு கொலையாளிகள் கொண்டு போனார். அந்த நிலையைக் கண்டு அவ்வூரார் எல்லாரும் நெடுந் திகிலடைந்து குலைநடுங்கி அழுதார். தலைமறைவாய் நின்று பல பல புலம்பிப் பரிதபித்து நொந்தார்.

பிள்ளை துடித்து உயிர்மாளத் தம்பிமுதல்
அனைவருமே பெரிதும் கூவி
வெள்ளமென விழிநீர்கள் வீழவாய்
விட்டழுதார்; வெள்ளைப் பாவி
உள்ளம்மிகக் கொடியதென உள்ளவரெல்
லாம்தம்முள் உளைந்து நொந்தார்;
துள்ளியுயிர் போனபின்பு பிள்ளை தலை
தனைத்துணித்துத் துணிந்து கொண்டு. (1)

கடிமதிள்சூழ் பாஞ்சாலங் குறிச்சிநகர்
மேல்பாலோர் கழுவை நட்டி
வடிகொளதன் முடிமீதில் அம்முடியை
மாட்டிவைக்க வகுத்து விட்டான்;
கொடியஅந்த நிலையினைக்கண் டனைவருமே
குலைநடுக்கம் கொண்டு நின்றார்;
படியிலிந்தப் படிவருமென்று ஒருவன்முடிவு
எவரறிந்து பகர வல்லார்? (2)

செத்தொழிந்து போனபின்னும் செயிர்த்துவந்து
தலையறுத்துச் சிறுமை யாக
வித்தொன்றும் இல்லாமல் வெய்யகொலை
பாதகத்தை விரைந்து செய்தார்;
மத்தொன்று தயிர்என்ன மாநிலத்தார்

உயிர்பதைத்தார்; மனத்தே ஆசைப்
பித்தொன்றி நின்றமையால் வெள்ளையர்கள்
பிழையாகப் பிழைக்க நேர்ந்தார். (3)

சொலஎன்ன! பொருள்என்ன! சூழ்ச்சிஎன்ன!
மாட்சி என்ன! சுருதி யுத்தி
வல்விரைந்து வரத்தொடுக்கும் வனப்பென்ன!
மதிப்பென்ன! மன்னனை
வெல்வருசீர்ப் பாண்டியனுக்கு ஈண்டியநட்
பாகிநின்ற மேன்மை என்ன!
அல்வினையாம் நெல்வினையால் அத்தனையும்
பாழாகி அழிந்த தந்தோ! (4)

(வீர பாண்டியம்)

இங்கே நிகழ்ந்துள்ள அழிவு நிலை எவரும் விழிநீர் சிந்தி அழ விளைந்திருக்கிறது. பலவகை நிலையிலும் செல்வாக்கோடு இந் நாட்டில் தலைசிறந்து வாழ்ந்து வந்த தானாபதிப் பிள்ளை முடிவு இவ்வாறு வெவ்விய பரிதாபமாய் முடிந்திருக்கிறது.

இவரை நேரே விசாரிக்கும் முன்னரே அந்த வெள்ளைத் தலைவன் இவரைக் கொல்லத் துணிந்து உள்ளத்தில் உறுதி செய்திருந்தது கொடிய தீமையாய் நெடிது ஓங்கி நின்றது. மேலே யுள்ள கும்பினி அதிபதிகள் சாலவும் பொறுமையாய் நீதி முறையோடு இதமா யாண்டும் நடந்து கொள்ள வேண்டும் என்று அத் தானைத் தலைவனுக்குப் பலமுறையும் உத்தரவு செய்திருக்கிறார்கள்; இருந்தும் இந் நாட்டிலுள்ள கோளர்களுடைய தூண்டுதலால் அவன் மூண்டு துணிந்து இந்தக் கொடிய கொலை பாதகத்தைக் கடிது செய்ய நேர்ந்தான். இந்தப் பிள்ளையை இன்று உயிரோடு வெளியே விடின் நாளையே கும்பினி ஆட்சி இந் நாட்டைவிட்டு அடியோடு ஒழிந்து போம் என மொழிந்த கோள்கள் அவனுடைய உள்ளத்தில் அழுந்தி நின்றமையால் அங்ஙனம் விரைந்து துணிந்து வெங்கொலை புரிந்தான்.

கொலை செய்ததை விடத் தலையைக் கொய்து கொண்டு போய் அந் நிலையில் நிறுத்தியது கொடிய புலையாம். உலகம்

அஞ்சி ஒடுங்கிக் கும்பினிக்கு அடங்கி விடும் என்ற ஆசையினுலேயே நெஞ்சம் துணிந்து அதனை நேரே செய்தான். பெரிய இராணுவ அதிபதி; அரிய இராச தந்திரி என்று பேர் பெறலாம் என்னும் பேராசை அவனைப் பிசாசாகச் செய்து விட்டமையால் பேய் வாய்ப்பட்ட பிள்ளை போல் இப்பிள்ளை அன்று துள்ளி மாண்டார். வெள்ளையன் உள்ளம் வெறிகொண்ட பாதகமாயது.

இவ்வளவு கொடுந் தண்டனையைத் தானுபதிக்கு விதித்து ஈனப்படுத்தியது மிகவும் அநீதியேயாம் என அக்காலத்தில் பலரும் கொதித்து நின்ருர் ஆயினும் கும்பினியின் அதிகார ஆற்றலுக்குப் பயந்து யாதும் எதிர்த்துப் பேசாமல் இரங்கி இருந்தார். நாட்டிலுள்ள மற்றவர் எல்லாரும் அச்சமுற்று அடங்கி விடுவார் என்னும் இச்சையால் இப் பச்சைக் கொலையைப் பானர்மேன் உச்ச நிலையில் இங்ஙனம் ஊக்கிச் செய்தான். இக் கொலை நிலையில் பலரும் நிலைகலங்கி நின்ருர் ஆதலால் பின்பு எங்கும் தலை நிமிர்ந்து அளவு கடந்த அதிகாரத்தை ஆங்காங்கு உளவு ஓர்ந்து உறுதி கூர்ந்து ஊக்கமா அவன் ஆற்றி வந்தான்.

தாம் பிறந்த நாட்டில் சிறந்திருந்த ஒரு பிள்ளையைப் பிடித்து அயல் நாட்டினர்பால் கொலை செய்யக் கொடுத்து அதற்கு விலையாகச் சில வெகுமதிகளைப் பெற்ற எட்டப்ப நாயக்கரை அன்று எல்லாரும் இகழ்ந்து திட்டினுர். திட்டுப்பட்டாலும் பட்டமும் பதவியும் ஒட்டிய துணையும் அவரை ஊக்கி நின்றன. ஆதலால் ஒன்றையும் கருதாமல் அவர் உறுதி கொண்டு நின்ருர்.

பிள்ளையைக் கொன்று இங்ஙனம் பேரிழவு கூட்டிய பின்பும் அவரது தம்பியுள்பட அங்குக் கைதியாய் நின்ற ௬௫ பேரையும் விடுதலை செய்யாமல் மீளவும் கொடிய நிலையில் சேனுபதி சிறையில் அடைத்து வைத்துச் செயிர் புரிந்திருந்தான்.

## பின்னும் ஒரு கொலை.

அதன் பின்பு நாகலாபுரம் ஜமீன்தாருடைய தம்பியாகிய சவுந்தரபாண்டிய நாயக்கரைக் கொண்டு வரும்படி செய்தான். அவர் ஜமீன் மானேஜராய் அமர்ந்து வேண்டிய காரியங்களை

ஆண்டகைமையுடன் செய்து தலைமையருக்குப் பலவகையிலும் துணை புரிந்து வந்தவர். நல்ல அழகர். அஞ்சா நெஞ்சர். மந்திரியாகவும் தந்திரியாகவும் மருவி நின்று அரிய வினைகளை ஆற்றி நின்றார். ஆள் வினையிலும், வாள்வினையிலும் வல்லவரான அவர் பிள்ளையைப் போலவே வெள்ளையரை யுள்ளிகழ்ந்து வெளியில் அவரது ஆட்சியில் அல்லல் புரிந்து வந்தார். கும்பினியாருடைய ஆணைக்கு அடங்காமல் யாண்டும் தன் மூப்பாகத் தழைத்து வந்தமையால் கடுப்பு மீக்கொண்டு அவரை அடக்கத் துணிந்து பானர்மேன் படைகளை அனுப்பிப்பிடித்து வரச்செய்தான். முதல் நாள் இருபது நாழிகைக்கு அதாவது செப்டம்பர் மாதம் 12-ந் தேதி (12—9—1799) பிற்பகல் 2- மணிக்கு அவர் கைதியாய்ப் பிடிபட்டு அங்கு வந்து சேர்ந்தார். பிள்ளைக்கு மரண தண்டனை விதித்தவுடனே அவரை நேரே கொண்டு வந்து நிறுத்தினர். நின்ற அவரை அவன் கன்றி நோக்கி, "நீ கும்பினிக்கு விரோதமாய்ப் பல வம்புகள் செய்திருக்கின்றாய்; அறுப்புக்கோட்டை, கோபாலபுரம் முதலிய இடங்களில் கொள்ளைகள் புரிந்து தொல்லைகள் செய்துள்ளாய்; எங்கள் எல்லையை மீறி அல்லல் புரிந்துள்ள பொல்லாதவனான உன்னைக் கொல்லும்படி தூக்குத் தண்டம் இன்று சொல்லியிருக்கிறேன்" என்று சொல்லி முடித்தான். அச்சொல் அங்கிருந்தவர்களுக்குத் திகிலைவிளைத்தது.

## சவுந்தரபாண்டியன் மொழிந்தது.

அக்கொடுஞ் சொல்லைக் கேட்டவுடனே அவர் யாதும் அஞ்சாமல் பல்லைக் கடித்துப் படு சினம் கொண்டு நேரே அவனைப் பார்த்துச் சில சொல்லலானார்:— "நீ மிகவும் நல்லவன் போல இல்லாத வம்புகளை எல்லாம் சொல்லி என்னைப் பொல்லாதவன் என்று கொல்லக் குறித்தாய்! இந் நாட்டிலுள்ளவர்கள் கோட்டிக்காரப் பயல்கள் என்று நீ எளனமாக எண்ணிக் கோழைகளான சில கோளர்களை உள்ளாளர்களாகத் துணைக் கூட்டிக் கொண்டு கூட்டமாய்த் திரண்டு இந் நாட்டை அடக்கி மேலாளாய் நின்று ஆள நினைந்து நீள இந்த இழவு கூட்டி வருகின்றாய்! உன் நிலையை முன்னமே அறிந்திருந்தால் நேரே வந்து

உன்னைக் கொன்று தொலைத்திருப்பேன்; சமயம் தப்பி விட்டது; இன்று பேசி யாவது என்?" என்று கையிலுள்ள விலங்கை அசைத்துக் காட்டி அவர் கொதித்துப் பேசவும் துரை அச்சத் தோடு படைகளை ஆர்த்துப் பார்த்தான். உடனே பட்டாளங்கள் பாய்ந்து அவரைக் கட்டாகப் பற்றிக் கொண்டன. சொந்த ஊராகிய நாகலாபுரத்திலேயே தூக்கினால் ஏதேனும் பொது ஜனங்களால் இடர் நேரும் என்று தெரிந்து சர்ஜன் என்னும் தளகர்த்தனுடைய தலைமையின் கீழ் சிறந்த படைப் பாதுகாப்பு டன் கொண்டு போய் இராமநாதபுரம் எல்லையில் உள்ள கோபாலபுரம் என்னும் ஊரில் அவரைத் தூக்கி விட்டார். அங்கே அவர் துடித்து மாய்ந்தார். ஜமீன்தாராகிய இரவப்ப நாயக்க ரைக் கைதி யாக்கிச் சென்னைக்கு அனுப்பிவிட்டு ஜமீனைச் சேனு பதி கவர்ந்து கொண்டான். நாகலாபுரம் ஜமீன் கும்பினிக்கு உரிமையாயது எனக் கொடி நாட்டிக் குடிகளுக்கு அறிவிக்கப் பட்டது. கொடிய கொள்ளைகள் நெடிய நிலையில் நேரே நடந்தன.

இரண்டு தானுபதிகளை ஏக காலத்தில் சாக அடித்து, நாக லாபும் ஜமீனைக் கவர்ந்து, இவ்வாறு வேகங்காட்டி, வேறுள்ள தானுபதிகளுக்கும் ஜமீன்களுக்கும் அச்சமூட்டி, எச்சரிக்கை செய்து, தனது அதிகார ஆற்றலை எங்கும் அதிகமாகப் பரப்பி எவ்வழியிலும் உச்ச நிலையில் சேனுபதி அங்கு ஓங்கி நின்றான்.

பிள்ளை மனைவி உள்ளம் பதைத்தது.

தானுபதிப் பிள்ளை இங்கே இறந்துபட்ட செய்தியைப் பாளையங்கோட்டையில் கும்பினியாருடைய பாதுகாவலில் சிறை யிருந்த அவருடைய மனைவி கேள்வியுற்றுக் குலைதுடித்துத் தலை யில் அடித்துத் தரையில் விழுந்து நிலை குலைந்து புரண்டு ஐயையோ! தெய்வமே! என்று அலறி அழுதாள். நல்ல உள்ளமுடைய அவள் அவலமாய் உருண்டு பதைத்துச் சென்ற நிகழ்ச்சிகளை யெல்லாம் சேர நினைந்து தேம்பிப் புலம்பினாள்.

"பொல்லாத கனவுகண்டேன் போகாதீர்! என்று அன்று
சொல்லாடி முன்மறுத்தேன் சொல்மறுத்துப் போயந்தோ!
நெல்வாரி வந்ததனால் நீண்டகொடும் பழிமூண்டு
வல்வாயர் வன்கையால் மாண்டிடவும் வந்ததுவே. (1)

பாராளும் மன்னனுக்குப் பாரமதி மந்திரியாய்
நீராளும் நிலமெங்கும் நெடியபுகழ் பூண்டுநின்ற
பேராளா! என்னையிங்குப் பேர்ந்தொளிந்தீர்! பேராத
காராளர் குலமணியே! கண்மணியே! காண்பதென்றே?" (2)

என இன்னவாறு பன்னிப் புலம்பிப் பரிந்து துடித்து ஒரு வகையிலும் ஆறுமல் பரிதாபமாய்ப் பட்டினி கிடந்து படு நிலையில் உயிரை விட்டுவிடத் துணிந்து தலைவிரி கோலமாய் அங்கு உரு மாறிக் கிடந்தாள். அவளது அல்லல் நிலையை நோக்கி உள்ளங் கரைந்து அங்கு உள்ளவர் எல்லாரையும் விடுதலை செய்துவிட வேண்டும் என்று சிறை அதிகாரி கலெக்டருக்கு எழுதினன். அந்த எழுத்து வரவும் அவர் சிறையின் இயல்பு தெரிந்தார். குறித்த பிள்ளை கொல்லப்பட்டதனல் சிறையில் உள்ள அவரது மனைவி உறவினரெல்லாரையும் விட்டுவிடும்படி அங்கிருந்து உத்தரவு வந்தது. வரவே தானுபதியின் மனைவியாகிய முத்து வடிவு, மகன் வெள்ளைச்சாமி என்ற வேலாயுதம் பிள்ளை, மைத்துனன் இராமநாத பிள்ளை, மருமகன் அநவரதம் பிள்ளை முதலிய அனைவரையும் விரைவில் விடுதலை செய்தார். சிறை நீங்கிய அவர் பின்பு தங்கள் சொந்த ஊராகிய ஒட்டப்பிடாரம் போய் வாட்டமுடன் வாழ்ந்து வருந்திஇருந்தார். அவரது இருப்பு பரிதாபமாய்நின்றது.

ஆற்றூரில் முற்றுகை யிட்டு அன்று கவர்ந்து கொண்டு வந்திருந்த மற்றப் பொருள்களெல்லாம் கும்பினிக்கு உரிமையாய்ச் சேர்க்கப்பட்டன. "ஒரு நெல் எடுத்ததால் உள்ளவை எல்லாம் இழந்து பிள்ளை உயிரும் ஒழிந்தாரே!" என அங்கு உள்ளவரெல்லாரும் பரிந்து பேசி வினை விளைவுகளை நினைந்து இரங்கி நின்றார்.

செல்வம் கல்வி சொல்வன்மை அதிகாரம் முதலியன யாவும் அமைந்து சிறந்த செல்வாக்கோடு உயர்ந்திருந்த தானுபதிப் பிள்ளை இறந்து போன செய்தி எங்கும் பரந்து நின்றது. அவரது பிரிவில் இகல் கொண்டவர் நகல் கொண்டனர்; உறவினர் துயர் கொண்டனர்; பொதுமக்கள் ஒரு பக்கமும் சாராமல் உள்ளுற வருந்தி வெளியே கும்பினி அதிகார நிலையை வியந்து மருண்டு ஆட்சி முறையைக் கண்டு வெருண்டு நின்றனர்.

வேறு தானாபதிகளுக்கும் வெந்துயர் புரிந்தது.

பிள்ளையை இங்ஙனம் அழித்து ஒழித்த பின்னர்ப் பாஞ்சாலங்குறிச்சிக்கு உரிமையாய் நின்ற மற்றைப் பாளையங்களிலுள்ள தானாபதிகளையும் சேனாபதிகளையும் ஒழிக்கத் துணிந்தான். ஆங்காங்குத் தக்க படைகளை ஏவி அவரனைவரையும் ஒக்கப் பிடித்து வரச் செய்தான். அதில் பிடிபட நேர்ந்தவர் நாகலாபுரம் ஜமீன் மானேஜராய் இருந்த சாத்தூரப்ப பிள்ளை ஒன்று, கோலார் பட்டி ஜமீன்தார் மைத்துனனும் மானேஜருமான சவுந்தரலிங்க நாயக்கர் இரண்டு, குளத்தூர்த் தானாபதி ஆறுமுகம் பிள்ளை மூன்று, காடல்குடித் தானாபதி கோமதிநாயகம் பிள்ளை நான்கு, ஏழாயிரம் பண்ணைத் தானாபதி தருமப் பெருமாள் பிள்ளை ஐந்து பேர்கள் என்க. இந்த ஐந்து பேரையும் கும்பினிப் படைவீரர் கைப்பிடியாகக் கவர்ந்து கொண்டு வந்தார். இவருள் தருமப் பெருமாள் பிள்ளையைப் பிடிக்குங் காலத்தில் அவருடைய மனைவியாகிய பகவதி என்பவள் மிகவும் கலங்கி அலறி அழுதாள். அவளது அவல நிலையைக் கண்டு பெரிதும் கவலை கொண்டார் ஆயினும் கல்வி யறிவுடையவர் ஆதலால் அவளை ஆற்றித் தேற்றினர். "நீ யாதும் வருந்தாதே; நீர்மேல் குமிழிபோல் நிலையில்லாத இப் புலை வாழ்வை நிலை என்று எண்ணி ஏன் இப்படி நீ நெஞ்சம் கவல்கின்றாய்? நாம் முன்னம் எத்தனையோ பிறவிகள் எடுத்து வந்துள்ளோம். புல்லாய்ப் பூடாய்ப் புழுவாய் மரமாய்ப் பல்வகை மிருகங்களாய் நல்ல மனுக்களாய் எல்லையில்லாத காலம் பிறந்து பிறந்து இறந்து வருகின்றோம். கொள்ளி வட்டமும் காற்றாடியும் போல் ஓயாது சுழன்று வரும் இவ் வுலக வாழ்வில் நிலையானது ஒன்றும் இல்லை; எவ்வளவு சிறந்த நிலையினரும் விரைந்து நிலைகுலைந்து போகின்றார்; இந் நாடெங்கும் தலைமை அதிபதியாய் நிலவி நின்ற மகா வீரரான பாஞ்சாலங்குறிச்சி மன்னரே பதி பெயர்ந்து போய்த் துயர் புகுந்துள்ளார் என்றால் விதியினை வெல்ல யாரால் முடியும்? எல்லாம் ஊழின்படியே முடியும். நான் நல்ல வினைகளையே செய்திருக்கிறேன் ஆதலால் அல்லல் ஒன்றும் வராது; இப்பொழுது

கும்பினி அதிகாரியாய்ப் பெரிய படைகளோடு வந்திருப்பவர் இங்குள்ள பாளையகாரர்களைப் பயமுறுத்திப் பணிவு காணத் துணிவு கொண்டிருப்பதாகத் தெரிகின்றது; அவரது நிலை தெரிந்து எனது நிலைமையை அறிவித்து நேரே வந்து விடுவேன்; நீ யாதொன்றும் மறுகாதே; தைரியமாய் இரு!" என்று உறுதியுரை கூறி உள்ளம் தேற்றி ஊக்கமாய் அவர் நேரே வந்தார்.

இவ்வாறு பிடிபட்டு வந்த அந்த ஐவரையும் யாதொன்றும் நேரே விசாரித்து நீதி புரியாமல் ஆயுள் வரையும் அயலிடம் போயிருக்கும்படி சேனபதி நாடு கடத்தி விட்டான். ஒரு தானபதி மேல் இருந்த கோபத்தால் அவரோடு தொடர்பாய்த் தமரோடு இருந்த எல்லாரையும் இங்கு இல்லாவகை செய்து அல்லற்படுத்தியது மிகவும் கொடுமையான அநியாயமே யாம்.

அதன்பின் முன்பு இறந்து போன பிள்ளைக்கு உரிமையாய் ஒட்டப்பிடாரம் முதலிய இடங்களில் இருந்த மாடு, மனை, நிலம், புலம் முதலிய எல்லாப் பொருள்களையும் கணக்கு விடாமல் ஆராய்ந்து கலெக்டர் லஷிங்ட்டன் மூலம் கவர்ந்து கொண்டு அச் சேனைத் தலைவன் ஏனைத் துணைவர்களுடன் மேல் ஆக வேண்டிய காரியங்களை வீரியமோடு வேகமாய் ஆற்றி வந்தான்.

பிள்ளை தனைக் கொன்றொழித்துப் பிழையாகப்
பலபேரைப் பிடித்து வந்து
கள்ளவினை புரிந்தீர்என்று அன்னவரைக்
கடுத்திகழ்ந்து கடுமை யாக
எள்ளிமறு புலம் போக்கி இந்நாட்டில்
உள்ளவரை எளிய ராக்கி
வெள்ளையன்தான் அன்றுசெய்த வெங்கொடுமை
இங்கெவரே விளம்ப வல்லார்?

பாஞ்சைத் தானபதியைப் படுகொலை செய்து மற்றையோர்களுக்கும் அடுதுயர்கள் புரிந்து அந்தச் சேனபதி ஆற்றிய கொடிய செயல்கள் எங்கும் நெடிய திகில்களாய் நிலவிநின்றன.

மந்திரிப் பிள்ளை முடிவு இவ்வாறு முடிந்தது; இனி மன்னன் என்ன நிலையில் அலைந்து திரிந்து எவ்வாறு இன்னல் உழந்துள்ளான் என்பதை அயலே ஆவலோடு பார்ப்போம்.

# இருபத்தாருவது அதிகாரம்

## மன்னன் அலைந்தது.

---

அன்று கோலார்பட்டியில் சுற்றி நின்ற படைகளை வெட்டி இடைவெளி யேறி வடதிசை நோக்கி ஆவி போவது தெரியாமல் கடு வேகமாய்த் தாவிப்போன குதிரையில் இம் மன்னர் வாவிப் போனர். உடன் தொடர்ந்து போன அறுவரும் இடம் பிரியாமல் ஊக்கிச் சென்ருர். அங்ஙனம் செல்லுங்கால் டல்லாசு (Dollas), போயன் (Bowen) என்னும் தளகர்த்தர் இருவரும் குதிரைப் படைகளை அதிவேகமாகச் செலுத்தி இவரைப் பிடித்துவிடலாம் என்று பின்னே போனர். அந்த ஏழு குதிரைகளும் ஊழிக்காற்றெனத் தூளி பறக்கத் துள்ளித் தாவி அள்ளிப் போகவே அவர் அயர்ந்து சோர்ந்தார். சிறிது தூரம் கடந்தபின் இவரிடம் தனியே நெருங்கவும் அஞ்சித் தவித்து மீண்டார். வேட்டையில் தப்பிய புலிப்போத்துகள் போல் இவர் கெலித்துப் போக அவர் சலித்து வந்து சாம்பி நின்ருர். இகல் கடந்து இவர் எழுந்து போன நிலையை நினைந்தபோதெல்லாம் எதிரிகள் நெஞ்சில் அச்சமும் திகிலும் உச்சமாய் ஓங்கி நின்றன. உள்ளத்தில் பகைமை மண்டியிருந்தாலும் இவ் வீரனுடைய அதிசய நிலையை நினைந்து வியந்து மதிமயங்கி மறுகி நின்றனர்.

கடிய வேகமுண்டய 200 குதிரையாளர்களும், கொடிய வெடி வேல்களையுடைய 1100 படை வீரர்களும் இடைவெளியின்றி அடைய வளைந்து அடுதிறலுடன் ஆர்த்து நின்றபொழுது தமது புரவியை யூர்ந்து நேரே பாய்ந்து நேர்ந்தவரை யெல்லாம் தம் வடிவாள் ஒன்ருல் முடிய நூறிக் கடிது வெளியேறி வடதிசை வழியே அடலுடன் போன இந்த ஆண்டகையாளரின் அருந்திற லாண்மையை ஈண்டுச் சிறிது எண்ணி நோக்கினுல் ஏழை நெஞ்சினர் இரங்கிக் கண்ணீர் சிந்துவர். வீர நெஞ்சினர் வியந்து விறல் மீக் கொள்ளுவர். அரிய போர் வீரனுடைய தீரம் பெரிய வியப்பில் பெருகியுள்ளது. பரிகள் பாய்ந்து புறந்து நெடிய கதிகளாய் விரைந்துஅதிசயநிலையில் கடிது தாவி ஓடின.

## ஏறிப்போன பரிகள் இடையே இறந்தது.

யாரும் மீள முடியாத கொடிய அபாய நிலையில் நின்று தீரமோடு வெளியேறிய இவ் வீர மகன் அன்று பதின்காவத தூரம் கடுவேகமாய்ப் போனதனால் இடையே ஐந்து குதிரைகள் குடலறுந்து வீழ்ந்தன. அவற்றுள் மன்னன் குதிரை முன்னுற மாண்டது. முத்துராம் என்னும் பெயரை யுடைய அருமையான அப் பட்டத்துக் குதிரை செத்து விழவும் இவர் சித்தம் கலங்கினார். அதன் உத்தம குணங்களை யெல்லாம் நினைந்து நினைந்து உள்ளம் உருகினார். வாயு வென்ன, மனம் எனப் பாயும் அத் தூய ஒண்பரி துள்ளி விழவும், தான் மாய நேர்ந்தது என இவர் மாழ்கி மயங்கினார். அது வெள்ளை நிறம் வாய்ந்தது. அழகும் வேகமும் அறிவும் மிகவுடையது. இப் போர் வீரரிடம் பேரன்பு கொண்டது. தன் தலைவனுக்கு அபாயம் நேர்ந்துள்ளது என்று தெரிந்து கடுவேகமாய்ப் பாய்ந்து நெடுந்தூரம் தாவி வந்தமையால் அவ்வாறு ஆவி போக நேர்ந்தது. அதன் அருமை பெருமைகளை நினைந்து ஆறாத் துயருடன் இவர் மறுகலானார். அதன் கண்ணை நோக்கியும், முகத்தைப் பார்த்தும், செவியைக் கண்டும், வண்ணம் எண்ணியும் இவ் அண்ணல் உள் நெகிழ்ந்தார். அது இறந்து படும் பொழுது இவரைக் கனிந்து நோக்கிக் கடைக்கண்ணீர் ததும்ப உயிர் நீத்ததைப் பார்த்து இவர் உள்ளமும் உயிரும் உருகி அலமந்தார். யாண்டும் அஞ்சா நெஞ்சராகிய இவர் அது மாண்டபொழுது மறுகி அழுதது போல் தம்முடைய வாழ் நாளில் ஒருநாளும் அழுததில்லை. இங்ஙனம் உள்ளம் குழைந்து உயிர் உளைந்து நொந்து பின்பு அங்கோர் பள்ளம் தோண்டி அப் பரியினைப் புதைத்து விட்டு வெள்ள நீர் விழி சோர இவர் மேல் விரைந்து போனார். வேகம் குறைந்து சாகும் நிலையில் மீதமாய் நின்ற இரண்டு குதிரைகளையும் போகும் வழியில் கையகல விட்டு அறுவரும் இவர் பின் கால் நடையாய்த் தொடர்ந்து சென்றார். சிவிகை யூர்ந்தும் செழும் பரி ஏறியும் சிறந்த நிலையில் உவந்து வாழ்ந்து வந்த இவர் இப்பொழுது குடையும் செருப்பும் கூட

இல்லாமல் கடு வெயிலில் புழுதி மண் சுட அடி வருந்த அவல நிலையில் வழி நடந்து போனார். எதிரிகள் படை மறுபடியும் எங்கிருந்தேனும் அடர்ந்து வந்துவிடுமோ என்று இடையிடையே அயல் நோக்கித் தொடர்ந்து பின்சென்ற தம்பியர் இவ் அண்ணல் அடி மண்ணில் அடிபட மறுகிப் போவதைக் கண்டு கண்ணீர் சொரிந்து கரைந்து சென்றார். முன் நடந்து பழகாமையால் அடியில் கொப்புளம் படர்ந்து படப் பருவரலுழந்து திடங்கொள் சிந்தையால் வழியிடங்கள் பல விரைந்து கடந்து போயினர். அந்தி அடையுமுன் இடையே ஒரு ஊர்முந்திஅடைந்தது.

## ஆனியூர் அடைந்தது,

கல்லிலும் முள்ளிலும் நடந்து மெல்லடிபட்டு அல்லலுற்றழுங்கி ஒல்லையில் ஏகி அல் இடை அடைய இவ் வல்லவர் ஆனியூர் என்னும் சிற்றூரை யடைந்தார். வீர நகரில் பேரரசாய் வீறுடு வாழ்ந்து வந்தவர் விதி வலியால் கதி கலங்கி மதி தளர்ந்துஅதி துயரமாய்ச் செயலிழந்து அயலூரைச் சேர்ந்தார்.

அவ்வூர் சிவகங்கை நாட்டின் வடமேற்கு எல்லையில் உள்ளது. அங்கு மறவர் மரபில் கள்ளர் என்னும் பிரிவினர் தங்கி இருந்தார். இரவில் வந்து பரிபவ நிலையில் ஒரு சாவடியில் அமர்ந்திருந்த இவரை அவர் கண்டார். உருவ நிலையை நோக்கி யாரோ ஓர் அரச குமாரன் என எண்ணி அருகு நெருங்கினர். உரிமையுடன் வினவினர். அயலில் நின்றவர் உண்மையை மெல்ல வுரைத்தார். பாஞ்சைப்பதி என்று அறிந்தவுடனே அவரனைவரும் இவர்மேல் வாஞ்சை மீக்கொண்டார். வணங்கி நின்று உவந்து உபசரித்து விழைந்து அழைத்துப்போய் விருந்து புரிந்தார். நெடுந்தூர மிருந்து கொடுந்துய ரடைந்து கடுங் களைப்போடு வந்த இவர் அன்று அவர் தந்ததை யுண்டு சிந்தை மகிழ்ந்தார். உடன் வந்தவரும் உணவருந்தி உவந்திருந்தார். துணைவர்கள் இவருடைய துயர் நிலையை நினைந்து மனம் மிக வருந்தி மருங்கமர்ந்து மறுகி யிருந்தார். பின்பு இவர் கண்ணயர்ந்து உறங்கினர். எண்ணருந் துயர்களையும் இடை யகற்றி எவர்க்

கும் இன்ப நிலையமா யிருக்கின்ற உறக்கம் அன்று இவ் அண்ணலுக்கும் ஆறுதல் புரிந்து அமர்ந்திருந்தது. ஆதவன் எழும் வரையும் இவர் அயர்ந்து தூங்கினார். காலையில் எழுந்தார். மேலே போக விரைந்தார். பதி யிழந்து பகை கடந்து விதியிடை நொந்து வெம்மை மிகுந்து தம்மிடம் அடைந்துள்ள இவர் அயல் அகல்வதை யறிந்ததும் அவ்வூரவர் அனைவரும் ஒருங்கே திரண்டு பேரார்வத்துடன் வந்து இவர் முன் வணங்கி நின்று "பாண்டியா! இங்கேயே தங்கி யிருங்கள்; வேறெங்கும் போகவேண்டாம்; யார்வந்தாலும் மார் ஏற்று யாதொரு இடையூறும் நேராதபடி நாங்கள் பாதுகாத்து வருகின்றோம்" என்று பரிந்து கூறினார். வலிய மன நிலையை யுடைய அவரும் இவரது மெலிவினை நோக்கி மெய்யிரக்கம் கொண்டு விழைந்து வேண்டினார்.

*" வருத்தம் இகழ்வே வலியின்மை பெருமை
இரக்கம் தோன்றும் இந்நா விடத்தே" (அகத்தியம்)

என்னும் இயல் விதிக்கு அவருடைய இயல்பு அன்று இனமாய் நின்றது. அவ்வூராரது அன்புடைமையை அறிந்து தம் அருகே நின்ற தம்பியர்களை நோக்கி, " இவர்களுடைய பண்புடைமையைப் பார்த்தீர்களா? " என்று இவர் பரிந்து மொழிந்து பரிவு கூர்ந்து நின்றார். பின்பு அவரது வேண்டுகோளுக்கு இணங்கி அங்கேயே இரண்டு நாள் அமர்ந்திருந்தார். இங்ஙனம் இருந்தால் எதிரிகள் அறிந்து வந்து இடர் செய்ய நேர்வர் என்று கருதிக் காளிமுத்து, பெரியநம்பி என்னும் தலைவர் இருவர் இந்த ஏழு பேரையும் அழைத்துக்கொண்டு போய் ஒரு மலைச்சாரலில் மறைவாக வைத்து மாண்போடு பேணி வந்தார். அவ்வூரவரும் இடையிடையே வந்து இதம் புரிந்து சென்றார். அத் தலைவர் இருவரும் சிறிதும் நிலை திரியாமல் உறுதியுடனின்று வேளை தவறாது உணவாதிகள் தந்து இரவும் பகலும் எச்சரிக்கையாய் உரிமையுடன் உதவி நின்றார். அவர்களுடைய உள்ளன்பை

*மக்கள் மனத்துள் இரக்கம் தோன்றும் இடம் குறித்தபடியிது. வைப்பு முறையிலுள்ள நுட்பங்களை உய்த் துணர்ந்துகொள்க. மனித இதயம் இனிய பல இயல்புகள் அமைந்தது. சமையம் நேரும் போது அதன் நிலைமையும் சீர்மையும் நேரே நன்கு தெரிய வருகின்றன.

யும் உபகார நிலையையும் கண்டு இவர் உள்ளம் உருகினர். தெய்வம் அனுகூலம் செய்து செரு வொழிந்து பதி புகுந்தால் அவர்க்குச் சில ஊர்களை உதவிப் பேருபகாரம் செய்ய வேண்டும் என்று தம் உள்ளத்தே உறுதி பூண்டு இவ் வள்ளல் உறைந்திருந்தார். நன்றியறிவு இவ்வென்றிவீரரிடம்நன்குஒன்றிநின்றது.

பிள்ளை சொல்லைக் கேட்டு வந்ததால் நேர்ந்த பெரும் பிழையை நினைந்து இடையிடையே பெரிதும் நொந்தார். அருகிருந்த துணைவரும் மறுகி நின்றார். அவர்க்கு உறுதி பல புகன்று உள்ளம் தேற்றிப் பொறுதியாக இவர் ஊக்கி வந்தார்.

இப்படி இடைவழியில் இடருழந் திருந்த இவர் எப்படியும் சென்னபட்டணத்துக்காவது, அல்லது திருச்சிராப்பள்ளிக்காவது போய்க் கும்பினி அதிபதிகளைக் கண்டு தம்பதியில் வந்து படைத்தலைவன் செய்த கொடுமைகளையும் அதனால் நேர்ந்த அல்லல்களையும் எடுத்துச் சொல்லி எய்தி யுள்ள பகைமையை நீக்கி இதம் புரிந்துவர வேண்டும் என்று துணிந்து காலமும் இடமும் கருதிச் சாலவும் தவித்திருந்தார். இந்த நிலையில் வாரம் ஒன்று கழிந்தது. வீர மன்னன் வீறு குன்றியது விதிவசமாயது.

### வீரகஞ்சயன் வந்தது.

இங்ஙனம் இருக்குங்கால் ஏழாம் நாள் இரவு 7 மணிக்குக் காடல்குடி ஜமீன்தார் வீரகஞ்சய நாயக்கர் என்பவர் அங்கு வந்தார். அவர் இவர் மரபினர். உறவு முறையினர். உறுதி மிகவுடையவர். இவர் இடம் பெயர்ந்ததையும் இடையே அடைந்த அல்லல்களையும், எதிரிகள் மூண்டு நிற்கும் நிலைகளையும் அறிந்து நெஞ்சம் இரங்கி நேரே கண்டு உடனிருந்து ஆன வரையும் உதவி செய்யவேண்டும் என்று உறுதிகொண்டு உறவுரிமையினால் பல இடங்களிலும் தேடிப் புலன் விசாரித்து இரவு பகல் நடந்து உளவுநிலை தெரிந்து இறுதியில் அவண் வந்து சேர்ந்தார்.

அவரைக் கண்டதும் இவர் பெரு மகிழ்ச்சி அடைந்து உரிமையுடன் விரைந் தெழுந்து விழைந்து தழுவி, "தம்பி! நீ எப்படி இங்கு வந்தாய்!" என்று வியந்து வினவி நயந்து கொண்

டாடினர். அநாதரவான நிலையில் நாதியான அவரது காட்சி இவருக்குப் பேராதரவாய்ப் பேருவகை தந்தது. பின்பு அவரை அருகிருத்தி அமர்ந்து நோக்கி, "நீ எங்கிருந்து வருகிறாய்? நான் இங்கிருப்பதை எப்படித் தெரிந்தாய்? எவ்வழி வந்தாய்? அங்குள்ள நிலவரங்கள் என்ன?" என இன்னவாறு ஆவலுடன் சேமநலங்களை விசாரித்தார். இவர் விரும்பிக் கேட்ட கேள்விகளுக்கு அவர் ஒன்றும் விரைந்து பதில் சொல்லாமல் இவரிருக்கும் பரிதாப நிலையைப் பார்த்துப் பார்த்துப் பரிதபித்தார். முன்னம் மன்னனாய் மன்னியிருந்த மாண்பையும், இப்பொழுது இன்னல் நிலையில் இழிந்திருக்கும் இயல்பையும், எண்ணி எண்ணிக் கண்ணீர் உகுத்தார். தன்னை யறியாமலே தவித்து அழுகின்ற அவரை இவர் அவித்தணைத்து ஆறுதலுறத் தேற்றினர். தேற்றியும் அவர் அவலம் மிகுந்து கவலையோடு கலுழ்ந்து புலம்பினர். உள்ளத் துயரங்கள் உரைகளாய் வந்தன.

"நின்றிருந்த நிலைஎன்னே! நிலைகுலைந்து மலையடைந்து
சென்றிருந்து நாட்கழிக்கத் தீவினையொன் றிருந்ததுவோ?
அன்றிருந்தே அமைச்சைநிலை அடக்காமை யால்அரசே!
இன்றிவ்வா றடைந்ததெனை இரங்கிமிக ஏங்கினன். (க)

வெற்றியே புரிந்துவந்த வேந்தனே! நம்முன்னோர்
பெற்றிருந்த பெருமையெல்லாம் பிள்ளைவந்து கெடுத்தானே;
கொற்றமலி தோக்கலவார் குலத்துக்கெல் லாம்பெரிய
குற்றமிக நேர்ந்ததுவே கோமகனே! எனக்குலைந்தான்." (உ)

இங்ஙனம் உளம் மிக வுருகி உரிமையுடன் மறுகிப் பலபல நினைந்து பரிந்து நொந்த அவரை இவர் உறுதி கூறி ஆற்றி அங்கு உற்றுள்ள நிலைகளை முற்றும் உரைக்க வேண்டினர். வெற்றி வீரன் வினவியதில் வேதனைகள் விரிந்து வெந்துயரங்கள் பெருகி வந்தன. உரிமையால் மறுகி நின்ற அவர் உறுதி மொழிந்தார்.

### பிள்ளையின் இழவு சொல்ல நேர்ந்தது.

ஆங்கு அமைந்துள்ள நிலைமைகளை உள்ளம் திறந்து சொல்லும்படி இவ்வள்ளல் கேட்கவே அவர் பரிபவத்துடன் சொல்ல

வானார்: "தாங்கள் அன்று கோலார்பட்டியில் படைகளை யுடைத்துத் துணைவர்களுடன் வடதிசை வரவும் அங்கு உள்ளே நின்ற பிள்ளை முதலானவர்களைப் பிடித்துக்கொண்டார். உடனே சிறை செய்து நாகலாபுரத்திற்குக் கொண்டுபோய் அங்கே பட்டாளங்களுடன் வந்து வெற்றியுடன் வதிந்திருந்த சேனுபதி முன் விடுத்தார். அவன் தானுபதியைக் கொதித்து நோக்கிக் கொடு மொழிகள் பல கூறி இரு தினம் சிறை வைத்து மூன்ருவது நாள் மரண தண்டனை விதித்து நாகலாபுரம் ஊரருகில் நின்ற வேப்ப மரத்தில் தூக்குவித்தான். பிள்ளை துள்ளித் துடித்துத் துயரமாய் மாண்டார்" என்று அச் சொல்லை அவர் முடிக்கு முன்னரே இவர் உள்ளந் துடித்து "முருகா!" என்று உருகி நின்ருர். கண்ணீர் வெள்ளம் என விழுந்தது. யாரோடும் யாதொன்றும் பேசாமல் வெய்துயிர்த்துச் சிறிது பொழுது மெய்ம்மறந் திருந்தார். பெரும் படை திரண்டு, கருங்கடல் போல் வந்து, ஒருங்கு வளைந்து, கொடு வெடிகள் சுட்டுக், குண்டுகள் இட்டுப், படு போர் புரிந்த போதும் யாதும் கலங்காமல் அமர் மேல் மூண்டு வீறுகொண்டு நின்ற இவ் வீர மன்னர், அன்று பிள்ளை இறந்தார் என்றவுடனே உள்ளங் கலங்கி உணர்வு கலைந்து உறுதி குலைந்து இவ்வாறு உயிர் குழைந்தார் என்ருல் அவர் பேல் இவர் கொண்டிருந்த உள்ளன்பும் உரிமையும் எவ்வளவின? என்பது எளிது தெளிவாம். அவ்வளவு நண்புகொண்டிருந்ததனுலேதான் பிள்ளை சொல்லைத் தட்டமாட்டாமல் வெளிப்பட்டு வந்து பழிப்பட்டு நொந்து இவ்வளவு அல்லலும் துன்பமும் இவர் அடைய நேர்ந்தார். மூண்ட அவ கேடுகள் நீண்ட துயரங்களாய் நிமிர்ந்து நெடிது ஓங்கிநின்றன.

## உள்ளங் கவன்றது.

தம் நண்பனைத் தூக்கில் இட்டுத் துடிக்கக் கொன்ற தெவ்வரது வெவ்வினைகளை எண்ணி இவர் வெகுண்டு கொதித்தார். உடனே பிள்ளையை இகழ்ந்து வெறுத்தார். "என் சொல்லைக் கேளாமல் தன் சொல்லையே மேற்படுத்திப் பிடிவாதமாய் நடத்திக் குடிகேடு விளைத்து அடியோடு மாண்டானே!" என்று

அவலம் மிகுந்து கழிந்து போனவைகளை யெல்லாம் நினைந்து நினைந்து கவலை யடைந்து கடுந்துய ருழந்தார். "தாயுரை கடந்து, மனைவி மொழி மறந்து, மதி அயர்ந்து பதி பெயர்ந்ததால் படு பழி வந்ததே!" என்று அன்று இவர் பரிந்து புலம்பிய நிலைகள் பரிதாபங்களாய் விரிந்தன. நிகழ்ந்து போனவைகளை யெல்லாம் நினைந்து நினைந்து கலுழ்ந்தார். கழிவு நிலை அழுதுயரமாய் நின்றது.

"நீ அயலே போகாமல் நிலைத்திங்கே இருக்கஎன்றஎன்
தாயுரைத்தும், மனையுரைத்தும், தம்பியர்கள் தனியுரைத்தும்,
பேயுரைத்த வகைநின்ற பிள்ளைமகன் உரைக்கிரங்கிப்
போயுரைத்து வருவலெனப் போர்துபழி புக்குழந்தேன். (க)

பதியிழந்த போதேஎன் பசியிழந்து, பண்பிழந்து,
மதியிழந்து வலியிழந்து மாண்பிழந்து மரபினுக்காம்
துதியிழந்து தொடர்பிழந்து தொல்லைவினைத் தொடர்பான
விதியுழந்து படுகின்றேன் விளைவறிந்து மெலிகின்றேன்; (உ)

நின்றநிலை குலையாமல் நேர்நின்று நேர்ந்தவரைக்
கொன்றுகுவித்து என்னுடைய குலவீரம் உலகறிய
வென்றுபுனை திருக்காமல் விதிபிடர்நின் றுந்தியதால்
கன்றிஅயல் வந்திடையே கடுந்துயரம் கண்டுநின்றேன்."(ந)

எனத் தமது அவல நிலைக்கு இரங்கித் துயர் மிகுந்து நொந்து பின்பு நகர நிலையை அவரிடம் இவர் விசாரித்தார். விசாரிக்கவே அந்த விசனகரமான செய்தியை அவர் விவரமா விளக்கிச் சொன்னார்: "நீங்கள் அன்று ஊரைவிட்டு வெளியேறிய நிலையை எட்டப்ப நாயக்கர் ஓடிவந்து சேனாபதியிடம் சொல்ல, அவன் உடனே படைகளோடு வந்து பாஞ்சைப்பதியுட் புகுந்து தன் கொடியை நட்டிக் கும்பினியாருக்கு உரியதெனக் கவர்ந்து கொண்டான். அந்தப்புரம் முதலிய இடங்களில் யாதும் பிரவேசிக்கவில்லை: குடிகள் கெடுக்கலங்கி யுள்ளன. அரசில்லாமை யால் உயிரிழந்த உடல்போல் நகரம் பொலிவிழந் துள்ளது. முடிவு ஒன்றும் முடிவாகத் தெரியவில்லை. தங்களைப் பிடிக்க வேண்டுமென்றே எல்லாரும் கடுத்துத் திரிகின்றார். வெள்ளைக் காரர் குதிரைப் படைகளுடன் கொதித்து அலைகின்றார். சில

பாளையகாரரும் அவருடன் துணை சேர்ந்து கொண்டார். அவர் எல்லாருள்ளும் எட்டப்பன் முதல் தட்டில் நிற்கின்றான். கோளை மூட்டி இதுவரை உள்ளே மறைந்திருந்தவன் இப் பொழுது வேலை நீட்டி வெளியே விரைந்து திரிகின்றான். இடங் கள் தோறும் படைகள் அடங்கொண்டு தேடி வருகின்றன. யாது வந்து விடியுமோ அறியகில்லேன்? மனம் கேளாமல் இங்கே நாடி நான் ஓடிவந்தேன்; ஐயனே!" என்று அவர் கண் ணீர் ததும்ப உண்ணீர்மையுடன் உருகி மறுகி யுரைத்தார்.

## மீள நினைந்தது.

தம்முடைய நகருள் பகைவர் வந்து புகுந்து கொண்டார் என்றதைக் கேட்டவுடனே இவர் வாட்டம் மீக் கூர்ந்து மறுகி நொந்தார். மனைவி தாய் ஒக்கல் முதலாயினோர் நிலைகளை நினைந்து நெஞ்சம் இரங்கினார். பிள்ளை பேச்சைக் கேட்டு வெளி வந்த பிழையினை யுள்ளி யுள்ளி உள்ளங் கரைந்தார். எல்லாரும் எள் ளல் செய்யும்படி ஏச்சாய் முடிந்ததே என்று பெருமூச்செறிந் தார். கோபமும் தாபமும் கொதித்து மண்டின; உடனே ஒரு மூச்சாக ஊக்கி எழுந்தார். "ஊர் புகுந்த பகைவரை வேர றுத்து நேரெதிர்ந்தவரை நிலையழித்து ஆண்டு என் உயிர் போயி னும் நன்றே" என உள்ளந் துணிந்து துள்ளி எழுந்து கோட் டைக்கு ஓட்டமாய் மீண்டுவர விரைந்தார். ஆண்டிருந்தவர் அனை வரும் "ஐயனே! இதுபொழுது யாதுப் கோபம் கொள்ளவேண் டாம்; குறித்து வந்தபடி குப்பினித் துரைகளைக் கண்டு சமாதா னம் செய்து மேல் அல்லலுறா வகை அமைதி கொண்டு வரு வதே மிகவும் நல்லதாம்" என்று உறுதி பல சொல்லி ஒருங்கே தடுத்தார். உற்ற துணைவர் உணர்வுரை உறுதி பயந்து நின்றது.

அதன்பின் திருச்சிராப்பள்ளிக்கு நேரே போக உறுதி கொண்டு இவர் பொறுதி செய்திருந்தார். பின்பு அனைவரும் உணவுண்டு அமர்ந்து துயின்றார். இவர் மட்டும் இரவு முழுவ தும் கவலையில் ஆழ்ந்து கண்ணயராது கிடந்தார். கவலை நெஞ்சு புகின் கண் துஞ்சாது என்னும் முதுமொழி இவர் கண் அன்று முடிந்திருந்தது. மறுநாள் விடிந்தது. காலை 7 மணிக்கு வீரகஞ்

சயனை இவர் விழைந்து நோக்கி, "தம்பி! நீ இங்கே இருக்க வேண்டாம். எங்களோடு கூட இருந்தால் இடரடைய நேரும். பகைவர் கடு வேகத்துடன் தேடித் திரிகின்றார்; இனி இந்த இடத்தில் நாம் இருக்க லாகாது. என்பால் அன்பு மிகுந்து நண்பு கொண்டுள்ள புதுக்கோட்டை அரசனிடம் இன்று போய்த் தங்கி யிருந்து நாளை அல்லது நாளை நின்று திருச்சிராப் பள்ளிக்குப் போகிறேன். வேளை வாய்த்தால் மீளவும் நாம் நேர்ந்து காணலாம். இவ் வேளையில் நீயும் கூட அலைதல் கூடாது. நேரே விரைந்து உன் பாளையம் போயிரு" என்றுபரிந்துகூறினர்.

அவர் இவரைத் தனியே விட்டுப் பிரிய மனமில்லாமல் மறுகி மயங்கினர். அவரது உரிமையை நினைந்து இவர் உள்ளம் கரைந்தார். அவரை அருகிருத்தி ஆர்வமுடன் நோக்கி, "தம்பி! என் நிலைமை ஒன்றும் சரியில்லை; மனம் ஒரு நிலையில் இல்லை. இனி இங்கே தாமதித்திருத்தல் கூடாது; நீ நெடுந்தூரம் அலைந்து வந்திருக்கிறாய்; இன்னும் வந்து தொந்தரவு அடையவேண்டாம்; தேவி கிருபை இருந்தால் மீண்டு உன் பாளையத்துக்கே வந்து உன்னை நான் கண்டுகொள்கிறேன்;நான் சொல்லுகிறபடி செய்; நில்லு; ஐயா!" என்று அல்லலோடு இவர் சொல்லி எழுந்தார்.

## ஆனியூரார் ஆர்வம் புரிந்தது.

இவருடைய பிரயாண உறுதியை அறிந்து அன்று குறித்த குறிகாரர் இருவரும், அவ்வூரவர் பலரும் சேர்ந்து வந்து இவரை வணங்கி நின்று, "துரைகளே! இந்த இடத்திலேயே இருந்தருளுங்கள்; வேறு எங்கும் போகவேண்டாம். எந்தப் படைகள் வந்தாலும் நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம். கும்பினி கிம்பினி இங்கு ஒன்றும் பலியாது. எங்கள் உயிரிருக்கும் வரையும் உங்களைப் பாதுகாத்து நிற்கின்றோம். உணவு முதலிய வசதிகள் எல்லாவற்றையும் ஒருங்கே சேகரித்து வைத்துவிடுகிறோம். மாறாக ஒன்றும் கருத வேண்டாம்; யாவும் உரிமையோடு செய்கிறோம்; மகாராஜா! இங்கேயே அமர்ந்திருங்கள்" என்று மிகுந்த ஆர்வத்துடன் பரிந்து மொழிந்து பணிந்து வேண்டினர்.

அவர்களுடைய சொல்லையும் உள்ளன்மையும் உபகார நிலைமை யும் இவர் உவந்து வியந்தார். அவர்களை உரிமையுடன் உருகி நோக்கி, "அருமை அன்பர்களே! உங்கள் நன்றியை எழுமையும் மறவேன்; இங்கே வாயால் சொல்லி ஆவது என்? கடவுள் அருள் புரிந்தால் பின்பு நான் உங்களுக்குக் கையால் செய்து காட்டுவேன். இன்று தயவுடன் என்னை விட்டு விடுங்கள்; புதுக் கோட்டை வரையும் போய் வருகின்றேன்; நின்றருளுங்கள்" என்று அவரை நிறுத்தித் துணைவர்களுடன் எழுந்து இவர் துணிந்து சென்றார். அவர் மிகவும் இரங்கி அனைவரும் சிறிது தூரம் உடன் நடந்து சென்று பின்பு விடை பெற்று மீண்டார். வீரகஞ்சயர் மட்டும் விடாது தொடர்ந்தார். முடிவில் அவரையும் முடிவாக நில் என நிறுத்தி மேலே செல்லலானார். இவ் அண்ணலது அவல நிலையை நினைந்து கண்ணீர் சிந்திக் கவலையொடு நின்று உருவம் மறையும் வரையும் உருகிப் பார்த்து வினைப் பயனை நொந்து பின்பு தம் நகரை நோக்கி அவர் துயரமுடன் மீண்டார். அன்புப் பாசங்கள் துன்பத்தொடர்புகளாய்நீண்டன.

மேலே சென்ற இவர் சோளபுரம் என்னும் ஊரை யடைந் தார். மாலை யடைந்தது. அங்கோர் மடத்தில் தங்கினார். அவ்வூ ரவர் கண்டு உணவுமுதலியன உதவிஇவரை உவந்துஉபசரித்தார். அதன்பின் பேரும் பிறவும் விசாரித்து இனந்தெரிந்து மனங்க னிந்து "பேரரசு நேரே வலிய வரப் பெற்றோம்" என்று பெரி தும் மகிழ்ந்து பேணி நின்றார். மறு நாள் காலையில் இம் மன்னர் எழுந்து மேலே செல்ல விழைந்தார். அவ்வூரார் திரண்டு வந்து வணங்கி நின்று "இரண்டு நாளாவது சமுகம் இங்கே இருந்து போகவேண்டும்" என்று வருந்தி வேண்டினார். இவர் இசைந் திருந்தார். அவர் விருந்து புரிந்து இவரை விழைந்து போற்றி மகிழ்ந்து நின்றார். அவல நிலையிலும் ஆதரவுகள் தோன்றின.

## தெவ்வர் தேம்பித் திரிந்தது.

இங்ஙனம் இருக்க எதிரிகள் எங்கும் இவரைத் தேடி அலைந்து யாண்டும் கண்டு கொள்ளாமையால் நீண்ட கவலை யுடன் நெடிது வருந்திச் சிலர் மீண்டு போயினர். கும்பினியா

ருடைய கட்டளைக்கு அஞ்சிச் சில பாளையகாரரும் எட்டப்ப நாயக்கருடன் ஒப்புக்குக் கூடித் திரிந்தார். ஒரு தப்பும் தெரியாமல் எல்லாரும் வெப்பம் மிகுந்து யாண்டும் மெலிந்து நின்றார்.

இராமநாதபுரம், சிவகங்கை, மதுரை முதலிய இடங்களிலுள்ள எல்லாப் பாளையகாரர்களுக்கும் சேனாதிபதி கடுமையாய்க் கடிதங்களை விடுத்திருந்தான். "கட்டபொம்முக்கு யாரும் யாதொரு உதவியும் செய்யக் கூடாது; செய்தால் அவர் கும்பினிக்குக் கொடிய விரோதியாகக் கருதப்பட்டுக் கடுமையான தண்டனைகளை அடைய நேர்வர்" என்று இன்னவாறு அச்சங்களைக் காட்டி யாண்டும் உச்ச நிலையில் காகிதங்களை ஊக்கி உய்த்து நின்றான். அத் தளபதி வேலை அளவு கடந்து நீண்டது.

"I have strictly cautioned the Polegars of the countries through which he passed, by letter, not to observe a conduct which will draw upon them the severest resentment of Government. Cataboma Naig was so closely pursued, that he and his attendants were obliged to quit their horses." (R. G.)

"கட்டபொம்மு தப்பிப் போயிருக்கிற நாட்டின் பாளையகாரர்களுக்குக் கண்டிப்பான எச்சரிக்கைக் கடிதங்களை அனுப்பியிருக்கிறேன்; அவனுக்கு யாரேனும் சிறிது இடம் கொடுத்ததாகத் தெரியவரினும் அவர் கும்பினியாரின் கொடுங் கோபத்துக்கு ஆளாவர் என அவற்றில் வலியுறுத்தியுள்ளேன். கட்டபொம்மும் அவனைச் சேர்ந்தவரும் ஏறிப்போன குதிரைகளை இழந்துவிட்டனர்; நம் படைகள் கடுமையாய்த் தொடர்ந்து அவனைப் பிடிக்க நெருங்கி யிருக்கின்றன."

என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

நாட்டிலுள்ளவர்களை அச்சுறுத்திச் சேனாபதி விடுத்த எச்சரிக்கைக் கடிதங்கள் எவ்வழியும் வெவ்விய நிலைகளில் விரிந்து பரந்தன. அவ்வாறு அலை மூண்டு நீண்டு வந்தாலும் பாஞ்சைப் பதியிடம் பெரும்பாலோர் வாஞ்சை பூண்டிருந்தமையால் யாரும் யாண்டும் இந்த ஆண்டகைக்கு இடர் புரிய

நேரவில்லை. கும்பினி அதிகாரம் கொடுமையாய் மூண்டு நின்றும் இவர்பால் கொண்டுள்ள அன்புரிமை மாருமல் இயன்ற வரையும் கரவாய் இதம்புரிந்து பலர் அயல் ஒதுங்கி நின்றனர்.

எட்டையாபுரம் ஜமீன்தார் மாத்திரம் படைகளோடு தொடர்ந்து தேடி அலைந்து தியங்கித் திரிந்தார். கட்டபொம்மை விரைந்து பிடித்து விடலாம் என்று சேனைத் தலைவனிடம் அவர் உறுதி கூறி வந்தாலும் கூறியபடி யாதும் செய்ய முடியாமல் வீரியம் இழந்து வெருண்டு உளைந்தார். உள்நாட்டில் உளவு கூறிக் கோளுரையாடிக் கொடிய துரோகத்தை அவர் செய்து வருவதைக் கண்டு தேச மக்கள் நெடிது வருந்தி நீசச் செயல் என நேரே அவரை இகழ்ந்து வந்தார்; வரினும் ஆசை வயத்த ராய் யாண்டும் அலைந்து திரிந்து வெளிநாட்டு வெள்ளையருக்கு வேண்டிய ஊழியம் புரிந்து அவர் பழி நீட்டி வந்தார். பல வகையில் பரிந்து தேடியும் ஒரு நிலையும் தெரியாமையால் அவருடைய படைகள் ஊக்கம் குன்றி உறுதியின்றி உளைந்து நின்றன.

## புதுக்கோட்டைக்குப் புது உத்தரவு அனுப்பியது.

அந்த நிலையில் கலெக்டர் லஷிங்டன் துரை புதுக் கோட்டை அரசருக்கு இரண்டு கடிதங்கள் அனுப்பி இருந்தார். முன்னம் பொதுவாக எல்லா ஜமீன்தார்களுக்கும் இவரைப் பிடிக்கும்படி வெகுமதி குறித்து விட்டிருந்த கட்டளையைத் தவிர, இப்பொழுது புதிதாய்த் தமக்கு மட்டும் தனி நிலையில் வந்த அந் நிருபங்களைக் கண்டதும் புதுவை நிருபர் பெரிதும் கவன்ருர். கடித நிலைகளைக் கருதி யுணர்ந்து மறுகி யுளைந்தார்.

## கலெக்டர் கடிதம்.

"கட்டபொம்மு கோட்டையை விட்டு வெளியேறி உன் நாட்டுள் வந்துள்ளான். அவனை வேறு எங்கும் தப்ப விடாமல் உடனே கைப்பற்றுக; கும்பினியாரால் சிறந்த ஊதியம் அடைந்து உயர்ந்து வாழலாம். இச் சமையத்தைத் தக்கபடி உபயோகித்து மிக்க பயன் அடைக; வேறு இங்கே விரித்துச் சொல்வது மிகை; அயர்ந்திராமல் விரைந்து முயல்க" என

இங்ஙனம் வரைந்து வந்ததை அறிந்ததும் அவர் குலைந்து வருந்தினர். இவ் வீரரது நிலைமையைக் குறித்துப் பலபல நினைந்தார்.

### வஞ்சம் புரிய நெஞ்சம் கவன்றது.

“பாஞ்சைப்பதி அஞ்சா நெஞ்சர். நல்ல போர்வீரர். நமக்கு யாதோர் அல்லலும் செய்யாதவர். மேலும் சென்ற வருடம் திரிசிரபுரத்திற்கு வந்து கும்பினியாரைக் கண்டு மீளுங்கால் அவரை இங்கு விரும்பி அழைத்து விருந்து புரிந்து நட்புக்கொண்டு நயந்து நின்றுள்ளோம்; நண்பனுக்குத் துரோகம் செய்வது பாவமே! ஆனல் கும்பினியார் பகையும் ஆகாதே; இதில் நாம் என்ன செய்வது?” என இன்னவாறு பல எண்ணி யுளைந்தார். உற்ற துணைவர்களுடன் உசாவி ஓர்ந்தார். பல பேர் பின் தொடர்ந்து இவரைப் பற்ற முயன்று பாய்ந்து திரிவதைத் தெரிந்தார்; இனி நாம் தனியே தணிந்து நிற்பது தவறு என்று துணிந்து கொண்டார். பெரிய திறலுடைய கும்பினியாரது பிரியத்தைப் பெறுதற்கு உரிய சமையம் இது என உள்ளுற வுவந்தார். உடனே பிடிக்க விரைந்தார். அதற்கு ஆன படைகளை ஆயத்தம் செய்தார். தம்முடைய செயல் நிலைகளைக் குறித்துக் கலெக்டருக்குச் செப்டம்பர் மாதம் 16-ந் தேதி (16—9—1799) ஒரு ஓலை எழுதி அனுப்பினர். “கலெக்டர் துரையவர்களுக்கு வணக்கமாய் எழுதிக் கொண்டது. தங்கள் உத்தரவுகள் வந்தன. பெற்றுப் பெரு மகிழ்ச்சி அடைந்தேன். கட்டளைப்படி எதுவும் செய்யச் சித்தமா யிருக்கிறேன். என் உடல் பொருள் உயிர் முழுவதையும் எப்பொழுதும் கும்பினிக்குத் தத்தம் செய்துள்ளேன். முன்பு திப்பு சுல்தானேடு சண்டை நேர்ந்திருந்த பொழுது அங்கே கும்பினியின் தளகர்த்தராய் நின்ற கர்னல் பிரௌண் (Colonel Brown) துரைக்கு வேண்டிய உதவி செய்திருக்கிறேன். படைகளின் தீனிக்காக ஐயாயிரம் ஆடுகளையும், போர்த் துணைக்கு இரண்டாயிரம் வீரர்களையும் சிறந்த தலைவர்களுடன் அனுப்பி யிருக்கிறேன். ஆதியிலிருந்தே கும்பினிக்குப் பல வகையிலும் ஊழியம் புரிந்து வந்துள்ளேன். இன்றும் தப்பாமல் இதைச் செய்து முடிக்கிறேன். கும்பினிக்கு வெற்றி

யுண்டாகும்படி கடவுளை என்றும் பிரார்த்தித்திருக்கின்றேன்." என்று இங்ஙனம் எழுதி விடுத்தது கலெக்டருக்கு 19-ந் தெய்தி (19—9—1799) வந்து கிடைத்தது. அதைக் கண்டு அவர் மகிழ்ச்சி மீக்கொண்டு உறுதியான பலனை எதிர்பார்த்திருந்தார்.

## தொண்டைமான் தொண்டு கண்டது.

அதன்பின்பு தக்க படை வீரர்களைப் பக்கமெங்கும் ஏவி மிக்க கவனத்தோடு பார்த்து வரும்படி *தொண்டைமான் பணித்து விடுத்தார். அவரும் விரைந்து சென்று இடங்கள் தோறும் திடங்கொண்டு தேடினர். நாள் ஐந்தாகியும் பதில் ஒன்றும் தெரியவில்லை. "நமது எல்லைப்புறத்தில் கட்டபொம்மு வந்திருப்பதாகத் துரை துப்பறிந்து எழுதியிருக்கிறார்; நாமும் இடை நிலை தெரிந்து படைகளை ஏவி இருக்கிறோம். போனவர் ஒருவராவது மீண்டு வரவில்லை; ஆனபடி ஒன்றும் அறிய முடிய வில்லை. கட்டபொம்மு கொடிய போர் வீரனே! அவன் கிட்ட நெருங்கின் எவரையும் வெட்டி எறிந்து விடுவானே! எவ்வாறு முடியுமோ? அவனால் நமக்கு யாது வந்து விடியுமோ?'' என இவ்வாறு பல பல எண்ணி யுளைந்து அவர் இனைந் திருந்தார். எந்த வகையில் முடியுமோ என்று அவர் சிந்தை கவன்று நொந்திருக்கின்ற அந்த நிலையில் இந்த மன்னர் சோளபுரத்திலிருந்து தமது நண்பரான விஜயரகுநாத தொண்டமானைக் கண்டு கொண்டு அதன்பின் திருச்சிராப்பள்ளிக்குப் போகலாம் என்று துணிந்து அவ்வூரவரிடம் அரிதின் விடைபெற்று விடையென எழுந்து புதுக்கோட்டையை நோக்கி விரைந்து வந்தார். அவ்வூரிலிருந்து புதுவை வடமேற்கில் ஒன்பது மைல் தூர அளவினது. காலை வேளையில் துணைவர்கள் ஆறு பேர்களுடன் வீறு குன்றிய ஏறு போன்று இவ் வீரர் ஏறி வருங்கால், இவர் சோளபுரம் வந்துள்ளார் என்பதைத் தொண்டைமான் தெரிந்து பெரிதும் விரைந்து மூவரைத் தனியே அழைத்து ஆவன

* தொண்டைமான் என்பது புதுக்கோட்டை அரசர் பரம்பரைப் பட்டப் பெயர். இக் கட்டபொம்மு பட்டம் ஆண்ட அப்பொழுது அங்கே பட்டமாயிருந்தவர் விஜயரகுநாத தொண்டைமான் என்பவர்.

உரைத்து இவரை உறவுரிமை பாராட்டி உடனழைத்து வரும்படி ஊக்கி உய்த்தார். அவர் ஆவலுடன் வந்தார். இடை வழியில் எதிரே கண்டு இவரை இனந்தெரிந்து கொண்டு விநயமாக அருகே நெருங்கி வணங்கி நின்று, "சமுகம் இங்கு வந்துள்ள விவரந் தெரிந்து மகாராஜா அங்கே அழைத்து வரும்படி உத்தரவு செய்தார்கள்; அதற்காக வந்தோம்" என்றார். அந்த வுரையைக் கேட்டு வஞ்சம் அறியாத இவர் நெஞ்சம் மகிழ்ந்தார். "நேரே அங்கேதான் போகின்றேன்; போவோம் வாருங்கள்" என்று புகன்று சென்றார். அனைவரும் உவந்து பின் போனார். நகரை யடைந்தார். அரண்மனை புகும் பொழுது உடன் வந்த மூவரும் உள்ளே புகாது ஒதுங்கி நின்றார். இவர் நேரே சென்றார். துணைவரும் தொடர்ந்து போயினர். இவர் தம்மை நோக்கி வருவதை உள்ளே யிருந்து கண்டுகொண்டும் காணாதவர் போல் அருகு நெருங்கும் வரையும் அப் புதுவை அரசர் புதுமையுடன் பராமுகமா யிருந்தார். கபட வஞ்சனைகள் கடுமையாய் நின்றன.

"குடையோடும் கொடியோடும் கோலமணிச் சிவிகையொடும்
படைபரிகள் முதலான பவிசோடு முன்வந்தான்;
உடைமாறி உருமாறி உற்றதுணை நிலைமாறி
நடையேறி வந்தடைந்தான் நல்வினையோ? தீவினையோ? (1)

ஓராண்டு முன்னம்இவன் உற்றபொழுது ஓடிவந்து
பாராண்டு புரந்தருளும் பாண்டியா! எனப்பணிந்து
சீராண்ட வரிசையுடன் சிறந்தழைத்து விருந்து செய்தான்
நேராண்டு போயடைந்தும் நேராமல் உள்ளிருந்தான்." (2)

இங்ஙனம் கள்ளமாக அவர் இருந்த நிலையையும் தெரிந்து கொள்ளாமல் இவர் உள்ளே போய் அருகே புகுந்தார். புகவே அப்பொழுதுதான் புதிதாகக் கண்டவர் போல் ஆச்சரியம் கொண்டு, "வருக வருக வருக" என்று வாய் உபசாரம் புரிந்து அருகே இருக்கும்படி பணித்தார். இவர் அமர்ந்திருந்தார். துணைவரும் அயலமர்ந்தார். பணியாளர்கள் அனைவரையும் அயல் அகலச் செய்து இவரிடம் மிகவும் உரிமையாளர் போல் கரவுடன் உறைந்து அவர் விநயமாகக் குசலம் விசாரித்தார். இவர் ஒரு சூதும்

எண்ணுமல் தமக்கு நேர்ந்துள்ள அல்லல்களெல்லாவற்றையும் அறியச் சொல்லித் திருச்சிராப்பள்ளிக்குச் செல்ல நினைந்து தாம் வந்துள்ளதைத் தெரிய உணர்த்தினர். இவரது பரிபவ நிலையை உரிமையுடன் உரைக்கவே அவர் உள்ளம் இரங்கி மிகவும் வருந்துவது போல் கள்ளமோடு காட்டி, "வீர வள்ளலான உங்களுக்கும் இந்த அல்லல் வர நேர்ந்ததே! அந்தத் தானுபதி கெடுத்த கேடு இது; நீங்கள் என்ன செய்வீர்கள்? நிலை தெரியாமல் வந்து விட்டது; இனி நொந்து பயன் என்ன? ஆனுலும் இனிமேல் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்; இங்கேயே தங்கி இருங்கள்; ஒரு தொல்லையும் வராதபடி பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று தேற்றி இருத்தி அன்று சிறந்த விருந்து ஒன்று செய்து உயர்ந்த உடை முதலியன உதவி உவந்து அளவளாவி அரண்மனையில் தனியான ஒரு மாளிகையில் இருந்து வரும்படி புரிந்து ஏவலாளரையும் அமைத்து ஆவலுடையவர் போல் அமர்ந்திருந்தார். அவரது உபசார நிலையைக் கண்டு உள்ளம் குளிர்ந்து துணைவர்களுடன் அங்கு இவர் அமைதியாய்த் தங்கி இருந்தார்.

### நேர்ந்து நின்ற சதி

உள்ளே மருமமாய்க் கரவுகள் புரிந்து கொடிய குடிகேட்டைத் தொண்டைமான் கடிது செய்து வருவதை ஒரு சிறிதும் உணராமல் எதிர்வது எதையும் கருதாமல் இவர் உரிமையாய் உறைந்திருந்தது பெரிய பரிதாபமாய் மருவி நின்றது.

பாஞ்சைமன்னன் பதிபெயர்ந்து படுதுயரால்
நெடிதயர்ந்து பரிவு கூர்ந்து
வாஞ்சையுறு நண்பனெனப் புதுக்கோட்டை
மன்னனிடம் வந்தடைந்தான்;
தாஞ்சாகக் கொல்லுநஞ்சைத் தண்ணமுதம்
என்றெண்ணிச் சார்ந்தார் போலத்
திஞ்சாலி விளைநாடன் சேர்ந்ததுதான்
தீவினையாய்த் தீர்ந்த தன்றே.

கொடிய விடத்தை இனிய அமுதம் என்று கருதி உவந்தது போல் புதுவை அரசை அடைந்து உரிமை கூர்ந்து இவர் புதுமையா யிருந்தார். அந்த இருப்பு நெருப்பு என நின்றது.

---

# இருபத்தேழாவது அதிகாரம்.

## புதுக்கோட்டையில் பிடிபட்டது.

---

உற்ற நண்பன் என்று நம்பி வந்து இந் நம்பி அங்ஙனம் தங்கி இருக்க, எங்கும் படைகளை ஏவி இணைந்து தேடிய பொருள் எளிதே வந்து கிடைத்தது எனக் களி மீக் கொண்டு நின்ற தொண்டைமான் மறுநாளே இரண்டக மாகக் கலெக்டருக்கு ஒரு கடிதம் எழுதினர். அவருடைய நெஞ்சில் சதி வஞ்சங்கள் நிறைந்திருந்தன ஆதலால் அஞ்சலை அதிவேகமாய் விடுத்தார்; அந்த எழுத்தால் பெரிய ஊதியங்கள் கிடைக்கும் என்று உறுதி மீதூர்ந்து கருதி மகிழ்ந்தார். அவர் எழுதி விடுத்த அக் கடித நிலையை அடியில் காண்க.

### தோண்டைமான் கடிதம்.

"தாங்கள் முன்பு குறித்திருந்த பாஞ்சாலங்குறிச்சிப் பாளைய காரனுகிய கட்டபொம்மை ஆறு பேருடன் சேர்த்துப் பிடித்து வைத்திருக்கிறேன். அவனைப் பிடிப்பதில் நான் அடைந்துள்ள அல்லல்கள் அளவிட லரியன. மலைகள் குகைகள் காடுகள் நாடுகள் முதலிய பல இடங்களிலும் தேடி அலைந்து என் படை வீரர்கள் படாத பாடு பட்டுள்ளார்கள். முடிவில் தெய்வாதீனமாய் என் கையில் அவன் அகப்பட்டான். அவன் பொல்லாத போர் வீரன் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். தன் உயிரைத் திரணமாக நினைத்திருக்கிறன். பிடிபட்டு விட்டோமே! என்ற மானத்தால் தற்கொலை செய்துகொள்ளவும் துணிந்துள்ளான். அவனை இங்கே ஒரு நிமிடம் வைத்துக் காப்பாற்றுவது எம வேதனையா யிருக்கிறது. உடனே பெரும் படைகளோடு வந்து விரைந்து கொண்டுபோக வேண்டும். கும்பினியே தஞ்சம் என்று நான் நம்பி இருக்கிறேன். கணமும் தாமதியாமல் காரியத்தை வீரியமாய் முடித்துக் கொள்ளுங்கள். படை வரவை மிகவும் ஆவலுடன் எதிர்பார்த் திருக்கின்றேன்." என்று இங்ஙனம் வரைந்து செப்டம்பர் மாதம் இருபத்து நான்காம் தேதி (24—9—1799) விரைந்து விடுத்தார். விடுத்த நாலாம் நாள் அக் கடிதம் வந்து கிடைத்தது. அம் முடங்கலைக் கண்டு இம் மடங்கல் அகப்பட் டுள்ளதை அறிந்தவுடனே கலெக்டரும்

சேனுபதியும் அங்குக் கூடியிருந்த துரைமார்களும் அடைந்த மகிழ்ச்சியை யார் சொல்ல வல்லார்? உடனே ஒரு பெரும் படையைத் திரட்டி, ஆங்காங்கு அலைந்து திரிகின்ற படைவீரர்களுக்கும் தகவலை அறிவித்து அனைவரையும் ஒரு முகமாகக் கூட்டிப் புதுக்கோட்டைக்கு உய்த்தார். எல்லாச் சேனைகளும் உள்ளங் களித்துத் துள்ளி எழுந்து ஒல்லையில் ஓடி வந்தன. காலாட் படைகளும் குதிரைப் படைகளும் குதித்து வந்து புதுக்கோட்டையை அடைந்து முதல் நாள் இரவு அயலமர்ந்திருந்து இரகசியமாக அரசரிடம் உளவு விசாரித்து அவர் குறிப்பின்படியே தக்க சமயம் பார்த்து மறுநாள் அதாவது அக்டோபர் மாதம் முதல் தேதி (1—10—1799) பிற்பகல் 3 மணிக்கு நகருட் புகுந்து அரண்மனையை வளைந்து கொண்டன. ஒரீலியினது குதிரைப் படைகளும் எட்டப்ப நாயக்கரும் அவரது படைவீரர்களும் முன்னுற நின்றனர். மற்றைச் சேனைகள் மூன்று பக்கமும் ஊக்கி நின்றன. பிடித்த வெடி வேல்களுடன் உருவின கத்திகளோடு அருகெங்கும் அடர்ந்து ஆயத்தமான பின் படைத் தலைவர்கள் தொண்டைமானை மந்தணமாகக் கண்டு பேசினர். அவர் இது சமையம் பிடிக்கலாம் என இருப்பிடத்தைக் குறித்துக் காட்டித் தம் படை வீரர்களையும் துணையாக உடனிருத்தி இடை ஒதுங்கி நின்றார். சதிவேலை அதி பாதகமாய் நடந்தது.

### நம்பி நிலை.

பாவம்! அன்று இம் மன்னரும் தம்பியரும் எண்ணெய் முழுக்காடி நண்பகல் உண்டி கொண்ட பின்னர் மேல் மாளிகையில் அயர்ந்து உறங்கினர். வந்த ஐந்தாவது நாள் இவர் திருச்சிராப்பள்ளிக்குப் போய்க் கும்பினித் துரைகளைக் கண்டுவர வேண்டும் என்று தொண்டைமானிடம் கூறினர். அதற்கு அவர், “இப்பொழுது அங்கே போகவேண்டாம்; எங்கும் கலகமும் குழப்பமுமா யுள்ளன. எல்லாம் சமாதானமாய் அடங்கிய பின்பு போய்ப் பார்த்துக் கொள்ளலாம். அது வரையும் சும்மா இங்கேயே தங்கி யிருங்கள்” என்று உள்ளன்புடையார் போன்று உரைத்து நின்றார். இவர் நல்லதென்று நம்பி வழியிடையடைந்து வந்த அல்லல் தீர அமர்ந்திருந்தார். சிறந்த உணவுகள் முதலியன உதவி உவந்து உபசரித்து வந்த அவர் குறித்த அன்று

எண்ணெய்நீர் ஆட்டி இனிது ஊட்டி மேலே ஆயுதம் முதலியன யாதும் இல்லாத தனி இடத்தில் இவரைத் துயில் கொள்ளும்படி எதிர்வது கருதி இதம் புரிந்திருந்தார் ஆதலால் அவ்வண்ணம் இவர் கண்ணயர்ந்து கடிது தூங்கினார். அந்தோ! இந்தத் தீரருக்கு வந்துள்ள தீன நிலைதான் என்னே! கொஞ்சம் பராமுகமாய்ச் சிந்தித்தாலும் நெஞ்சம் பகீர் என்று உருகி விடும். இக்காலத்தில் இசைந் துள்ளன போல எண்ணிய இடங்களுக்கு விரைந்து செல்லுதற்குரிய வாகன வசதிகள் அக்காலத்தில் [illegible] ஏறிவந்த குதிரைகளையும் இடையே இழந்து, காட்டிலும் மேட்டிலும் கல்லிலும் முள்ளிலும் அல்லும் பகலும் அலைந்து திரிந்து, எல்லையில்லாத அல்லல்களை யடைந்து, எங்கும் தொல்லைகள் சூழ்ந்து துடித்து நிற்க அவற்றின் இடையே இவர் எய்த்து நின்றார். பல வகையான பவிசுகளோடு சுகபோகங்களையே அனுபவித்துத் தலைமையான நிலைமையில் சுகுமாரராய் இருந்து வந்த ஒருவருக்கு இடையே திடும் என இத்தகைய இடையூறுகள் கடிது நேர்ந்தால் அவை அவர்க்கு எவ்வளவு கொடுமையுடையனவா யிருக்கும்? பட்டினிகிடந்து பசித்துயர் அடைந்து கட்டின வேட்டியோடு கண்ட இடங்களிலெல்லாம் கவலையுடன் திரிந்து அவல நிலைகளின் அவதியை யடைந்து முடிவில் நண்பன் என்று நம்பி நாடிவந்து கூடியுள்ள இடத்தே இக்கேடு வந்து சேர்ந்ததே! சேர்ந்தும் இவர் யாதும் உணராயல் சோர்ந்து துயின்றார். இவர் துயிலும் துயிலம் அறிந்து அயலெங்கும் படைகளை எச்சரித்துக் கொடிய சேனைத் தலைவர்கள் வெடிவேல்களுடன் படிகளி லேறி மேலே பைய வந்தார். வரவே அரவம் கேட்டு அச் சமையம் கண்விழித்த ஊமைத்துரை கண்டார். பகைவர் புகுந்தார் என்று விரைந்து பாய்ந்து அங்கோர் வளைதடியைக் கடுத்தெடுத்துக் கடுவேகமாய் வெகுண்டு அடித்தார். அவ் வடியால் இரண்டுபேர் புரண்டு விழுந்தார். பின்னவன் பின்னும் பாய முன்னவர், "இது என்னே!" எனத் துள்ளி எழுந்தார். துயில் மயக்கத்தில் செயல் ஒன்றும் தெரியாமல் வெருண்டெழுந்த அவர் விளைவு இன்னதென்று தெரிந்து பின்னவன் கையிலுள்ள தடியைப் பிடுங்கி அயல் எறிந்து, "தம்பி! நில்லு; வினைப் பயன் மூண்டது; இனி ஒன்றும் செய்யாதே; மோதுவதால் யாதும் பயன் இல்லை" என்று அடக்கி நிறுத்தி

வெறுத்த சிந்தையராய் எதிரிகளை நோக்கி "நான் இங்கு ஒன்றும் செய்யேன்; நம்பி அகப்பட்டேன்; நீங்கள் செய்யவேண்டியதை இனி விரைந்து செய்து கொள்ளலாம்" எனச் செயலிழந்து நின்றார். அந் நிலையிலும் அருகே நெருங்க அஞ்சி ஆயுதங்கள் ஏதேனும் உளதா? என்று அவர் ஆராய்ந்து திகைத்தார். அத் திகைப்பை நோக்கி இவர் நகைத்துத் தம் கைகளை விரித்துக் காட்டி, "வெறுங் கையே; யாதும் அஞ்ச வேண்டாம்; வேண்டியதை விரைந்து செய்து கொள்ளுங்கள்" என்று விரைந்து நின்றார். இவ் ஆண்டகையின் அதிசய நிலையை வியந்து ஆண்டு நின்றவரனைவரும் ஒருங்கு திரண்டு நெருங்கி வந்து இவருடைய கைகளில் கடிய விலங்கை மாட்டினர். அரிய போர் வீரராய் அரசு புரிந்த கையில் கொடிய விலங்கு ஏறவும் தம்பி கொதித்துச் சீறினார். இவர் அவரை மாறி நோக்கி "வேறு நோக்கம் வேண்டாம் தம்பி!" என்று ஆறுதல் கூறி ஆற்றியருளினார். அவர் சீற்றம் அடங்கிச் செயலிழந்து செங்கண்ணராய்ச் செயிர்த்து நின்றார். உடனே அவர் முதலாக மற்றை அறுவரையும் அவ்வாறே சிறை செய்தனர். அதன்பின் மேடையிலிருந்து அனைவரும் ஒருங்கே தொடர்ந்து கீழே யிறங்கினர்.

வலையிடைப் பட்ட மடங்கல் என விலங்கொடு கீழ் வந்து அடங்கலர் முன் அடங்கி நிற்கும் இவ் அருந்திறலாளரைக் கண்டபொழுது அன்று எட்டப்ப நாயக்கர் கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அங்கு வந்து நின்ற வெள்ளைத்துரைகள் எவரினும் அவர் உள்ளத்தில் களிப்பும் மகிழ்ச்சியும் கதித்து நின்றன ஆதலால் இவர் பிடிபட்ட செய்தியைச் சேனைபதியிடம் தானே முன்னதாகப் போய்ச் சொல்ல விழைந்து குதிரையை ஒல்லையில் ஒட்டி ஊக்கிப் பாய்ந்து தென்திசை நோக்கி ஓடி வந்தார். அவரது போக்கை நோக்கிச் சேனை வீரரும் சிறு நகை செய்தார். அவர் அப்படிப் போகவே படைகள் சூழச் சிறையிடை நின்ற இவரை ஒரு தண்டிகையில் ஏறும்படி செய்து படைத் தலைவர்கள் அனைவரும் பரிகளில் ஏறினர். எல்லாரும் ஆயத்தமானவுடன் தென்திசை நோக்கிச் செல்ல விரைந்தார். அச் சமையம் இவர் புதுவை அரசரிடம்வழி அனுப்பிக் கொள்ள விரும்பிச் சிவிகையில் இருந்தபடியே சூழ நோக்கினர். அருகு எங்கும் இல்லை. அது பொழுது அவர் அயல் ஒதுங்கி மறை

வாக நின்றார் ஆதலால் காண அவாவிய இவர் கவனமாக நாடினார். கருதியபடி கண்டுகொள்ள முடியாமையால் அருகே நின்ற அவரது உரிமையாளர்களை நோக்கி, "நண்பர் விஜய ரகுநாதன் அவர்கள் எங்கே?" என்றார். *"மகாராஜா எங்கேயோ போயிருக்கிறார்கள்" என்று எதிர் மொழி தந்தார். அரசர்பால் சொல்லி விடும்படி அவர்களிடம் இவர் பரிவுடன் கூறினார். "நண்பர் தொண்டைமான் செய்துள்ள தொண்டை யான் கண்டு மகிழ்ந்தேன். அவரை நேரே பார்த்துச் சில வார்த்தைகள் பேசி விடை பெற்றுக்கொள்ள விரும்பினேன்; காணவில்லை; ஆனாலும் அவரது தேசாபிமானமும் நேச உரிமையும் நேரே நன்கு தெரியலானேன். யார் இவ்வாறு அடுத்தவர்க்குப் பேருபகாரம் புரிவர்? அவர்பால் இங்கு உண்டு இருந்ததை நான் ஊழியிலும் மறவேன்; நாழிகை ஆகிறது; போவோம்" என்றார். இவர் இங்ஙனம் அடி வயிறு எரிந்து சொல்லி முடியவும் எல்லாரும் ஒல்லை எழுந்தார். தண்டிகை நடுவே செல்லத் தம்பியர் முதல் அறுவரும் அருகே நடந்து வரக், காலாட் படையும், குதிரைச் சேனையும் அணி அணியாய் அயலே சூழ்ந்து அடுத்து வரப், படைத் தலைவர்கள் பரிகளிவர்ந்து தொடுத்து வந்தார். அங்ஙனம் நடந்து வருங்கால் இவருடைய குல வீரர்களான கம்பளங்கள் இடையே வந்து புகுந்துவிடுவரோ? என்று பயந்து அயலெங்கும் அடிக்கடி கவனமாய் ஆய்ந்து நோக்கி அதிக வேகமாய் அனைவரும் அடர்ந்து நடந்தார். இடையே மதுரையை அடைந்தார். கொடிய வேட்டை ஆடி ஓர் அரிய சிங்கத்தைப் பெரிய வலையில் பிணித்து உரிய படைகளுடன் ஊரடைந்த பேரரசர்போல் மதுரை வரவும் சேனைத் தலைவர் மகிழ்ந்து நின்றார். அங்கே இருதினம் தங்கி இளைப்பாறி இருந்தார். சிறையில் இருந்தபடியே சோமசுந்தர நாதனையும் மீனும்பிகையையும் இவர் சிந்தனை செய்திருந்தார். ஓராண்டுக்கு முன் நேரே போய்த் தெரிசித்துச் சந்நிதிக்குப் பெரு நிதி உதவிப் பெரும் புகழுடன் சென்றவர் இது பொழுது சிறைவாய்ப் பட்டுச் செய விழுந்து நின்றார் ஆதலால் அயலிருந்த தம்பியர் அந் நிலையினை நினைந்து

* உங்களுக்கு இடம் கொடுத்ததனால் கும்பினியார் பகை மூண்டது; அதனால் எங்கள் அரசர் மறைந்து போக நேர்ந்தது என இவர் குறை கூறு வகை மறை முகமாக அவ்வாறு அவர் கூறலாயினர்.

உளம் மிக நொந்தார். ஊழ்வினையின் விளைவை எண்ணி வாள் வினையாளர் வருந்தி யுழந்து ஆள்வினை இழந்து அலமந்திருந்தார்.

## தளபதி உளவு கண்டது.

இவர் அங்ஙனம் இருக்கச் சேனாபதி இங்கே நாகலாபுரத்தில் ஆகவேண்டிய காரியங்களையெல்லாம் ஆராய்ந்து முடித்துக் கொண்டு பட்டாளங்களுடன் கட்டாக எழுந்து * கயத்தாறு போய்த் தங்கி இவ் வீரன் மேல் சேனைகள் சீறிப் போயிருக்கும் காரிய நிலையைக் கருதிக் கருத்தோடு எதிர் பார்த்திருந்தான். கருமக் குறிப்புகள் யாவும் மருமங்களாய் மருவி நிகழ்ந்தன.

கட்டபொம்மு பிடிபட்டதும் அட்டதிக்கும் அடைந்தவர் போல் அடங்கா மகிழ்ச்சி அடைந்து ஆவலோடு பரி யூர்ந்து விரைந்து பாய்ந்து முன் எட்டி வந்த எட்டப்ப நாயக்கர் இடந் தெரிந்து போய்ச் சேனாபதியைக் கிட்டினவுடனே "துரைகளே! பிடிச்சாச்சு; அகப்பட்டான்; ஜெயம்" என இங்ஙனம் களிப்பு மீறித் தலை கால் தெரியாமல் கும்மாளங் கொண்டு குதித்துக் கூறி அடுத்து நின்றார். அவரது நிலை உவகையில் ஓங்கி நின்றது.

இம் மானவர் சிறையாய் வருகிறார் என்பதை அறிந்த பொழுது அப் பானர்மேன் அடைந்த உவகைக்கு அளவே இல்லை. அச் சுப சோபனத்தை முன்னதாக வந்து தன்னிடம் சொன்ன எட்டப்ப நாயக்கருக்குச் சிறந்த சால்வைகள் இரண்டும், வேறு சில வெகுமதிகளும் விரைந்து கொடுத்தான். அடங்கா வீரன் அகப்பட்டு வருதலால் கடுங் காவலோடு அழைத்து வரும்படி எச்சரிக்கை செய்து தன் பக்கம் இருந்த படைகளையும் மதுரைக்கு உடனே அவன் அனுப்பி வைத்தான்.

அப் புதிய படைகள் வரவே அங்கிருந்த சேனைத் தலைவர்கள் அதிக மகிழ்வடைந்து மதுரையிலிருந்து புறப்பட்டு இப் பதியைக் கயத்தாற்றுக்குக் கொண்டு வந்தார். இவர் பிடிபட்டு வருகிறார் என்னும் வதந்தி பட்டிக ளெங்கும் பரந் திருந்தமையால் இடையே வழிகள் தோறும் திரளான சனங்கள் தலை காண விழைந்து அதிசய நிலையில் அவாவி நின்றார். பலர் பரிதாப முடையராய்ப் பரிந்து புலம்பினார். சிலர் கும்பினியாரின் அதிகார நிலையை வியந்து பேசி வெருண்டு மருண்டு விலகி நின்றார்.

---

* இவ்வூர் பாஞ்சாலங்குறிச்சியி லிருந்து நேர் மேற்கே 20 மைல் தூரத்தி லுள்ளது. மங்கம்மாள் சாலை அருகே உள்ளமையால் அக் காலத்தில் கும்பினிப் படைகள் தங்குவதற்கு இது நிலையமா யிருந்தது.

# இருபத்தெட்டாவது அதிகாரம்.

## கயத்தாறு புகுந்தது.

---

கும்பினிப் பட்டாளங்கள் முன்னும் பின்னும் இருபக்கங்களிலும் தொட்ட வெடி வேல்களோடு கட்டாகக் காத்து வந்து கயத்தாறு புகுந்து ஊரிடையிருந்த ஓர் சத்திரத்துள் இச் சுத்த வீரரை விடுத்தன. அக்டோபர் மாதம் ஐந்தாம் தேதி (5—10—1799) பிற்பகல் 5 மணிக்கு அவ்வூரை யடைந்தார். இவ் வீரர் வந்து சேர்ந்தவுடனே சேனபதி நேரே ஆவலோடு விரைந்து பார்த்தான். வியந்து வேர்த்தான். அது போழுது தான் இவ் அதிபதியை அவன் முதன் முதல் நேரில் கண்டான். திரண்டு உருண்ட திண்டோள்களும், பரந்து அகன்ற மார்பும், விலங்கமைந் திருந்தும் கலங்காமல் கதித்திருக்கும் இவரது கம்பீர நிலையையும் கண்டு அவன் கதி கலங்கி நின்றான். நிற்பினும் கும்பினியின் அதிகார நிலையும் படைகளின் துணை வலியும், உள் நாட்டவர் பிளவு பட்டு நின்று உளவு கூறி உதவி நிற்கும் திறமும், பிறவும் அவனை ஊக்கி நின்றன. அவனது நிலை அப்பொழுது அடல் மீறி நின்றது. அடங்காத அருந்திறலாளன் கையகப்பட்டான் என்று களித்து நின்ற அவன் மேலே செய்ய வேண்டிய காரியங்களை விரகோடு விரைந்து செய்யத் துணிந்து அதுவரையும் இவரைச் சிறையில் வைத்திருக்கும்படி பணித்தான். அவ்வாறே கொடுஞ் சிறையில் வைத்து மருங்கெங்கும் கடுங்காவல் புரிந்து பெருங் கவனத்துடன் இவரைப் பேணி வந்தார். உற்ற துணைவர்களுடன் ஒருங்கமர்ந்து மான வீறோடு மறுகி இக் கொற்றவர் உள்ளம் கொதித்து உள்ளே இருந்தார்.

செப்டம்பர் மாதம் ஐந்தாந் தேதி (5—9—1799) தம் கோட்டையை வந்து வளைந்த வெள்ளையர் சேனையை வேரற வென்று வெற்றிக் களிப்போடு விளங்கி நின்றவர் பின்னை மதியால் பதி பெயர்ந்து போய்க் கதி திரிந்து வலையிடைப் பட்ட வன்மடங்கல் போல் வலி மடங்கி அக்டோபர் மாதம் அஞ்சில் (5—10—1799) அதாவது நேரே ஒரு மாதத்தில் நிலை குலைந்து வந்து இங்ஙனம் சிறை புகுந் திருந்தார் என்றால் அத் தலைவிதி

யின் நிலையினைக் கலையறிவால் எவ்வாறு கண்டு என்ன வகையில் ஓர்ந்து சொல்வது? எவ்வளவு வலி யுடையவராயினும் வெவ்வினை விளைந்து வரின், அவ்வளவும் இழந்து அலமந் தயர்வர் என்பதை உலகம் காண இவர் நிலை தலைமையாய் உணர்த்தி நின்றது.

வெந்திறல் வேந்தனாய் வீறு மண்டியே
இந்திர திருவனாய் இருந்து வந்தவன்
மந்திரி மதியினால் மதி யிழந்தனன்
முந்திய விதியினால் முழுதும் நொந்தனன்.

என உலகம் இவ்வாறு பரிந்து கூறி வருந்தி மறுக மன்னன் இன்னலுழந்து அங்கு இனைந்து சேர்ந்தார். ஊழ்வினை உருத்து மூண்டபொழுது வாழ்வினை இழந்து எவரும் மறுகி அலமருவர் என்பதை இவரது சரிதம் தெரிய விளக்கி அரிய காட்சியாய் நின்றது. விதி மூண்டு வர மதி மாண்டு பதி பேர்ந்து வந்தார்.

"முதிர்தரு தவமுடை முனிவர் ஆயினும்,
பொதுவறு திருவொடு பொலிவர் ஆயினும்,
மதியினர் ஆயினும், வலியர் ஆயினும்,
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்?"

என்று சொல்லும் நீர்மையில் இவ் வெல்லும் வீரர் நிலை அன்று புல்லி இருந்தது. அவ் அல்லல் நிலையிலும் உள்ளம் தளராமல் இவர் ஊக்கி இருந்தார். உடன் இருந்த ஆறு பேரும் ஆறுத் துயருடன் சீறி யிருந்தார். அவருடைய பேரும் உறவும் யாரும் அறிய விரும்புவர் ஆதலால் அவை இங்கே கூற வருகின்றன. இம் மன்னன் தம்பியராகிய ஊமைத்துரை என்ற தளவாய்க் குமாரசாமி ஒன்று, துரைச்சிங்கம் இரண்டு; மைத்துனமா ராகிய முத்தைய நாயக்கர் 1, குமாரசாமி நாயக்கர் 2, முத்துக்குமாரசாமி நாயக்கர் 3; எப்பொழுதும் இவர் அருகிருந்து அந்தரங்க உரிமையோடு ஊழியம் புரிந்து வந்த வீரண மணியகாரன் ஒன்று ஆக ஆறு பேர் என்க.

| | |
|---|---|
| ஊமைத்துரை | 1 |
| துரைச்சிங்கம் | 2 |
| முத்தையா | 3 |

குமாரசாமி 4
முத்துக்குமாரசாமி 5
வீரணன் 6

இந்த ஆறு பேரும் அன்று கோலார்பட்டியில் மூண்ட கொடும் போரில் இவ் ஆண்டகை அடுந்திறல் புரிந்து நெடும் படை தாண்டிக் கடும்பரி யூர்ந்து வடதிசை நோக்கி வாவிப் போன போது குதிரைகளில் தாவி உடன் தொடர்ந்து கூடப் போன வர். இடை பிரியாமல் உடன் அகப்பட்டுச் சிறையிடை வந்து தேம்பி இருந்தார். அவர் கவலை யுருவகை உறுதி கூறி இவர் ஊக்கி வந்தார். இவ் வீர மன்னனுடைய தீர மொழிகளால் ஆறுதலடைந்து அவர் தேறியிருந்தாலும் நேர்ந்துள்ள அவல நிலையை நினைந்து நெஞ்சம் நொந்து நின்றார். இவர் மாத்திரம் அடலாண்மையுடன் ஆவது ஆகட்டும் என்று அமைதியா யிருந்தார். உள்ளத்திறல் உறுதியை உதவிப் பொறுதி செய்தது.

இம் மானபரணர் இங்ஙனம் மருவி இருக்க அச் சேனபதி சதி வஞ்சனைகளை அதி வேகமாய்ச் செய்து வந்தான். கறுவு கொண்டு அவன் செய்த நிலைகளை இனிமேல் தெரிய நேர்வோம்.

## வெள்ளைத் தலைவன் விரகு புரிந்தது.

கைதியாய் வந்து அகப்பட்டுள்ள இவர்க்கு உய்தி ஒன்றும் உருவகை வெய்ய சூழ்ச்சிகளை விரகுடன் நின்று அவன் விரைந்து செய்தான். குப்பினி அதிபதிகளுக்கு இக் காரியத்தை முந்துற அறிவித்தால் தான் கருதியபடி யாதும் செய்ய முடியாது என்பதை நன்கு தெரிந்திருந்தான் ஆதலால் அங்கு முன்னதாக ஒன்றும் தெளிவாகத் தெரியப்படுத்தாமல் இங்கு இளிவாகத் துரிதப் படுத்தினான். கலெக்டரைக் கைவசப் படுத்திக் கொண்டு தன் சேனைத் தலைமையின் திறலை ஆனவரையும் உபயோகித்தான். தான் தனியே நின்று செய்ய அஞ்சி வேறு சில வெள்ளைக்காரரையும் உதவிக்கு அவன் உடன் அழைத்துக் கொண்டான். கல்வித் துறையில் கை தேர்ந்து நியாய முறைகளை ஆராய்ந்து நீதி செய்யவல்ல துரைமார்களை நாடிக் கொள்ளா

மல், எப்பொழுதும் பட்டாளங்களையே நடத்திப் படு போர்க ளாற்றிக் கொடுமையாய்ப் பழகி நின்றவர்களையே தனக்கு உரிமையாக் குறித்தெடுத்துத்துணையா அணைத்திருந்தான். அவருள் மேஜர் ராபர்ட் ட்யூரிங் (Major Robert Turing), ஜார்ஜ் ஹூயெஸ் (Jeorge Hughes) என்ற இருவரும் அவனுக்கு அந்தரங்க நண் பராய் அமர்ந்திருந்தார். இக் குலமகனைக் குறித்துத் தன் துணை வர்களான அத் துரைகளிடம் பல குறைகளைக் கொழித்துப் பழித்துக் கூறினன். "கட்டபொம்மு என்பவன் மிகவும் துட் டன்; மூர்க்கன்; யார்க்கும் அடங்காதவன்; எப்பொழுதும் போர்க்கே துணிந்தவன்; பொல்லாத வலியினன்; வெள்ளைய ரெல்லாரையும் எள்ளி இகழ்ந்து இறுமாந்துள்ளவன்; கும்பினி யாரது ஆணைக்கு அடங்காமல் அகங்காரங்கொண்டு தன் ஆணையை எங்கும் நாட்ட எண்ணிப் பொங்கி நின்றுன். தலைமை யான சுதந்தர நிலைமையையே நிரந்தரமாக நினைந்துள்ளான். வரி தர மறுத்து வம்புகள் புரிந்தான்; கலெக்டர்களையும் என் னையும் அவமதித்து இகழ்ந்தான். தனது தானுபதிப் பிள்ளையை விடுத்துக் கும்பினி நெல்லைக் கொள்ளை யடித்து வரச் செய்தான். குடிகளிடம் கோள் மூட்டி நமக்கு உள்ளடங்கி இருந்தவரை யும் மெள்ள உலைத்து விடுத்தான். பிழைக்க வந்தவர் என நம்மை இளித்து நின்றுன். அழைத்துவரப் போன நம்முடைய படை களை யெல்லாம் அழித்துத் தொலைத்தான். அல்லல் பல செய்து, எல்லை கடந்து, தொல்லை விளைத்துள்ள இவனை அழித்துத் தொலைத்தால் அன்றி நாம் இந் நாட்டில் சுகமாய் நிலைத்திருக்க முடியாது. கும்பினி ஆட்சிக்குக் கொடிய இடையூறாய் நெடிது நிற்கின்ற இவனை அடியோடு அழித்து ஒழிப்பதே நாம் இங்கே குடியேறி இருப்பதற்கு அடி கோலிய படியாம்" என இவ் வாறு முடிவாக மூட்டி, இவர்மேல் எவர்க்கும் கெடு நினைவை ஊட்டிக் கொடுமையில் ஊக்கி அவன் கடுமையாய் நின்றுன்.

இவ் வீர மன்னன் ஒருவனை அடக்கிவிட்டால் இந் நாடு முழுவதும் அஞ்சி அடங்கிவிடும் என்று அவன் நெஞ்சம் துணிந்து நின்றுன் ஆதலால் இந் நாட்டில் உள்ள பாளையகாரர்

கள் எல்லாரையும் அங்கு வந்து சேரும்படி மூந்துற ஆணை தந்து அந்தரங்கமா ஆவனபுரிந்து கெடுவுநினைந்து முடிவாய்ந்திருந்தான்.

## தம்பி தவித்தது.

சேனை வீரன் அவ்வாறு கொடிய நிலையில் விரகு சூழ்ந்து கரவோர்ந்திருக்க, இம் மான வீரர் சிறையில் இறையுந் தளரா மல் நிறை மனதுடன் மருவி யிருந்தார். கும்பினி அதிபதிக ளுடன் கலந்து ஆலோசியாமல் தானுகச் சேனுபதி யாதும் செய்துவிடமாட்டான் என்னும் நம்பிக்கையின் மேல் கெம்பீர மாய் இவர் கிலேசமற் றிருந்தார். அங்ஙனம் இருந்து வருங்கால் ஒருநாள் இரவு இடையாமத்தில் தம்பி ஊமைத்துரை இடையே எழுந்து பார்த்தார். உடனிருந்தவர் அனைவரும் உறங்கிக் கிடந்தார். இருள் சூழ்ந்து மருள் மிகுந்துள்ள அந்த இட நிலை யையும் திட வீரரான இவரது தீன நிலையையும் நினைந்து அவர் தெருமந்து உழந்தார். பஞ்சணை துயின்று பவிசுட னிருந்த இவர் அன்று பழைய பாய் ஒன்றில் கையே தலையணையாகக் கண் அயர்ந் துள்ளதைக் கண்டு அவர் கண்ணீர் சொரிந்தார். அண்ணனது சயன நிலையை எண்ணி நயன நீர் சிந்தி நைந்து நின்ற அவர் சிந்தை நொந்து செயல் மறந்து தேம்பி அழுதார். நடு நிசியில் மூசு மூசு என்று அழும் அவ் ஓசையைக் கேட்ட தும் இவர் துள்ளி எழுந்து அருகே அழுதிருக்கும் தம்பியைக் கண்டு உள்ளம் உருகி அள்ளி அணைத்து, " என்ன தம்பி! ஏன் இப்படி!" என்று அன்பு ததும்பத் துன்புடன் வினவினர். அவர் ஒன்றும் பதில் உரையாமல் உளம் மிக வுருகி விழி நீர் வழியப் பொருமி யிருந்தார். அவ் இளையவரது உள நிலையை அறிந்து உள்ளம் இரங்கி "ஐயா! மலையாதே! மனம் கலங்காமல் தைரிய மா யிரு; என்ன வந்து விடும்?" என இம் மன்னர் தேற்றினர்.

தம்பி:— பிள்ளை பேச்சைக் கேட்டு வெளி ஏறியது பிழை யாய் மூண்டதே; போகவேண்டாம் என்று அம்மையும் அரசி யும் எவ்வளவோ உறுதி கூறித் தடுத்தும் நீங்கள் சிறிதும் கவ னிக்கவில்லையே; இளையேம் உரைத்ததையும் இகழ்ந்து விட்டீர் களே; வெளிவர வானது இளிவர லாயதே; நம் அருமை

குலைந்து, பெருமை இழந்து, வெறுமை யுழந்து சிறுமை யடைய நேர்ந்ததே! யாண்டும் இடம் பேராமல் நம் கோட்டையில் மட்டும் நாம் நிலையாக நின்றிருந்தால் எத்தனை பட்டாளங்கள் வந்தால் என்ன? வந்த வந்த படைகளை யெல்லாம் வாரியுண்டு, எதிரிகளை இந் நாட்டின் திசையைக் கூட எட்டிப் பாராமல் செய்து, வெற்றித் திருவுடன் விளங்கி இருக்கலாமே; தானுபதி வீணுக வந்து கெடுத்தானே; மானம் அழிய வந்ததே; இனி வானம் பெறினும் என்? வையம் வரினும் என்?

மன்னன்:— தம்பி! நம் ஊழ்வினைப் பயன் இப்படி ஊக்கி வந்துள்ளது. இதற்குத் தானுபதி என்ன செய்வார்? அவரை நோவதால் யாது பயன்? ஒருவரோடு சிநேகம் பண்ணிவிட்டுப் பின்பு அவரைக் குறித்துக் குறை கூறுவது முறை யாகாது; "இன்னு செயினும், கலந்து பழிகாணுர் சான்ருேர்" என்பது ஆன்ருேர் வாக்கு. நாம் அடையநேர்ந்த அல்லலுக்கு அயலாரை இகழலாகாது. பாவம் அவரும் அநியாயமாய் இறந்துபோனுர்.

தம்பி:— போனவனைப் பற்றிப் பேசுவதால் ஒரு பயனும் இல்லை; ஆனுலும் அவனுல் அரசுக்கான அவல நிலையை நினைந்து நினைந்து என் நெஞ்சம் கவலை யுறுகின்றது. ஆதி முதலே அவனை அடக்கி ஆளாமல் மிஞ்ச விட்டதனுலேதான் நம் இடத்திற்கு இந்தக் கேடு வந்து சேர்ந்தது. "தீயவனும் மந்திரியால், நல் வேந்தும் தீ வேந்தாம்; தீமை இல்லாத் தூயவனும் மந்திரியால் தீ வேந்தும் நல் வேந்தாம்" என்பது தேர்ந்த நீதி மொழி. அரசனுக்கு அமைச்சன் கண் போன்றவன் ஆதலால் அவன் கெட்டவனுயின் அவ் அரசாட்சி கண் கெட்ட குருட்டு வாழ்க்கைபோல் இழிந்து அழியும். அவ் அழிவை இதுபொழுது நாம் அனுபவத்தில் கண்டிருக்கிருேம். எல்லாம் உணர்ந்திருந்தும் அப் பொல்லாத பிள்ளை பேச்சைக் கேட்டு இப்படிப் புலையாட நேர்ந்ததே! என்று நான் வருந்துகின்றேன். * "நாடாது நட்டலில் கேடில்லை; நட்டபின், வீடில்லை நட்பாள் பவர்க்கு" என்

---

*குறள் 791. ஆராய்ந்து தேராமல் ஒருவனை நட்பாக்கி கொள்ளுதல் பெருங் கேடாகும்; ஏன் எனின்? உறவு கொண்ட பின் கொடுமை காணினும் எவனையும் இடையே கைவிட முடியாது ஆதலால் அக் கொடிய நட்பினுல் எல்லை யில்லாத அல்லல்கள் உளவாம் என்க. நாடி உணராத தொடர்பினுல் கேடு வந்தது என வருந்தினுன்.

னும் பொய்யா மொழிக்குத் தாங்கள் ஓர் மெய்யான சான்ருய் வையம் அறிய வெய்ய நிலையில் இங்கே விளங்கி நிற்கின்றீர்கள். பல பல புலம்பி என்? இந் நிலை இனி எந்நிலையில் நிறுத்துமோ? என்னவாறு முடியுமோ? யாதொரு வகையும் தெரியவில்லை.

மன்னன்:— யாது வரவேண்டுமோ? அது வருக; என்னை விட்டு எது அகல வேண்டுமோ? அது அகல்க; கேடும் ஆக்க மும் இன்று புதிதாய் வருவன அல்ல; கருவுற்ற அன்றே உரு வுற்று வந்துள்ளன. அவற்றின் வரவு செலவுகளை நினைந்து நாம் இங்கே வருந்துவதால் யாதும் பயன் இல்லை. எல்லாவற்றிற்கும் ஓர் முடிவுண்டு. வருவனவெல்லாம் நமது நன்மைக்கே என்று நம்பி நாம் உண்மையான திண்மையுடன் இருக்க வேண்டும்.

தம்பி:—பகைவர் கைப்பட்டுப் பழியோடு வந்து இப்படிப் பதைத்து இருப்பதை விட, அன்று புதுக்கோட்டையில் புகுந்த படைகளோடு எதிர்த்து அமராடி அங்கேயே இறந்து போயி ருக்கலாம்; அச்சிறப்பான இறப்பையும் இழந்து விட்டு இங்கே வந்துஇப்படிஇழிந்திருக்கின்ருேம். இந்தஇருப்பு நமக்கு மிகவும் ஈனமாகும். வென்றிவீறுடன் மாண்டிருந்தால் என்றும் நன்ரும்.

மன்னன்:— அன்று அது செய்திருக்க வேண்டியது அவ சியமே; ஆயினும் உண்டிருந்த வீட்டில் உதிரம் சிந்த ஊறு விளைப்பது சீரன்றே என்று ஏமாந்து சிந்தித்து நின்றேன். பட்டாளங்களை அங்கேயே வெட்டி முறித்து வென்று போயி ருக்கலாம்; அன்றேல் பொன்றி முடிந்திருக்கலாம். அவ் விரண் டையும் இழந்து பிடியுண்டு வந்து இங்கே இவ்வாறு இழிந் திருப்பது ஈனமே; காரியத்தைக் கை கடக்க விட்டு இனி வீரி யம் பேசி ஆவது என்? எய்தும் முடிவைப் பொறுமையோடு எதிர்பார்த் திருப்போம். வருவது எதுவோ அது வந்தே தீரும்.

தம்பி:— இங்கு வந்து ஏழு நாட்கள் ஆகின்றன. நீதியை விசாரித்து யாதொரு முறையும் செய்யாமல் சேனுபதி நம்மைச் சிறையில் வைத்துச் சீரழித் திருக்கிருன். நேர்மை இல்லை. முகத் தைப் பார்த்தால் அவனுடைய நெஞ்சில் கொடுமையே குடி கொண்டு இருப்பதாகத் தெரிகிறது. முடிவு இன்னதென்று

மூன்னுற ஒன்றும் முடிவாக அறிய முடியவில்லை. ஆதலால் நாம் இனிமேல் இங்கே மடி கொண்டிருப்பது மடமையே; இந்தச் சிறையை உடைத் தெழுந்து விரைவில் நாம்வெளியேறிப் போய் விட வேண்டும்; அவ்வாறு போவதே நமக்கு மேன்மை யான ஆண்மை யாம்; அடங்கி நின்றுல் அவமே யாகும்.

மன்னன்:— பிடிபட்டு வந்து விட்டோம்; விசாரணை புரிந்து கும்பினியார் செய்யும் நீதியைக் கடைபோகக் காண்போம். இடையே தடைமீறி நாம் யாதும் செய்யலாகாது. செய்ய வேண்டிய இடம் தவறி வந்து விட்டோம். இது பொழுது வழக்கு நிலையில் உள்ளோம். இழுக்கு ஆற்ற வேண்டாம். குறித்த குறிப்போடு பொறுத்திருப்பதே நல்லது.

தம்பி:— படைகளைக் கொண்டு வந்து கோட்டையை வளைந்து படுபோர் ஆற்றி அனைத்தையும் நம்மிடம் இழந்து தோல்வி யடைந்து ஓடிப்போன சேனுபதியே இப்பொழுது இவ் வழக்கினை முடிவு செய்ய மூண்டு நிற்கின்றுன். அவன் என்ன நீதி செய்வான்? கும்பினியாருக்கு முன்னதாக ஒன்றும் அவன் சரியாக அறிவியான்; ஒரு வேளை அறிவித்தாலும் அத் துரைகளுடைய மன நிலைகளை மாற்றி நம்மேல் சினம் ஏற்றி யிருப்பான்; அரசருக்குச் செவி கண். நெடுந் தூரத்திலுள்ள அவர்கள் நம்மை நேரே செம்மையாகத் தெரிய மாட்டார். இங்குள்ள கடுங்கோளர் புன்மை புரிந்திருப்பர். நீங்கள் ஒரு முறை கண்டதைத் தவிரப் பின்னர் அவர்களை நேரில் காண வில்லை. இடையே பிள்ளை மூட்டிய கலக நிலையால் அவர் உள் ளந் திரிந்திருப்பர். பருவத்தோடு போய்ப் பார்த்து அவரிடம் பழைய உரிமையை உறுதி செய்யாமல் இங்கே வந்த படைக ளுடன் பிழையாக நாம் போராடி நின்றதால் பெரும் பகை மூண்டது. இதுபொழுது நேரே கும்பினிக்கு விரோதிகளா யுள்ளமையால் அவ் அதிபதிகளைக் கைவசப் படுத்தித் தன் கருத்தின் படியே சேனுபதி முடித்துக்கொள்ளுவான். அவன் முடிவு காணுமுன் நாம் கருதியபடியே முடித்துக்கொள்ள வேண்டும். இனிப் பொறுதி கூடாது. இச் சிறையை

பொழுதே உடைத்து ஒழித்து நம் ஊரை யடைந்து அங்கே புகுந்துள்ள பேரை யெல்லாம் நீறு செய்து நிலவறையில் வைத்துக் குலவீரம் காட்டிப் பேரும் புகழும் பெருக்கிப் பாராள வேண்டும். வீரர் பதியே! பகைக்கு அடங்கி நிற்பது நகைக்கு இடமாகும். விரைந்து துணிந்து வெளியே போய் விடவேண்டும்.

மன்னன்:— கும்பினியார் செய்துள்ள உதவிகளை நன்றி யறிவுடன் நினைந்து நலமாகத்தான் நான் நடந்து வந்தேன்; வகை தெரியாமல் பகை வந்து மூண்டது. இடையே நேர்ந்த படைத்தலைவரிடம் நம்மால் பணிவு காட்ட முடியவில்லை. வினை விளைந்தது; இனி அதனை நினைவதால் பயனில்லை. இன்று நீ சொல்லுகிறபடி இச் சிறு சிறையை நீறு செய்து மீறிப் போய் விடலாம். தொண்டைமான் அரண்மனையில் நாம் அகப்பட நேர்ந்த பொழுது "இனி நான் எதிர்ப்பு ஒன்றும் செய்யேன்" என்று கும்பினியின் ஆணைக்கு அடங்கி உறுதி செய்துள்ளேன் ஆதலால் இறுதி வரையும் பொறுதி செய்து எதிரியினுடைய நெறி முறையையும் நீதி நிலையையும் நேர்ந்து பார்ப்போம்.

தம்பி:— எதிரிகளை விட எட்டப்பன்தான் நமக்கு இடர் மிகச் செய்துள்ளான். அன்று நாம் பிடிபட்ட பொழுது அவன் கொண்ட மகிழ்ச்சிதான் என்னே! தொண்டைமானை விட அவனுடைய இரண்டகம் கொடியது. சாதியபிமானம் இல்லாமல் போனாலும் தேசாபிமானமும் கூட இல்லையே! இனத் துரோகம் தேசத் துரோகங்களை எவ்வளவு கூசாமல் செய்து நிற்கின்றான். நம் ஆதீனத்துக்கு ஆதியி லிருந்து அவன் புரிந்து வந்துள்ள தீதுகள் அளவிட லரியன. இவ்வளவுக்கும் காரணம் என்ன?

மன்னன்:— காரணம் பொறாமைதான். இவ் அல்லல்களுக் கெல்லாம் மூலகாரணம் அவன் தானே. அது செய்தான்; இது செய்தான்; துட்டன்; வம்பன்; எனக் கும்பினியாரிடம் நம்மைக் குறித்துக் கோள்கள் பல சொல்லி ஓயாமல் விண்ணப்பங்கள் செய்து இக் கொடும் பகையை மூட்டி இவ்வாறு குடிகேடு நீட்டினான். அதற்கு ஏற்ப நெல்லைக் கொள்ளை செய்து பின்னை உள்ளே யிருந்து வினையை விளைத்தார். அவன் வெளியில்

நின்று அதனை வளர்த்து விட்டான். வினையின் விளைவு நெடிது நீண்டு முடிவுக்கு வந்திருக்கிறது. பலனைப் பார்ப்போம்.

தம்பி:— இப்பொழுது பட்டமாய் நின்று இப் பாடு பட்டு வருகிற எட்டப்ப நாயக்கர் எட்டையாபுரம் ஜமீனுக்குப் பரம்பரை உரிமையான நேர் வாரிசுதார் அல்லர்; மாறுபாடான வேறு நிலையினர் என்று கூறுகின்றார்களே அதன் விவரம் என்ன?

மன்னன்:— எட்டையாபுரம் ஜமீன் பிரதான பாகம் முதலில் குருமலையில்தான் சிறு நிலையில் இருந்தது; அந்த ஜமீனுக்குச் சந்ததி இல்லாமையால் நாலாவது தாயாதியாய் ஒதுங்கியிருந்த முத்து நாயக்கர் என்பவர் தத்து எடுக்கப்பட்டார். அவர் * கசமன்குண்டு என்னும் ஊரில் இருந்தவர். அவருடைய மூத்த மகனே இப்போது பட்டத்துக்கு வந்துள்ளவன்; பத்தாண்டுகளுக்கு முன்னமே நம்முடைய ஐயா அவர்கள் அவனைக் குறித்து எல்லா விவரங்களையும் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். பொல்லாத கோளன். நம்மிடத்தே கெட்ட பொறாமை கொண்டு கும்பினியாரை ஒட்டி நின்று இப்படிக் கும்மாளஞ் செய்து வருகிறான். வரட்டும்; எந்த மட்டும் ஆகிறது என்று பார்ப்போம். கும்பினி நீதியை நம்பி நாம் இங்கே சும்மா இருப்போம். எது வந்தாலும் அதை நாம் அமைதியா ஏற்க வேண்டும்.

இவ்வாறு இவர் உறுதியுரை கூறி அறுதியிட்டு அருளவும் அதன்பின் ஊமைத்துரை எதிர் ஒன்றும் பேசாமல் விதி விளைவை நொந்து அடங்கி யிருந்தார். இந்த உரையாடல் நடந்தது அக்டோபர் மாதம் பன்னிரண்டாம் தேதி (12—10—1799) இரவு ஒரு மணிக்கு என்க. இங்ஙனம் உரையாடி யிருந்த இவ் இருவரும் பின்பு பொறையாறி அயர்ந்து உறங்கினர். பரிவு நிலையில் மறுகி யிருந்த அரச குமரர் உரிய துயரை மறந்து அமைதியாய்த் துயின்றது இயற்கை அன்னையின் கருணையாய் நின்றது.

முன்பு சேனபதி விடுத்திருந்த உத்தரவைக் கண்டதும் பாளையகாரர்கள் எல்லாரும் பரிவாரங்களுடன் கயத்தாறு வந்து

* இவ்வூர் எட்டையாபுரத்துக்குத் தென்மேற்கில் உளது.

சேர்ந்தார். அங்கே சயத்தாருடன் தருக்கி யிருக்கும் அத் துரையைக் கண்டு முறையே வணங்கி நிரையா யிருந்தார். பாண்டி மண்டலம் எங்குமுள்ள குறுநில மன்னரும், பெரு நிலக் கிழவரும், உத்தியோக அதிகாரிகளும் அவன் கட்ட ளைக்கு அஞ்சி ஒருங்கே வந்து அங்குத் திரண்டு நின்ருர் ஆத லால் அந் நிலையில் அவ்வூர் ஓர் பெருங்கோலமாய் விளங்கி நின்றது. அக் கூட்டத்திற்குக் கூளப்பநாய்க்கனூர் ஜமீன்தார் நாகம நாயக்கர் மட்டும் வரவில்லை. மற்றெல்லாரும் வந்திருந்தார்

## இருவர் இருப்பு.

அங்கே வந்த பாளையகாரருள் சிவகிரி ஜமீன்தார் ஆகிய வரகுணபாண்டிய வன்னியனும், எட்டையாபுரம் ஜமீன்தா ரும் உள்ளக் களிப்புடன் உற்சாகமாய் உச்ச நிலையில் ஊக்கி யிருந்தார். அவருடைய எண்ணங்களும் செயல்களும் புன்மை படிந்து புலைநிலைகளில் பொங்கி நின்றன. "யாருக்கும் அடங்கா மல் அரிய போர் வீரனுய் இறுமாந்திருந்தவன் பெரிய கும்பினி யாரின் எதிரியாய்ச் சிக்கி வந்துள்ளான்; இதிலிருந்து தப்பி இனி இவன் மீண்டு போக முடியாது; ஈண்டு மாண்டே படு வான்" என இன்னவாறு எண்ணி எண்ணி நெடிய மகிழ்ச்சி யோடு அவர் நீண்டு நின்ருர். அவருடைய உள்ளங்களில் பொருமையும் பகைமையும் ஓங்கி நின்றன ஆதலால் இரக்கமும் நீதியும் யாதும் இல்லாமல் ஒழிந்து போயின. பொல்லாத போக்கில் இருவரும் ஒருவராய் மருவி மகிழ்ந்து இறுதியை எதிர்நோக்கி இம் மான வீரன் மேல் கறுவு கொண்டு களித் திருந்தார். அயல் நாட்டு வெள்ளையர் இந்நாட்டில் புகுந்து ஆளும் தலைவராய் நேர்ந்தது தமக்கு நாளும் தலைமையான நிலைமையா யது என அவர் நெஞ்சம் உவந்து நின்ற நிலைகளை அவருடைய செயல்கள் அங்கே நன்கு விளக்கி நின்றன. கூடியிருந்த பாளை யகாரர் பலரும் அந்த இருவர் புரிகிற கெடு நிலைகளை உணர்ந்து கடிது இகழ்ந்து செயல் இழந்து அயல் ஒதுங்கி யிருந்தனர்.

---

# இருபத்தொன்பதாவது அதிகாரம்.

## காரியம் சூழ்ந்தது.

தேசத் தலைவர்களுடைய கூட்டத்தைக் கண்டதும் பேனைத் தலைவன் பெரு மகிழ்ச்சி யடைந்து செயல் வகைகளில் மூண்டான். கும்பினியின் அதிகார நிலையை இந் நாட்டிலுள்ளவர் எல்லாரும் கண்டு உள்ளம் அஞ்சி ஒடுங்கி அடங்க வேண்டும் என்னும் உள் நோக்குடன் பானர்மேன் உறுதி பூண்டிருந்தான் ஆதலால் அதற்கு ஆன வகையில் யாவும் ஆயத்தம் செய்து நின்றான். மேலுள்ள அதிபதிகளுக்குச் சதுராக எழுதி அதிகார வுரிமை முழுவதும் சேனாதிபதி நிலைமையில் அவன் தலைமையோடு பெற்றிருந்தான் ஆதலால் தான் கருதியபடி உறுதிபெறச் செய்ய ஊக்கி எழுந்தான். யாண்டும் அடங்கலராகி அருந்திற லுடன் நீண்டு நின்ற இம் மடங்கலை மாய்த்தொழித்தால் பின்பு நாடு முழுதும் தன் கையில் எளிதாக அடங்கி விடும் என்னும் திடங் கொண்டு நின்ற அவன் எண்ணியுள்ளதை விரகுடன் புரிய வீரியமாக விரைந்து துணிந்தான். ஊருக்கு மேல்புறம் ஒரு மைல் தூரத்தில் பழைய வெட்டும் பெருமாள் ராஜா இருந்த கோட்டையின் அருகே கூட்டத்தைக் கூட்டினான். கூடாரங்கள் பல அங்கே அமைக்கப் பட்டன. குறித்த காலம் வரவும் பக்க உதவிக்குப் பல துரைகளைச் சேர்த்துக்கொண்டு தக்க பாதுகாவலுடன் சேனாபதி எழுந்து சபையினை யடைந்து சதுருடன் இருந்தான். அயலெங்கும் படைவீரர் அடர்ந்துநின்றார். யாண்டும்எச்சரிக்கைகள்தொடர்ந்துநடந்தன.

### நேரில் வந்தது.

சூரியன் உதயமாகி நாழிகை ஏழாயது; ஆகவே சிறையிலிருந்து இவரைக் கொண்டு வரும்படி படைகளை அனுப்பினான். படைத் தலைவர் வந்து அழைத்தார். வரைமுழை நின்று வெளி வருகின்ற மடங்க லேறு போல் சிறையிடை யிருந்து இத் துரை மகனார் எழுந்தார். தம்பியர் முதலாக அங்கிருந்தவர் அறுவரும்

பின் தொடர்ந்தார். அரசை மட்டும் தனியே அழைத்து வரும் படி உத்தரவு ஆதலால் நீங்கள் உடன் வர லாகாதென்று மற்ற வரைத் தடுத்தார். ஊமைத் தம்பி நான் உடன் வருவேன் என்று உருத்து நின்றார். மன்னர் மறுத்து நோக்கி, "தம்பி! மற்றவ ரோடு இங்கேயே இரு; நான் மட்டும் போய் நீதி விசாரணை யின் நிலை தெரிந்து வருகிறேன்; சிறிது பொறுத்து நில்" என்று அவரை நிறுத்தி விட்டு இவர் கடுத்து வந்து சங்கம் சார்ந்தார்.

இவரைக் கண்ட வுடனே அங்கிருந்தவர் எல்லாரும் வியந் தும் வெருண்டும் மருண்டும் நின்றார். அவரனைவரையும் ஒரு முகமாக ஒரு பார்வை பார்த்துவிட்டுக் குறித்த இடத்தில் சிங் கம் அடங்கித் திமிர்ந் திருந்ததுபோல் இவா
சேனைத் திரள்கள் யாண்டும் திரண்டு நீண்ட பாதுகாவலாய் மூண்டு நின்றன. கொடிய கொலைக் கருவிகள் நெடிது நிலவின.

ஏந்திய வெடிகள், எடுத்த வேல்கள், பிடித்த வாள்களோடு படை வீரர்கள் தொடுத் தடர்ந்து நிரையே சூழ்ந்து நின்றனர்.

சிறையி லிருந்து இவரை அழைத்து வரும்பொழுது அந் நகரி லிருந்த ஆண் பெண் அடங்கலும் ஒருங்கு திரண்டு வந்து உளம் மிக இரங்கிப் பல பல பேசி அயல் எங்கும் நெருங்கி இம் மன்னருக்கு என்ன விளையுமோ? யாது நேருமோ? என்று இன்னல் மீக் கூர்ந்து ஏங்கி நின்றார். தேச மக்களுடைய நேச மும் நிலையும் பாசம் தோய்ந்து பரிவுமீதூர்ந்து உரிமையா வந்தன.

இந் நாட்டி லுள்ள குடி சனங்கள் எல்லாரும் மனம் மிக வுருகி மறுகி இருந்தார் ஆதலால் இக் குலவீரர்பால் அவர் கொண்டிருந்த உள்ளன்பும் உரிமையும் அன்று உணர நின்றன.

## உற்ற துணை ஒத்திருந்தது.

பக்கம் எங்கும் தக்க பாதுகாவ லுடன் எல்லா ஆதரவு களும் அமைந்து கூடாரங்களின் முன் கூடியிருந்த் சபைநடுவே சேனாதிபதி யாகிய பானர்மேன் (Bannerman) நீதிபதி போல் நேரே அமர்ந்து விசாரணை தொடங்க ஆயத்த மாயினான்.

ராபர்ட் ட்யூரிங் (Robert Turing), 1
ஜார்ஜ் ஹூஐயஸ் (George Hughes) 2
மேஜர் பிற்கட்டு (Pirkett), 3
கர்னல் பிரௌண் (Colonel Brown), 4

இந்த நான்கு துரைமாரகளும அவனுடைய இரு மருங்கும பாங்கோடு மருவி இருந்தனர். பாளையகாரர் அனைவரும் நேரே வரிசை வரிசையாய் அயல் எங்கும் அமர்ந்திருந்தார். பெரிய மிராசுதார்களும் உத்தியோக அதிகாரிகளும் இடங்கள் தோறும் தொடர்ந்து ஈட்டமுற் றிருந்தனர்.

குதிரைப் படைகளும், காலாட் சேனைகளும் ஆயுத பாணி களாய் அணி அணியாய் அயலே சூழ்ந்து அடலோடு நின்றன. டர்னர் (Lieutenant Turner), டல்லாசு (Dollas) முதலிய தள கர்த்தர்கள் தறுகண்மையுடன் படைத் தலைமையில் நிலை பெற்று நின்றனர். அந் நகரிலும் அயலூர்களிலும் இருந்து வந்த சனங் கள் வெளியே திரள் திரளாய்த் திரண்டு நிகழ்வதை எதிர் நோக்கி நிறைந்து நின்றார். நிகழ்ச்சி நிலைகளைக் காண எல்லா ருடைய நெஞ்சங்களும் நெடிது அவாவிக் கடிது வாவிநின்றன.

## விசாரணை தொடங்கியது.

அக்டோபர் மாதம் பதினாறுந் தேதி (16—10—1799) முற்பகல் பத்து மணிக்கு நேரே விசாரணை தொடங்கப்பட்டது.

நீதி மன்றத்தில் நியாயமான முறையில் குற்றங்கள் விசாரிப்பது போல் பாவனைகள் பல செய்யப்பட்டன. சேனாதிபதியாய் நின்ற பானர்மேனே அங்கு நீதிபதியாய் அமர்ந்து கொண்டான். நேரில் வந்து போரில் நேர்ந்து பொருது உடைந்து படை யிழந்து வயிறு எரிந்து போன அத்தளபதி இப் பொழுது நடுவு நிலையாய் அமர்ந்து எப்படி நீதி புரிந்திருப்பன்? இதில் எவ்வளவு நியாயம் செய்திருக்க முடியும்? எத்துணைச் சதி வஞ்சனைகள் இடை புகுந்திருக்கும்? என்பதை அறிஞர் கள் எவரும் எளிதில் தெளிவாய் அறிந்து கொள்ளலாம்.

விசாரணை ஆரம்ப மாகவும் அங்கே சாட்சிகள் தயாராயினர். செப்டம்பர் மாதம் ஐந்தாந் தெய்தி (5—9—1799) காலையில் போர் நடக்கு முன் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்குள் தூது வந்து போன * இராமலிங்க முதலியாரை முதலில் சாட்சியாக விசாரிக்கத் தொடங்கினான். இம் முதலியார் அவனுக்கு மிகவும் உதவியானவர். இத் தேச பாஷைகளை மொழி பெயர்த்துச் சொல்லி அவனிடம் துப்பாசியாய் (Interpreter நின்று பல வகையிலும் விசுவாசமாய் இதம் புரிந்து வந்தவர்.

இந்தச் சாட்சியை முதன்மையாகக் குறித்த அதன் பயன் யாது? எனின், தான் முன்னம் பாஞ்சைக்குப் படையுடன் வந்த பொழுது அவர் இடை புகுந்து ஜமீன்தாரைக் கண்டு பேசிய காட்சி நிலை காட்டிக் கடும் பிழை காண என்க. கும்பினி ஆணைக்குக் கட்டுப்பட்டு இனிமேல் இணங்கி நடக்கவேண்டும் என்று இதமாய்ப் புத்தி புகட்டி வரக் கருதித் தற் பாதுகாப்புடன் சேனைகளோடு நான் சென்றிருந்த பொழுது இக் கட்டபொம்மு அக்கிரமமாகத் தன் படைவீரர்களை ஏவி உக்கிர வீரமாய்க் கும்பினிப் பட்டாளங்களைக் கொல்லச் செய்தான்; வலிந்து சண்டையை வளர்த்துப் பல கொலைகளை விளைத்தான் ஆதலால் கொடுந் தண்டனைக்கு உரிய கொலைக் குற்றங்கள் இவன் மேல் பொறுத்துள்ளன; என்னும் குறிப்பை வெளிப்பட விரித்துத் தன் கருத்தை எளிதாக நிறைவேற்றிக் கொள்ள விரகு சூழ்ந்து நின்ற அவன் முதலியாரை முதலில் இவ்வாறு சாட்சியாக் குறித்தான். தன் ஆட்சியைவலியுறுத்தச்சாட்சியை நிறுத்தினான்.

## இராமலிங்க முதலியார் சாட்சி.

முதலியார் எழுந்தார்; “ சர்வ வல்லமை யுள்ள தெய்வத்தின் முன்பாக நான் இங்கே சொல்லுவ தெல்லாம் மெய்யே ” என்று முறையாக முன்னுறச் சத்தியம் செய்துகொண்டார். பின்பு சபையோர் அறிய அவரை நோக்கிப் பானர்மேன் கேள்விகள் கேட்டான்: அவன் வினவியவற்றிற் கெல்லாம் அவர்

* இந் நூல் 215ம்—பக்கம் வரி 18 பார்க்க.

இனமாகப் பதில் சொல்லி வந்தார். அந்தக் கேள்விகளும் அவற்றிற்கு உரிய விடைகளும் அயலே தொடர்பாய் வருகின்றன.

பானர்மேன்:— சென்ற செப்டம்பர் மாதம் 5-ந் தேதி காலையில் நீர் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்குள்ளே போய்க் கும்பினியின் ஆணை மேல் வந்துள்ள என் உத்தரவை ஜமீன்தாரைக் கண்டு நேரில் கொடுத்தீரா?

முதலியார்:— குறித்த நிமிடமே போய் ஜமீன்தாரிடம் அக் கட்டளையை நேரில் கொடுத்தேன்.

பானர்மேன்:— நீர் போன சமையத்தில் அவர் எந்த இடத்தில் இருந்தார்?

முதலியார்:— அரங்காமல் என்னும் பெரிய மாளிகையில் அமர்ந் திருந்தார்.

பானர்மேன்:— கூட யாராவது இருந்தார்களா?

முதலியார்:— அவருடைய மாமனார் கெடிவெட்டூர் நாயக்கரும், உறவினர் சிலரும் அருகே நின்றார்.

பானர்மேன்:— நீர் ஜமீன்தாரிடம் ஏதாதவது பேசினீரா?

முதலியார்:— சில காரியங்களை நேரில் சொன்னேன்.

பானர்மேன்:— என்ன சொன்னீர்?

முதலியார்:— உங்கள் பாளையத்தின் மீது கும்பினியார் மிகவும் கோபம் கொண்டுள்ளார். வரிகள் சரியாய்ச் செலுத்தாமலும், கலெக்டர் விடுத்த கடிதங்களுக்கு யாதொரு பதிலும் சொல்லாமலும் அவமதித் திருக்கிறீர்கள். தானாபதிப் பிள்ளை கொள்ளைபுரிந்து அல்லல் பல செய்திருக்கிறார்; அதனால் கொடுஞ் சினமூண்டு பெரும் படைகளோடு சேனைபதியவர்கள் இங்கே விசாரிக்க வந்திருக்கிறார்கள்; கோட்டைக்கு மேல்புறம் கூடாரத்தில் தங்கி யிருக்கிறார்கள்; நேரில் வந்து துரைகளைக் கண்டு காரியங்களைக் கலந்து பேசிச் சமாதானம் செய்து கொள்ளுவது நல்லது; இல்லையேல் பொல்லாப்புடன் அல்லல் அடைய நேரும்; நான் வந்துள்ளது நல்ல வேளை என நினைந்து, தாமதம் செய்யா

மல் விரைந்து வந்தருளுங்கள் என்று ஜமீன்தார்வர்களிடம் மிகவும் நயமான முறையில் இதமாகச் சொல்லி நின்றேன்.

பானர்மேன்;— அதற்கு அவர் பதில் என்ன சொன்னார்?

முதலியார்:— நான் அங்கே வரமுடியாது; அவரை வேண்டுமானால் இங்கே வரச்சொல்லும்; எல்லாக் காரியங்களையும் முடிவு செய்துகொண்டு போகலாம் என்றார்.

இவ்வாறு விசாரித்து முடிந்த பின்னர் அன்று அம் முதலியாரோடு கோட்டைக்குள் உடன் சென்றிருந்த இபுராகிம், சவுகர் என்னும் அவுல்தார் இருவரும் விசாரிக்கப்பட்டார். முதலியார் சொல்லியன யாவும் உண்மையே என்று அவர் உறுதி கூறி நின்றார். அதன் பின் ஜமீன்தாரது மாமனார் கெடிவெட்டூர் நாயக்கரை விசாரித்தார். அவர் சாட்சியாய் வந்து கூறினார்.

கெடிவெட்டூர் நாயக்கர் சாட்சி.

பானர்மேன்:— என்னுடைய துப்பாசி இராமலிங்க முதலியார் செப்டம்பர் மாதம் 5-ந் தெய்தி பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்குள் வந்தபொழுது நீர் அங்கு இருந்தீரா?

கெடிவெட்டூர்;— நான் இருந்தேன்.

பானர்மேன்:— என் கட்டளையைக் கொண்டுவந்து இராமலிங்க முதலியார் கட்டபொம்மு நாயக்கரிடம் சொல்லுகின்றபோது நீர் கூட இருந்து யாவும் கேட்டீரா?

கெடிவெட்டூர்:— அருகே நின்று எல்லாம் கேட்டேன்.

பானர்மேன்:— முதலியார் மீண்டவுடன் நீர் அன்று என்னைக் காண * வந்தபொழுது கும்பினிக்கு அடங்காமல் நிற்பது கொடுங் கேடாகும்; உம்முடைய மருமகனுக்குப் புத்திசொல்லி உடனே பணிந்து வந்து சமாதானமாய் நடந்துகொள்ளச் சொல்லும்; இல்லையானால் போர் மூண்டு பாளையம் பாழாகி விடும்; இம் முடிவை உறுதியாக வுணர்ந்து ஆகவேண்டியதை விரைந்து செய்து உய்தி தேடிக்கொள்ளுக என்று நானும்,

* 219ம் பக்கம் பார்க்க.

பிறகட்டு துரையும் உம்மிடம் நேரே வற்புறுத்திச் சொன்னது உண்டா? இல்லையா? உண்மையைச் சொல்லும்?

கெடிவெட்டூர்:— நீங்கள் சொன்ன புத்திமதிகள் எல்லாவற்றையும் நேரே கேட்டுக் கோட்டைக்குள்ளே போய் ஜமீன்தாரவர்களிடம் சமாதானம் சொல்லிக்கொண் டிருந்தேன்; அப்பொழுது வெளியி லிருந்து வந்த படை வீரர்களால் எப்படியோ கடுமையாய்ப் போர் மூண்டு விட்டது.

பானர்மேன்:—சண்டை நடக்கும் பொழுது கட்டபொம்மு நாயக்கர் கோட்டைக்குள்ளே தானே இருந்தார்?

கெடிவெட்டூர்:— உள்ளேதான் இருந்தார்கள்.

பானர்மேன்:—நீர் அவருக்கு அந்தரங்க வுரிமையாளராய் எப்பொழுதும் அருகில் இருப்பவர் தானே?

கெடிவெட்டூர்:— ஆமா.

இங்ஙனம் விசாரித்து முடிந்த பின்பு கலெக்டர் முன்பு இவருக்கு விடுத்திருந்த கட்டளைக ளெல்லாம் நேரே எடுத்து வாசிக்கப்பட்டன. சேனைத் தலைவன் எழுதியிருந்த நிருபங்களும் இந்நிருபருக்கு அறிமுகம் செய்து ஒரு முகமாய் உரைத்தான்.

இவ்வாறு எல்லா விசாரணைகளையும் செய்து முடித்த பின்னர்ச் சேனாதிபதியாகிய பானர்மேன் இவரை நேரே நோக்கி "இங்கே உம்மைக் குறித்துச் சொல்லப்பட்ட சாட்சியங்கள் எல்லாவற்றையும் இதுவரை நேரே கேட்டிருக்கிறீர்; இவற்றுள் ஏதேனும் நீர் மறுத்துச் சொல்லவேண்டியது உண்டா?"

அதற்கு இவர், "சொல்லியன எல்லாம் உண்மையில் நடந்தவைகளே; ஒரு தவறும் இல்லை" என்று உறுதியோடு கூறினார்.

அங்ஙனம் சொல்லும்பொழுது மிகவும் அலட்சியமாகப் பானர்மேனை இகழ்ச்சிக் குறிப்புடன் நோக்கி இறுமாந்து நிமிர்ந்து சொன்னார் ஆதலால், "இவனுடைய அகந்தையைப் பார்த்தீர்களா?" என்று அருகிருந்த துரைகளிடம் கண் சாடை காட்டிக் கடுப்பு மீக்கொண்டு கடித்துத் தின்று விடுபவன் போல் அவன் உள்ளூறக் கொதித்து மிகவும் உருத்து நின்றான்.

முதலிலிருந்து சாட்சியங்களுடன் வகுத்துச் சொல்லி வந்த வற்றை யெல்லாம் தொகுத்து இணைத்துக் குற்றங்கள் எனக் கொழித்து எடுத்து வெளிக்கு மெய்ப்பிக்க இவரை நோக்கி அவன் விரித்து உரைத்தான். அவனுடைய விரிவுரைகள் கரவுகள் தோய்ந்து விரகுகள் சூழ்ந்து வெய்ய நிலையில் விரிந்து வந்தன.

## குறித்துச் சொன்ன குற்றங்கள்.

பாஞ்சாலங்குறிச்சிப் பாளையகாரராகிய கட்டபொம்மு நாயக்கர் மீது சாட்டப்பட்ட குற்றங்கள்: "கும்பினிக்கு உரிய கிஸ்தியைச் செலுத்தாமல் வம்பு செய்திருக்கிறீர்! கலெக்டர் லஷிங்டன் விடுத்த உத்தரவுகளுக்குச் சரியான பதில் எழுதாமலும், தம்மை வந்து கண்டு போம்படி பல முறை அவர் விரும்பி அழைத்தும் நேரே போய்ப் பாராமலும் நின்று பராமுகமாய் அவரை இகழ்ந்திருக்கிறீர்! தானாபதிப் பிள்ளையை விடுத்துக் கொள்ளை முதலியன செய்து எங்கும் அல்லல் விளைத்திருக்கிறீர்! சிவகிரி முதலிய சில பாளைய காரர்களின் மீது படைகளை ஏவி இடையூறுகள் செய்துள்ளீர்! கும்பினியின் ஆட்சி யுரிமையை அறுவுறுத்தி உம்மை அமைதி செய்ய எண்ணி வந்த என் சேனைகளை அநியாயமாய்க் கொன்று தொலைத்தீர்! இத்தகைய குற்றங்கள் உம்மேல் சாட்டப்பட்டுள்ளன. இவற்றுள் ஏதாவது ஒன்றை இல்லையென்று நீர் மறுத்துச் சொல்ல முடியுமா?" என்று அவன் முடிவு செய்து கேட்டான். கேட்கவே இவர் அவனை எதிர்த்து நோக்கி, "நீர் இங்கே சொன்னவை யாவும் உண்மைகளே; அவை குற்றங்கள் என்று குறித்தீர்! அதுதான் உம்மிடமுள்ள பெருங் குற்றம்" என்றார். அங்ஙனம் கூறவே அச் சேனைத் தலைவன் சீறி, "ஏன் இவை குற்றங்கள் ஆகா?" என்று மாறி வினவினன். வினவவே இவர் வரன்முறையாக முறையே சொல்லலானார். சொல்லிய வகையும் தொகையும் பல்வகை நிலைகள் படிந்து வந்தன; அயலே வருகின்றன.

## கட்டபொம்மு பதில் உரைத்தது.

1. "இதுவரை யாருக்கும் திறை தந்தது இல்லை ஆதலால்

இன்று வந்து நீர் வரி என்று இரந்ததால் தர முடியாதென ஒரு முடிவாய் நான் மறுத்து நின்றேன்.

2. என்னிடம் வந்தவரை மரியாதையாக வரவேற்று உபசரிப்பனே யன்றி வெளியேறிப் போய் யாரையும் வலிந்து பார்ப்பதும், இச்சகம் பேசுவதும் எனக்கு வழக்கம் இல்லை; அதனால் கலெக்டரைப் போய் நான் பார்க்க வில்லை.

3. சிவகிரி முதலான இடங்களிலுள்ள பாளையகாரர்கள் இந் நாட்டிலுள்ள குடி சனங்களுக்கு இடர் செய்வதாக இடையிடையே வந்து பலர் என்னிடம் முறையிட்டார்கள் ஆதலால் அவர்களுக்கு இரங்கி நின்று என் படைகளை அனுப்பித் தடைகளை அகற்றி யுள்ளேன்; அவ்வளவே யன்றி யாண்டும் நான் இடர் செய்ததில்லை. எங்கும் இதமே செய்துள்ளேன்.

4. பிள்ளை போய் நெல்லைக் கொள்ளை யிட்டது பெரும் பிழை; அதற்காக ரூபாய் 4000 பிறகட்டிடம் * தண்டம் செலுத்தி இருக்கிறேன். அவரைப் பிடித்துக் கொடுக்கச் சொன்னார்; அது கூடாது என்று தடுத்து விட்டேன். அடுத்தாரை ஆதரிப்பது எங்கள் மரபிற்கு இயற்கை; ஆருயிரை விடுத்தாலும் அடுத்தவரைக் கைவிடோம். கடுத்தவரைக் கடிந்து விடுவோம்.

5. நீர் படைகளோடு வந்து என் நகரை வளைத்து அன்று அல்லல் விளைத்தமையால் என் இனத்தவர் எழுந்து கொதித்து அமர் புரிந்து கொன்று தொலைத்தார். குற்றங்கள் யார் மீது உள்ளன? நன்முக ஆலோசித்து நேரே உணர்ந்து கொள்ளுக.

6. பின்பு இங்கு நடந்த வம்புகளைக் கும்பினி அதிபதிகளிடம் போய் நேரில் கூறிச் சமாதானமாய் நலம் அடைந்து வரலாம் என்று நம்பி இடம் பெயர்ந்து நான் திருச்சிராப்பள்ளிக்குச் சென்றேன்; இடையே பெரும் படைகளோடு வந்து கொடுங் கரவாகப் புகுந்து புதுக்கோட்டையில் வைத்துப் பிடித்துக்கொண்டீர்! நம்பி மோசம் போய் வெம்பி அகப்பட்டு இதோ இந்த நிலையில் நான் இங்கே இழிந்து வந்துள்ளேன்.

---

* இந் நூல் 179ம் பக்கம், வரி 27 பார்க்க,

7. நான் கோட்டையை விட்டு வெளியேறியுள்ளேன் என்பதை அறிந்ததும் நீர் ஓட்டமாய் வந்து என் திருநகருட் புகுந்து பெரு நிதிகளை யெல்லாம் கவர்ந்து ஆனை, குதிரைகள் முதலிய அரிய பொருள்களை யெல்லாம் வாரி உமக்கே உரிமையாக அபகரித்துக்கொண்டீர்! இங்கே ஒரு பெரிய நீதிமான் போல் அமர்ந்து பேசவும் செய்கின்றீர்! நீர் சாதியான குல மகன் ஆனால் என்னைக் கும்பினி அதிபதிகளிடம் அனுப்பி அவர் முன்பு நீதி விசாரணை செய்து என் மீது குற்றம் கண்டுபிடித்துக் குறித்ததைச் செய்க; நேரில் வந்து போர் புரிந்து சீரழிந்து சிதைந்துபோன நீரே படைத்தலைமை நிலையில் இந்த வழக்கை முடிக்க முந்தியிருத்தலால் எந்த அளவு இதில் நியாயம் கிடைக்கும் என்பதை நான் எதிரறிந் துள்ளேன்; ஆவது ஆகுக." என மன நோவுடன் யாவரும் திகைக்க எதிருரை கூறினர். சேனாதிபதி மாறுபாடாய்க் குற்றங்களை விரித்துக் கொடிய நோக்கோடு குறைகள் கூறி வருங்கால் இம்மான வீரர் அவனை யாதும் மதியாமல் உல்லாச விநோதமாய் உறுதியாய் நின்றார். கும்பினி அதிகாரத்துக்குக் கீழ்ப் படியாமல் பிழைகள் பல புரிந்ததாக வரைந்து சொல்லி முடிவில் "நீர் ஏதேனும் சொல்ல வேண்டியது உண்டா?" என்று அவ் வெள்ளைத்துரை இவ் வீரத் துரையை நோக்கிக் கேட்டான். அந்தக் கேள்விக்கு இவர் யாதொரு பணிவும் காட்டாமல் மிகவும் அலட்சியமா அவனைப் பார்த்துச் சொன்னார். தன்னைச் சிறிதும் மதியாமல் எள்ளி அவமதித்துள்ளான் என அவ் வெள்ளையன் உள்ளத்தில் வெங் கோபம்மூண்டது. தான் கேட்ட கேள்விக்கு இவர் பதில் சொன்ன விதத்தைக் குறித்து அவன் எழுதி வைத்துள்ள குறிப்பு அயலே வருகிறது. கருதிக் காண வுரியது.

"On being asked if he had any thing further to say? He replied, he had not, with on appearance of the greatest indifference." (R. G.)

"மேலே ஏதாவது சொல்ல வேண்டியது உண்டா? என்று கேட்டேன்; அதற்கு அவன் ஏதும் இல்லை என அளவு கடந்த

அலட்சியமாய்ப் பதில் சொன்னான்'' என்று அந்தச் சேனைத் தலைவன் இந்த வாறு சிந்தை கனன்று குறித்திருக்கிறான்.

இதனால் அங்கே அன்று நிகழ்ந்துள்ள நிலைமைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். உபேட்சை, அலட்சியம், உதாசீனம் முதலிய நிலைகளில் நின்று எவ்வழியும் தன்னைப் பாஞ்சைமன்னன் அவமதித்து நடந்து வந்தான் என்பதை அந்த வெள்ளைத் தலைவன் உள்ளம் கனன்று மருமமாய் வெளியிட்டிருப்பதைத் தெளிவாக இங்கே அறிய நேர்ந்தோம்.

நாடாளும் ஆசையால் கேடான வழிகளில் புகுந்து இளையாகச் சில கோளர்களைத் தழுவிக்கொண்டு இந் நாட்டை அடியோடு கவர்ந்துகொள்ள வெள்ளையர் மூண்டு முயன்று யாண்டும் நீண்டு வருகின்றார் என்று இவ் வீரன் உள்ளம் கொதித்திருத்தலால் உரைகள் கடுத்து வந்தன. மனத்தில் மருவியுள்ள கொதிப்புகளை வார்த்தைகள் வெளியே வார்த்துக் காட்டின. உள்ளே மூண்டு நின்றது உரையில் நீண்டு வந்தது.

கும்பினியின் அதிகாரத்தைப் பயன் படுத்திக்கொண்டு தனக்கு அப் படைத் தலைவன் கொடிய கேடு செய்யக் கூடும் என்பதை முடிவாகத் தெரிந்திருந்தும் அவனை யாதும் மதியாமல் ஏதும் அஞ்சாமல் நெஞ்சம் துணிந்து இவ் வீர மகன் நேரே தீரமாய்ப் பேசியிருப்பது நினைந்து சிந்திக்கத் தக்கது.

கொல்லுகின்ற எமன்போலக் கொடுமையாய்ப்
பலசூழ்ந்து குறிக்கோ ளோடு
வெல்லுகின்ற படைகளைநேர் அயல்எங்கும்
வீறோடு விரித்து வைத்துப்
புல்லுகின்ற நீதிமுறை புரிபவன்போல்
படைத்தலைவன் புகலுந் தோறும்
ஒல்லுகின்ற வழியெல்லாம் உயர்வீரம்
ஒளிபுரிய உரைத்தான் வீரன்.

இம் மான வீரன் யாதும் மதியாமல் அச் சேனைத் தலைவனை நோக்கித் தீரமாய்ப் பேசி யிருப்பது இத் தேச மக்களுக்கெல்லாம் தேசு மிகுந்த வீர ஒளிகளை வீசி மேலான தீரங்களை விளக்கி நின்றது. தலைமை நிலை எவ்வழியும் தளராது மிளிர்ந்தது.

## மா ன நி லை.

தன் மீது செடிது முரண்கொண்டு கொடிய கொலை நோக்கோடு அவ் வெள்ளைத் தளபதி உள்ளம் கடுத்திருப்பதை அறிந்தும் இவர் யாதொரு பணிவும் காட்டாமல் அடலாண்மையோடு மிடல் கொண்டு நின்றது இவரது இயல்பான மான வீர நிலைகளை வரைந்து காட்டிச் சிறந்த நீர்மையைத் துலக்கி யுள்ளது.

> ஓட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே
> கெட்டான் எனப்படுதல் நன்று. (குறள், 967)

தன்னை இகழ்ந்து நிற்கும் பகைவர் பின்னே இழிந்து சென்று அவரைப் புகழ்ந்து பேசி உயிர் வாழ்வதை விட அது செய்யாமல் தன் மானத்தைக் காத்து அந்த நிலையிலேயே செத்தான் என்னும் கீர்த்தி ஒருவனுக்கு என்றும் நல்லதாம் எனத் தேவர் குறித்த இந்தத் தெய்வத் திருமொழியைத் தனக்குத் தனி யுரிமையாச் செய்து கொண்டு இம் மான வீரன் அன்று அங்கே வென்றி வீறோடு நின்று வந்தது என்றும் எவர்க்கும் அரிய பெரிய மேன்மையைவிளக்கி உரியசீர்மையைத் துலக்கிநின்றது.

மானம் அழிந்து உயிர் வாழ்வது ஈனம் என்பதை இவருடைய வாழ்க்கை முழுவதும் மோனமா யுணர்த்தி வந்துள்ளது. அவ் வுண்மையை இதில் யாரும் எளிதே உணர்ந்து கொள்ளலாம். சேனைத் தலைவனை நோக்கி இவர் கூறிய வுரைகள் வீரிய ஒளிகளாய் வீறு கொண்டு வெளி வந்துள்ளன.

## பொது மக்கள் நிலை.

இவர் பேசி வருங்கால் அயலே மூசி நின்ற நகர மக்கள் ஓசையின்றி உவந்து கேட்டார். உரையாடுந் திறனையும், உருவ நிலையையும், உற்றுள்ள அவதியையும் நோக்கி உள்ளுற மறுகினர். அவல நிலையிலும் கவலை யாதுமின்றி வயிரிகள் முன் நின்று தைரியமாய் வாதாடிய இவ் வீரரது தீர நிலையை வியந்து யாவரும் புகழ்ந்தார்: "கைதியாய்ப் பிடிபட்டு வந்தும் இக் கட்டழகன் சிறிதும் அஞ்சாமல் கம்பீரமாய் நிற்கும் காட்சியைப் பார்த்தீர்களா? இவ் வல்லாளனுக்கா இந்த அல்லல் வரவேண்டும்?

அப் பொல்லாத பிள்ளையால் நேர்ந்த புலையாட்டம் இது; ஊரை விட்டு வெளியேறு திருந்தால் இவ் வீர சிங்கத்தின் அருகே யார் நெருங்க வல்லார்? உள் நாட்டிலேயே பிள்வுபட்டுக் கோளர்கள் சிலர் உளவு சொல்லி இழவு கூட்டுகின்றார்கள் என்றால் வெளி நாட்டினரை நாம் நொந்துகொள்வதால் யாது பயன்? கோழைகளாய் நின்று கூழைக் கும்பிடுகள் போட்டு அயலாரிடத்தே ஆளைக் காட்டிக் கொடுத்து வயிறார வுண்டு தாம் வாழப் பார்க்கின்றாரே! அவர் வாழ்வும் ஒரு வாழ்வாகுமா? உயிரினும் மானமே பெரிது என்று மதித்து, யாருக்கும் தலை வணங்காமல், யாண்டும் அஞ்சாமல், சுதந்தரத்தை நிலை நிறுத்திச், சுத்த வீரராய் நிற்கும் இவ் வுத்தமருக்கு உதவி செய்வார் இங்கே ஒருவரும் இல்லையா? பாளைய காரர்கள் எல்லாரும் மோழை எருதுகள் போல் மூண்டி ஒண்டி யிருக்கிறார்களே யன்றி இவ் வேளையில் மண்டி எழுந்து கும்பினி அதிகாரிகளோடு மன்றாடி நின்று வேண்டிய உதவியை ஒன்றும் செய்ய வில்லையே! சொந்த நாட்டிலே கீர்த்தியை மூந்த நாட்டி யிருந்த ஒரு சூரனைத் துயரடைய விட்டு எந்த நாட்டி லிருந்தோ வந்தவர்க்கு இடங் கொடுத்து இச்சகம் பேசி அச்சமுடன் இதம் புரிந்து நிற்கும் கொச்சைத் தனம் இந்த நாட்டில் அன்றி வேறு எங்கேயும் காண முடியாது. ஒற்றுமை இல்லை; உறுதி யில்லை; உணர்வு இல்லை; உரம் இல்லை; ஒழுங் கில்லை; உதவி யில்லை; மானம் இல்லை; மரியாதை இல்லை; ஈன நிலைகளில் இழிந்து தம் வயிறு மட்டும் நிறைந்தால் போதும் என்று ஆழ்ந்த யோசனை யாதும் மின்றி எல்லாரும் தாழ்ந்து கிடக்கின்றார். அவிச் சுவையே கருதிப் புவிச் சுமைகளாய்ப் பிறருடைய நகைச் சுவைக்கு ஏதுவாய் நவை யூர்ந்து நிற்கின்றார். வீரம் குன்றி, ஈரம் இன்றி, வாரம் ஒன்றி, வஞ்சமும் சூதும் மருவி, நெஞ்சம் இழிந்து நிலை குலைந்து பஞ்சைகளாய் இருந்தார் என்று பாண்டி மண்டலத்திற்கு ஓர் பழி மண்டச் செய்துள்ளார். தேச நேசம் இல்லாதவரை ஈசனும் நேசியான்; நாளடைவில் நைந்து நாசமும் அடைவரே; அவ் அடைவினை ஆராயாமல் மடமை கொண் டிருக்கின்றாரே; இது என்ன இருப்பு? என்ன தேசம்? என்ன நாடு? என்ன ஊர்? என்ன

சனங்கள்? என்ன உறவு? என்ன காலம்? என்ன கோலம்? என்ன வாழ்வு? இது?" என இன்னவாறு பல பல பன்னி வருந்தி நொந்து பரிந்து நின்றார். இதனல் உலக மக்கள் இத் தலை மகனிடத்தே கொண்டிருந்த உரிமையும் உள்ளன்பும் உறுதி நிலையும் பரிவும் பண்பும் நன்கு உணர லாகும்.

## உண்மை அறிய உரிய கருவி.

ஒருவனது அரிய தலைமையையும் இனிய நிலைமையையும் சரியாக அளந்து அறிதற்கு அவனிடம் பொது சனங்கள் கொண்டுள்ள பிரியமே பெரிய அளவு கோலாயுளது. கயத்தாறு ஊரில் அன்று கூடியிருந்த மாந்தர் யாவரும் இவ் வீர வேந்தன் பால் பரிவு கூர்ந்து ஆர்வம் மீதூர்ந்து நின்ற நிலை அதிசயமாய் விளங்கியது. அது இவரது இயல்பான உயர் நிலைகளைத் தெளி வாக விளக்கியருளியது. நாட்டுமக்கள் நன்மையைக்காட்டினர்.

"குடிசனங்கள் அன்புரிமை கொண்ட அளவே
முடிமன்னன மேன்மை முடிவாய் — அடியளந்து
காண வருங்காண் கதிநிலைகள் அன்னவரால்
பேண வருமே பெரிது."

என்னும் உறுதிமொழி ஈண்டு ஊன்றி உணர வுரியது.

குடிகள் உவந்து வரக் கோன் உயர்ந்து வருகிருன் என் னும் அரசியல் தத்துவம் ஆன்ற பொருளுடையது. ஊரார் பிரிய மாய் ஒருவன் மீது உரிமை காட்டிவரின் அது அவனது பெரு மையை உலகம் காண ஒளிசெய்து வருவதாம். அங்கே திரண்டு நின்றவர் அன்று காட்டிய ஆர்வமும் மொழிகளும் செயல் களும் இவ் வென்றி வீரனது சீர்மை நீர்மைகளை நன்று விளக்கி நின்றன. பாசம் தோய்ந்த பரிவுரைகள் தேச மக்களிடமிருந்து ஓசை செய்து உரிமை மீதூர்ந்து ஒருமுகமாய் மருவி வந்தன.

பொது சனங்கள் மனம் மறுகி இவ்வாறு புலம்பி நிற்கச் சேனுதிபதி சினந்து செய்த தீர்ப்பை இனிமேல் பார்ப்போம்.

---

## முப்பதாவது அதிகாரம்.

### கருமம் முடிந்தது.

இம் மானவீரர் எதிர்வாதம் செய்ததைக் கேட்டிருந்த பானர்மேன் முதிர் கோபம் கொண்டு மூண்டு கொதித்து மீண்டு இவரை விரைந்து நோக்கி, "கும்பினிக்குக் கட்டுப்படாமல் மட்டு மீறி நின்று துட்டத்தனங்கள் செய்துள்ளமையால் கட்டபொம்மு ஆகிய உமக்கு இன்று தூக்குத் தண்டனை விதித்திருக்கிறேன்" என்று யாரும் திடுக்கிடும்படி துடுக்குடன் உரைத்தான். அக் கொடு மொழியைக் கேட்டவுடனே அடுத்து நின்றவர் அனைவரும் அஞ்சி அயர்ந்து அலமந்து நொந்தார். அருகிருந்த பாளையகாரர்களெல்லாரும் உள்ளம் கலங்கி ஒன்றும் பேசாமல் ஊமைகள் போல் ஒடுங்கி யுறைந்தார். உடன் இருந்த துரைமார்களும் இத் திட வீரனால் இனி யாது நிகழுமோ? என்று கடுந்திகில் கொண்டு நெடிது கலங்கி நின்றார்.

### மன்னன் மன நிலை.

அவ் அமையம் இம் மன்னர் மன நிலை என்னவாறு, என்பதை ஈண்டு எண்ணி அறியின் யாவருக்கும் ஓர் இறும்பூது உண்டாம். கொலைத் தண்டம் என்று குறித்த உடனே யாதொரு முக வாட்டமும் இன்றிப் புன்னகை புரிந்து கம்பீரமாய் எழுந்து நின்று சபை முழுவதையும் இகழ்ச்சிக் குறிப்போடு ஒரு பார்வை பார்த்தார்: "இன்ன பேடிகள் முன்னர் அன்னியன் வாயால் அவல வுரை கேட்க நேர்ந்ததே!" என்று உள்ளே கவலையாய் உன்னி யுளைந்து வெளியே உறுதியுடன் சில உரைக்க லானார். அந்த உரைகள் அதிசய நிலையில் வந்தன.

### இறுதியில் கூறிய உறுதி யுரைகள்.

இப்பொழுது இங்கே பானர்மேன் பன்னி யுரைத்த தீர்ப்பை நான் முன்னரே தெரிந்திருக்கிறேன். முடிவு இன்னது என்று முன்னுற அறிந்துள்ளமையால் இக் கொடிய மொழியில் யாதொரு அச்சமும் அதிசயமும் எனக்குத் தோன்றவில்லை.

கும்பினி அதிபதிகளாகிய எட்வர்டு சாண்டெர்ஸ் (Edward Saunders), அல்லது வில்லியம் பீட்டரை (William Petrie) நான் நேரில் போய்க் கண்டிருந்தேன் ஆனால் இவரது கருத்து இவ்வாறு நிறைவேறியிராது. இடையே தடை ஆயது; இனி அதை எண்ணி ஆவது என்? ஊரை விட்டு நான் பேர்ந்த போதே என் உயிரையும் பேர விட்டேன்; தாய் மொழி தட்டி, மனைவியுரை மறுத்துத், துணைவர் சொல் துறந்து, மதி யிழந்து வந்த என்னை விதி வளைந்து கொண்டது. என் தோளும் வாளும் தினவு தீரப் போராடல் புரிந்து, நேரலர் குருதிநீர் பாரோட வென்று எனது குல வீர நிலையை உலகறிய நிறுத்தி உயர் புகழ் சூடாமல் இடையே அயர்வுற நேர்ந்ததே! என்று அந்த இழவு ஒன்றையே நினைந்து என் உளம் மிக வருந்துகின்றது. அத்துடன் உங்கள் இளிவையும் பிளவையும் எண்ணி இரங்கி நாணுகின்றேன். ஒத்திணங்கி ஓடிவந்து இங்கே கூடியுள்ள பாளையகாரர்களாகிய உங்கள் எல்லாருக்கும் முடிவாக ஒன்று சொல்லுகின்றேன்: எத்துணை நாள் இருந்தாலும் இவ் வுலகில் செத்து ஒழிதல் திண்ணம். நிலையற்ற இவ் வாழ்வை நிலை என்று எண்ணிப் புலையுற்றிழிந்து மானம் கெட்டு வாழ்தல் மிகவும் ஈனமாகும். உள்ள நாளெல்லாம் வெள்ளையர்க்கு ஊழியம் புரிந்து பள்ளை ஆடுகள் போல் திரிய உள்ளங்கொண்டு எள்ளல் ஒன்றும் கருதாமல் நீங்கள் ஏமாந்திருப்பதை நினைந்து நினைந்து நான் இனைந்து இரங்கி நிற்கின்றேன். வீர நாடு என விளங்கி யிருந்த இப் பாண்டிய நாடு ஈண்டுச் சிலர் தோன்றியதால் கோழை நாடாய்க் குலைய நேர்ந்ததே! என்று என் குலை துடிக்கின்றது. தேசாபிமானம் யாதும் இன்றி ஒருவரை ஒருவர் மோசஞ்செய்து ஆசை வயத்தராய் நீச நிலையில் நிமிர்ந்து கீழா யிழிந்து வாழ நேர்ந்துள்ளீர்; நீளமான பழிகளில் ஆழ வீழ்ந்துள்ள உமக்கு ஆண்மை மேன்மைகளின் பொருள் யாதும் தெரிய முடியாது; அகத்தில் தீரம் இல்லாதவர்க்கு முகத்தில் மீசையும் வேண்டுமோ? மானம் மரியாதைகளை இழந்து ஈன வழிகளில் இழிந்திருப்பவர் விழிகள் எதிரே நிற்பதே நெடிய வெட்கம் என்க் கொடிய துக்கம் அடைகிறேன். நேரே காண நெஞ்சம் நாணுகிறது.

"கோளை மூட்டிய கொடியவர் தலைகளைத் துமித்து, என்
வாளை நீட்டிஇவ் வையகம் காட்டுவேன்; எனது
நாளை நீட்டிமுன் நான்முகன் வைத்திலன்; இந்த
வேளை மூட்டிய விதியினை நினைந்துநான் அமர்ந்தேன்; (1)

இக் கணத்திலும் எறுழ்வலி மடங்கல்போல் பாய்ந்து
பக்கம் நீடிய படைகளைப் படுத்துயிர் குடித்துத்
தக்க என்திரு நகரினைச் சாருவேன்; தடையாய்க்
கைக்கு அடைந்தபின் கடப்பது பழிஎனக் கழித்தேன்; (2)

குனிந்து கும்பிட்டுக் கோட்சொல்லி இச்சகம் பேசி
வனைந்து தம்முடல் வளர்க்கின்ற மாண்புடை யார்முன்
புனைந்து தன்குல வீரமே பூண்டவன் ஒருவன்
இனைந்து நாணியே இறந்தனன் என்பதிங் கெய்த. (3)

பேடி யாளராய்ப் பெருகிமுன் னிற்பவர் இங்கே
கூடி வாழலாம் அன்றியே கோக்குல வீரம்
சூடி யுள்ளவர் துணிவுடன் அயலிடம் அகன்று
நீடி நிற்கலாம் எனுமொரு விதியைநேர் கண்டேன். (4)

உள்ள நாளெலாம் வெள்ளையர்க்கு ஊழியம் புரிந்து
பள்ளை ஆடுபோல் பணித்தது படுத்தொரு முகமாய்
எள்ள லோடவே இளிவுடன் கழியநீர் இருந்தீர்
ஒள்ளி யார்முனம் ஒளியிழந் திழிவதை உணர்வீர்!" (5)

(வீரபாண்டியம்)

என்று இத் திண்டோள் வீரர் நேரே மண்டியிருந்த பாளைய காரரைப் பழிப்போடு பார்த்து இவ்வாறு இளிப்புரை யாடினார். அதன்பின் தமக்குத் தூக்கு இட்டிருந்த * புளியமரத்தை நோக்

* இந்தப் புளியமரம் கயத்தாற்றுக்கு மேல்புறம் மங்கம்மாள் சாலையில் உள்ளது. அவ்வழியே போபவர் யாவரும் இவரது ஞாபகச் சின்னமாக ஒவ்வோர் கல்லை எடுத்து இட்டு அங்கே வணங்கிச் செல் கின்றார். கற்கள் குவிந்து கிடக்கின்றன. இவர் உறவினர் ஆண்டு தோறும் சென்று ஆண்டு வழிபட்டு வருகின்றார். அவ் வழிபாடு ஓர் வீர தேவதையின் தொழுகையாய் இன்றும் நடந்து வருகின்றது. தேச சுதந்திரத்திற்காகத் தன் உயிரைத் துறந்த வென்றி வீரனைத் தேச மக்கள் யாவரும் நெஞ்சம் உருகி நினைந்து போற்றி வருவது உயர்ந்த ஏற்றமாய் ஒளிபுரிந்து சிறந்த நீர்மையா விளங்கி யுள்ளது.

இச் சிங்க ஏறெனத் திமிர்ந்து நடந்தார். கொலையாளிகள் அருகு வரலாகாதென்று இவர் உறுதி செய்திருந்தார் ஆதலால் இறுதிவரையும் ஒருவரும் அருகே அணுகவில்லை. பட்டாளங்களோடு அயலே எட்ட நின்றனர். தூக்கு மரத்தின் அடியை அடைந்தவுடன் எட்டப்ப நாயக்கரையும், சிவகிரி ஜமீன்தாரையும் இவர் செயிர்த்து நோக்கிச் சிறு நகை செய்தார். முதலிருந்தே அவ் விருவரையும் அலட்சியமாக அவமதித்து நின்ற இவர் இறுதியில் இங்ஙனம் உள்ளங் கொதித்து எள்ளி நகைத்துப் பின்பு தூக்கிற்கு எட்டும்படி நேரே இட்டிருந்த ஏணி நாற்காலியை அணுகினர். அச் சமையம் அங்கு நின்றவர் பலரும் அலறி ஒதுங்கினர். சிலர் தலை கவிழ்ந்து நிலநோக்கித் தனி அகன்றார். இக் கொலையை விதித்த சேனுபதி முதலிய துரைகளெல்லாரும் முன்னமே விரைந்து சென்று உறையுளை யடைந்து உள்ளஞ்சி உறைந்திருந்தார் ஆதலால் சேனைகள் மட்டும் அயலே நிறைந்து நின்றன. மரண நிலையை ஒரு சிறிதும் கருதாமல் அதிசய கம்பீரமாய் நடந்து இவ் வீர மகன் தீரமாய்த் தூக்கு மரத்தை நோக்கிப் போனது உலக உள்ளங்களை உருக்கி நின்றது. சாக நேர்ந்ததை ஒரு யோகமா நினைந்து போனான்.

சிங்க ஏறெனத் திண்டிற லுடன்திகழ்ந்து எழுந்தான்
அங்கி ருந்தவர் தமைமிக அவமதித்து இகழ்ந்து
வெங்கண் பார்வையாய் எட்டனை விழித்துமேல் பார்த்துப்
பொங்கி நின்றஅப் புளியடி தெளிவுடன் புகுந்தான். (1)

உள்ள மானம்விட்டு உயிருடன் வாழ்வதின் உடனே
துள்ளி மாள்வதே சூரர்தம் குலமுறை ஆகும்;
எள்ள லாயிழி நிலையினில் இழிந்துடல் வளர்க்கும்
கள்ள மாக்கள்அக் காட்சியைக் கனவினும் காணார். (2)

நரிகள் கூடிவாழ் இடத்தினில் நலமிகு திறலார்
அரியின் ஏறுருது அருவறுத் தகன்றிடும்; கரவாய்
மருவு கோழைகள் மண்டிய நிலத்தினில் வீரத்
திருவ மைந்தநற் குலமகன் சேர்ந்திடான் அன்றே. (3)

என்று இன்னவாறு இன்னலோடு எண்ணி இகழ்ந்து யாதும் தளராமல் அதிசய வீறோடு வீர கம்பீரமாய் நிமிர்ந்து நடந்து

தூக்குக்கு அமைந்திருந்த அந்தப் புளியமரத்தின் அடியை அடைந்து கொடிய சதி புரிந்தவரைச் சிறிது கருதி நோக்கி ஒருவகை முறுவலும் புரிந்து பருவரலின்றி ஊக்கி நின்றார்.

## தூக்கில் ஏறியது.

உள்ளம் ஒரு சிறிதும் கலங்காமல் பெருமிதமாய் அங்ஙனம் ஊக்கி நின்றவர் பின்பு தூக்கில் ஏறினார். அருகே ஒதுங்கி அனைவரும் அலமந்து மறுகினர். இவர் "முருகா" என்று பெருமிதத்தோடு அக் கொலைக் கயிற்றை வலக் கையால் பிடித்தார்: "நீசமான கோளர்முன் வாசம் ஆகாதென்று இப் பாசமே எனக்குப் *பாசமாய் நின்று பரிந்து உதவுகின்றது" என்று பகர்ந்து உடனே ஊமைத்தம்பியை நினைந்து உளைந்து வருந்தினர்; இளவலை எண்ணி மொழிந்தது உளமலி துயரை உணர்த்தியது.

## முடிவில் மொழிந்தது.

"என் கோட்டையைப் பாது காத்துப் பகைவரைப் பாடழித்துப் போர்முனையில் அங்கேயே நான் இறந்திருப்பேன் ஆனால் இந்நாட்டுக்கு மிகவும் நலமாயிருந்திருக்கும்" என்று சொல்லிக் கொண்டே தம் தலையைத் தூக்குக் கயிற்றில் மாட்டினார். அவ் அமையம் ஆகாயத்தில் இரண்டு கருடர்கள் வட்டமிட்டு உலாவின. இவர் ஏறி நின்ற நாற்காலியை எட்டிவிழ எற்றிப் பட்டெனத் தூங்கிப் பதைத்து மாண்டார். கண்டவர் யாவரும் கண்கள் நீர் சிந்திக் கருத்தழிந்து நொந்தார். பகைவராய் மண்டியிருந்தவரும் கூட இவரது மன நிலையை வியந்து மறுகி புளைந்தார். ஊரார் யாவரும் பெரிதாய் ஓலமிட்டு உருகி அழுதார்.

## தம்பியர் தவித்தது.

பின்பு சிறையிலிருந்து தம்பி முதலான அனைவரும் வெளியில் ஓடி வந்து கொலை நிலையைக் கண்டு குலை துடித்து அலறினர்.

---

* பாசம் = அன்பு, கயிறு. வாசம் = வசித்திருப்பது. சூழவும் கோளர்களும்கோழைகளுமாயுள்ள இடத்தில் நேர்மையானஓர் வீரன் வாழ்வது ஈனமாம் என்பது கருத்து. இம்மான வீரர் மனம் கொதித்து மரண சமயம் எண்ணியிருக்கும் நிலையை ஈண்டுக் கண்ணூன்றிப் பார்க்கின்றோம்; கருதி நொந்து மறுகி புளைந்து உறுதி ஓர்கின்றோம்.

உள்ளம் பதைத்து உணர்வு குலைந்து உயிர் மறுகிக் கண்ணீர் வெள்ளமாய்ப் பெருகி ஓடத் துள்ளி அலமந்து கதறி அழுதது கொடிய பரிதாபமாய் நெடிது ஓங்கி நின்றது.

ஆவி போனபின் அந்த அருமைத் திருமேனியை அங்கே கூடியழுது குலைந்து நின்ற உறவினரிடம் கொடுத்து விடுத்தார். அவர் துடித்தழுது துயரமொடு புலம்பி இனிது புனைந்து எடுத்துச் சென்று அருகே வடபால் இருந்த ஆலமரத்தின் அடியில் சந்தன இந்தனம் அடுக்கி அதன் மேல் சதுருடன் கிடத்தினர். உயிர் நீங்கியும் சிங்கம் சீறிய செயலெனச் செயிர் நீங்காமல் பொங்கி மிளிர்ந்து வீரப்பொலிவோடு விளங்கி நிற்கும் இவரது திருமுக மண்டலத்தை நோக்கி ஒருமுகமாக அனைவரும் உள்ளம் கரைந்து உருகி அழுது பரிதாபமாய் ஓலமிட்டு அலறினர்.

“வீர நாயகா! விண்ணுலகு அடைந்தையோ? என்பார்;
பாரை யாண்டுறு பாண்டியா! மாண்டையோ? என்பார்;
மார னும்எனும் வடிவனே! மாய்ந்தையோ? என்பார்;
ஆரவே அழுது அழலினை மூட்டினர் அடுத்தே.”

அங்ஙனம் மூட்டிய தீ மூட்டத்தில் பற்றி மூண்டு எழுந்த பொழுது ஊமைத்துரை உள்ளம் பதைத்து ஓவென்று கதறினர். அண்ணல் மேனியில் அழல் ஏறவும் அவரது கண்ணீர் மண்ணில் வீழ்ந்து ஓடியது; உடனே உள்ளக் கொதிப்பால் ஊழித் தீ யென உருத்துப் பற்களைக் கடித்து, “நான் திக்குவிசயனுக்குப் பிறந்திருந்தேன் ஆனுல் என் அண்ணனைக் கொன்ற இப் பழிக்கு எண்ணிறந்த பேரை இரையாக்கி இம் மண்ணில் புதைப்பேன்” என்று தம் கையைத் தரையில் ஓங்கி அறைந்து கண்ணீரைத் துடைத்துக் கடுத்து எழுந்தார். பின்பு சீராடி யாரோடும் பேசாமல் யாதும் புசியாமல் அவல நிலையில் அவசமாயிருந்தார். மறுநாள் தீயை ஆற்றிச் சாம்பலைக் கொண்டுபோய்க் கங்கையில் கரைத்து வரும்படி தங்கள் இனத்தில் ஒருவனை அனுப்பி விட்டு அங்கு உரிய கடன்முறைகள் யாவும் பரிவுடன் செய்து வந்தார். கொடிய துயரம் எவரிடமும் நெடிது நீண்டு நின்றது.

தகனகிரியைகளைச் செய்துமுடித்து அங்ஙனம் திரும்பி வந்தவரை உறவினரோடு அங்கேயே யிருக்கும்படி பானர்மேன் தடை செய்து வைத்தான். "இன்னும் உன் வன்மம் தீரவில்லையா?" என்று உள்ளங்கொதித்து அவனை உள்ளுற வைது தள்ளரிய துயரோடு எதிர்வதை எண்ணிக் கயத்தாற்றாரிலேயே ஊமைத்துரை தமருடன் தங்கியிருந்தார். அமர் முகத்தில் அரிய போர் வீரன் அவல நிலையில் அநியாயமாய் மாண்டு போனுரே என்ற பரிதாபமான கவலை அயலிடம் எங்கும் பெரிதாய் ஓங்கிநீண்டது.

மன்னன் மனைவி இன்னலுழந்தது.

மன்னன் அங்கே மாண்ட செய்தி மனைவி இங்கே கேட்டவுடன் மயங்கி மாழ்கித் தன்னுயிர் போய் ஒழிந்தது எனச் சாய்ந்து நெடும்போது உயிர்ப்பு ஓய்ந்து போய் உலேந்து கிடந்தாள். அவ்வாறு பொறியிழந்த பாவைபோல் நிலை குலைந்து தரையில் விழுந்து சிறிது பொழுது ஆனபின் அவசம் தெளிந்து உயிரே போய்ப் பரதவிக்கும் உடலே போல் உருண்டு புரண்டாள். தீயிடை விழுந்த புழுவெனத் தெருமந்து துடித்தாள். மின்னல் இளங்கொடி வீழ்ந்து இன்னலொடு துவள்வதுபோல் தன்னை மறந்து பதைத்த அப் பதிவிரதை பரிதாபம் மீதூர்ந்து இவ் அதிவீரரை நினைந்து அலறி அழுதாள். அக் குலமகள் அழுகை உளமலி துயரை உணர்த்தி அளவில்லா அலமரலை விளைத்தது. வீர அரசின் பேரரசியாய்ப் பெருமித நிலையில் வாழ்ந்து வந்தவள் பரு வரலடைந்து ஆழ்ந்த துன்பத்தில் வீழ்ந்து புலம்பியது எல்லாருடைய உள்ளங்களையும் ஒல்லையில் உருக்கி அல்லலாய் நின்றது. அழுத அழுகையில் விழுமிய பொருள்கள் வெளி வரலாயின. அயலே வருவன அரிய பல நிலைகளை அறிவுறுத்துவன.

வீரலட்சுமி புலம்பியது.

"கோடிசனம் நிறைந்திருக்கக் குலாகரம்
நிலைத்திருக்கக் கொற்றம் இல்லாப்
பேடியர்முன் பிழையாகப் பிழையாத
பெருவீரம் பிழைத்து நீயும்

விடிவினையே விறல்மதனே! இதையறிந்தும்
என்னுயிர் வீயா தின்னும்
நீடியுடல் நிலைத்துளதே! நிலைதெரியாக்
கொடுவினையின் நிலைதான் என்னே! (1)

கோலமுழு மதியனைய திருமுகத்தின்
பொலிவெங்கே? குலத்தோள் எங்கே?
மாலைதவழ் மார்பெங்கே? வண்குமுத
மலரென்ன மலர்ந்த செவ்வாய்க்
கோலம்எங்கே? குணம்எங்கே? குலவீரத்
திறல்எங்கே? குளிர நோக்கும்
நீலவிழி நிலைஎங்கே? நிமிர்மீசைச்
செறிவெங்கே? நெறிதான் எங்கே? (2)

காலையிலும் மாலையிலும் கமழினிய
நீராடிக் காமர் செந்தில்
வேலவனைப் பூசித்து விஞ்சையன்போல்
எழுந்துவரும் மேன்மை எங்கே?
சீலமுடன் அமர்ந்தடியார் திருவமுதம்
ஊட்டவுண்ணும் சீர்மை எங்கே?
ஏலமுயர் பாகருந்தி இன்மொழிகொண்டு
இருந்தருளும் எழில்தான் எங்கே? (3)

மண்ணிறைந்த பெருந்திருவும், மாருத
அருந்திறலும், மானம் வண்மை,
விண்ணிறைந்த பெருங்கீர்த்தி மிகநிறைந்து
சிறந்திருந்த வேந்தர் வேந்தே!
கண்ணிறைந்த கட்டழகா! கண்காணு
துனையிழந்து கதறு கின்றேன்;
எண்ணிறைந்த பெண்பிறப்பில் என்பிறப்பின்
தீவினைதான் என்னே! என்னே! (4)

பிள்ளையில்லாப் பாவியென இதுவரையும்
பிழைகொண்டேன்; பேணிக் கொண்ட

வள்ளலையும் இன்றிழந்து மாபாவி
எனநின்றேன்; மண்ணில் என்போல்
தள்ளரிய தீவினையைத் தள்ளாமல்
செய்திங்ஙன் தவித்தார் உண்டோ?
உள்ளியவெங் கொடுந்தீய வூழ்வினைப்
பயனிதுவோ? உணரேன் அந்தோ! (5)

தந்தைதாய் இருந்தாலும் தன்னுடனே
ஒருவயிற்றில் சார்ந்தன் பாக
வந்ததுணை இருந்தாலும் வளர்கிளைகள்
இருந்தாலும் மகிழ்ந்து பெற்ற
மைந்தர்தாம் இருந்தாலும் மற்றவெல்லாம்
இருந்தாலும் மணந்து கொண்ட
சுந்தரன்தான் இல்லையெனில் அந்தமகள்
உயிர்வாழ்க்கை துயரம் அன்றோ? (6)

என்னுயிரே! என்னுணர்வே! என்கண்ணே!
என்துரையே! என்னை இங்கே
துன்னுதுயர்க் கடல்விடுத்துத் துணையின்றித்
தனியிருத்தல் சுகமோ சொல்லாய்?
பன்னியடுத் தார்தம்மைப் பாதுகாத்
தருள்வதென்றும் பாஞ்சை மன்னர்க்கு
உன்னரிய உரிமையன்றோ? உரியவளைக்
காவாமல் ஒளிய லாமோ? (7)

அடுத்தஒரு வனைக்காக்க ஆருயிரும்
அருங்கிளையும் அரசும் அந்தோ
கொடுத்துநின்ற குலமகனே! உலகமெலாம்
நனிகாணக் கொண்ட என்னைத்
தடுத்தாண்டு கொள்ளாமல் தள்ளிவிட்டுச்
சென்றனையே தகவோ சொல்லாய்!
எடுத்தாண்ட வில்லாளா! இல்லாளை
எடுத்தாளல் இனிதே அன்றோ." (8)

பதிபெயர்ந்து வழிஏகல் பழியாகும்
என்றுமுன்னே பரிந்து சொன்ன
மதியிகந்து வெளியேறி வன்கொலையாய்
மடிந்தாயே மதியின் மிக்க
அதிபதியே! என்ஆவி அருந்துணையே!
ஆண்டகையே! அமிர்தே! இங்கே
சதிபதியாய் இருந்தஎன்னைச் சதிசெய்து
போயினையே தகவோ கோவே! (9)

ஐயகோ என்அரசை முன்னிழந்து
பின்னிறக்க அடியாள் செய்த
வெய்யகொடுந் தீவினையின் விளைவிருந்த
விரகென்னே! விண்ணோர் வாழச்
செய்யவடி வேல்எடுத்த திறல்முருகன்
திருவருளும் தீர்ந்த தேயோ
வையமதில் உய்யஇனி வழியுண்டோ
வன்பாவி பழியுண் டேனே. (10)

(வீரபாண்டியம்)

என்று இவ்வாறு துடித்து அலமந்து பதைத்து அழுத அரசி திடீர் என்று விரைந்தெழுந்து தன் உயிரை விடுத்திடத் துணிந் தாள். அடுத்து நின்றவர் அலறி ஓடிப் பிடித்துத் தடுத்துத் தாங் கிப் பாதுகாத்துத் தவித்து நொந்தார். ஆவியை நீக்க ஆங்காலம் எதிர்நோக்கி அத்தேவி ஏங்கிக் கிடந்தாள். பருவம் முதிர்ந்த தாயும் உருகி யுழந்து மறுகி வீழ்ந்து கன்றிழந்த காரா வென்னக் கதறி யழுதாள். உறவினரும் குடிசனங்களும் படுதுயர் மிகுந்து நெடிது புலம்பினர். ஊரெங்கும் பாரிழவாய்ப் பரிதாபமான பேரொலிகளே பெருகிப் பெரிய ஒரு துயர நிலையமா யிருந்தன.

அந் நிலையில் இன்னல் உழந்திருந்த சின்னபொம்மையா என்பவர் செய்யவேண்டிய கடன் முறைகளை யெல்லாம் செய்து முடித்து இரண்டு தினம் கழிந்த பின்பு அரச குடும்பத் தைக் கோல்லம்பரும்புக்குக் குடியெழுப்பினர். அதன் பின்

வேடபட்டி என்னும் ஊரில் வீடு கட்டிச் சீரும் சிறப்போடு மேன்மையா யிருந்தார். அப்பொழுது அவருக்கு வயது 55.

அவர், திக்குவிசயத்துரை யோடு உடன் பிறந்த தம்பி. மன்னனுக்குச் சிறிய தந்தை. சிறந்த மதிமான். பெருந் தன்மை நிறைந்தவர். யாரோடும் பகை கூடாதென்று பல வகையிலும் அறிவு கூறி ஆட்சிக்கு உறுதி செய்து வந்தவர். மைத்துனமா ருடைய சொற்களைக் கேட்டுக்கொண்டு ஜமீன்தார் அவரை அவமதித்து நின்முர் ஆதலால் மிகவும் மன வருத்தத்துடன் அவர் அயல் ஒதுங்கிக் கொல்லம்பரும்பில் போயிருந்தார். நல்ல சித்தமுடைய அவர் உள்ளங் கொதித்து அயலே வருந்தி யிருந் ததே இவ் அரசு இவ்வாறு அழிந்து போதற்குக் காரணம் ஆய தெனப் பலர் அக்காலத்தில் அலர் தூற்றலானுர். அவருடைய பேச்சைக் கேட்டு நடந்திருந்தால் கும்பினியாருடைய பகை இவ்வளவுகொடுமையாமூண்டு இங்ஙனம்குடிகேடு நேர்ந்திராது.

*"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்" (குறள் 448)

என்றபடி இவர் கெட லாயினுர். உரிமையான அறிவாளிகள் உழை நின்று உறுதி கூருமையால், அரிய திறலுடைய இவ் அரசில் பெரிய பிழையேறி இப் பேரிழவாயது. இடையே நேர்ந்த இடையூறுகளை நினைந்து உளங் கவன்றிருந்த அவர் முடி வறிந்ததும் நெடிது வருந்தி நேரே கோட்டைக்கு ஓடி வந்து குலை துடித்து நின்ற கிளைகளை யெல்லாம் ஆற்றித் தேற்றி ஆத ரித்து நின்முர். மனம் வெறுத்து அயல் ஒதுங்கி யிருந்த அவர் சமையத்தில் பரிந்து வந்து குடும்பத்தைத் தாங்கி அருளினுர். "அதிர வன்பகை யாய் அயல் நிற்பினும், உதிர சம்பந்தம் உள்ளம் உருக்குமே" என்ற வண்ணம் உருகி நின்ற அவர் அங்கிருந்த குடும்பத்தார் அனைவரையும் கொல்லம்பருப்புக்குக் கொண்டு

* இடித்து அறிவுறுத்துவாரை அருகே பெற்றிராத ஆதரவற்ற அரசன் தானகவே அழிந்து போவான் என இது மொழிந்துள்ளது. நல்ல அறிவாளர்களுடைய சொல்லுக்குச் செவிசாய்த்து உள்ளம் திருந்தி ஒழுகி வரும் அரசே விழுமிய நிலையில் செழுமி வரும், ஊன்க.

போயினர்; சிலரைத் தூத்துக்குடியில் வைத்துப் பாதுகாத்தார். அந்த இரண்டிடங்களிலும் இச் சமீனுக்குத் தொடர்பான கிளை நிலையங்கள் இருந்தன ஆதலால் கிளைஞர்கள் அங்ஙனம் உளைந்து எழுந்து போய் உள்ளங் கரைந்து மறுகி உறைந்திருந்தார்.

## சின்ன பொம்மையாவின் சீர்மை.

தன் சொல்லைக் கேளாமல் அரச குடும்பம் அநியாயமாய் அழிந்து போயதே என்று உள்ளம் நொந்து வருந்தி மறுகிய இவர் பின்பு இயன்றவரையும் உறவினரை உரிமையோடு பாது காத்தருளினர். இவருடைய நிலைமை நீர்மைகளைக் குறித்துக் கும்பினியாரும் புகழ்ந்து கூறியுள்ளனர். கலெக்டர் இவரைப் பற்றி எழுதி வைத்துள்ள குறிப்பு ஒன்று அயலே வருகின்றது.

Sinna Bomma

"This man managed the country for many years. He was dismissed by his nephew last year, bears a good character and is said to be respected by the people."

(W. C. J) 9th June 1798.

"சின்ன பொம்மு என்னும் இவர் நாட்டைப் பல ஆண்டு கள் நன்கு பேணி வந்தார். இவருடைய மருமகனால் சென்ற வருடம் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். நல்ல ஒழுக்கம் உள் ளவர்; குடிசனங்களால் மிகவும் நன்கு மதித்துப் போற்றப் பெற்றவர்" என இன்னவாறு ஆங்கிலேயரும் போற்றியிருத்த லால் இவருடைய அறிவும் சீலமும் அமைதியும் பெருந்தன்மை யும் அறியலாகும். இத்தகைய உத்தமர்களுடைய தொடர்பை இழந்து மூர்க்கர் சிலரோடு தொடர்பு கொண்டதனாலேதான் பாஞ்சாலங்குறிச்சி அரசு பாழாய் அழிய நேர்ந்தது. நல்லவர் ஒதுங்கிய பொழுது பொல்லாதவர் புகுந்து கொள்ளுகின்றனர்; கொள்ளவே அல்லலும் பழியும் அழிவும் அங்கே ஒல்லையில் வருகின்றன. இனியவர் பிரிந்து போக இன்னலம் பெருகியது.

பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். (குறள், 450)

"நல்லார் ஒருவர் தொடர்பை அரசன் கைவிடின் பல்லா யிரம் பகைவர் ஒருங்கு திரண்டு மூண்டாலும் செய்ய முடியாத பெருங்கேடு அவனுக்கு நேர்ந்து விடும்" எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். உறவு கொள்ள வுரியவர் உணர வுந்தனர்.

உள்ளம் நல்லவர் அமுதம்போல் இன்பம் புரிவர்; நெஞ்சம் தீயவர் நஞ்சுபோல் துன்பமே புரிவர். தீய இனம் தீயினும் தீயது ஆதலால் தீயவரோடு அரசன் யாண்டும் யாதும் சேரவே கூடாது. எந்த அரசன் பெரியாரைப் பேணித் துணைக் கொள்ளுகின்றானோ அந்த அரசு அரிய பல மேன்மைகளை அடைந்து கொள்ளும். ஒரு நல்லவன் தொடர்பைக் கைவிட்டமையால் பாஞ்சைப் பதி அல்லல் பல அடைந்து அவமே அழிந்தது. விழுமியோன் விலகியது வெய்ய அழிவாய் விளைந்தது.

செல்லம் பொழிந் திருந்த பாஞ்சாலங்குறிச்சி மன்னனை இழந்த பின் மதி இழந்த வான்போல பொலிவிழந்து மருள் படிந்து இருள் சூழ்ந்து இழிந்திருந்தது. குடிசனங்க ளெல்லா ரும் நிலை குலைந்து அயலகன்று போனார். கோட்டையில் நிலைத் திருந்த யானைகள், குதிரைகள், பசுக்கள், பொன்மணி முதலிய நிதிவளங்களை யெல்லாம் கவர்ந்து கொண்டு கலெக்டருடைய மேற்பார்வையில் மில்லர் (Miller) துரை பாதுகாத்து வந்தார்.

வீரமாநகரம் எனப் பேரும் புகழும் பெற்று வளங்கள் பல நிறைந்து சிறந்த நிலையில் விளங்கி யிருந்த அப் பாஞ்சைப் பதி அரசு இழந்த பின் முரசு முதலிய மங்கல ஒலிகள் யாதும் இன்றி மங்கல மிழந்த மங்கை போல் மங்கி மறுகி யிருந்தது.

தன்னுடைய வீரத் தலை மகனை இழந்தமையால் இத் தென் னாடு ஆறாத் துயருடன் அலமந்து இன்னலுழந்து நின்றது.

இம் மன்னன் மாண்டது கொல்லம் ஆண்டு கூ௭௫, சித்தார்த்தி வருடம், புரட்டாசி மாதம் ௩௰-ந் தேதி; அதாவது கி பி. 1799 அக்டோபர் மாதம் 16-ந் தெய்தி என்க.

பிறந்தது 3—1—1760; இறந்தது 16—10—1799. ஆகவே இவர் இறக்கும்பொழுது வயது முப்பத்தொன்பது முடிந்து

நாற்பது தொடங்கி நடந்து கொண்டு நின்றது.

இவர் பட்டத்துக்கு வந்தது 2—2—1790ல் ஆதலால் பத்து ஆண்டுகள் கூடச் சரியாய் நிறைவேறவில்லை. 9 வருடம், 8 மாதம், 14 நாளே அதிபதியாய்ப் பட்டம்ஆண்டிருக்கின்றார்.

இவருக்கு சந்ததி இல்லை.

செல்வ நிலையில் சிற்றரசன் ஆயினும் உள்ள நிலையில் உலகமெல்லாம வியந்து கொள்ளத்தக்க பெரு வீரராய் விளங்கி யிருந்த இத் தீர மன்னர் முடிவு இவ்வாறு தீனமாய் முடிந்தது.

தலைமையான நிலையில் நிலவி யிருந்த இவர் உரிமை முழுவதையும் இழந்து, தமது விழுமிய நிலைமை திரிந்து பரிதாபமான துயர நிலையில் ஒழிந்து போனதை நினைந்தால் உலக நிலையின் உண்மையான ஒழிவு நிலைகளைத் தெளிவா யுணரலாகும்.

"இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவணது இடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே; சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே!
அதனால் நீயும் கேண்மதி! அத்தை; வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை மாயமோ? அன்றே;
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பு இலாஅ அவிப் புழுக்கல்
கைக்கொண்டு பிறக்கு நோக்காது
இழி பிறப்பினோன் ஈயப் பெற்று
நிலம்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந் நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே." (புறம் 363)

உடை இலையின் பாதி அளவு கூடப் பிறர்க்கு இல்லாமல் உலக முழுவதும் தமக்கே உரிமையாகக் கொண்டு, தலைமை

யுடன் ஆண்டிருந்த அரசர் பலர் தம் நாட்டைப் பிறர்கொள்ளக் கொடுத்து மாண்டு போயினர்; இவ் வுலகில் இறவாதவர் எவரும் இலர்; எமன் நமது பிடரியிலேயே நிற்கின்றான். நிலையற்ற இவ் வாழ்வை நிலையாக நினைந்து புலையாட்டம் கொள்ளாதீர்! சாவு விரைந்து வந்துகொண் டிருக்கிறது. இறந்து போன பின் கள்ளிக்காடு அடர்ந்த சுடுகாட்டில் கொண்டுபோய்க் கட்டையில் கிடத்தி வாய்க்கு அரிசி யிட்டுத் தீய்க்கு இரையாக்குவதை இப்பொழுதே நோக்கி யுணருங்கள்; அந் நாள் வருமுன்னமே நல்ல தருமங்களை நாடிச் செய்து உயிர்க்கு உறுதி தேடிக் கொள்ளுங்கள்; எனச் சிறுவெண்தேரையார் என்னும் பெரியார் இதில் அறிவுறுத்தி யிருக்கும் அருமையை ஆய்ந்து காண்க. மடங்கல்=எமன். உடை=ஒரு வகை முள் மரம். அதன் இலை மிகவும் சிறிதா யிருக்கும் ஆதலால் சிற்றெல்லைக்கு அளவு கூற வந்தது. இன்னா வைகல் வருமுன் இனியது செய்து உய்க என்பதாம். மரணம் நேருமுன் உயிர்க்கு அரணம் சேருக என்றவாறு அழிவு நிலையை விழிகாண விளக்கியுள்ளது.

எவ்வளவு சிறந்த நிலையில் இருந்தாலும் இறந்து ஒழிந்து இருந்த இடமும் தடந் தெரியாமல் எவரும் மறைந்து போவதே இவ் வுலகில் இயல்பாக வுள்ளமையால் அந் நிலையாமை நிலையில் இவரது நிலை இங்கே நினைந்து ஆறி நெஞ்சம் தேற நின்றது.

"கால வேற்றுமையால் எல்லாப் பொருள்களும் கலங்கி வேறும்" என்றபடி நீறாய் நிலையழிந்து போயினும் இத் தீரரது வீர நிலை பாரெங்கும் இன்றும் பரவி வருகின்றது. தீர தைரியமும் வீர பராக்கிரமும் இவரிடம் என்றும் தளராமல் யாண்டும் குன்றாமல் நின்று நிலவி வென்றி வீறோடு விளங்கியுள்ளன.

அன்று இறந்துபட நேர்ந்தபொழுது இவ் அருந்திறலாளர் இருந்த நிலையைக் குறித்துச் சேனைபதியாகிய பானர்மேனே வியந்து நின்றான் என்றால் வேறு கூறுவது என்? அவனுடைய மனமும் இவருடைய முடிவை நினைந்து மருமமாய் மறுகியுள்ளமை தெரிய வந்தது. கொலைக் குறிப்போடு கொடிய வயிரியா யிருந்த அவன் இங்கே முடித்ததை முடிவில் நம்பகமாகக் கூம்

பிணி அதிபதிகளுக்கு எழுதிவிடும் பொழுது தன்னை யறியாமலே இம் மன்னரது வீர நிலையை இறுதியில் குறித்திருக்கிறான். அரிய அதிசயமும் பெரிய வியப்பும் அவனுடைய உள்ளத்தைப் பிணித்திருக்கின்றன. பிழைபாடுகளை வளர்த்துக் கொடுமையாய்க் கொலைபுரிந்த நெஞ்சமும் முடிவில் முடிவு தெரிந்து மறுகி யுள்ளது. நெடிய கடிதத்தின் இடையே நேர்ந்து வந்துள்ள மொழிகள் இக்குலமகனது தீர நிலைகளை விளக்கி வீர ஒளிகளாய் விளங்கி நிற்கின்றன. கடிதக் குறிப்புகளை மானச நோக்கால் நுனித்து நோக்குபவர் அரிய பல உண்மைகளை அறிந்து கொள்வர். சாக மூண்டு எழுந்த பொழுது வீர மடங்கல்போல் இவ் வீர மன்னன் வீறோடு நடந்திருக்கிறான். இருந்த இருப்பும் நின்ற நிலையும் நடந்த நடையும் வென்றி விறல்களாய் விரிந்து நின்றன. அயலே வருகிற ஆங்கிலம் ஊன்றி உணரவுரியது.

## இறுதியில் கண்ட உறுதி.

"It may not be amiss here to observe, that the manner and behaviour of the Polegar, during the whole time of his being before those who were assembled yesterday at the examination which took place, was undaunted and supercilious.

He frequently eyed the Etteapuram Polegar, who had been so active in attempting to secure his person, and the Polegar of Sivagiri with an appearance of indignant scorn; and when he went out to be executed he walked with a firm and daring air, and cast looks of sullen contempt on the Polegars to his right and left as he passed.

It was reported to me, that on his way to the place of execution he expressed some anxiety for his dumb brother alone; and said, when he reached the foot of the tree, on which he was hanged, that he then regretted having left his fort, in the defence of which it would have been better for him to have died."

Camp at Kytar,<br>17th Oct. 1799.

[Signed] John Bannerman.

"கூடி யிருந்த பாளையகாரர் கூட்டத்தின் முன்னே நேற்று விசாரணை நடந்தது. அப்பொழுது ஜமீன்தார் கட்டபொம்மு இருந்த நிலையும் நடந்து கொண்ட விதமும் அதிசயமுடையன; அவற்றை இங்கே சொல்வது பிழை ஆகாது. விசாரணை நடந்த நேரம் முழுவதும் அவர் யாதும் தளராமல் ஏதும் கலங்காமல் தீரமான அகந்தையோடு உறுதியாய் நிமிர்ந்தே யிருந்தார்.

தன்னைப் பிடித்துக் கொடுப்பதில் கடு முயற்சி புரிந்திருந்த எட்டையாபுரம் ஜமீன்தாரையும், சிவகிரி ஜமீன்தாரையும் மிகுந்த இகழ்ச்சிக் குறிப்போடு அடிக்கடி அவர் கடுத்துப் பார்த்தார்.

தான் இறந்துபோகத் துணிந்து தூக்கு மரத்தை நோக்கி அவர் நடந்து போகும்பொழுது வலம் இடம் என்னும் இரண்டு புறங்களிலும் வரிசை வரிசையா யிருந்த பாளையகாரர் எல்லாரையும் அவமதிப்பா இகழ்ந்து நோக்கி மிகுந்த துணிவான தைரியத்தோடு அதி கம்பீரமாய்ச் சென்றார்.

சாகப் போகிற நேரம் தனது தம்பி ஊமைத்துரையை மாத்திரம் நினைந்து சில கவலைகளை அடைந்தார்; தனக்குத் தூக்கு இட்டிருந்த அந்தப் புளிய மரத்தின் அடியை அடைந்தவுடன் சிறிது நின்று மறுகினார்; தன்னுடைய கோட்டையை விட்டு வெளி ஏறாமல் அங்கேயே நின்று உரிமையைப் பாதுகாத்து எதிரிகளை எதிர்த்துப் போராடி மாண்டு போயிருந்தால் மிக நன்றா யிருந்திருக்கும்! என்று நீண்ட பரிதாபத்தோடு மொழிந்து அதன் பின் மாண்டு போனார்"

மேலே வந்துள்ள ஆங்கிலம் இவ்வாறு பாங்கோடு பகர்ந்திருக்கிறது. இதனை ஊன்றி உணர்பவர் உள்ளம் உருகி மறுகுவர். மரணபயம் எவரையும் நடுங்கச் செய்யும்.

"மரணவேதனை யாவரால் அறியலாம் மயங்கி ஐம்புலன் அந்தக் கரணம் யாவையும் கலங்கிட வருதுயர் கடவுளே அறிகிற்பார்"

என்றதனால் மரண துயரத்தின் நிலைமை தெரிந்து நெஞ்சம் கவல்கின்றோம். இறந்து படுவதில் எவரும் கலங்கு கின்றனர்.

யான்ஏதும் பிறப்பு அஞ்சேன்;
இறப்பதனுக்கு என்கடவேன்? (திருவாசகம்)

"புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐம்மேல்உந்தி
அலமந்த போதாக அஞ்சேல் என்று அருள்செய்"
(தேவாரம்)

மரணத்தின் அச்சங்களை இவை வரைந்து காட்டியுள்ளன.

எவரும் அஞ்சி அயர்கிற இத்தகைய மரண நேரத்தில் இவ் வீரன் யாதும் அஞ்சாமல் நெஞ்சுறுதியோடு நிமிர்ந்து நடந்து இராச கம்பீரமாய்த் தூக்குமரத்தை நோக்கிப் போயிருப்பது அந்த வெள்ளையன் உள்ளத்தை உருக்கி வியப்பில் ஆழ்த்தியிருக்கிறது. அவனது வியப்புகள் எழுத்தில் விளங்கிநிற்கின்றன.

Undaunted and supercilious

என்றது உள்ளந் தளராமல் உறுதி பூண்டு எவரையும் யாதும் மதியாமல் தீரமாய் நின்ற இவரது வீர நிலையை விளக்கி நின்றது. அகமும் புறமும் ஒருங்கே அறிய இந்த இரண்டு ஆங்கிலப் பதங்களும் இங்கே நன்கு தோன்றி யிருக்கின்றன.

He walked with a firm and daring air.

என்றது தூக்கு மரத்தை நோக்கி நடந்து போன துணிவையும் தைரியத்தையும் கம்பீரத்தையும் குறித்துள்ளது. விசாரணையின் போது நின்ற நிலையும், சாகப் போகும்போது நடந்து போன விதமும் தொடர்ந்து காண வந்தன. இந்தக் காட்சியைக் கருதி யுணர்பவர் இவரது மாட்சியையும் மன வுறுதியையும் வியந்து மறுகி யிரங்குவர். மானச மருமம் மதித்து உணர வுரியது.

இவருடைய உள்ளத்திறல் சாதாரணமான உலக மக்களின் நிலையைக் கடந்து அதிசய நிலையில் உயர்ந்து நிற்கின்றது. சாக என்றால் எவரும் அஞ்சுவர்; அந்த இறப்பை உவந்து இவர் சிறப்பாய் நடந்து சென்றது மாற்றாருக்கும் பெரிய திகைப்பை விளைத்து நெடிய வியப்பாய் நின்றது.

இதனால் இவரது அஞ்சாமையும் நெஞ்சுறுதியும் எந் நிலையிலும் கலங்காத தலைமையான ஆண்மை நிலையும் அறியலாகும். எட்டப்ப நாயக்கரையும், சிவகிரி ஜமீன்தாரையும் அடிக்கடி

அவமதிப்பான இகழ்ச்சிக் குறிப்புடன் இவர் கடுத்துப் பார்த்து நின்ருர் என்று இதில் குறித்துள்ளதனுல் அந்த இருவர் மீதும் இவர் கொண்டிருந்த சினமும் சீற்றமும் நன்கு தெரிய வந்தன. அங்கு வந்து கூடியிருந்த பாளையகாரரனைவரும் மானமும் வீரமும் குன்றி ஈன நிலையில் பணிந்து இழிந்திருக்கின்ருரே! என இவர் எண்ணி வருந்தியுள்ளமை அன்று இவர் கண்ணேடி நின்ற காட்சியால் காண நின்றது.

எவரும் திகில்கொண்டு அயரும் மரண வேளையிலும் இவர் யாதும் மனம் கலங்காமல் தூக்கு மரத்தை நோக்கிக் கம்பீரமாக நடந்து சென்ருர் என மாற்ருனே வியந்து வெளியே எழுதியுள்ளான் என்ருல் இவரது அருந்திறல் ஆண்மையையும் திருந்திய மேன்மையையும் யார் அளந்து சொல்ல வல்லார்?

கொன்று தின்றுவிட வேண்டும் என்று கன்றிய நெஞ்சனுய்க் கடுத்திருந்து காரியம் சூழ்ந்து ஊறுபட உயிரைக் குடித்து முடித்த பகைவனே அடுத்து நின்று இவ்வாறு அதிசயித்துப் புகழ்ந்துள்ளமையால் இக் குல வீரரது தலைமையான வீரத் திறலும் தளராத உறுதி நிலையும் உலையாத ஊக்கமும் உணரலாகும்.

பிறர் புகழ்ந்து பேசுவதை விட எதிரி வியந்து சொல்லுவதிலிருந்தே ஒருவனது உண்மைத் தன்மை உறுதி பெற உணரப்படுகின்றது. பகைவன் மதித்துப் போற்றுவது அதிசய வகையாய் அமைந்து ஆன்ற சீர்மையை நன்கு துலக்கி நிற்கின்றது.

"பாரினில் விசும்பில் நாகர் பதியினில் படைகள் சூழ்ந்த
போரினில் உயர்ந்து வீரப் புகழுடன் பொலிந்து நின்ருர்
யாரினி இவனேடு ஒப்பார்? அம்மவோ! இராமன் வீரம்
நேரினில் கண்டார் நேரார் நிலையினை நினைவர் கொல்லோ?"

என முதல் நாள் போரில் இராமனேடு மூண்டு பொருது முரிந்து மீண்ட இராவணன் இலங்கை புகுந்த பின் பரிந்த சிந்தையனுய் அவ் ஆண்டகையின் அருந்திறலை இங்ஙனம் வியந்து சொன்னதே உண்மையான மதிப்புரையாக உலகம் நயந்து நின்றது.

இவ்வாறு எதிரியும தனனை மறநது வியககுமபடி விளங்கியிருந்த இவ் வீரர் தூக்கு மரத்தை நோக்கிச் செல்லுங்கால்

நின்ற தோற்றத்தையும் நிலையையும் வியந்து அக் காலத்தில் யாவரும் இந் நாட்டில் புகழ்ந்து போற்றி நிகழ்ந்த நிலைகளை நினைந்து நினைந்து நெஞ்சம் இரங்கி நெடிது வருந்தி நின்றார்.

கரணம் யாவும் கலங்க நேர்கின்ற மரண வேளையிலும் இவ் ஆண்டகை மனம் கலங்காமல் நேர்ந்து மாண்டு போன பின் ஈண்டிருந்த அரசு முழுவதும் கும்பினிக்கு உரிமை யாயது. அவ்வமயம் அரண்மனையி லிருந்த பொருள்களுள் பல தனக்கே உரிமையாகச் சேனாபதி தனியே கவர்ந்து கொண்டான்.

பாஞ்சாலங்குறிச்சி நகருக்கு அரணா யிருந்த கோட்டை மதில் முழுவதையும் தட்டி நொறுக்கித் தரைமட்ட மாக்கும்படி கட்டளை யிட்டு பாங்ஷா (Lieutenant, Bagshaw) என்னும் தள கர்த்தன் கீழ் ஒரு பட்டாளத்தைக் கட்டாக விட்டான்.

அத் தளபதி விரைந்து சென்று படைகளை ஏவி மதில்களை உடைத்து அடியோடு அழித்து மீண்டு வந்து அரணொழிந்த நிலையை அவனிடம் உவகையுடன் உரைத்தான். அவன் உவந்து கொண்டான். அதன்பின் இங்கு ஆகவேண்டியதை ஆராய்ந்து வேகமாய்க் கவனித்தான். இவ் அரசோடு தொடர்புற்றிருந்த அனைவருக்கும் இடர் மிகச் செய்து இரும்பயம் மூட்டினான்.

பாஞ்சாலங்குறிச்சியுடன் ஒற்றுமையா யிருந்த மற்றை ஐந்து பாளையங்களும் கும்பினியாருக்கு உரிமையாகக் கவர்ந்து கொள்ளப்பட்டன. அவை நாகலாபுரம், ஏழாயிரம்பண்ணை, கோலார்பட்டி, குளத்தூர், காடல்குடி என்க.

நாகலாபுரம் பாளையகாரராகிய இரவப்ப நாயக்கரையும், ஏழாயிரம்பண்ணைப் பாளையகாரராகிய காளை வன்னியனையும், குளத்தூர் ஜமீன்தார் மகனாகிய சின்ன வெட்டூர் நாயக்கரையும், வேறு சிலரையும் சென்ன பட்டணத்துக்குக் கொண்டு போய் அங்கே சிறை வைத்திருந்தார். பலர் அதில் இறந்து மடிந்தார்.

கயத்தாற்றிலிருந்த இம் மன்னருடைய தம்பியர், மைத்துனர், மாமனார் முதலிய கிளைஞர் எல்லாரையும் பாளையங் கோட்டையில் சிறைப்படுத்தி வைத்து நாள் ஒன்றுக்கு ஒரு

கலிப்பணம் வீதம் ஆள் எண்ணி ஒவ்வொருவருக்கும் படி விதித்திருந்தார். இறைவழி வந்தவர் சிறை வழியாய் ஒரு வழியும் தெரியாமல் உளைந்து நொந்து அங்கே உறைந்திருந்தார்.

தென்திசைக் காரியம் ஜெயமாய் முடிந்தது என்று சேனாதிபதி ஆனந்தவகையனாய் அகங்களித்து அடங்கொண்டு நின்றான்.

அதன் பின்பு எல்லாப் பாளையகாரர்களையும் தன் முன்பு வரச் செய்தான். கட்டபொம்மு பட்டார் என்றவுடனே அட்டதிக்கும் நடுங்கி நின்றது ஆதலால் பாளையகாரர் எல்லாரும் பயந்து வந்து பணிந்து நின்றார். அவரனைவரையும் ஒரு முகமாக நிமிர்ந்து நோக்கி அதிகார ஆற்றலுடன் பானர்மேன் கட்டளை இட்டான். அவன் பணித்த பணிகள் அயலே வருகின்றன.

## சேனாபதி உத்தரவு.

"இனிமேல் உங்கள் பாளையங்களில் கோட்டை மதில்கள் கட்டக் கூடாது; முன்னமே கட்டியிருக்கு மானால் அவை முழுவதும் தட்டப்பட வேண்டும். ஈட்டி வல்லயம் வேல் வாள் துப்பாக்கி முதலிய ஆயுதங்கள் யாதொன்றும் வைத்திருக்கலாகாது. இன்று முதல் ஒரு வாரத்திற்குள் உங்கள் கைவசம் உள்ள எல்லா ஆயுதங்களையும் கலெக்டருடைய ஆபீஸில் கொண்டு வந்து சேர்த்து, அவற்றிற்கு வகைகளும் தொகைகளும் விவரம் குறித்துத் தெளிவாக விளக்கிக் கையெழுத்துச் செய்ய வேண்டும். இக் கட்டளையை மீறி நின்றவர் தங்கள் ஜமீனை இழந்து போவதோடு தக்க தண்டனையும் அடையப் படுவார். இந்த உத்தரவைச் செப்பேட்டில் எழுதி இந்த நாட்டில் உள்ள முக்கியமான ஊர்கள் தோறும் பொதுவான இடத்தில் எல்லாரும் அறியும் படி ஒட்டி வைக்க வேண்டும். உங்கள் ஜமீன் எல்லையிலுள்ள குடியானவர் யாரேனும் எவ்வகையான கைக்கருவிகள் வைத்திருந்தாலும் அதற்கும் நீங்களே பொறுப்புதார். கும்பினி ஆணையை எவராயினும் அணுவளவு மீறினதாக அனுமானிக்கப் பட்டாலும் அவர் கொடுமையான மரண தண்டனைக்கு உட்படுவார்" என்று கடுமையான உத்தரவு விதித்த

அக்டோபர் மாதம் இருபத்தோராம் தேதி (21—10—1799) கயத்தாற்றில் வைத்துப் பயத்தைக் காட்டிப் பாளையகாரர் எல்லாரையும் பழியோடு போம்படி வெளியே விட்டான்.

நேர்ந்த நிலை.

அயல் நாட்டு வெள்ளையன் ஒருவன் அன்று சொன்ன சொல் இந்நாட்டுத் தலைவர்கள் எல்லாருக்கும் உள்ளத் திகிலாய் ஓங்கி நின்றது. இருக்கும் இடம், உடுக்கும் உடை, படுக்கும்பாய் முதலிய எவற்றினும் யாதொரு சுதந்தரமும் உமக்கு இல்லை; அடிமை வாழ்வே உமக்கு உரிமையானது; ஆண்டவராய் ஈண்டு வந்துள்ள எமது ஆணையின்படியே யாண்டும் எவரும் அடங்கி ஒடுங்கி நடந்து வர வேண்டும் என்னும் வீறோடு அவன் கூறி நின்றான். ஆணை ஆக்கினைகள் அதிகார மமதையில் ஓங்கி வந்தன. அயலே வருகிற ஆங்கிலத்தை ஈங்கு ஊன்றி நோக்குக.

"Any polegar rebuilding any fort whatever, or procuring or possessing guns, ginjal—pieces, &c. will be considered to have forfeited the protection of the company, his Pollam will be assumed, and he himself otherwise punished as Government may determine. That any shervagar, covalgar, inhabitant, or any person of any description whatever, (inhabitant of the pollams) found armed with a firelock, matchlock, pike, or spear or found concealing them, shall be subject to the punishment of death.

"Every Polegar shall be responsible for the conduct oi the inhabitants of his Pollams; and that armed parties, belonging to any Polegar, who shall be found committing disturbances, violence, or outrage in any part of the country, shall not be only subject to the punishment of death themselves, but the Polegar to whom such parties belong, will be dispossessed of his Pollam, and otherwise punished as Government may determine."

Camp at Kytar, John Bannerman,
21st Oct. 1799.

"பாளையகாரர் எவரும் எந்த விதமான கோட்டையையும் இனிமேல் கட்டக் கூடாது; வெடி குண்டு துப்பாக்கிகள்

முதலிய போர்க்கருவிகளை யாரும் வைத்திருக்கலாகாது; அவற்றைச் செய்யவும் கூடாது; அவ்வாறு செய்தால் கும்பினியின் பாதுகாப்புக்குத் தீது செய்தவனுவான் ஆதலால் தன் பாளையத்தை இழந்து அவன் தண்டிக்கப் படுவான். ஈட்டி துப்பாக்கி வேல் வாள் வல்லயம் முதலிய படைக்கலங்களைக் குடிமக்களான பொதுசனங்களும் வைத்திருக்கக் கூடாது; அவற்றை வைத்திருந்தால் அவர்க்கு மரண தண்டனை விதிக்கப்படும்.

தங்கள் ஜமீன்களிலுள்ள குடி சனங்களுடைய நல்ல நடத்தைக்கு அந்த அந்த ஜமீன்தாரே பொறுப்பாளியாவர். குடியானவர் யாராவது ஆயுதங்களை வைத்துக் கொண்டு அல்லல் செய்ய நேர்ந்தால் அவர் கொல்லப் படுவார்; அந்தக் குடியானவரை வைத்திருந்த ஜமீன்தாரும் தனது ஜமீனை இழந்து கும்பினியாரால் தண்டிக்கப் படுவார்"

என இன்னவாறு ஆணை ஆக்கினைகளை வலியுறுத்திக் கூறிச் சேனைத் தலைவன் செருக்கி விடுத்தான். பாளையகாரர் எல்லாரும் மானத்தை இழந்து மறுகி வெளியே வந்தார். எந்த ஆயுதத்தையும் யாரும் கையில் தொடக் கூடாது என்று பல்லைப் பிடுங்கி விட்டது போல் அந்த வெள்ளைக்காரன் இட்ட கட்டளையை உள்ளத் திகிலோடு நினைந்து எல்லாரும் தம் எல்லைகளை நோக்கி அல்லலுழந்து போனர். அவலக் கவலைகளில் அழுந்தி நின்றார்.

### ஆயுத ஒழிப்பின் காரணம்.

பாஞ்சாலங்குறிச்சி வீரர்களுடைய வேல்களால் வெள்ளைக்காரர்கள் படாதபாடுகள் பட்டுப் படுகளத்தில் அழிந்து மடிந்ததை நேரே பார்த்து நின்றவன் ஆதலால் இந் நாட்டவரிடம் ஆயுதங்கள் இருப்பதை அவன் கடுத்து வெறுத்தான். அந்த உள்ளக் கொதிப்பால் ஆயுதத் தடுப்புச் சட்டத்தை வற்புறுத்திப் பாளையகாரர்களுக்கு அவன் கட்டளை யிட்டான். இந் நாட்டு வீரத்தை நசுக்கி ஒடுக்குவதில் நாட்டமுடையனாய் ஈட்ட முற்று நின்றான். போரில் அடிபட்ட திகில் நேரில் விடுபட்டது.

தென்னாட்டு மூலையிலிருந்த கட்டபொம்மு என்னும் ஒரு சிற்றரசன் மேல் நாட்டுக் கும்பினியின் பேரரசைக் கெடுக்

கலங்கச் செய்தானே! என்ற திகிலும் மானக் கொதிப்பும் அந்தச் சேனுபதி யுள்ளத்தில் ஊடுருவி உறைந்திருப்பதை அவனுடைய வாய்மொழிகள் இடையிடையே மவுனமா வெளியிட்டு வருகின்றன. கடிதங்களில் எழுதுகிற எழுத்துகளும் அழுத்தமாக் காட்டி நிற்கின்றன. இந்த ஒரு வீரனல் நாடு பெரு வீரமுடையதாய்ப் பேர் பெற்றுச் சீர் மிக்கு நின்றது.

ஞானத்திலும் வீரத்திலும் நீதியிலும் நெறியிலும் ஆட்சியிலும் மாட்சியிலும் இந்நாடு என்றும் தலைசிறந்து வந்தது. இன்று நிலை குலைந்துள்ளது. சிறந்த போர் வீரர்களாய் உயர்ந்திருந்த பாரத மக்கள் அயலாரால் அடிபட்டு அலமந்து வருகிற நிலைகளை நினைந்த போதெல்லாம் நெஞ்சம் நெடிது வருந்தி வருகிறது. கண்ணை இமை காப்பது போல் அரசு மண்ணைக் காத்து வர மக்கள் தருமம் காத்து மறுமை நோக்கோடு மகிழ்ந்து வாழ்ந்தனர். அந்த வாழ்வு பொய்யாய்ப் பழங் கதையாய்க் கனவாய் மறைந்து கடுமையாய்ப்போயது; கொடுமைகள் மூண்டுள்ளன.

தருமம் பேணிச் சத்தியம் பேசிக் கருணை புரிந்து இருமையும் செம்மையா வாழ்ந்து வந்த மாந்தர் சிறுமை அடைந்து பொய்யும் புலையும் படிந்து வெய்ய துயரங்களில் உழந்து உழலுகின்றனர். கோள் பொறாமை வஞ்சம் சுயநலம் முதலிய பழி வழிகளில் பாளையகாரர் என்று பழக நேர்ந்தாரோ அன்றே நாடு பாழாக நேர்ந்தது. தென்னுட்டுக் கோளும் பொறாமையும் தனி நிலையின; எந்நாட்டிலும் காண முடியா. கட்ட பொம்மைக் காட்டிக் கொடுத்த பாளையகாரர் தம் பழி நிலைகளைக் காட்டி இழிவுகளை நீட்டி நின்றார். வெள்ளையர்க்கு ஊழியம் புரிவதை உயர்ந்த பெருமையாக் கருதி உள்ளம் உவந்து வந்தார். அவரது வரவுசெலவுகள் வசைபடிந்துநசைமிகுந்து நவைபுகுந்து வந்தன.

அன்று படைத்தலைவன் பணித்து விடுத்த பணிமொழியைக் கேட்டதும் தலை பிழைத்ததென்று அனைவரும் விரைந்து போய்த் தங்கள் தங்கள் பாளையங்களை யடைந்து இட்ட கட்டளைப் படியே யாவும் செய்து யாண்டும் வணங்கி நடந்து தாம்

அடங்கி நிற்கும் நிலையை ஒருவரினும் ஒருவர் உரிமையுடன் முந்துற அறிவித்து வந்தனை வழிபாடுகள் புரிந்து கொண்டார்.

பல்லும் நகமும் இழந்த வல் விலங்குகள் போல் பாளைய காரர்கள் யாவரும் எல்லா ஆயுதங்களையும் இழந்து யாதொரு பெருமையும் இலராய் ஏழைமை நிலைமையில் இழிந்து நின்றார்.

தான் இட்ட கட்டளைகளை யாதும் தட்டாமல் விரைந்து முடித்து இந் நாட்டவர் அஞ்சி வணங்கி அடங்கி நிற்பதைக் கண்டு சேனாதிபதி நெஞ்சம் களித்து நெடிது தழைத்திருந்தான்.

கட்டபொம்மு ஒழிந்ததே உற்ற காரியங்களுக் கெல்லாம் வெற்றி ஆயது என உள்ளுற உவந்து உடனிருந்த துரைகளிட மெல்லாம் அவன் பெருமிதமாக உரையாடி வந்தான். வினை முடித்த அவனது வல்லாண்மையை வியந்து "இனிமேல் கும்பினி ஆட்சி கொழுந்துவிட்டு ஓங்கும்" என்று எல்லாரும் குலாவி யிருந்தார். இந் நாட்டு அதிசய வீரனை வீரபாண்டியனை வென்று கொண்டது வெளி நாட்டார்க்குக் களியாட்டமாய் நின்றது. அரிய காரிய சித்தி பெரிய செருக்கை விளைத்தது.

புலி வேட்டையாடி அதனை வென்று கொண்ட வேட்டை யாளர்கள் அக் காட்டி லுள்ள நரிகளைக் கண்டு நகைத்து நின்றது போல் இந் நாட்டி லுள்ளவர்களை நோக்கிச் சேனாபதி முதலாயினோர் சிறுநகை செய்து பெருமிதம் கொண்டு நின்றார்.

யார்க்கும் அடங்காமல் அடல் மீக் கொண்டு நின்ற அருந்திற லாளனை அடக்கிவிட்டோம் என்று அடங்கா மகிழ்ச்சி யடைந்திருந்த பானர்மேன் பின்பு இங்கு நெடுநாள் அமர்ந் திருக்க வில்லை. இருப்பின் ஆபத்தாம் என அனுமானித்தான். விரைவுடன் விரைந்து ஐரோப்பாவிற்குப் போகத் துணிந்து அதற்கு வேண்டியவைகளை யெல்லாம் விநயமாக ஆயத்தம் செய்துகொண்டான். நவம்பர் மாதம் முதல் தேதி (1–11–1799) தன் பதவியை விட்டு வெளியேறிச் சீமைக்குப் பிரயாணமாயி னான். சென்னையில் வைத்து அவனுக்குக் கும்பினி அதிபதிகள் விருந்து முதலியன செய்து சிறந்த வெகுமதிகள் தந்து உவந்து

அனுப்பிவைத்தார். அவன் அவரைப் புகழ்ந்து போற்றி விடை பெற்றுக் கொண்டு குடும்பத்துடன் சீமைக்குப் போயினன்.

அவனுக்குப் பின்பு மேஜர் ராபர்ட் ட்யூரிங் (Major Robert Turing) என்பவர் சேனுபதியாய் அமர்ந்து, கலெக்டர் லஷிங்ட்டன் (Lushington) துரையுடன் கலந்து நின்று தென்னுட்டுக் காரியங்களை யாண்டும் நன்கு கவனித்து வந்தார்.

ஒத்து உழைத்தவர்க்கு உதவி புரிந்தது.

இவரைப் பிடித்துக் கொடுத்த புதுக்கோட்டைஅரசராகிய விஜயரகுநாத தொண்டைமானுக்குக் கும்பினியார் வரி முழுவதையும் தள்ளி என்றும் இறை செலுத்தாமல் தலைமையான நிலைமையில் சர்வ சுதந்தரமாய்த் தம் இராச்சியத்தை அவர் அனுபவித்து வரும்படி உத்தரவு கொடுத்தார். அவ்வாறே இன்றும் நடந்து வருகின்றது. அப் பெருங் கொடை இவ் அருந்திறலாளரை அவர் அகப்படுத்தித் தந்ததில் கும்பினியார் உவந்து நின்றநிலையை உணர்த்தி நிற்கின்றது. தீமையாய்ச் சதி புரிந்தது சேம நிதியாயது. இன்னும் ஒருவர் இங்கு எண்ணிட வுரியர்.

இவருடைய தானுபதியைப் பிடித்துக் கொடுத்து எப்பொழுதும் கூடவே யிருந்து ஒத்துழைத்து வந்த எட்டப்ப நாயக்கருக்குச் சிவஞானபுரம் என்னும் ஒரு கிராமம் கும்பினியாரால் இனமாகக் கொடுக்கப்பட்டது. அக் கொடை உத்தரவு ஜனவரி மாதம் 22-ந் தேதி (22—1—1800) கலெக்டர் லஷிங்ட்டன் துரை மூலம் அவருக்கு வந்தது. அவ் வரவைக் கண்டவுடன் அவர் அளவிட லரிய உவகை யுடையராய்க் கும்பினியை வாழ்த்தி எவ்வழியும் நலமாகக் குலாம் செய்து நின்ருர்.

அடுத்து உழைத்தவரை உயர்த்தி, உருத்து எதிர்த்தவரை ஒடுக்கிப், படை வலியும் துணை வலியும் பெருக்கி அடலுடன் நின்றமையால் ஆங்கில வியாபாரிகள் ஆட்சி மிகவும் ஓங்க நேர்ந்தது. அந் நிலையைக் கண்டு முன்னம் தலை நிமிர்ந்து நின்ற பாளையகாரர் எல்லாரும் பழைய நிலைமையை அடியோடு இழந்து குடிகளோடு குடிகளாய்ப் புலன் ஒடுங்கி நின்றனர்.

இங்ஙனம் கும்பினியின் அதிகார ஆற்றல்களை வியந்து நோக்கிப் பாளையகாரர் பாடழிந்து பயந்து நிற்பினும் இவ் வீர மகனது தீர தைரியங்களையும் பெருமித நிலையையும் புகழ்ந்து போற்றி "வணங்காமுடி மன்னன்" என இந்நாடு முழுவதும் இவரை வாயார வாழ்த்தி வந்தது. வீரப்புகழ் எங்கும்ஒளி வீசி நின்றது.

"எந்நாட்டும் திறைநாட்டி இரும்பொருளை
மிகஈட்டி எங்கும் ஆட்சி
முன்னாட்டி மூண்டுவந்த கும்பினியும்
கம்பமுற முனைந்து எதிர்ந்து
கன்னாட்டி அமர்பொருது கட்டபொம்மென்று
அட்டதிசை களும்சீர் நாட்டித்
தென்னாட்டுச் சிங்கம்எனச் சிறந்திருந்தான்
பொன்னாடு சேர்ந்தான் அம்மா!"

என இந் நாடும் எந் நாடும் இம் மன்னன் பிரிவை எண்ணி இன்னலுழந்து என்ன வகையிலும் தேருமல் ஏங்கி நின்றன.

இச் சுந்தரன் இல்லாமையால் சந்திரன் இல்லாத வானம் போல் இப் பாண்டி மண்டலம் பல வகையிலும் பொலி விழந் திருந்தது. வேலி யிழந்த பயிர் போல் இவ் அரசின் மரபினர் காலியாய்க் கலங்கி நின்றனர். அரசிருந்த பொழுது அதிகாரத் தோடு உயர் நிலையி லிருந்தவர் பின்பு நிலைகுலைந்து உழன்றுர். நெல்லை மண்டலம் எங்கும் தலங்கள் தோறும் பிரிந்து இடங் கண்டு அமர்ந்து திடங் கொண்டு தேறி நிலங்களை உழுதுண்டு கலங்கிய நிலையில் காலம் கழித்துத் துலங்கி வாழ்ந்து வந்தார்.

## முடிவுரை.

நமது தேசம் ஆதி முதல் அதிசய மகிமைகளையுடையது. பழமை யான கிழமை வாய்ந்து எவ் வழியும் விழுமிய நிலையில் கெழுமி யிருந்தது. புண்ணிய பூமி என்று ஒரு கண்ணியமுடைய பேர் பெற்றுப் பூமி தேவியின் சேம நிதியாய்ச் சிறந்து விளங்கியது. அரிய தத்துவ ஞானிகளையும், பெரிய சத்திய சீலர்களையும், உத் தமமான நீதி மன்னர்களையும், சிறந்த போர் வீரர்களையும்,

உயர்ந்த கொடை வள்ளல்களையும், தெளிந்த மேதைகளையும் தெய்வீகமான புலவர்களையும் எய்தி உலகம் எல்லாம் வியந்து போற்றி உவந்து சூழ்ந்து வர உயர்ந்து வாழ்ந்து வந்தது. மறு புலங்கள் எவையும் ஞான பூமி என இதனை நயந்து புகழ்ந்துள் ளன. ஆசிய சோதியாய் இந்தியா யாண்டும் தேசு வீசியுள்ளது.

*புத்தர்பிரான் தனையீன்ற புண்ணியநாடு*
*எந்நாடு? போதம் வாய்ந்த*
*சித்தர்குழாம் தமைப்பயந்த திவ்வியநாடு*
*எந்நாடு? தேவ தேவன்*
*ஒத்தஅர சாகியமர்ந்து உலகாண்டது*
*எந்நாடு? உயர் ஞானங்கள்*
*எத்திசையும் ஒளிவீசி இருளிரியச்*
*செய்ததெல்லாம் இந்நாடு அன்றோ?* (1)

*சீராமன் அவதரித்த திவ்வியநாடு*
*எந்நாடு? சீதை என்னும்*
*பேரான கற்பரசி பிறந்திருந்தது*
*எந்நாடு? பெருமை யோடு*
*பாராண்ட மன்னவர்கள் பலர்பிறந்தது*
*எந்நாடு? பரதன் என்னும்*
*பேராளன் ஒருவனுயர் பெயர்பூண்டது*
*எந்நாடு? பேசு வீரே!* (2)

*தெள்ளுதமிழ் அமிழ்தமெனச் சீவரெலாம்*
*தேவரெனச் சிறந்து வாழ*
*ஒள்ளிய நுண் கலைகள்பல ஒளிமிகுந்து*
*தெளிவுடைய ஒருநூல் தந்த*
*வள்ளுவரைத் தந்திந்த வையமொடு*
*வானுலகும் உய்ய என்றும்*
*விள்ளுபுகழ் ஒளிவீசி விளங்குகின்றது*
*எந்நாடு? விளம்பு வீரே!* (3)

*குமரிமுதல் இமயமொடு குடவரையுங்*
*குணகடலும் குலவி ஓங்க*
*அமருலகம் எனஎவரும் ஆர்வமுடன்*
*அமர்ந்துவர அயல்நாடு எங்கு*

தமதுவினை பொருளுந்தவித் தனிக்குடிகள்
தழைத்திருக்கத் தரும நாடுஎன்று
இமையவரும் வியந்துஏத்த இனிதிருந்தது
எந்நாடோ? இயம்பு வீரே! (4)

(இந்தியத்தாய் நிலை)

இன்னவாறு பன்னரும் புகழோடு உன்னத நிலையில் ஒளி மிகுந்திருந்த இந் நாடு பின்னர் இன்னல் நிலையில் இளிவடைய நேர்ந்தது. கால சக்கரம் கடு வேகமாய்ச் சுழன்று வந்தது. அச் சுழலில் நீதியோடு நெறிமுறை புரிந்து வந்த முடிமன்னர் முடிவாய் மறைந்து போயினர். அயலான தலைமைகள் மயலாய் யாண்டும் நிலவின. கொடுமைகள் மூண்டு நின்றன; கொடுங்கோல் நெடுங்காலம் நில்லாது ஆதலால் கடிதாய்அவை மங்கி மடிந்தன.

இறுதியில் ஆங்கிலேயர் ஈங்கு வந்தனர். உலக அறிவில் இவர் தலை சிறந்தவர். நல்ல உழைப்பாளிகள்; யூக விவேகம் உடையவர்; அயராத முயற்சியால் உயர்ச்சிகள் அடைந்தனர். இத் தேசத்தை ஆளும் சிறப்புகள் சேர்ந்தன. ஆட்சி நிலையில் மாட்சிமை கண்டனர். சுதந்தர வாழ்வில் நிரந்தரமான பிரியம் உடையவராயிருந்தும் அயல் நாட்டை அடைந்ததும் அதன் நிலைமையை நோக்கித் தாம் தலைமையில் அடக்கியாள மூண்டார்.

"Britannia, rule the waves!
Britons never shall be slaves."

"ஆங்கில தேசம் அலைகடல்களை யாண்டும் ஆளுகின்றது; ஆங்கிலேயர் ஒரு போதும் அடிமைகளாயிரார்" என்னும் இது அவர்க்குத் தேச கீதமாய் (National song) இருந்து வருகிறது. தலைமை வாழ்வை உவந்து அடிமை வாழ்வை இகழ்ந்து பழகி வந்துள்ளனர். சுயாதீனமே சுகவாழ்வு எனத் துணிந்து நின்றனர்.

"Freedom has a thousand charms to show,
That slaves, howe'er contented, never know." (Cowper)

"சுவாதீனமான சுதந்தர வாழ்வு ஆயிரக் கணக்கான இனிமைகளை யுடையது; செல்வ வளம் பெற்றுச் சிறந்திருந்தாலும் அடிமைகள் அந்த மகிமைகளை யாதும் அறியார்" எனக் கவுப்பர் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

ஓவா வறுமை யுழந்தாலும் பிறர்
ஏவாமல் வாழ்வதே வாழ்வாம்.

என அவர் வாழ்ந்து வந்துள்ளதை வார்த்தைகள்காட்டியுள்ளன.

உரிமையான சுதந்தர வாழ்வே மனித குலத்துக்குத் தனி மகிமைகளையுடையது என நிரந்தரமாய் மகிழ்ந்து வந்த ஆங்கிலேயர் ஈங்கு வந்து இந்நாட்டவரை அடிமைகளாக்கி நாட்டை ஆள நேர்ந்தார். தலைமையான நிலையில் அவ்வாறு அவர் ஆள முனைந்து நீளமாய் நிமிர்ந்து வந்த போதுதான் இத் தென்னாட்டு மன்னனான வீர பாண்டியன் அவரை நேரே மூண்டு எதிர்த்தான். கடும் போர் மூண்டது; போரில் வெற்றியும் கண்டான். கண்டும் உள் நாட்டுச் சதிகாரர் காட்டிய அதிபாதகச் செயலால் வெளி நாட்டார் கையில் சிக்கி இம் மான வீரன் அநியாயமாய் மாண்டான். மரபினர் பரிதாபமாய் மறுகி நின்றார். நாடு முழுவதும் அன்னியர் ஆட்சியில் மன்னிய பழியோடு இன்னலுழந்திருந்தது. இனிய நிலைமையை எதிர்பார்த்து மாந்தர் ஏங்கி நின்றனர்.

## இந் நூலின் தொகைப் பொருள்.

ஆதிக் கட்ட பொம்மு நாயக்கர் வடநாடு விட்டுத் தென்னாடு வந்ததும், இந் நாடு புகுந்ததும், இடங்கண்டு இருந்ததும், அரசடைந்ததும், கோட்டை வளைந்ததும், குடி புகுந்ததும், படிபுரந்ததும், அவரது வழி முறையில் நேரே சுஎ-வது பட்டத்தில் வீரபாண்டியக் கட்டபொம்மு என்பவர் வந்து ஆண்டிருந்ததும், அங்ஙனம் இருக்குங்கால் ஈண்டுக் கும்பினி ஆட்சி வந்ததும், வரி விதித்ததும், இவர் மறுத்ததும், கலெக்டர் ஜாக்சன் துரை இவரை இராமநாதபுரம் பேட்டிக்கு அழைத்ததும், இவர் கூட்டமாய்ப் போனதும், அங்குக் கலகம் நிகழ்ந்ததும், அதில் இவர் கெலித்து வந்ததும், கும்பினி அதிபதிகள் இவரை நேரில் அழைத்துத் தீர விசாரித்து வீரன் என்று வியந்து வெகுமதிகள் தந்து விழைந்து கொண்டதும், அவ்வாறு உறவுரிமையுடன் உவந்து வாழ்ந்து வருங்கால் தானாபதிப்பிள்ளை போய் வம்பாகக் கும்பினி நெல்லைக் கொள்ளை செய்ததும், அதனால் கொடும்பகை நீண்டதும், கடும் போர் மூண்டதும், இரு திறத்தும் படைகள்

பல மாண்டதும், அம் முதல் நாள் போரில் இவர் வெற்றியடைந் திருக்குங்கால் ஆற்றாரிலிருந்து தானாபதி தப்பி வந்து இவருக்குத் தப்பு யோசனை சொன்னதும், அவருடைய பேச்சைத் தட்ட மாட்டாமல் இவர் கோட்டையை விட்டு வெளியேறிக் கும்பினி அதிபதிகளைக் கண்டு வர வேண்டும் என்று திருச்சிராப்பள்ளிக் குச் சென்றதும், எதிரிகள் தொடர்ந்து இடைவழியில் கோலார் பட்டியில் வளைந்ததும், அப்படைகளை உடைத்தேறி இம் மன்னர் ஆறு பேர்களுடன் வடதிசை நோக்கிப் பரிகளில் வாவிப் போனதும், அங்கே தானாபதிப் பிள்ளை முதலாக 34 பேர் பிடிபட்டதும், அப் பிள்ளையை நாகலாபுரத்திற்குக் கொண்டு வந்து அங்கே கொடுந் தூக்கில் இட்டதும், அவரைக் கொன்றொழித்த பின் வடதிசை சென்ற இவரைப் படைகள் தேடித் திரிந்ததும், இவர் பல இடங்களிலும் பரிந்தலைந்து முடிவில் புதுக்கோட்டை அரசை நண்பன் என நம்பி நாடி யடைந்ததும், அங்கே இவரை அவர் பிடித்துக் கொடுத்ததும், பிடியுண்ட இவரை ஆறு பேர் களுடன் கயத்தாற்றுக்குக் கொண்டு வந்ததும், சேனாபதி விரகு சூழ்ந்து பாளையகாரர் முன் விசாரணை புரிந்து இவருக்கு மரண தண்டனை விதித்ததும், இவர் எதிர்மொழி பல கூறி அதி வீரத் துடன் யாதும் அஞ்சாமல் தூக்கை நோக்கி நடந்ததும், அவ் இறுதி நிலையில் தீரமும் மானமும் தெரிய உறுதி யுரைகளாடித் தமது வீர நிலையை விளக்கி ஆருயிர் நீத்ததும், அதன்பின் ஊமைத்துரை முதலானோர் உயிர் துடித்தலறி, உள்ளுற வயிர்த்து ஒடுங்கி நின்றதும், கும்பினியார் இவரது அரசு முழுவதையும் கவர்ந்து கொண்டு, உறவினரனைவரையும் சிறையி லிட்டு வைத்ததும், மரபினர் அயலே மறுகி வாழ்ந்ததும், பிறவும் இதன்கண் முறையே மருவியுள்ளன. உரிமையுடன் ஓர்ந்துணர்ந்து கொள்க.

## வாழ்த்து.

*வீரமாக் கதையிதை விழைந்து கற்றவர்*
*சாரமாக் கலைகளும் சமரின் ஆற்றலும்*
*தீரமாத் திறலுடன் தேச நேசமும்*
*வாரமாக் கண்டுளம் மகிழ்ந்து வாழ்வரே.*

இத்துடன் முதல் பாகம் முடிந்தது.



மருவலர் கல்லில் மருவி நின்றது.



இப் போரில் இறந்துபட்ட ஐரோப்பியத் தளகர்த்தர்களுக்கு ஞாபகச் சின்னமாக அக் காலத்தில் கல்லறை சமைத்து வைத்திருக்கின்றார். அது பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்குத் தெற்கே, ஒட்டப்பிடாரத்தின் அருகே வட கிழக்கில் உள்ளது. அக் கோரியின் நடுவே பதித்துள்ள கருங்கல்லில் மரணக் குறிப்புகள் எழுதப்பட்டுள்ளன. மாண்டவர் பேர்கள் விளங்கி நிற்கின்றன. அதன்விவரத்தை அடியில்வரும் அனுபந்தத்தில் காண்க.

APPENDIX A.

The following is the inscription on the tomb.

IN MEMORY
OF
LIEUTENANTS
DOUGLAS, DORMIEUX, COLLINS, And BLAKE,
And
GUNNER FINNY.
WHO FELL IN THE ATTACK OF PANJALAMCOURCHY
5TH SEPTEMBER
1799.

"1799 செப்டம்பர் மாதம் 5 ந் தேதி பாஞ்சாலங்குறிச்சியில் மூண்ட போரில் மாண்டு பட்ட டங்களஸ், டார்மீக்ஸ், காலின்ஸ், பிளாக்கி, கன்னர் பின்னி என்னும் தளபதிகளுடைய ஞாபகச் சின்னமான சமாதி இது" என்பது மேலே கருங்கல்லில் மருங்குடன் வரைந்து வைத்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

பட்டாளங்களுள் செத்த சிப்பாய்களின் இழவுத் தொகையை இத்துணை என்று அளவுசெய்து காட்டாமை ஆராயவுரியது.

## இரண்டாம் பாகம் குறிப்பு.

மன்னன் தம்பி ஆகிய ஊமைத்துரை முதலிய உறவினர் பாளையங்கோட்டைச் சிறையில் பரிந்திருந்த நிலை, விடுதலை செய்வார் என முடிவு பார்த்துநின்ற முறை, முடிவின்மையால் முடிவில் அச் சிறையை உடைத்து அவர் சீறி எழுந்த திறம், பாஞ்சாலங்குறிச்சியை அடைந்து மறுபடியும் கோட்டை போட்ட விதம், பட்டங்கட்டிப் பகை நோக்கி யிருந்தது, பட்டாளங்கள் தொடர்ந்து வந்தது, பட்டு மாண்டது, பின்பு மெக்காலே (Macaulay) பெரும் படையுடன் வந்து கொடும் போர் புரிந்தது, அரும்பாடு பட்டது, அயர்ந்து மீண்டது, அந்தத்தில் அளவறு சேனைகளோடு அக்கினிச் சென்னல் (Col. Agnew) வந்தது, அடுபோர் செய்தது, படைகள் பல மாய்ந்தது, கொடிய பீரங்கிகளால் குண்டுகள் பொழிந்தது, யாதும் முடியாமல் அலமந்து நின்றது, அதன்பின் இந் நாட்டில் உள் துப்பாய் நின்ற கோளர் சிலர் கூறிய ஈன உபாயங்களைக் கேட்டு அச் சேனைபதி சிந்தை திரிந்து சதி புரிந்தது, கோட்டையுள் இருந்தவர் மருந்துப் புகையால் மறுகி நொந்தது, அரிய வீரர்கள் பலர் அநியாயமாக இரவில் மடிந்தது, இறுதியில் ஊமைத்துரை 2600 போர் வீரர்களுடன் வெளியேறியது, எதிரிகள் அடர்ந்து இடைமறித்து அடுசமர் செய்தது, அதில் படுமோசமாய்க் குண்டுகளும் வேல்களும் வாள்களும் பாய்ந்து அவர் பதைத்து விழுந்தது, பிணக் குவியலில் மறைந்து கிடந்த அவரை நடுநிசியில் வந்து ஒரு பெண் கண்டு எடுத்துத் தன் ஊர்க்குக் கொண்டு போய்ப் பாதுகாத்து விட்டது, அவர் பகையெல்லாம் கடந்து சிவகங்கை சென்றது, அங்கே சின்ன மருது என்னும் வீரனுடன் சேர்ந்து தெவ்வரை எதிர்த்துச் சின்னபின்னங்கள் செய்தது, அன்னவன் அழிந்தது, அதன்பின் திருமயம் புகுந்து பொருமுகங் கண்டது, மருவலர் மிகவும் மறுகி நின்றது, இறுதியில் முன்னவனோடு பின்னவன் முதலா என்னவரும் தொலைந்தமையால் உள்ளம் வெறுத்து உலகைத் துறந்து உறுதி சூழ்ந்து அவர் முடிவை அடைந்தது என்னும் இன்னவகையான உண்மை வரலாறுகள் இதன் தொடர்பாய் வந்துள்ள இரண்டாம் பாகத்தில் காண்க.

வீர பாண்டியன், ஊமைத்துரை என்னும் பாஞ்சாலங் குறிச்சி மன்னருடைய ஜீவிய சரிதங்களை ஓவிய உருவங்களா விளக்கியுள்ள காவியம் இது. அரிய பல தரும நீதிகளும் உறுதி நலங்களும் இனிது அமைந்தது. சில அயலே வருகின்றன.

## உன் விதிக்கு நீயே காரணன்.

வினைவிதி என்பன இரண்டும் உன்னுடை
மனம்மொழி மெய்களை மருவி வந்துள;
இனனுற நின்றுதம் பயனை ஈந்திடும்
அனையன நின்னவே அயல்ஒன் றில்லையால். (1)

## வினைகளின் விளைவு.

நினைவுசொல் செயலிவை நெறியின் நல்லவேல்
இனியநல் வினையதாய் இன்பம் நல்கிடும்;
அனையன தீயவேல் அடல்செய் தீவினை
எனநிமிர்ந் தின்னலே ஈயும் எங்குமே. (2)

## இருவினைப் பயன்.

நல்வினை செய்தவன் நரருள் தேவனாய்
எல்லையில் இன்பங்கள் எய்தி வாழ்குவன்;
புல்லிய தீவினை புரிந்து நின்றவன்
அல்லலே அடைந்தழி நரகில் ஆழ்குவன். (3)

## இன்பமும் துன்பமும்.

ஆதலால் இன்பமும் அடுத்த துன்பமும்
காதலால் நாம்செய்த கருமமே அலால்
ஏதிலார் ஈவன அல்ல; ஈதுணர்ந்து
ஓதிய உறுதியை ஓர்ந்து கொள்கவே. (4)

## இன்ப விளைவின் இனிய மூலம்.

என்றுமே இன்பமா யிருக்க வேண்டினல்
கன்றிய துன்பினைக் கனவிலும் பிறர்க்கு
ஒன்றுமே செய்திடாது ஒழிக; இன்பினை
நன்றென எங்குமே நாடிச் செய்கவே. (5)

நாளும் சிந்தனை செய்து ஒழுகி வரவேண்டிய விழுமிய உறுதி நலங்களை இவை உணர்த்தியுள்ளன. உண்மைதெளிந்து கொள்க.

# இந்நூலில் வந்துள்ளவர்களின் பெயர் அகராதி.



## ஊர்களின் பெயர் அகராதி.

## நேரிசை வெண்பா.

*பேரூர் விளங்கப் பெரும்போரில் மூண்டுநின்றார்*
*சீரூர நின்ற செயலெல்லாம்---காரூர*
*நின்றமதிட் பாஞ்சை நெடும்புகழே யேவிளக்கி*
*நின்ற இதன்கண் நினை.*

சுபம்.

உ

ஜெகவீரபாண்டியனார் இயற்றியுள்ள நூல்கள்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

மூலமும்—உரையும்.



இது அரிய பெரிய அற்புத நூல். திருவள்ளுவரை உள்ளுறப் பெற்றது. 1330 அருமைத் திருக்குறள்களுக்கும் உரிமையான உண்மைச் சரிதங்களை உடையது. கதைகள் எல்லாம் குறட்பாவில் அமைந்து குமரேசனை முன்னிலையாக் கொண்டு திருக்குறளோடு இணைந்து நேரிசை வெண்பாக்களால் நிறைந்துள்ளது. சீரிய பல பண்பாடுகள் அமைந்தது.

இனிய எளிய நடையில் தெளிய எழுதிய விழுமிய விரிவுரையுடையது. குறளின் நுணுகிய பொருள்களும் அரிய கலைகளும் தொனி நிலைகளும் இதனால் இனிது தெளியலாம்.

பண்டைக் காலத்தில் இருந்த அரசர்கள் புலவர்கள் வள்ளல்கள் வீரர்கள் பதிவிரதைகள் முதலிய எல்லாருடைய குண நலங்களையும் செயல் நிலைகளையும் கண்டு மகிழ்தற்கு அழகிய இனிய காட்சிச் சாலையாய் இது மாட்சி மிகுந்துள்ளது.

இவ் ஒரு நூல் உணர்ச்சியே அரிய பல நூல்களின் பயனையும் ஒருங்கே உதவும் என்பதை இதனைப் பயின்றவர் எவரும் உடனே உணர்ந்து கொள்வர். அறிஞர் யாவரும் வியந்து புகழ்ந்து உவந்து போற்றியுள்ளனர். புலவர் உலகில் தலைமை பெற்றுள்ள இந் நூலை உலகம் பயின்று உவந்து வருகிறது. நூல் நிலையங்கள் விழைந்து பெறுகின்றன.

இந் நூலைத் தன்னகத்தே எய்தா நிலையம்பின்
எந் நூலை எய்தினும் என்.

என்றதனால் இதன் நிலைமையும் தலைமையும் நன்கு தெரியலாம.

அமிர்த மயமான இந்த அறிவின் கருவூலம் ஒவ்வொருவர் வீட்டிலும் எவ்வகையிலும் தனி உரிமையாய் இருக்க வுரியது.

| | | |
|---|---|---|
| அறத்துப்பால் முதல்பாகம் 2ம் பதிப்பு | | ரூ. 6—12—0 |
| (ஷை 2ம் பாகம் அச்சில் உள்ளது.) | | |
| பொருட்பால் முதல் பாகம் | 900 பக்கம் | ,, 9—12—0 |
| ஷை 2ம் பாகம் | 800 பக்கம் | ,, 8—12—0 |
| ஷை 3ம் பாகம் | 1130 பக்கம் | ,, 10—12—0 |
| காமத்துப்பால் | 1160 பக்கம் | ,, 11—12—0 |
| அறத்துப்பால் மூலம் | 100 பக்கம் | ,, 1—4—0 |

# கம்பன் கலை நிலை.



இராம காவியத்தின் சீவிய நிலைகள் யாவும் ஓவிய உருவங்களாய் ஒளி மிகுந்து எழில் சுரந்து திகழ இது விழி திறந்துள்ளது. புலவர் உலகம் என நிலவி வருகின்றது. கம்பர் பெருமான் அருளியுள்ள கவிகளின் பொருள் நயங்களையும், கலைகளின் சுவைகளையும், உலக அனுபவங்களையும், நீதி நெறிகளையும், பாத்திரங்களின் குண நீர்மைகளையும் அரிய பல உண்மைகளையும் தெளிவாக விளக்கி இனிய ஒரு கலை நிலையமாய்த் தலைமையோடு இது தழைத்துச் செழித்து நிற்கிறது.

இந் நூலைக் குறித்து வந்துள்ள மதிப்புரைகளின் சுருக்கங்கள்.

"அளவிறந்த இலக்கிய நூல்களிலும் இலக்கண நூல்களிலும் பரந்து ஆழ்ந்த பாண்டித்தியத்தின் பயனாய் இது விளைந்துள்ளது. இந் நூலைப் படிக்குந்தோறும் நான் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்." (V. P. சுப்பிரமணிய முதலியார், வெள்ளகால்)

"இது அறிவின்பமான அற்புத நூல். சொற் சுவையும் பொருட் சுவையும் சுரந்து திகழ்கின்றது. கம்பர் கவிகளில் புதைந்து கிடக்கின்ற பொருள்களைத் திறந்து காட்டும் பொழுது புதையல் எடுத்த தனம்போல் அதிசய மகிழ்ச்சியை யூட்டுகின்றது." (ராவ் பகதூர், வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A)

"கம்பன் கலை நிலையில் அறிவொளி பரந்து மிளிர்கிறது; அதிசயம் மிகுந்து பெருகுகிறது; ஆனந்தம் வளர்ந்து வருகிறது" (K. கோதண்டபாணி பிள்ளை, B. A. Deputy கலெக்டர்.)

"கம்பன் கலை நிலை முதல் புத்தகம் படித்து முடிக்கும் வரையும் புற உலகத்தை மறந்தேன்; தமிழ் உலகத்திலேயே ஆழ்ந்திருந்தேன்; என்னை இது பரவசமாக்கியுள்ளது."

(ராவ் பகதூர், இராஜவேலு முதலியார், போலீஸ் டெபுடி சூப்பிரண்டு.)

"கம்பன் கலை நிலையில் பிரமாஸ்திரப் படலத்தைப் படிக்கும் போது என்னை அறியாமலே உணர்ச்சி மிகுதியால் கண்ணீர் வடித்தேன்" (S. நாகையசாமி, ஜமீன்தார் சாப்டூர்.)

"கம்பன் கலை நிலை இலக்கியக் களஞ்சியம்"

(சுதேசமித்திரன்)

"இதன் ஆராய்ச்சி நுட்பமும் உரை நடைத் திட்பமும் யாவரையும் அகமகிழச் செய்வன" (செந்தமிழ்)

இந்த அருமை நூல் எல்லார்க்கும் எளிதே கிடைக்கும்படி மாதந்தோறும் தனித்தனிப் புத்தகங்களாய் வெளி வருகிறது.

வருட சந்தா ரூ 5—0—0.

ஒன்று முதல் பன்னிரண்டு தொகுதிகள் தனித்தனி ரூ 5-12-0

இப்பொழுது 13வது தொகுதி நடைபெறுகிறது.

---

# தரும தீபிகை.

## மூலமும்—உரையும்.

இது அருமையான தரும நூல். அரிய பல உறுதி நலங்களை யுடையது. நீதி நெறிகளோடு கலை வளங்கள் நிறைந்தது. உலக மாந்தர் உணர்ந்து உயர வேண்டிய உணர்வு நலன்கள் யாவும் இன்ப நிலையமாய்ச் சுரந்துள்ள இந் நூல் தெளிவான இனிய விரிவுரைகளுடன் விழுமிய நிலையில் வெளி வந்துள்ளது.

